தமிழ் மருத்துவம் - 7

# பதார்த்த குண சிந்தாமணி

வெளியீடு :

**இந்திய மருத்துவம் - ஓமியோபதித் துறை**

**சென்னை - 600 106**

**2007**

## நூலடைவு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | தமிழ் மருத்துவ நூல் வரிசை - 7<br>**பதார்த்த குண சிந்தாமணி** |
| வெளியிட்டோர் | : | இந்திய மருத்துவம் - ஓமியோபதித்துறை<br>சென்னை - 600 106 |
| பதிப்பு ஆண்டு | : | 2007 |
| பதிப்புரிமை | : | © தமிழ்நாடு அரசு |
| நூல் வடிவம் | : | Dy 1/8 |
| அச்சுத்தாள் | : | 19.7 கி.கி. (75 GSM) |
| அட்டை கட்டுமானம் | : | கடின அட்டை கட்டுமானம் |
| எழுத்துகள் | : | 11 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | : | iv + 440 = 444 |
| பிரதிகள் | : | 1000 |
| நூலின் விலை | : | ரூ. 150/- |

---

அச்சிட்டோர் : யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ்
189 (101-D), ராயப்பேட்டை நெடுஞ்சாலை
லஸ், மயிலாப்பூர், சென்னை - 600 004.
✆ : 24661807, 24987562

**ஜி.ஏ. ராஜ்குமார்,** இ.ஆ.ப.,
சிறப்பு ஆணையர்.

இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி
ஆணையரகம், சென்னை - 600 106.

# பதிப்புரை

**'பதார்த்த குண சிந்தாமணி'** என்னும் இந்நூல் நமது ஆணையரகத்தின் வழியாக முதன் முதலாக அச்சில் வெளியிடப்படுகிறது. அதில் இந்தியாவில் பாயும் முக்கிய ஆறுகளான கங்கை, காவிரி, வைகை முதலிய ஆற்றுநீரின் இயல்புகள், இளநீர் வகைகள், தன்மைகள், மிருகங்களின் பாலுடன் தில்லை, புங்க மரங்களின் பாலின் குணங்களும் இதிலுள. புல், செடி, கொடி மர வகைகள், இலை, பூ, காய், பழம், கொட்டை, பிசின் வகைகள் முதலியவற்றின் குணங்களும் முறைப்படுத்தப்பட்டுள்ளன.

கடைச்சரக்குகள், அரிசி வகைகள், வாசனைத் திரவியங்கள், பல்வகை உயிரினங்கள், உலோக நவரத்தின வகைகளின் சிறப்பான குணங்கள், அவை நீக்கும் நோய்கள், அளிக்கும் நன்மைகள் முதலியன விளக்கப்பட்டுள்ளன.

அணியும் ஆடை, உண்ணும் சோறு, பருகும் நீர், தாம்பூலம் இவற்றுடன் இந்திரகோபப்பூச்சி, ஒட்டறை போன்றனவும் இணைக்கப்பட்டுள்ளன. வாத, பித்த, கப தேகிகளுக்கேற்ற உணவு, கால, பருவ வேறுபாடுகள், பற்ப செந்தூரங்களின் இயல்பு, மருந்து கொள்கலம், உண்கலம், நோயாளிக்கேற்ற பண்பு, பத்திய அபத்தியங்கள் விவரிக்கப்பட்டுள்ளன.

1508 பாடல்களைக் கொண்ட இந்நூலில் குணங்கள் விளக்கப்படாத பொருளே இல்லை எனும் அளவிற்கு, எல்லா மருந்துப் பொருட்களும் விளக்கம் பெற்றுள்ளன.

பதார்த்த குண சிந்தாமணி - மருந்து பொருட்களின் குணங்களை விளக்கிச் சொல்கின்ற அரிய பெட்டகமாகும். சாதாரணக் குடிமகன் தொடங்கி ஆய்வாளர் வரை பயன்படும் பார்வை நூலாக இது விளங்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. பஞ்சபூதம் முதல் பஞ்சபாடாணம் வரை அவற்றின் குணங்கள் விளக்கப்பட்டுள்ளன.

இந்நூல் வெளியிடும் பணி மேற்கொண்ட இணை இயக்குநர், சிறப்பு அலுவலர் (மொழிபெயர்ப்பு), ஆய்வு மருத்துவ அலுவலர் (சித்தர்), தமிழ்ப்புலவர்கள், நகலெடுப்போர் ஆகியோர் பாராட்டுதலுக்குரியவர்கள். நன்முறையில் அச்சிட்டு வடிவமைத்துத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் நிறுவனத்தார்க்கும் எனது பாராட்டுதல்கள் உரித்தாகுக.

18.10.2007

**சிறப்பு ஆணையர்**

| வ.எண். | பொருளடக்கம் | பக்க எண். |
|---|---|---|


| | | |
|---|---|---|
| 1. | பாயிரம் | 2 |
| 2. | பஞ்சபூதம் | 5 |
| 3. | திணை | 6 |
| 4. | நீர் | 8 |
| 5. | பால் | 28 |
| 6. | மோர் | 41 |
| 7. | நெய் | 43 |
| 8 | மதுரம் | 53 |
| 9. | பாகு | 54 |
| 10. | வெல்லம் | 55 |
| 11. | மது | 58 |
| 12. | தேன் | 60 |
| 13. | மரம் | 63 |
| 14. | செடி | 75 |
| 15. | கொடி | 96 |
| 16. | புல் | 110 |
| 17. | மரத்தின் சமூலம் | 114 |
| 18. | செடியின் சமூலம் | 119 |
| 19. | கொடியின் சமூலம் | 121 |
| 20. | மரத்தின் கிழங்கு | 122 |

| | | |
|---|---|---|
| 21. | செடியின் கிழங்கு | 123 |
| 22. | கொடியின் கிழங்கு | 127 |
| 23. | புல்லின் கிழங்கு | 133 |
| 24. | மரத்தின் வேர் | 135 |
| 25. | மர இலை | 156 |
| 26. | கொடியின் இலை | 169 |
| 27. | கீரை வகை | 175 |
| 28. | மரத்தின் மலர் | 183 |
| 29. | கொடியின் பூ | 193 |
| 30. | மரத்தின் பிஞ்சு | 196 |
| 31. | மரத்தின் காய் | 198 |
| 32. | செடியின் காய் | 203 |
| 33. | கொடியின் காய் | 208 |
| 34. | மரத்தின் பழம் | 214 |
| 35. | செடியின் பழம் | 223 |
| 36. | மரத்தின் வித்து | 227 |
| 37. | செடியின் வித்து | 233 |
| 38. | கொடியின் வித்து | 234 |
| 39. | தானியம் | 237 |
| 40. | புன்செய் தானியம் | 245 |
| 41. | இறைச்சி | 249 |
| 42. | பறவை இறைச்சி | 255 |
| 43. | மீன் கறி | 267 |

| | | |
|---|---|---|
| 44. | கடைச்சரக்கு | 275 |
| 45. | பாசாணம் | 330 |
| 46. | உலோகம் | 337 |
| 47. | நவரத்தினம் | 340 |
| 48. | மருத்துவன் | 343 |
| 49. | பத்தியம் | 356 |
| 50. | தினக்கிரமாலங்காரம் | 373 |
| 51. | எண்ணெய் முழுக்கு | 380 |
| 52. | துணி வகை | 383 |
| 53. | புசிப்பு | 386 |
| 54. | உண்கலம் | 388 |
| 55. | சோறு | 392 |
| 56. | கஞ்சி | 401 |
| 57. | சித்திரான்னம் | 406 |
| 58. | பலகாரம் | 409 |
| 59. | பரிமளப்பூச்சு | 415 |
| 60. | தாம்பூலம் | 417 |
| 61. | வாகனம் | 422 |
| 62. | விசிறி | 427 |
| 63. | புணர்ச்சி | 429 |
| 64. | பதார்த்தசீரணகால அளவை | 433 |
| 65. | நோயணுகா விதி | 436 |

**இந்திய மருத்துவம் - ஓமியோபதித் துறை,**
**சென்னை - 600 106.**

**மொழிபெயர்ப்பு - வெளியீட்டுப் பிரிவு**

## நூலாக்கப் பணிக்குழு

பதிப்பாசிரியர்
**முனைவர் மரு. ஆனைவாரி ஆனந்தன்** பி.எச்டி.
சிறப்பு அலுவலர் (மொழிபெயர்ப்பு) :

கூர்ந்தாய்வு மருத்துவ அலுவலர் (சித்தர்) :
**மரு. பி.ஆர். சகுந்தலா** எம்.டி.(சி)

உதவி பதிப்பாசிரியர்கள் :
**திரு. த அழகப்பராசு** M.A.,M.A.,MLIS.,M.Phil.,B.Ed.,
**திருமதி செ.இரா. பிரசன்னா** M.A.,M.Phil.,B.Ed.,

சுருக்கெழுத்தர் - தட்டச்சர் :
**திருமதி தா.வே. லெட்சுமி**

சுவடி நகல் எடுப்பவர்கள் :
**திரு. க. மகேஸ்வரன்**
**திரு. தி. சுபாஷ் சந்திரபோஸ்**
**திரு. வெ. சாரங்கபாணி**
**திருமதி த. லெட்சுமி**
**திருமதி நா. பாக்கியசுந்தரி** B.A.

நாடனந்தம் பிறந்ததற்கா லுதித்த திற்றீ
நாரமண்ணுண் டாய்மண்டா னல்க வந்த
ஓடதியி லனமுமதி லுலகு நிற்கு
முயர்வாய்ந்தவ் வோடதியி னுரிமை சொல்வாம் 4

*தேடி காண்பதற்கு அரியவன், தோற்றுவிக்கவும் அழிக்கவும் வல்லான்; ஒப்புயர்வு இல்லாதவன்; யாவர்க்கும் கடவுளாய் விளங்கு பவன் சிவன், அச்சிவத்தினுள் இருக்கின்ற ஞானசக்தியில் உள்ள ஆகாயம், அவ்வாகாயத்தில் காற்று, காற்றில் நெருப்பு, நெருப்பில் நீர், நீரில் மண் எனத் தோன்றியது. மண்ணினின்றும் நெல்முதலான மூலிகைகள் - அதை உண்டு வாழும் உயிர்கள் என்ற முறையில் தோன்றின. அவை நிலைபெறும் வழிகள் இங்கு ஆராய்ந்து உரைக்கப்படுகின்றன.*

விருக்கஞ் செடிகொடி புன்னான்கொவ் வொன்றின் விரியனந்த
வருக்கந்த மிற்சில வேராதிவித்து வரைக்குமெட்டா
யிருக்கும்ப தார்த்த மவற்றிலொவ் வொன்றின் கிருநிலத்துட்
செருக்கும்பன் னோயைமுருக்குங் குணங்கண்டு தேர்வரிதே 5

*வேர், பட்டை, கட்டை, சாறு, இலை, மலர், பழம், வித்து என்பன எண்வகையன. அவற்றில் கசப்பு, உப்பு, இனிப்பு, கார்ப்பு, புளிப்பு, துவர்ப்பு என்ற அறுசுவையும் உண்டாம்.*

ஆதியுரி யுண்ணீ ரடைமலர்மென் காய்விதையென்
றோது பதார்த்தமிவை யோரெட்டும் - பூதலத்துட்
கைப்புவர்ப்பு தித்திப்பு கார்ப்பு புளிப்புத் துவர்ப்பு
வைப்பிவையா றும்பொருந்து மால் 6

*இவ்வுலகில் மரம், செடி, கொடி, புல் நான்கும் மருத்துவப் பயன்பாட்டு உயிர்கள். இவற்றின் பிரிவுகள் சொல்லமுடியாத அளவிற்குப் பலவாகும். அவற்றுள் சில வேர் - வித்து முடிய எட்டுவகையினவாம். இவை ஒவ்வொன்றும் பல நோய்களைத் தரும். எனவே அதன் பண்புகளைக் கண்டறிவது கடினமாம்.*

பதார்த்தகுணஞ் சொல்வதெவன் பார்க்கின்ற வெல்லாம்
பதார்த்தமெனி னீக்கிற் பழியாம் - பதார்த்தமெனக்
கூறுகடற் குள்ளணுவின் கூற்றினவ்வி யத்தத்தோர்
கூறுரைத்த னம்பாருக் குள் 7

உலகிற் காணும் மருந்து - மருத்துவப் பொருட்கள் பற்பல அவை ஒன்று தொடங்கி பற்பல கோடி அளவில் உள்ளன. அவற்றுள் மனிதர்க்கு தேவையான :- மனிதர்க்கு தெரிந்தவற்றை மட்டும் சொல்கிறோம். அதன் பண்பை அறிந்தால் சேர்ப்பது நீக்குவது அறிந்து சேர்த்து நீக்கி உடலை நன்கு பேண வழிவகுக்கும்.

பாயிரம் முற்றியது.

## *பாயிரம்*

ஆதியுமைக் கருளு மற்புதசிந் தாமணியை
யாதியுமையருளா லம்புவியுட் - கோதறுநற்
செந்தமிழாற் கூறுதற்குச் செம்பவள வேழமுகன்
கந்தமலர்ச் செஞ்சரணே காப்பு 1

*சிவபிரான் உமையாளுக்கு உரைத்த 'பதார்த்த குணசிந்தாமணி' எனும் நூலை குற்றமற இயற்றுதற்கு விநாயகரின் திருவடிகளே காப்பாகும்.*

சீரார் பதார்த்தகுண சிந்தாமணிக் காணாந்
தாரார் கஜமுகனுஞ் சண்முகனு - நீராருஞ்
செஞ்சடைய னும்பரையுந் தேவ வயித்தியனும்
விஞ்சுசித்த நாதர்களு மே 2

*நீக்கமின்றி எவ்விடத்திலும் நிறைந்திருக்கிற, தன்மை இத்தகையது என துணிதற்கு முடியாத, ஐம்பொறிகளை வென்ற யோகிகள் சேருதற்குரிய சிவபிரானை வணங்கி பதார்த்த குணத்தைச் சொல்லுகிறோம்.*

எல்லாப் பதார்த்தமுமா யெங்குநிறை யொன்றைமுன்னூற்
சொல்லாப் பதார்த்தத்தைத் துப்புரவை - வல்லார்கள்
கூடற் பதார்த்தத்தைக் கொண்டேத்திக் கூறுதுமியாங்
கோடற் பதார்த்த குணம் 3

*யானைமுகத்தானும் விநாயகனும், ஆறுமுகனாம் குமரனும், செஞ்சடையானாம் பரமசிவனும், உமாதேவியும், தன்வந்திரியும், சித்தர்களில் மேன்மைமிக்க ஒன்பது சித்தர்களும் சிறப்பு பொருந்திய இந்த பதார்த்த சிந்தாமணிக்குக் காப்பு*

தேடருமை கண்டவொளிப் பிழம்பாய் ஞானா
தீதபூ ரணமாய்த்தற் செயல்கொண் டெல்லா
மூடவிட வல்லதுமாய்த் தனித்த வொன்றுள்
மூழ்கிநின்ற முக்குணச்சிற் சத்தி தன்னில்

## பஞ்சபூத குணம்

### பிருதிவி

பூச விரணம் பொருமல்போம் பொன்முதலாம்
ஆசையுள்ள பண்ட மதிலுண்டாம் - நேசமதாய்த்
தின்றிடிற் பாண்டு செழிக்குமிகத் தேமொழியே
சென்றுலகில் மண்குணத்தைத் தேர். 1

*மண்ணை அரைத்துப்பற்றிட்டால் இரணம், வாத பொருமல் இவை அடங்கும். மண்ணையுண்டால் பாண்டுநோய் உண்டாகும்.*

### அப்பு

காசமறுந் தந்தங் கழலாது மேகமுதல்
வீசு மனறணியும் வீரியமாம் - வாசமென
உந்திவளர் குன்ம முதிரஞ் சொறியிவைபோம்
இந்தநறுந் தண்ணீருக் கே 2

*தண்ணீரால் பித்த காசம், பித்த பிரமேகம், உடல்சூடு நீங்கும். வெட்டுக்காயங்களில் ஏற்படும் இரத்தம் நிற்கும். பற்கள் உறுதிபெறும். விந்து விருத்தியுண்டாகும்.*

### தேயு

கண்டைக்கா னோயுள்வலி காதம்போங் காய்ந்தக்கால்
பிண்டே பலபிணியும் விட்டேகும் - விண்டோய்
பொருப்பனைய வட்டமுலைப் பூவையே நாளு
நெருப்பி னதுகுணங்கா ணீ 3

*நெருப்பால் கண்டைக்கால் (சிறுதொடை) நோயும். உடல் கடுப்பு, வாத சிலேட்டுமங்களால் ஏற்படுகின்ற சில நோய்கள் ஆகியன குணமாகும்.*

### வாயு

மேகக்கடுப்பை விளைவிக்கும் வீறி நின்ற
தாக மனலிளைப்பைச் சாந்திசெய்யு - மேகத்தின்
புண்ணோய்க்கும் பொல்லாது பூவையரே ரூட்சைக்குங்
கண்ணோய்க்கு மாகாது காற்று 4

*காற்றானது மேகக் கடுப்பு, அதிகதாகம், உடல்சூடு, உடலிளைப்பு ஆகியவைகளைத் தணிக்கும். இது மதுமேகவிரணம், சுரம், கண்ணோய் இவற்றிற்கு ஆகாது.*

### ஆகாயம்

உலகுமன மும்பலவா மோடதியு மண்ணுஞ்
சலமுமன லுங்காலுஞ் சாற்ற - அலகில்
அநந்தம் பொருளு மடங்க வுழிநல்கும்
அநந்தந் தனைக்கண் டறி 5

*உயிர்களும், மருந்துகளும், நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகியன அடங்குதற்கு இடந்தருகின்றது. ஆகாயம். ஐம்பூதங்கள் ஒவ்வொன்றின் பிரிவுகளைச் சொல்லப்புகுந்தால் நூல் மிக விரியும். அதனால் அவற்றைக் குணபாட முதலிய நூற்களில் கண்டறியலாம்.*

## திணை குணம்

### குறிஞ்சி நிலம்

குறிஞ்சி வருநிலத்திற் கொற்றமுண்டி ரத்தம்
உறிஞ்சி வருசுரமு முண்டாம் - அறிஞருரைக்
கையமே தங்குதரத் தாமைவல்லை யுங்கதிக்கும்
ஐயமே தங்கு மறி 6

*குறிஞ்சி நிலத்திற்கு சிலேட்டும வீடு என்று பெயர் மலைப் பாங்கான இப்பூமியில் விளைகின்ற மருந்துப்பொருட்களுக்கு வலிமை யுண்டு. இங்கு வாழ்வோர்க்கு இரத்தத்தை முறிக்கின்ற சுரமும், வயிற்றில் ஆமைக்கட்டியும் உண்டாகும்.*

## நெய்தல் நிலம்

நெய்தனில மேறுப்பை நீங்கா துறினுமது
வெய்தனிலமேதங்கு வீடாகும் - நொய்தன்
மருங்குடலை மிக்காக்கும் வல்லுறுப்பை வீக்குங்
கருங்குடலைக் கீழிறக்குங் காண் 7

*நெய்தல் நிலம் பித்தம் தங்குவதற்குரிய இடமாம். இங்கு வாழ்வோர் உடம்பின் நுண்பகுதிகளில் சிலேட்டும நீர் ஏற்பட்டு தடிப்பையுண்டாக்கும். பாதம் முதலான வலுவான உறுப்புகளில் யானைக்கால் நோயை உண்டாக்கும். இது குடலண்ட விருத்தியையும் உருவாக்கும்.*

## முல்லை நிலம்

முல்லைநிலத் தயமை மூரிநிறை மேவினுமவ்
வெல்லை நிலைத்தபித்த மெங்குறுங்காண் – வல்லையெனில்
வாதமொழி யாததனுண் மன்னு மவைவழிநோய்ப்
பேதமொழி யாதறையப் பின்பு 8

பித்ததோடம் அதிகரிக்க இந்நிலம் வழிவகுக்கும். வாத தோடமும் இந்நிலத்தின் உள்ளோர்க்கு உண்டாகும். இவ்விரண்டு தோடங்களாலும் ஏற்படும் நோய்களும் உண்டாகும். அது சொல்லப்புகுந்தால் மிக விரியும்.

## மருத நிலம்

மருதநில நன்னீர் வளமொன்றைக் கொண்டே
பொருதனில மாதியநோய் போக்குங் - கருதனிலத்
தாறிரதஞ் சூழவருந்துவரென் றாற்பிணி எல்
லேறிரதஞ் சூழ்புவிக்கு மில் 9

*நல்ல நீர்வளம் உள்ளதால் வாத, பித்த சிலேட்டும நோய்களைப் போக்கும். இங்கு விளைகின்ற பண்டங்களை உண்பதால் பல நோய்கள் தானே நீங்கும்.*

### பாலைநிலம்

*பாலைநி லம்போற் படரைப் பிறப்பிக்க*
*மேலைநில மியாது விரித்தற்கு - வேலைநில*
*முப்பிணிக்கு மில்ல முறையே யவற்றாலா*
*மெப்பிணிக்கு மில்லமஃ தெண்* 10

*இது துன்பந்தருதற்கென உள்ள நிலம். உலகில் சொல்லப் படுகின்ற வாதபித்த சிலேட்டும நோய்கள் வருவதோடு, வேறுபல, பிணிகளும் வந்து சேரும்.*

## நீர்வகைகளின் குணம்

### மழைநீர்

*சீதமு றுங்குளிர்ச்சி சேருமே சித்தத்துட்*
*போதந் தெளிவாய்ப் பொருந்துங்கா - ணாதமொடு*
*விந்தும்வளர்ந்துவரு மேதினியி வெவ்வுயிர்க்குஞ்*
*சிந்துமழை நீராற் றெளி* 11

*மழைநீர் குளிர்ச்சி, நல்லறிவு, சுக்கிலம், பெண்தாது போன்ற வற்றை அதிகரிக்கச் செய்யும்.*

### ஆலாங்கட்டி நீர்

*வெண்மாசி மேகமுடன் வீறும் பெரும்பாடு*
*கண்மாசி காந்தல் கடிதகற்றுந் - தண்மீறும்*
*விக்கற் சுவாசமுடன் மெய்மயக்க மும்போக்குங்*
*கக்குமா லாங்கட்டி காண்* 12

*சிலேட்டுமப் பிரமேகம், பெரும்பாடு, கண்புகைச்சல், கை, கால் எரிவு, விக்கல், மயக்கம் இவைகளை நீக்கும், குளிர்ச்சியை உண்டாக்கும்.*

## பனிநீர்

பனிச்சலத்தை யெல்லுதயம் பானஞ்செய் வாரைத்
தனிச்சொறிசி ரங்குகுட்டந் தாபந் – தொனிக் கயங்கால்
முத்தோஷ நீரிழிவு மூடழல்கி ராணியிவை
கொத்தோடு தாழ்ந்தகலுங் கூறு *13*

*சூரியன் தோன்றும் வேளையில் பனிநீரை அருந்தினால் சொறி, சிரங்கு, குட்டம், தாகம், காசம், கிராணி, தனிவாதம், திரிதோஷம், உடல்வறட்சி, நீரிழிவு போன்றவை நீங்கும்.*

## தண்ணீர்

தண்ணீர்க் குணமெல்லாந் தான்கேண் மடமயிலே
மண்ணின் குணமல்லான் மற்றுமுண்டோ - உண்ணுங்கால்
ஆறுகுள மேரிமடு வாழ்ந்தகூ பஞ்சுனையுள்
ஊறருவி யென்னு முலகு *14*

*தண்ணீர் தங்கும் மண்ணின் குணமே தண்ணீரின் குணமாகும். ஆறு, குளம், ஏரி, மடு, கிணறு, சுனை ஆகிய ஊற்று இடங்களிலுள்ள ஆறு நீரை அவ்விடத்தின் பெயர் கொண்டே அழைப்பர்.*

## ஆற்றுநீர்

ஆற்றுநீர் வாத மனலங்க பத்தோடு
தோற்றுகின்ற தாகந் தொலைக்குமே - ஊற்றமிகுந்
தேகத்தி னோயையெல்லாஞ் சீறித்து ரத்திவிடும்
போகத்திற் தாதுவுமாம் போற்று *15*

*வாதம், பித்தம், கபம், தாகம் இவற்றைப்போக்கும். உடலில் ஏற்படும் பித்தம் தொடர்பான சில நோய்கள் நீங்கும். சுக்கில விருத்தியை உண்டாக்கும்.*

### கங்கை நதிநீர்

கங்கைநதி நீர்பிறவிக் காட்டுக்கோர் பேரனலாந்
துங்கமுற வப்புனலைத் துய்க்குங்கால் - அங்கவெப்பு
மந்தங் கயம்பித்தம் வாயுமே கங்காந்தல்
உந்துந்தா கங்களும்போ முன்னு 16

இது உள்வெப்பம், மந்தாக்கினி, சயம், பித்தம், வாதம், கீழ்ப்பிரமேகம், உடம்பெரிவு, தாகம் போன்றவற்றை நீக்கும்.

### யமுனை நதிநீர்

யமுனைநதி நீரா லதிசுரம்வெண் குட்டஞ்
சமனைநிகர் காசம்வெட்டை தாகம் - வமனமுறு
பித்த மிரைப்பிளைப்பு பேசரிய தாதுநட்டஞ்
சுத்தவெள்ளைப் பாண்டிவைபோஞ் சொல் 17

யமுனைநீரால் அதிகசுரம், வெண்குட்டம், இருமல், வெட்டை, தாகம், பித்தத்தால் ஏற்படும் வாந்தி, அயர்ச்சி, விந்துஇழப்பு, வெள்ளை, பாண்டு முதலியன நீங்கும்.

### கோதாவரி நதிநீர்

கோதா விரியென்னுஞ் கோதினதி நீரதனால்
வாதாதி முத்தோஷ வன்சினமும் - பேதாபே
தச்சொறியு முட்சிரங்குந் தாவு நளிர்ச்சுரமும்
இச்சகம்விட் டேகு மிசை 18

முத்தோடங்கள் நீங்கும், சொறிகள், உள்சிரங்கு, நடுக்கற்சுரம் ஆகியவை நீங்கும்.

### துங்கபத்திரா நதிநீர்

மாதுங்க பத்திரிநீர் வன்றாக மென்புருக்கி
யோதுங் கரப்பா னரோசிகநோய் - தாதுநட்டம்
நேத்திரதோ ஷங்காச நீரடைப்பு மெய் விவண்ணக்
கோத்திர மென்றோதிவை போக்கும் 19

இது வெப்பம், என்புருக்கி நோய், கரப்பான், உணவில் வெறுப்பு, விந்துஇழப்பு, கண்புகைச்சல், இருமல், மூத்திரகிரீச்சரம், உடல் நிறமாற்றம் ஆகியவற்றைப்போக்கும்.

### நருமதை நதிநீர்

நருமதா வென்னு நதிப்புனலால் வாந்தி
சுரம்விக்கல் காமிலத்தின் றோஷம் - பொருமலிரு
கைகா லெரிவுநீர்க் கட்டுகோ ழைக்கட்டோ
டைவாத மென்பவைபோ மாங்கு 20

*நருமதை நதி நீரானது வாந்தி, சுரம், விக்கல், காமாலை, வயிற்று உப்பிசம், கைகால் எரிவு, பித்தகிரீச்சரம், கபச்சேர்க்கை சிலேட்டும வாத தொந்தம் இவற்றைப்போக்கும்.*

### சிந்து நதிநீர்

சிந்து நதிப்புனலாற் றேகத் துறுங்கடுப்பு
புத்திமயக் கம்மேகம் புண்வியர்வை - விந்துநட்டம்
அத்திசுரம் வெட்டை யடர்மூத்தி ரச்சிக்கல்
முற்றியதா கப்பிணிபோ முன்னு 21

*இது உடம்பு குடைச்சல் எடுத்தல், புத்தி மயக்கம், வெட்டை நோய், புண், மிகுவியர்வை, தாது இழப்பு, சுரம், மூத்திரகிரிட்டை, தாகம் போன்றவற்றை நீக்கும்.*

### வைகை நதிநீர்

வைகை நதிப்புனலால் வாதநீர் குஷ்டமொடுமெய்ச்
செய்கைதவிர்க் குஞ்சோபை திண்கரப்பான் - மெய்யெரிவு
தாக நடுக்கனிலந் தாதுநட்டஞ் சில்விடமும்
ஏகுமிந்த வையம்விடுத் தே 22

*இது வாதமேகம், குட்டம், விடப்பாண்டு, கரப்பான் உடம் பெரிச்சல், தாகம், பாதசோபகவாதம், தாது இழப்பு, சில விடங்கள் ஆகியவற்றைப்போக்கும்.*

### சித்திர நதிநீர்

சித்திரந திப்புனற்குத் தேகத் துறுங்கடுப்பு
தொத்துகரப் பான்சர்த்தி சூலைகுன்மங் - குத்துகின்ற
மூத்திரதோ ஷந்தோஷ மூடுவா தாதிக்கங்
கோத்தவூன் வீக்கமும்போங் கூறு 23

*இதனால் உடல்வலி, கரப்பான், வாந்தி சூலை, குன்மம், உடற் குத்தல், வயிற்றுவலி, மூத்திரதோடம், சங்கவாதிரி தோஷம், வாத நோய்கள், உடல்வீக்கம் போன்றவை நீங்கும்.*

### காவிரி நதிநீர்

காவிரிநீ ராற்பொருமல் காசசுவா சஞ்சோபை
நீவுதொண்டைக் கட்டிளைப்பு நீரேற்றம் - பூவுலகின்
மன்னுதிரக் கட்டியொடு வாயுலர லென்பவைபோம்
பின்னுடற்குக் காந்தியுமாம் பேசு 24

*வயிற்றுப்பல், இருமல், இரைப்பு, வீக்கம், கபக்கட்டு, ஆயாசம், நீர்ப்பிடிப்பு, இரத்த குன்மம், நாவறட்சி போன்றன காவேரி நீர் உண்பதால் நீங்குமென்பர்.*

### தாம்பிரபரனி நதிநீர்

தாம்பிரபர னிப்புனலாற் சர்வசுரம் பித்துவிழித்
தூம்பிரமுட் காய்ச்சல் சுவாசநோய் - தேம்பிமிகக்
கக்குகய மென்புருக்கி கைகா லெரிவுடனே
மிக்குறுதா கங்களும் விள் போம் 25

*இந்நீரைப் பருகினால் பலவிதமான சுரநோய்கள், பித்ததோடம், கண்புகைச்சல், உட்சுரம், சுவாசநோய், சயம், எலும்புருக்கி, கைகால் எரிவு, அதிதாகம் இவற்றைப்போக்கும்.*

### பச்சையாற்று நீர்

பச்சையாற் றுப்புனலைப் பார்த்துவந்த பேர்தமக்கு
நச்சிரும லீளைகப நண்ணுங்கா - ணிச்சயமா
யவ்வளவோ வென்னி லனிலமுதி ரக்கடுப்புங்
கவ்வுசுர முங்காணுங் காண் 26

*இதனைப் பருகுவதால் நச்சிருமல், இரைப்பு, கபம், வாதம், இரத்தக்கடுப்பு, சுரம் இவை உண்டாகும் என்பர்.*

### குளத்துநீர்

குளத்துநீர் தானே கொடிதான வாதம்
வளர்த்திவிடு மப்பான் மதுவாங் - குளிர்ச்சியையு
மெத்தவுண் டாக்குமென மேதினியோர் தங்களுக்குக்
கொத்தலரும் பூங்குழலாய் கூறு 27

*குளத்துநீர் வாதநோயை அதிகமாக்கும். மதுபிரமேகம், நீர்ப்பிடிப்பு இவற்றை உண்டாக்கும்.*

### தாமரைக்குளத்துநீர்

தண்டா மரைக்குளத்திற் றங்கு புனலதனால்
உண்டாகும் வாதபித்த முண்மையே - பண்டான
வெக்கைநோய் மாறாது வீறுந் தவனமுமா
மைக்கருங்கண் மாதே வழுத்து 28

*தாமரைகளுள்ள குளத்துநீர் வாத, பித்த நோய்கள், பழமையான சுரம், அதிகதாகம் இவற்றை அதிகமாக்கும்.*

### அல்லிக்குளத்துநீர்

அல்லிக் குளத்தினீ ரக்கினிமந் தப்பேதி
மெல்லச் சொறிசிரங்கு வெப்புடனே - தொல்லுலகில்
தாலுதனி லட்சரமுந் தாதுநஷ்ட முங்கொடுக்குங்
கோல மலர்த்திருவே கூறு 29

*இது அசிரணபேதி, சொறி, புண், சுரம், கண்டகரோகம், தாது இழப்பு இவற்றை உண்டாக்கும்.*

### அதிகுளிர்ச்சி சருகூறல் உள்ள குளத்துநீர்

சீத மிகுந் தடநீர்த்தேகத் தளர்ச்சிவிக்கல்
வாத கபங்கடிகள் வாந்திநளிர் - மோதிருமல்
வீறுகுன்ம நோயிவை விளைக்குஞ் சருகுமதி
லூறுமெனி னோய்பலவா முன்னு 30

*உடல் தளர்ச்சி, விக்கல், வாதசிலேட்டும நோய்கள், வண்டு கடி, விஷவாந்தி, குளிர், காசம், வயிற்றுவலி போன்றவைகள் இந்நீரை உண்பதால் உண்டாகும்.*

### ஏரிநீர் - சுனைநீர்

ஏரிநீர் வாத மிலைத்த துவர்ப்பாகுங்
கூரியதோர் கற்சுனைநீர் கூறுங்காற் - சீரியதோர்
வாதமொடு பித்தமெழும் வைத்தொருநாட் பின்னுண்ணிற்
சீதமில்லை யுட்டிணமாஞ் செப்பு 31

*ஏரிநீர் வாயுவை விருத்திசெய்யும். சுனைநீர் வாத, பித்த தோடமாகும். சுனைநீரை ஒருநாள் வைத்திருந்து மறுநாள் அருந்தினால் உட்டிண முண்டாகும்.*

### ஓடைநீர்

ஓடை தருநீரை யுண்ணவதி தாகமுமா
மேடையெனத் தோட்பலனு மெத்தவா - மோடைமலர்க்
கண்ணா யதுதுவர்ப்புங் காணா மதுரமுமாம்
எந்நாளும் பாரி லியம்பு 32

*இதை அருந்தினால் உடல் வலுப்பெறும். தாகம் ஏற்படும். மேலும் இத்தண்ணீர் துவர்ப்பும் இனிப்பும் உடைத்தாயிருக்கும்.*

### கிணற்றுநீர்

ஆசாராக் கூபத் தறலா லதிதாகம்
வீசாகச் சூடுபசி மெய்க்காந்தல் - மாசூலை
மெய்யுள்வலி சந்துளைப்பு வீழ்மயக்கஞ் சோபைபித்தம்
பையவரு மீளையறும் பார் 33

*இது அதிதாகம், வெப்பம், பசி, அழற்சி, சூலை, உடல் கடுப்பு, இடுப்புவலி, மயக்கம், சோபை, பித்த தோடம் போன்றன தோன்றும்.*

### சுனைநீர்

சுனைப்புனலைத் துய்த்தார்க்குஞ் சூழ்ந்ததிற்றோய்ந் தார்க்குங்
கணைப்புறுசீ தச்சுரமுங் காணும் - வினைக்குரிய
வாதமுறு மத்தால் வருமே நடுக்கலின்னும்
ஓதுபித்த கோபமுமா முன்னு 34

*இதை அருந்தினாலோ, இதில் குளித்தாலோ இருமலுடன் கூடிய சீதசுரம், வாதசோபம், நடுக்கல், கபவாத நோய், பயித்தியதோஷம் போன்றன உண்டாகும்.*

### ஊற்றுநீர்

ஊற்றுநீர் பித்த மொழிக்கு மினிப்பாகும்
ஆற்றிவிடுந் தாகத்தை யப்பொழுதே - கூற்றுவிழிக்
கொம்ப ரிடையாய் குணாகுணங்க ளைத்தெளிவாய்
நம்பியுல கோரிறிய நாட்டு *35*

*ஊற்றுநீர் பித்தம், அதிதாகம் இரண்டையும் போக்கும். சுவையாக இருக்கும்.*

### பாறை நீர்

பாறைமீ தூறுகின்ற பானியந் தன்னையுண்டால்
ஏறுமுடலமெல்லா மீரிப்பே - வீறுகின்ற
வாதகோ பத்துடனே மாறாச் சுரமுமெழும்
ஓதசனத் துண்டா முவர்ப்பு *36*

*இதனால் உடல் குளிர்ச்சியடையும், வாதநோயும் மாறாச் சுரமும் உண்டாகும்.*

### சுக்கான்பாறை நீர்

நீர்க்க டுப்பெழு நெஞ்சினிற் சீழ்க்கட்டும்
பார்க்கிற் பித்தம் பலபிணி சூழ்வதாந்
தீர்க்க வாயுவைத் தீர்த்திடுஞ் சிந்தைநோய்
தாக்குஞ் சுக்கான் றனிப்பாறைத் தோயமே *37*

*இது மூத்திரக்கடுப்பு, கபம், பித்தம் கப நோய்கள், தீர்க்கவாயு, மனநோய் போன்றவற்றை மாற்றும்.*

### கரும்பாறை நீர்

கரும்பாறைத் தண்ணீர் கனசோபை வாந்தி
பெரும்பாடு பித்தசுரப் பீடை - யருந்தயக்க
நீர்க்கடுப்பு தாகமிவை நீக்கிவித்தை புத்தியழ
கேற்கவளர்ப் பிக்குமெய்யை யெண் *38*

*இது சோபை, வாந்தி, பித்தசுரம், பெரும்பாடு, மயக்கம், மூத்திரக்கடுப்பு, தாகம், இவற்றைப்போக்கும், வீரியம், அறிவு, அழகு இவற்றை உண்டாக்கும்.*

### அருவிநீர்

*அருவிநீர் மேகம கற்றுஞ்சி லேஷ்மம்*
*வருவிக்கும் ரத்தபித்த மாற்றும் - பெருமிதமாம்*
*வேலை யுலகின் மிகுந்தபல முண்டாக்குங்*
*காலை மலர்முகத்தாய் காண்* 39

*இந்நீர் நீர்ப்பிரமேகம், இரத்தபித்தம், இவற்றை உண்டாக்கும். சிலேட்டுமத்தையும் உடல்பலத்தையும் உண்டாக்கும்.*

### அடவிநீர்

*அடவிப் புனலா லதிசீதா திக்கம்*
*உடலிற் கனப்பிளைப்பு முண்டாம் - உடல்வயிறு*
*நாவிவ் விடம்வெதும்பு நண்ணுந் தலைப்பாரந்*
*தீவவ்வ டற்சுரமாந் தேர்* 40

*இதனால் அதிக நீர்ப்பிடிப்பு, உடல் கனத்தல், இளைத்தல், உடல் வயிறு, நா, இவை வெப்பமடைதல், தலைக்கனத்தல், சுரம் இவை உண்டாகும் என்பர்.*

### சிவந்தநீர்

*காச பித்தத்தாற் காந்தியு மேகிடும்*
*ஊசலுட்டிண முட்சுரங் காந்தலாம்*
*தாசதாதுவு நண்ணிடு மென்றுரை*
*வாச மிலசிவப்பாம் புனல் வண்மையே* 41

*சிவந்த நீரை அருந்தினால் இருமலால் தோன்றிய பித்தவுட்டிணம் விலகும். உட்சுரம், உடல்எரிவு, விந்து இழப்பு ஆகியன உண்டாகும்.*

### கறுத்தநீர்

*கறுத்தசலம் வாந்தி கரப்பன்வெப்பு காந்தல்*
*இறுத்தநெஞ்சுக் கட்டிரும லீளை - மறைப்பில்சுர*
*நீக்கரிய நெஞ்செரிப்பு நீள்தோஷந் தாகநளிர்*
*போக்குமன லங்கொடுக்கும் போற்று* 42

*கறுத்தநீர் வாந்தி, கரப்பான், வெப்பம், எரிச்சல், மார்புச்சளி, காசம், சுவாசம், விடாச்சுரம், நெஞ்செரிச்சல், புளித்தேப்பம், தோடங்கள், தாகம், நடுக்கல் இவற்றை விலக்கும். பசியை உருவாக்கும்.*

### வயல்நீர்

மேகம்போந் தாகம்போம் வெட்டையுட னேசுரம்போந்
தேகங் குளிர்ச்சியுற்றுத் தேறுங்காண் - சோகமெல்லாம்
ஆறு மிரத்தகய மாறுநோய்க் கோபமிக
மாறும் வயற்புனற்கு வை. *43*

*வயல்நீரை அருந்தினால் பிரமேகம், தாகம், வெள்ளை சுரம், மூர்ச்சை, இரத்தகாசம், சுரம் இவை நீங்கும், உடல் குளிர்ந்து பலம் பெறும்.*

### நண்டுக்குழிநீர்

வாந்தியறுந் தாகமறு மாறாத விக்கலறுங்
காந்த லெரிவுங் கடிதேகுந் - தோய்ந்துவருங்
கண்டுக் குயர்ந்த கனிமொழியே பன்னாளு
நண்டுக் குழிநீரை நாடு *44*

*நண்டுக்குழிநீர் கபத்தால் ஏற்படும் வாந்தி, அதிக தாகம், விக்கல், உடல்சூடு, உடல் எரிவு ஆகியவற்றைப்போக்கும்.*

### பாசிநீர் முதலிய - பலநீர்

பாசித்தண்ணீர் நோயாக்கும் பருத்தவொடைத் தெளிவூறல்
நேசித்திடவே பிணியில்லை நிலைநீர்க்குண்டாங் குடல்வாதம்
மாசித்தண்ணீர் பித்தகற்றும் வளர்க்குஞ்சுரத்தைச் சரகூறல்
தேசத்தண்ணீர்க் குணந்தன்னைத் தெரியச்சொன்னோந் திண்ணமிதே 45

*பாசிநீர் பல பிணிகளை உண்டாக்கும். ஓடைநீர் பல நோய்களை நீக்கும். நிலைநீர் குடல்வாதத்தை உண்டாக்கும். தூசு படிந்தபனிநீர் பித்தம் போக்கும். சரகூறிய நீர் சுரத்தை ஏற்படுத்தும்.*

## இதுவுமது

ஆற்றுத்தண்ணீர்க் கழகுண்டா மடைந்தசுனைக்கு மகோதரமா
தூற்றுமாரி மெய்யிருக்குந் துலையாக்கிணறே கயந்திரட்டும்
மாற்றுங்குளமே வியாதியில்லை மாறாக்குளமே வியாதியுண்டு
தோற்றுமதுரமொழிமயிலே துலங்குந் தண்ணீர்க் குணங்காணே 46

*சீவநதிநீர் ஆற்றுத் தண்ணீர் அழகு தரும், நிழலிலுள்ள சுனை நீர் பெருவயிற்றுநோயை தரும். மழைநீர் உடல் தளர்ச்சியைப் போக்கும். நிலைத்த கிணற்றுநீர் சயத்தை வளர்க்கும். வரவும் போக்கு முள்ள நீர் நோய் தடுக்கும். மாற்றமே பெறாத குளத்துநீர் பிணியைத் தரும். மாறும் குணமுள்ள குளத்துநீர் பிணிகளை ஏற்படுத்தும்.*

## ஸ்நானபானங்களுக்குதவாதநீர்

சந்திரா தித்ததர்வளி சாராத நீர்புழுதுற்
கந்தமதி சேறு கனப்பிலையு - திர்ந்தநீர்
தங்குசுவை யில்லாநீர் சாற்றுமிவை ஸ்தானபா
னங்களுக்கா காவுறினோ யாம் 47

*கிரணங்கள் தீண்டிய கிருமியுடைய கெட்டவாசனையுள்ள, சேறுமிக்குள்ள, சுவையில்லாத நீர் குளிக்கவாகாது.*

## நீராகாரநீர்

வாதபித்த வைய வறட்சிகளை மாற்றிவிடுந்
தாதுவுமுண் டாக்குந்தா கம்போக்கு - மாதர்மெச்ச
வாராகா ரங்கொடுக்கு மாமதுரத் தைக்கொடுக்கு
நீராகா ரத்தெளிவு நீர் 48

*இந்த நீரை அருந்தினால் வாத, பித்த சிலேட்டும நோய்களைப் போக்கும். தாகம் நீக்கும், விந்து பெருகும். அழகூட்டும்.*

## காடிநீர்

பித்த மயக்கமறும் பேரவுஷ தம்முறியும்
உற்றபிணி யிற்சிலவை யோடுங்காண் - சற்றும்
வழங்கா வசீரணமும் வனபேதி யும்போம்
பழங்காடிக் குள்ள பயன் 49

*இது பித்த மயக்கம், கழிச்சல், அசீரணம், வாதம் போன்றவற்றை ஏற்படுத்தும். மருந்தின் தன்மையை முறிக்கும்.*

## உப்புநீர்

உப்புநீரா லுலவை யுள்ளிலோ டிக்குத்தும்
எய்ப்பசன மாம்பித்த மேறிடுங்காண் - செப்புகின்ற
வாயிலூ றுஞ்சலமு மாதுவர்ப்பா மாதரசே
யோயுங் குடல்வாத மோது 50

வாயுவானது உடலில் அங்கங்கு ஓடி குத்துதல், உணவைக் குறைவாக உண்ணுதல் ஏற்படும், பித்தம் அதிகரிக்கும், உமிழ்நீர் துவர்ப்பாகும். குடல் வாதத்தைப் போக்கும்.

## சமுத்திரநீர்

கடலின் புனலாற் கவிகை பெருநோய்
உடலின் கடுப்புதிரச் சூலை - யடர்குஷ்டம்
வாதகுன்மம் வெப்பிரத்த வாதநீ ராமை
மகோதரம்பீலி கமறுங் கூறு 51

## இதுவுமது

குன்ம வாயு குடற்கரி யென்பதும்
வன்ம மான மலசல பந்தமுங்
கன்ம மாகும் வன்னோய்களுங் காணுமோ
நுன்மை வாரிநீர் காய்ச்சி நுகரினே 52

## இதுவுமது

உடற் கடுப்புட னுற்றெழு சோணிதம்
நடுக்கு வாதமு நாப்பிடிப் போடுபல்
இடுக்கி ரத்தமூ னிற்று விழுவதுந்
துடுக்க தாஞ்சன்னிதோஷமு மோடுமே 53

இது கவிகை ஒரு வித மகோதரம், பெருநோய், உடல் குடைச்சல், இரத்த சூலை, குட்டம், வாதகுன்மம், உதிரவாதம், மண்ணீரல் நோய், நீராமைக்கட்டி, பெருவயறு இவற்றை நீக்கும். இந்நீரைக் காய்ச்சி-யுண்டால் வாதகுன்மம், குடல்நோய், மலக்கட்டு, நீர்க்கட்டு, அதிவுழைப்பால் வரும் நோய்கள், உடற்கடுப்பு, சோணிதவாதம், நடுக்குவாதம், நாக்குப்பிடிப்பு, பல்லிடுக்கில் இரத்தம் வருதல், பல்விழுதல், சன்னிதோடம்இவைகள் நீங்கும்.

### நாவல்நீர்

*நாவல்வே ரூறுசல நாளுமதி சாரத்தை*
*மாவலிய மேகத்தை மாற்றுங்காண் - பூவுலகில்*
*விந்தோ டதிசீதம் வீறுபலம்வெப் பையம்*
*மந்தமிவை யுண்டாக்கு மால்* 54

*நாவலின் வேர் ஊறிய நீர் பெருங்கழிச்சல், பித்தம், மதுமேகம் இவற்றை நீக்கும். விந்துபெருகும்; உடல்குளிரும்; உடல்பலம்பெறும்; சுரம் சிலேட்டுமம், அக்கினி மாந்தம் இவை உண்டாகும்.*

### கருங்காலிநீர்

*குட்டங் கயரோகங் குன்மம் பெருவயிறு*
*நெட்டைப் புழுதிமிரு நீரிழிவும் - விட்டே*
*யருங்கான கத்தேகு மஞ்சுகமே நல்ல*
*கருங்காலி நீரதனைக் கண்டு* 55

*குட்டம், பித்தசயம், பித்தகுன்மம், பெருவயிறு, வயிற்றுக்கிருமி, திமிர்வாதம், நீரிழிவு இவற்றை கருங்காலிவேர் ஊறிய நீர் நீக்கும்.*

### இலவுநீர்

*அட்டகுன்ம நீரிழிவு, மற்றிடுமே தேகத்திற்*
*கெட்ட விரணக் கிருமியறு - மட்டலருங்*
*கூந்தன்முடி மாதரசே தோதிலில வின்புனலாற்*
*சேர்ந்தவழ லுந்தணியுஞ் செப்பு* 56

*இலவுமர வேர்பட்டநீர் எட்டுவகை குன்மங்கள், நீரிழிவு, இரத்த இரணக்கிருமி, உள்சூடு இவற்றைப்போக்கும்.*

### வாழைநீர்

*வாழைநீர் தான்குளிர்ச்சி வல்லபல முண்டாக்கும்*
*பேழை வயிறுடைக்கும் பெண்மயிலே - வீழும்வல்லி*
*ரத்தக் கிரிச்ச மெரிநீ ரிவையுடனே*
*சிற்றிரணம் போக்குந் தெரி* 57

## இதுவுமது

சோமரோ கங்க டுலையு மிளைப்புழலை
நாமமுறும் பாண்டுவகை நாடாதே - பூமிதனில்
காழை யெலும்புருக்கி காணா வணங்கரசே
வாழைநீர்க் கென்றுளத்தில் வை 58

*வாழைக்கிழங்கு ஊறியநீர் பெருவயிறு, இரத்தக்கிரீட்டை, எரிமூத்திரம், புண், கர்ப்ப வெட்டை, அயர்வு, உழலை, பாண்டு, எலும்புருக்கி ஆகியனபோக்கி உடற்பலத்தையுண்டாக்கும்.*

## மட்டைநீர்

மட்டைநீ ராற்கிரீச்ச மாறு மடமயிலே
யொட்டிநின்ற நீரிழிவு மோடுங்காண் - கெட்ட
பவுத்திரமும் புண்ணும் பறக்கும் பயந்தே
புவிக்குள்வயிற் றுக்கடுப்பும் போம் 59

*தென்னை, பனை மட்டைகளைப் பிழிந்த நீர் மூத்திரக் கிரீச்சரம், நீரிழிவு, பவுத்திரம், புண், வயிற்றுக்கடுப்பு இவற்றைப்போக்கும்.*

## இளநீர்

இளநீரால் வாதபித்த மேகு மனதுந்
தெளிவாய்த் துலங்குமிரு திஷ்டிக் - கொளிவுங்
குளிர்ச்சியுமுண் டாகுங் கொடியவனல் நீங்குந்
தளிர்த்தகண நொய்தாகுஞ் சாற்று 60

## இதுவுமது

என்றுமிள நீர்நீ ரிறக்குங் கபமறுக்குந்
துன்றனலாஞ் சீதமெனச் சொல்லுவர்கா - ணின்றெழும்பும்
பித்தமொடு வாந்தியும்போம் பேதிகட்டி ரண்டுமுண்டாங்
கொத்தலரும் பூங்குழலாய் கூறு 61

*தொடர்ந்து இளநீர் பருகினால் வாத, பித்த நோய்கள், வெப்பம், உடல்பெருக்கம், பயித்தியம், கபம், கழிச்சல், வாந்தி ஆகியவை நீங்கும். நீர் இறங்கும், உடல் அழகும் குளிர்ச்சியு முண்டாகும்.*

## செவ்விளநீர்

*பித்தமொடு தாகம் பெருத்த வழிநடையால்*
*எய்த்தலா யாச மிவையேகு - நித்தியமுஞ்*
*செவ்விளநீ ருண்டக்காற் றீரும் பலகயமும்*
*அவ்விளநீர்க் கொங்கைமின்னே யாய்* 62

*பித்தம், தாகம், மிகுந்த நடையால் ஏற்பட்ட இளைப்பு, அயர்வு, சயம் இவை தினமும் செவ்விள நீர் அருந்தினால் நீங்கும்.*

## புதிய, பழைய இளநீர்

*புதுயிளநீர் பித்தமறும் பூதலத்தோ ருண்ணும்*
*பதமுடனே யுண்பார் பரிவாய் - நிதநிதமும்*
*உண்ணப் பழவிளநீ ருண்டாம் பலவகைநோய்*
*எண்ணி யறிவா யினி* 63

*புதிய இளவழுக்கையுடைய இளநீர் பித்தம் போக்கும். பழைய இளநீர் நீர்தோடத்தையும் வேறு நோய்களையும் உண்டு பண்ணும்.*

## பச்சை இளநீர்

*பச்சிளநீர் மேகம் பழஞ்சுரங்க ளைப்போக்கும்*
*கச்சுமுலை மாதே கபமறுக்கு - மெச்ச*
*வயிற்றிற் கிருமியொடு வன்சொறி கண்டோடம்*
*அயர்த்தோடச் செய்யு மறி* 64

*இதனால் மேகம், பழைய சுரம், கபம், எறிகிருமி, யானைச்சொறி, கண்ணோய் இவைகள் நீங்கும்*

## கேளியிளநீர்

*கேளியுண்ண மேகம்போங் கேளாய் மடமயிலே*
*நீளகட்டுக் கீட நிலையாதே - தாளாத*
*தாகமொடு மந்தமறுந் தானே கரப்பனும்போம்*
*வேக வனலுந்தணியு மே* 65

*கேளியிளநீர் இரத்தமேகம், மலக்கிருமி, அதிதாகம், மந்தம், கரப்பான், மிகுசுரம் போன்றவற்றை நீக்கும்.*

### மஞ்சள்-கச்சி இளநீர்

பித்தம்போஞ் சோபையறும் பேருலகி லியாவர்க்குந்
தொத்து கபமுந் தொலையுங்காண் - தத்துகின்ற
பொல்லாப் பழஞ்சுரமும் போகுமஞ்சட் கச்சிக்குப்
பொல்லாப் பொன்றில்லை புகல் 66

*மஞ்சள்கச்சி இளநீர் பித்ததோடம், சோகை, சிலேட்டுமம், பழையசுரம் ஆகியவற்றை நீக்கும்.*

### அடுக்கு-இளநீர்

அடுக்கிளநீ ரையத்தை யண்டா தகற்றும்
வடுக்கண்ணா யின்னும் வகுப்போம் - படுக்கும்போ
துண்டாற் சுகமெய்து முள்ளாங் கிருமியிதைக்
கண்டா லிறந்துவிடுங் காண் 67

*தூங்கப்போகும்முன் அடுக்கிளநீரை உண்டால் தூக்கம் வரும் கபதோடம், மலக்கிருமி இவை நீங்கும்.*

### கருவிளநீர்

மருமலர்வாழ் மானேகேள் வையகத்தோர் நித்தங்
கருவிளநீ ருண்ணக் கபமுங் - கிருமிநெளி
புண்ணுங் கரப்பானும் போகுமிகக் காந்தியுறும்
எண்ணுமனப் பூரிப்பா மெண் 68

*இதனால் கபம், புண், கரப்பான் இவை நீங்கும். அழகைப் பெருக்கி மகிழ்ச்சியை உண்டாக்கும்.*

### சோரியிளநீர்

காரிலகு கூந்தற் கருங்கண் மடமயிலே
சோரியிள நீரருந்தச் சோபையறுங் - கூரியதோர்
பூச்சிகிருமி பொன்றும் பொன்மேனி யாமுடலம்
பேச்சிற் றெளிவுண்டாம் பேசு 69

*சிவப்பு இளநீரால் சோகை, வயிற்றுப்பூச்சி நீங்கும். உடல் அழகு பெறும்.*

## ஆயிரங்கச்சியிளநீர்

வேகமுறுந் தீபனமாம் விட்டோடும் வாதகபம்
ஆகமதிற் சேர்ந்த வரிப்பும்போம் - வாகுறுபுண்
வாயிரங்கு சீழும் வயிற்றுவலி யுந்தொலையும்
ஆயிரங் கச்சிக் கறி 70

*இதனைப்பருகினால் வெப்பம், பசி, வாதகபம், அரிப்பு, இரணம், குன்மம் இவை நீங்கும்.*

## குண்டற்கச்சியிளநீர்

அண்டையிலே நின்றார்க் கரோசிகெடுத் தீபனமாங்
கெண்டைவிழி மாதரசே கேளின்னுங் - கண்டபடி
குண்டற்கச் சிக்குக் கொடுந்தாக மாறிவிடும்
பண்டைப் பழமலம்போம் பார் 71

*இதனைப்பருகினால் அதிதாகம், பழம் மலம் தங்குதல் ஆகியவை நீங்கும். பசியெடுக்கும்.*

## உண்பதற்கு முன்பு அருந்தும் இளநீர்

ஊணுக்கு முன்பிளநீ ருண்டாற் பசிபோகும்
வீணுக்குக் குன்மம் விளையுங்காண் - பேணியிதை
மாலை தனிலருந்த மன்று புழுச்சாகும்
வேலையொத்த கண்ணாய் விளம்பு 72

*காலை உண்பதற்கு முன்னர் இளநீருண்டால் பசி நீங்கும். குன்மம் ஏற்படும் மாலையில் உண்டால் வயிற்றுக் கிருமிகள் அழியுமென்பர்.*

## உண்டபின்பு - அருந்தும் இளநீர்

வாதபித்த மீறாது வன்பயித்தி யந்தீருங்
கோதின்மலஞ் சாருங் கொடும்பசியா - மாதரசே
மிண்டியநோய் வாராது மேனி மினுமினுக்கும்
உண்டபின்பு நல்லிளநீ ருண் 73

*உண்டபின்னர் இளநீரைப் பருகினால் வாத, பித்தம் தணியும். பைத்தியம் எனும் நோய் நீங்கும். மலம் முழுதும் கழியும். நல்லபசி எடுக்கும். நோய்வராது; உடல் அழகு பெறும்.*

### காய்ந்தாறிய இளநீர், செவ்விளநீர், கெவுளிபாத்திரை

காய்ந்தாறி யவிளநீர் காசங் கபந்தீர்க்கு
மாய்ந்திடாத் தாகசுர மாற்றுங்காண் - ஆய்ந்ததொரு
செவ்விளநீர் பித்தஞ் சிதைக்குங் கெவுளி கொண்டால்
எவ்வளவுந் தாபமிலை யெண் 74

*தண்ணீரில் போட்டுக் காய்ச்சிய இளநீரானது இருமல், நீர்ப் பிடிப்பு, தோடம், தீராததாகம், சுரம் போக்கும். செம்மைநிற இளநீர் பித்த தோடத்தை விலக்கும். கெவுளி பாத்திரை எனும் இளநீரை-யுண்டால் வெப்பம் தணியும்.*

### வெந்நீர்

நெஞ்செரிப்பு நெற்றிவலி நீங்காப் புளியேப்பம்
வஞ்சமுற வந்த வயிற்றினோய் - விஞ்சியே
வீழாமக் கட்டோடு வெப்பிருமற் சுட்டநீர்
ஆழாக்குட் கொள்ள வறும் 75

*ஆழாக்களவு வெந்நீர் உண்டால் (எதிர்க்கின்ற உணவு) நெற்றிவலி, நீங்காத புளியேப்பம், குன்மம், சீதக்கட்டு, சுரம், காசம் இவை நீங்கும்.*

### காய்ந்தாறிய வெந்நீர்

காய்ந்தாற வைத்தநீர் கட்டுழலை விக்கலொடு
வாய்ந்தவதி சாரபித்த மாற்றுங்காண் - சேர்ந்துவரு
மூர்ச்சை விஷஞ்சர்த்தி முன்மயக்க மேகமதி
யூர்ச்சித முத்தோஷம்போக் கும் 76

காய்ந்தநீ ருண்ணுங்காற் கண்செவிநோய் சூலைகுன்மந்
தோய்ந்தசுர வேகந் தொடரையம் - பாய்ந்தடரும்
வாதத்தின் கோபமிவை மாறுமென லாதியருள்
வேதத்தின் வாக்கியமாம் விள் 77

*இது உழலைநோய், விக்கல், பேதியால் உருவான பித்தம், சில வகை விடங்கள், வாந்தி, மயக்கம், விந்துமேகம், திரிதோடம், கண்ணோய், செவிக்குத்தல், சூலை, குன்மம், சுரம், கோழை, வாதம் போன்றவற்றைத் தீர்க்கும்.*

### கால்கூறு - அரைக்கூறு - காய்ந்த வெந்நீர்

காற்கூறு காய்நீராற் காரிகையே பித்தம்போ
மேற்கூறு பாதிசுட்ட வெந்நீரான் - மேற்கூறும்
வாதமொடு பித்தம்போம் வைத்தொருநாட் சென்றுண்கு
ரோதம்போ மோடி யொளித்து 78

*வைத்ததில் கால்பாகம் இருக்கும் வெந்நீர் பித்தம் போக்கும். பாதியிருக்கும் வெந்நீர் வாத, பித்த தோடங்களைப் போக்கும். இதனை மறுநாள் உண்டால் திரிதோடம் நீங்கும்.*

### முக்கால் கூறுகாய்ந்த வெந்நீர்

முப்பங்க றக்காய்ந்த மூத்தவெந்நீ ரால்வாதஞ்
செப்புங் குளிர்நடுக்கல் தீச்சுரம்வெக் - கைப்பலநோய்
வாதபித்த மையமிவை மாறுஞ் சுரிகுழலே
பூதலத்து னாளும் புகல் 79

*வாத விருத்தி, குளிர் நடுக்கல், கொடுஞ்சுரம், பேதி, திரி தோடம் இவை முக்கால்பாகம் காய்ந்தநீர் பருகினால் போகும்.*

### உண்பதற்கு-முன்பு-பின்பு-நடு-இக்காலங்களில் அருந்தும் வெந்நீர்

ஊணுக்கு முன்புவெந்நீ ருண்டாக்காற் றீபனம்போம்
ஊணுக்குப் பின்பருந்தி லூதியமாம் - ஊணுக்குப்
பாதியிலுண்டாற் பசியும் பாதியாமிப் புனலே
யோதுசுரம் வாதமகற் றும் 80

*உண்ணும் முன் வெந்நீர் குடித்தால் பசி மந்தப்படும். உண்ட பின் பருகினால் நன்மை பயக்கும். சாப்பிடும்போது நடுவில் அருந்தினால் பசி மத்திமமாகும். வெந்நீர் வாதசுரத்தைப்போக்கும்.*

### பொற்கெண்டி வெந்நீர்

பொற்கெண்டி தன்னில்வெந்நீர் பூரித்துட் கொண்டிடுங்காண்
மற்கொண்ட வாயுகபம் வாயருசி - யெற்கொண்ட
மெய்யழல்வெப் புந்தணியும் விந்துநற் புத்தியொடு
மெய்யறிவு மோங்குமென விள்ளு 81

*பொற்கண்டியில் இருக்கும் வெந்நீர் வாதம், கபம், அரோசகம், உடற்சூடு, சுரம் இவற்றைப்போக்கி, சுக்கிலத்தை விருத்திசெய்து, அறிவைப்பெருக்கும்.*

### சரிகைவெள்ளிக்கெண்டி - வெந்நீர்

சரிகைவெள்ளிக் கெண்டி தனிலெட்டி லொன்றாய்ப்
பெருகக்காய்ச் சம்புனலைப் பெய்தே - பருகுங்கால்
வெப்பொடுதா கங்குன்மம் வீறுபித்தக் காய்ச்சலும்போந்
துப்பொடுட லஞ்செழிக்குஞ் சொல் 82

*எட்டில் ஒன்றாகக் காய்ச்சியநீரை சரிகை வெள்ளிக்கெண்டியில் விட்டுச் சாப்பிட்டால் சூடு, தாகம், குன்மம், பித்தசுரம் இவை நீங்கும். தேகத்திற்கு வலிமையுண்டாகும்.*

### தாம்பிரம்-வெள்ளி-பஞ்சலோகம்-வெண்கலம் இவைகளின் வெந்நீர்

இரவி வட்டிற் றூமமிரத்தபித்தம் போக்கும்
இரசிதவட் டிற்கைய மேகும்-வருகலப்பு
வட்டிலறல் முத்தோஷ மாற்றும்வெண் கலச்சலமெய்க்
கொட்டிரத்த தாதுவைச் சேர்க்கும் 83

*தாமிரக்கிண்ண வெந்நீர் கண்புகைச்சல், ரத்தபித்தம் இவற்றைப் போக்கும். வெள்ளிக்கிண்ணத்து வெந்நீர் கபநோய் நீக்கும். பஞ்சலோக வட்டில் வெந்நீர் திரிதோடம் நீக்கும். வெண்கலப்பாத்திர வெந்நீர் உதிரத்தைப் பெருக்கும்.*

### கெண்டி வெந்நீரின் குணம்

கெண்டிதனிற் காய்ந்திடு கீலாலமதை யாற்றியுண
அண்டிய நோயு மடர்சிரங்கும் - பண்டைக்
குடைச்சலுங்கை காலிற் குடைச்சலொடு சந்தின்
குடைச்சலும்போ நன்றாகக் கூறு 84

கெண்டியில் காய்ந்த வெந்நீர் சுரம், சிரங்கு, கைகால், இடுப்புக் குடைச்சல் ஆகியவற்றை நீக்கும்.

### பன்னீர்ச்செம்பு வெந்நீர்

*பன்னீர்ச்செம் பிற்காய்ந்த பானீயம் விட்டருந்த*
*மன்னிய சுவாசம்விக்கல் மாபிரமை - பன்னரிய*
*பித்தசி லேஷ்மவளி பேசரிய தாளின்வலி*
*யித்தரையை விட்டகலு மெண்* *85*

*பன்னீர்ச்செம்பில் காய்ந்த வெந்நீரால் இரைப்பு, விக்கல், சித்த பிரமை, முத்தோடம், தாளுபாகரோகம் இவை நீங்கும்.*

### இரும்புக்கெண்டி வெந்நீர்

*இரும்புநறுங் கெண்டிதனி லேந்திய வெந்நீரை*
*விரும்பியுணப் பாண்டு விலகுந் - திரும்பவுமோ*
*தாதுவுமா நாடிகளுந் தாமுரக்குந் தேகமதிற்*
*சீதசுக முண்டாந் தெளி* *86*

*இது பாண்டு நீக்கும். தாதுவிருத்தி செய்யும். நரம்புக்கு உறுதியும், நல்ல வெப்பச்சூழலையும் தரும்.*

## பால்வகைகளின் குணம்

### முலைப்பால்

*தன்னியமென் றோதிற் சருவதோ ஷங்களும்போம்*
*உன்னிய தாபமொழியுங்காண் - சன்னியொடு*
*வாதசுரம் பித்தசுரம் வண்கபச்சு ரந்தணியுங்*
*கோதில் வலிமையுண்டாங் கூறு* *87*

*இருந்தோஷம் போக்கு மிகற்கிரீச்சந் தீர்க்கும்*
*அருந்து மருந்தி னனுபானம் - பொருந்தும்*
*அஞ்சனத்திற் காகு மறல்வறட்சி நீக்கிவிடும்*
*பஞ்சினடி மாதர்முலைப் பால்* *88*

*முலைப்பாலால் எழுவகை தோடங்கள், வெப்பம், வாத, பித்த கப சுரங்கள், முத்தோடம், வாதகிரீச்சரம், நாவறட்சி இவை நீங்கும். அனுபானத்திற்குப் பயன்படும். கூந்தல் வறட்சி பலமுண்டாகும்.*

### மாதர் முலைப்பால்

கரியநிற மாதர் கலசமுலைக் கீரம்
அரியவிழிக் காமருந்திற் காகா - திருநிலத்துள்
நோயணுகாச் செய்ய நுடங்கிடையார் தம்முலைப்பால்
தீயமுத்தோ ஷம்போக்குஞ் சேர் 89

*கரியபெண்களின் முலைப்பால் கண்ணோய் மருந்துகட்காகாது. மேலும் மாதர் முலைப்பால் முத்தோடங்களைப் போக்கும்.*

### பரத்தையர் - முலைப்பால்

பரத்தையர் முலைப்பாற்குப் பாரமுத்தோ ஷங்கள்
உரத்துவரும் வாதமுமுண் டாகும் - இரத்தச்
சொறிகிரந்தி புண்ணுந் தொடர் கழனோய்சேருங்
குறியறிந்து நீக்கிக் கொடு 90

*இப்பால் முத்தோடம், வாதநோய், இரத்தச்சொறி, கிரந்தி, புண், கழல்வாதம் இவற்றையுண்டாக்கும்.*

### பசுவின்பால்

பாலர்கிழவர் பழஞ் சுரத்தோர் புண்ணாளி
சூலையர் மேகத்தோர் துற்பலத்தோர் - எலுமிவர்
எல்லார்க்கு மாகு மிளைத்தவர்க்குஞ் சாதகமாம்
நல்லாய் பசுவின்பால் நாட்டு 91

*பாலர், வயதானோர் இருவர்க்கும் சுரம், புண், சூலை, பிரமியம் ஆகியன உடையோர்க்கும் பல மில்லாதாருக்கும் பசும்பால் ஆகும்.*

### வெண்மை - செம்மை - கருமை - கபிலை - யென்னும் இந்நிறமுள்ள பசுக்களின் பால்

வெண்பசுவின் பால்போக்கும் பித்தத்தை மெய்சிவந்த
வண்பசுவின் பால்போக்கும் வாதத்தைக் - கண் சிறந்த
காராவின் பால்போக்கு மையங் கபிலைப்பால்
ஆரமிர்தாந் தோஷமறுக் கும். 92

*வெண்மைநிறப் பசுவின்பால் பித்தத்தையும், செந்நிற பசுவின் பால் வாதத்தையும், கருமைநிறப் பசுவின்பால் கபத்தையும், கபிலை நிறப்பசுவின்பால் முத்தோடத்தையும் போக்கும்.*

### காராம்பசுவின்பால்

கண்ணோ யகற்றுங் கயரோகந் தான்போக்கு
மண்ணிலுள்ள பால்தோஷ மாற்றுங்காண் - பெண்ணே
இரத்தபித்தம் போக்கு மிராசு வசியங்
கறுத்தபசும் பாலதனைக் காண் *93*

*இப்பால் விழிப்பிணி, காசம், பிற பால்களினால் ஏற்பட்ட தோடங்கள், இரத்தபித்தம் இவற்றை நீக்கி, உடல் அழகை உண்டாக்கும்.*

### நாரை - மான் - கபிலை - என்னும் இந்நிறமுள்ள பசுக்களின் பால்

நாரைப் பசுவின்பால் நாளுமுய னோயகற்று
மாரை நிறப்பசும்பால் வாய்த்திடினோ - வேரையுறு
முப்பிணியும் போகு மொழிகபிலை யின்பாலுக்
கெப்பிணியும் போமே யிறங்கி *94*

*நாரைப்பசும்பால் முயல்வலியை (வலிப்புநோய்) அகற்றும், வாணிப்பசும்பால் முத்தோடத்தையும், கபிலை நிறப்பசும்பால் பல வகைப் பிணிகளையுந் தீர்க்கும்.*

### கொம்பசையும்பசுவின் பால்

கொம்பசையு மாப்பாலோ கூறுபித்தம் போக்கிவிடுந்
தம்பவா தத்தைத் தருவிக்கும் - வம்புமுலை
மானேகேள் விந்துவைவ ளர்ப்பிக்கும் வன்கபத்தைத்
தானே யெழுப்புமெனச் சாற்று *95*

*அசையும் கொம்புடைய பசும்பால் பித்தநோய், உடம்பை வில்போல் வளைக்கும் வாதநோய், கபநோய் இவற்றையும் தாது விருத்தியையும் உண்டாக்கும்.*

### மூன்றாமீற்று - நான்காமீற்றுப்பசுக்களின் பால்

மூன்றாமீற் றின்பான் முதிர்கபத்தைப் போக்கிவிடும்
ஏன்றநா லாமீற் றெனும்பாலுக் - கூன்றுதிரி
தோட மகலுஞ் சுகமுண்டிவ் வாப்பாற்சந்
தோடமெ வர்க்குமுண்டாக் கும் *96*

*மூன்றாம் ஈற்றுப்பசும்பால் நீடித்த கபத்தை நீக்கும். நான்காம் ஈற்றுப் பசுவின்பால் முத்தோடங்களையும் நீக்கும். உடல் பொலிவு பெறும். மகிழ்ச்சி பெறும்.*

## ஆகாப்பசுவின் பால்

விஞ்சுவரணை தாராநோய் மிகுத்துச்சுழலல் வெண்புள்ளி
துஞ்சியலைந்து மலமருந்தல் சுடுகாடேகி யெலும்புணலிவ்
வஞ்சுவகையி னாவின்பா லாகாதணுகிற் றிரிதோஷம்
நெஞ்சிலடையுங் கயநோயா நிறைந்தவயதுங் குறைந்திடுமே 97

*அரணநோய், தாராநோய், வெண்புள்ளி, மலம் அருந்தல், சுடுகாட்டெலும்புண்ணல் ஆகிய நோய்களையுடைய பசுக்களின் பால் முத்தோடங்களும் மார்பில் சேர்ந்து விளைவித்து ஆயுளைக் குறைக்கும்.*

## பகற்பசுவின் பால்

பகற்பால் சிசுக்கட்குப் பக்குவமென் றாலும்
விகற்பமொடு மைப்பெருக்கு மெய்யே - எதற்குமிகத்
தீதடரச் செய்யுமித்தாற் சேராதுட் காய்ச்சலனல்
தாதவிழும் பூங்குழலே சாற்று 98

*இப்பால் குழந்தைகட்குப் பக்குவமானதுதான். ஆனால் பல விதமான கபநோய்களை உண்டாக்கும். உடல் சூட்டையும் வெப்பத்தையும் உண்டாக்கும்.*

## இராப்பசுவின் பால்

பகற்பசும்பால் காய்ச்சிப் பருகி னழலும்
இகற்கபமு மீளையுமி ராவாம் - புகல்பித்த
வேகமும்போ மேனியெல்லா மேனியிடுந் தாதுவுமாம்
போகமுமுண் டாகும் புகல் 99

இரவின்பால் கண்ணி லெழுபிணிபோக் கும்பின்
பரவியநோ யும்போக்கும் பாரில் - விரகமுற்றார்க்
கத்தியம் பன்னவிழி யாயிழையே யாவருக்கும்
பத்தியமா மென்றைக்கும் பார் 100

*பகலிற் சுரந்து இரவில் கறக்கின்ற பாலால் தேக அழற்சி, கபநோய், சுவாசம், பித்தநோய், கண்நோய், விந்து தொடர்பு நோய்கள் இவை நீங்கும். உடல் பொலிவு, விந்துப்பெருக்கம், மாதர்மீது விருப்பம் ஆகியவற்றை உண்டாக்கும். பத்தியத்திற்கு உதவும்.*

## எருமைப்பால்

வாதத் திமிரை வரவழைக்கும் புத்தியினற்
போதந் தெளிவைநனி போக்குங்காண் - கோதற்றே
யங்கத் துறுமருந்தை யன்றே முறித்துவிடும்
பங்கத் துறுமேதிப் பால் *101*

*இது திமிர்வாயுவை உண்டாக்கும். புத்திகூர்மையைப் போக்கும். மருந்தின் குணத்தை முறிக்கும்.*

## வெள்ளாட்டுப்பால்

வெள்ளாட்டுப் பாலுக்கு மேவியநற் றீபனமாந்
தள்ளாடு வாதபித்தஞ் சாந்தமாம் - உள்ளிரைப்புச்
சீதமதி சாரஞ் சிலேஷ்மமறும் புண்ணாறும்
வாதகி லேசமும்போ மாறி *102*

*இது வாத, பித்த கபம், சுவாசகாசம், சீதம், அதிசாரம், கபதோடம், இரணம், வாதவீக்கம் ஆகியவற்றைப்போக்கி பசியை உண்டாக்கும்.*

## செம்மறியாட்டுப் பால்

செம்மறிப்பால் பித்தாஞ் சிலேஷ்மத்தை யுண்டாக்கும்
விம்மும் வயிறுமிக மேன்மூச்சாங் - கொம்மை
வருமுலையாய் பத்தியத்தில் வாராது வாய்வாம்
பருகுவர்க்கு நாளும் பகர் *103*

*இது முத்தோடங்கள், உப்பிசம், மேற்சுவாசம், வாயு இவற்றை உண்டாக்கும். பத்தியத்திற்குதவாது.*

## யானைப்பால்

வாதம்போந் தாதுபுஷ்டி வந்தடரும் வன்பலம்
யாதுபித்தங் கூடி யழகுதிக்குந் - தாதுமலர்த்
தேனைப்பா லிற்கலந்த செய்கைபோ லேயிருக்கும்
யானைப்பா லுண்ணு மவர்க்கு *104*

*யானைப்பால் வாதத்தைப்போக்கும்; விந்து விருத்தி, வலிமை, பித்தம் அதிகரிக்கும், உடல் அழகு உண்டாகும். இப்பால் தேனைப் பாலோடு சேர்த்துக் குடிப்பது போன்ற தன்மையைக் கொடுக்கும்.*

### குதிரைப்பால்

வீரிய விர்த்தி விளைக்குமழ குண்டாக்குங்
காரியத்திற் காமங் கதிப்பிக்கும் - வாரார்
கரகமெனச் செப்புமுலைக் காரிகையே கேளாய்
துரகதப்பால் செய்யுந் தொழில் *105*

*சுக்கிலப்பெருக்கம், உடல்பொலிவு, புணர்ச்சியில் விருப்பம் இவற்றைக் குதிரைப்பால் உண்டாக்கும்.*

### ஒட்டைப்பால்

ஒட்டைப்பா லுக்குமந்த மூர்வாத சூலையொடும்
அட்ட குணக்கரப்பா னார்வதன்றி - மட்டிடாக்
காதிரைச்சன் மந்தமதி காசஞ்சு வாசமுமா
மாதரைக்கு ணாளும் வழுத்து *106*

*இது அக்கினிமாந்தம், வாதசூலை, எட்டுகரப்பான், காதிரைச்சல், செவிடு, அதிகமான இருமல், இரைப்பு இவற்றையுண்டாக்கும்.*

### கழுதைப்பால்

கழுதைப்பால் வாதங் கரப்பான் விரணந்
தழுதளையுள் வித்திரதித் தானே - எழுகின்ற
ஒட்டிய புண்சீழ்மேக மோடுசொறிசிரங்கு
கட்டியிவை போக்கும் கழறு *107*

கத்தவத்தின் பாற்குக் கரிய கிரந்தியறுஞ்
சித்தப் பிரமைபித்தந் தீருங்காண் - தத்திவரும்
ஐய மொழியு மதிக மதுரமுமாஞ்
செய்ய மடமயிலே செப்பு *108*

*மிகவும் இனிப்பான கழுதைப்பால் வாதநோய், கரப்பான், புண், தழுதளைநோய், கட்டி, கிரந்தி, சீழ்பிரமேகம், சொறி, சிரங்கு, அற்புதரணம், புத்திமாற்றம், பித்ததோடம், கபநோய் இவை களைப் போக்கும்.*

### பாத்திரபேதத்தி லுண்டாகிய பால்

செம்பிலட்டும் பால்வாத சீதமொழிக் கும்பொன்மண்
கும்பத் தடுபால்போக் கும்பித்தை - யம்புவியுள்
வெள்ளி யுறையிரும்பில் விட்டுக்காய்ச் சும்பாலால்
துள்ளியுறை யையமறுஞ் சொல் *109*

*செப்புப் பாத்திரத்தில் காய்ச்சியபால் வாதசிலேட்டுமத்தையும், பொன், மண் பாத்திரங்களில் காய்ச்சிய பால் பித்ததோடத்தையும், வெள்ளி, வெண்கலம், இரும்பு பாத்திரங்களில் காய்ச்சிய பால் கபநோயையும் போக்கும்.*

### ஆடையெடுத்த பால்

ஆடையெடுக் கும்பாலா லக்கினிமந் தப்படுமே
வாடைநல்லாய் சீரணமாம் வாதமறுங் - கோடையிடி
போலு மெழுந்தபித்தம் போகுமைய மேகுமயில்
வேலனய கண்ணாய் விதி *110*

*ஏடுநீக்கிய பால் அக்கினிமந்தத்தையுண்டாக்கும். எளிதில் செரிக்கும். வாதபித்த கபதோடங்களை நீக்கும்.*

### காய்ச்சும்பாலுக்கு - நீரளவைகூறல்

ஆடுபசும் பால்காய்ச்சி லஷ்டபாகம் புனலாம்
நீடெருமை செம்மறிக்கு நேர்நேராந் - தேடரிய
சுக்குசிறு காஞ்சொறிவேர் கூட்டிச் சுவறியபால்
ஒக்கும் வெள்ளாட் டுப்பாற்கென் றோது *111*

*பசும்பால், வெள்ளாட்டுப்பாலுக்கு எட்டில் ஒரு பங்கும், எருமைப்பால், செம்மறியாட்டுப்பாலுக்குச் சமபங்கும் நீரிட்டுக் காய்ச்ச வேண்டும். பாலில் சுக்கும், சிறுகாஞ்சொறிவேரும் சேர்த்துக் காய்ச்சினால் அவை வெள்ளாட்டுப்பாலின் தன்மையைப் பெற்றுவிடும்.*

### பாலேடு

பாலேட்டாற் பித்தமறும் பாழ்த்தகொடுஞ் சர்த்தியும்போம்
மாலாட்டு மூர்ச்சையும்போம் வன்பலமா - மேலாலே
தாதுமிகுந் தீபனமாந் தானே யிளைத்தவர்க்குக்
கோதுமறு மாமயிலே கூறு *112*

*பால் ஏட்டால் பயித்தியநோய், வாந்தி, மூர்ச்சை நீங்கி, சுக்கிலம் சடராக்கினி இவை விருத்தியடையும்.*

### தேங்காய்ப்பால்

வாதமாம் பித்தமுறும் வன்கரப்ப னும்படருந்
தாதுமிக விர்த்தியாந் தாழ்குழலே - போதநல்ல
அன்ன மிறங்கு மதியுரிசை யுண்டாகுந்
தென்னங்காய்ப் பாலாற் றெளி *113*

*இது விந்துவைப் பெருக்கும், வாத பித்த நோய்கள், கரப்பான் இவற்றை நீக்கும்.*

### ஆலம்பால்

ஆலம்பால் மேக மறுத்தசையும் பல்லிறுக்குங்
கோல முடிக்குக் குளிர்ச்சிதரும் - ஞாலமதில்
மெத்தவுமே சுக்கிலத்தை விர்த்திசெய்யுந் தப்பாமற்
சுத்த மதிமுகத்தாய் சொல் *114*

*இது பிரமேகத்தை நீக்கும். ஆடும் பற்களை உறுதிப்படுத்தும். குளிர்ச்சியையும் தாதுவிருத்தியையும் உண்டாக்கும்.*

### அத்திப்பால்

காரமோ டுட்டிணமாங் காதுகின்ற பித்தத்தை
நீரிழிவைச் சூலைகளை நீடிரத்தஞ் - சேருங்
கிரீச்சரத்தைப் போக்குங் கிளர்கோளி யென்னும்
மரச்சரும்ப பாலதனை வாங்கு *115*

*அத்திப்பால் பித்தம், நீரிழிவு, சூலை, ரத்த மூத்திரம், கிரீச்சரம் இவற்றைப்போக்கும்.*

### மட்டுப்பால்

தலைவலிநீ ரேற்றந் தனித்தவுடல் வாதம்
அலைவுறுமேல் வாந்தி யரோசி - நிலைகுலையும்
வட்டுப்பால் வஞ்சம்வைத்த மாமுலைமா தேமணக்கு
மட்டுப்பா லுக்கு மருண்டு 116

*மட்டுப்பால் தலைவலி, நீர்ப்பிடிப்பு, கால்வாதம், கபத்தால் வாந்தி வருதல், ருசியின்மை போன்றவற்றை நீக்கும்.*

### காட்டுப்பிராய் - ஈழத்தலரி - இவைகளின் பால்

காட்டுப்பி ராய்ப்பாலோ காணுகின்ற பல்வலியை
நாட்டில்வைக்கா தோட்டிவிடு நங்கையே - கோட்டாரும்
ஈழ்த் தலரிப்பா லேதுபுரைப் புண்தொடையின்
வாழைப்புற் றும்போக்கு மால் 117

*காட்டுப்பிராய், மரப்பால் பல்வலியை நீக்கும். ஈழத் தலரிப்பால் புரை, இரணம், புண் தொடைவாழைப்புற்று இவற்றைப் போக்கும்.*

### சங்கஞ்செடி - புங்கமரம் - இவைகளின்பால்

சங்கம்பால் வீக்கமதைத் தான்போக்கு நீர்வடிக்கும்
அங்குசுர வெப்பகற்று மையமிலை - கொங்குலவு
புங்கம்பால் புண்ணாற்றும் பொல்லாத வாய்வகற்றுந்
தங்கம்போல் மெய்யளிக்குந் தான் 118

*சங்கன்வேர்க்கட்டையைச் சீவிப்பிழிந்த பால் வீக்கம், நீரேற்றம், சுரம் இவற்றை நீக்கும். புங்கமரப்பால் விரணத்தை நீக்கி வாய்வினை அகற்றி உடற்பொலிவை உண்டாக்கும்.*

### தில்லைமரத்தின்பால்

பாரிசவா தஞ்சன்னி பாதஞ்சூ லங்கு ஷ்டஞ்
சேருமுட வாதம்வலி சில்விஷம்போம் - பேருரைக்க
இல்லையில்லை யென்றோடு மென்பது வாதமுமே
தில்லைமரப் பாலாற் றெளி 119

*பாரிச வாதம், சன்னி பாதம், சூலை, குட்டம், முடவாதம், சில்விடம், எண்பதுவாதம் ஆகியவற்றைத் தில்லை மரப்பால் நீக்கும்.*

## திருகுக்கள்ளிப்பால்

வாத முடக்ககலும் வன்கிரந்தி குட்டம்போஞ்
சீதமொழி யுங்கிருமி சேருமோ - மாதே
பருகுபக்க நோயுடனே பாழுங்கரப்பான் றீருந்
திருகுக்கள்ளிப் பாலாற் றெளி 120

*திருகுக்கள்ளிப் பாலானது வாதம் கிரந்தி, குட்டம், சீதக்கட்டு, கிருமிநோய், பக்கச் சூலை, கரப்பான் இவற்றை நீக்கும்.*

## சதுரக்கள்ளிப்பால்

குட்டங் கடிசூலை குன்மமே கம்வாயு
துட்டக் கிருமியொடு தூறுபுண்ணு - முட்ட
முதிரக் கரப்பனும்போ மொய்குழலே நாளுஞ்
சதிரக்கள் ளிப்பாற்குத் தான் 121

*இப்பாலால் குட்டம், கடிவிடங்கள், குன்மம், சூலை, வாதப் பிரமேகம், வாதம், கிருமியுள்ள ஆழ்ந்தபுண், கரப்பான் இவை நீங்கும்.*

## மான்செவிக்கள்ளிப்பால்

மான்செவிக்கள் ளிப்பாற்கு மாறா விரணங்கள்
ஏன்கிளைக்கு நன்மலமி றங்குங்காண் - ஊன்சேர்
வரிகிரந்தி நீங்கா வறட்சிசொறி யோடு
பொரிகிரந்தி யும்போம் பொரிந்து 122

*இதனால் ஆறாப்புண், வரிக்கிரந்தி, தேக வறட்சி, சொறி, படை, பொரிகிரந்தி இவை நீங்கும்.*

## இலைக்கள்ளிப்பால்

செய்ய கரப்பான் செவிநோய்வா தம்போக்கும்
பையவருஞ் சூலைதனைப் பாழாக்கு - மெய்யின்மிக
ஊது கிரந்தியோ டுட்புண்ணை யாற்றிவிடும்
ஓதுமிலைக் கள்ளிப்பா லோரு 123

*இதனால் செங்கரப்பான், செவிநோய், வாதநோய்கள், சூலை, ஊதுகிரந்தி, உள் விரணம், கிரந்தி இவை நீங்கும்.*

## கொடிக்கள்ளிப்பால்

துய்ய கரப்பான் சொறிசிரங்கும் புண்ணும்போஞ்
செய்யகடி குஷ்டநோய் சேருமோ - மெய்யில்
அடிக்கடிசேர் குன்மவலி யத்தனையுந் தீருங்
கொடிக்கள்ளிப் பாலுக்குக் கூறு 124

*இப்பாலால் கரப்பான், சொறிசிரங்கு, பெருவிரணம், அக்கினி, கீடக்கடி, குட்டம், குன்மம் இவை நீங்கும்.*

## எருக்கம்பால்

எருக்கம்பால் கட்டிகளை யேகரைக்கும் வாய்வைத்
திருக்கறவே கொன்றுவிடுந் தீராச் - செருக்கான
சன்னி வலிதீர்க்கும் சார்ந்தபல சிந்தூரம்
உன்ன முடிக்குமென வோது 125

*இது வாதக்கட்டிகளைக் கரைக்கும், வாதம், சன்னி பாதம், ஐவகைவலி இவற்றைப்போக்கும். மருந்துகளைப் பொடித்துச் செந்தூரமாக்கப் பயன்படும்.*

## வெள்ளெருக்கம்பால்

வலியின் வலிசுளுக்கு மாவாத சன்னி
யெலியின் விஷஞ்சுரங்க ளெல்லாம்-வலியற்றுக்
காலைத் தொழுதே கடற்சேரும் வெள்ளெருக்கம்
பாலைத் தொடுவார்க்குப் பார் 126

*இப்பாலால் ஐவகை வலிகள், சுளுக்கு, பெருவாதம், சன்னிபாதம், எலிவிஷம், குளிர்ச்சுரம் போன்ற பல வகைச் சுரங்கள் இவை நீங்கும்.*

## காட்டாமணக்கின் பால்

விழுமேக வெள்ளைகுன்மம் மேல்விரணத் தோலில்
எழுமேருக் கட்டியிவை யெல்லாந் - தொழுதோடுங்
கூட்டா மணக்குழம்பைக் கொண்டவனக் கொங்கைமின்னே
காட்டா மணக்கம்பால் கண்டு 127

*இதனால் மூத்திரத்தோடு விழுகின்ற மேகம், வெள்ளைநோய், வயிற்றுவலி, குறிவிரணம், தோல்கட்டி இவை நீங்கும்.*

### எலியாமணக்கின் பால்

எலியா மணக்கோ வெலிவிடம்வித் துப்பற்
பலவிடமு நீக்கிவிடும் பாரில் - வலுபேதி
யுண்டாகச் செய்யு முயர்பிலீ கங்குன்மம்
அண்டாம லோட்டுமிதை யாய் *128*

*இது எலிவிடம், வீக்கம், வண்டுகடி போன்றபலவகை விடங்கள் இவைகளை நீக்கும். அதிக பேதியை உண்டாக்கும்.*

### பிரமதண்டுப்பால்

கண்கூசல் கண்ணருகல் கண்ணொழுகல் கண்ணோதல்
கண்சிவத்த லெல்லாங் கடிதேகுந் - திண்ணச்
சரமதண்ட னைப்பிளக்குஞ் சாயகக்கண் மாதே
பிரமதண்ட னற்பாற்குப் பேர்ந்து *129*

*இப்பால் கண்கூசுதல், கண்ணருகல், கண்ணில் நீர்வடிதல், கண்வலி, கண்சிவப்பு ஆகியவற்றைப் போக்கும்.*

## தயிர்வகைகளின் குணம்

### பசுவின் தயிர்

பசுவின் தயிராற் பசிமிகவுண் டாகும்
இசிவுறும் சீரணநோ யேகும் - பசையகன்ற
தாகமி ளைப்பிருமல் தாங்கொணா மெய்யெரிவும்
ஏகு முலகி லியம்பு *130*

*இது பசியை உண்டாக்கும். இசிவு, சீரணநோய், தாகம், ஆயாசம், காசம், உடம்பெரிச்சல் இவற்றைப்போக்கும்.*

### ஆடையெடுத்த தயிர்க்குணம்

ஆடையெ டுத்ததயி ரையமி ளைப்பறுக்கும்
நாடுகி ரீச்சரத்தை நாடவொட்டா – தாடொலியால்
உண்டாங் கிராணி யுறைமேகம் போக்கிவிடுந்
தண்டார் குழலணங்கே சாற்று *131*

*இது சிலேட்டும நோய்கள், ஆயாசம், மூத்திரக் கிரீச்சரம், வாதகிராணி, குஷ்டரோகம், மேகம் இவற்றைப்போக்கும்.*

## எருமைத்தயிர்

எருமைத் தயிருக் கெரிவுபித்தம் போகும்
வருமைக் கரப்பனொடு வாதம் - பெருமிதஞ்சேர்
தூல வுடலமுமாந் தூயறிவு மந்தமுறுங்
கோல விழிகுளிருங் கூறு *132*

*எருமைத்தயிரால் எரிச்சல், பித்தநோய் இவை போகும். கபத்தால் வந்த கரப்பான், வாதநோய், உடல்பருத்தல், புத்திமந்தம், கண்குளிர்ச்சி ஆகியவை உண்டாகும்.*

## வெள்ளாட்டின் தயிர் - மோர்

வெள்ளாட்டின் வெண்டயிரோ மிக்கநல மாகும்அதற்
குள்ளாடை யான்மந்த முண்டென்பார் - வெள்ளாட்டின்
மோரோமே கத்தை முதிரா தடித்துவிடும்
பாரோ ரறியப் பகர் *133*

*இதன் தயிரால் அதிக வெப்பமும், ஏடால் மந்தமும் ஏற்படும். மோர் பிரமேகத்தைப் போக்கும்.*

## செம்மறியாட்டுத் தயிர்

செம்மறியின் றன்றயிரைத் தின்ன மதுரமிகுங்
கொம்மைமுலை மாதரசே கூறக்கேள் - அம்ம
கரப்பான் சொறியுங் கடுப்பிரத்த வாய்வும்
உரப்பர் முடல்கெடுமென் றோது *134*

*இதனால் கரப்பான், சொறி, மூலக்கடுப்பு, ரத்தமூலம், வாதநோய் இவை பலப்படும். உடலுக்குத் துன்பந்தரும்.*

## ஒட்டைத்தயிர்

தீபனமு முண்டாஞ் சிறுகரப்பான் புண்ணுமாம்
பூபதிபோன் மேனி புளகிக்குந் – தாபதமாம்
ஒட்டைத் தயிர்நிதமு முண்ணவதி தாகம்போந்
துட்டக் கிருமியறுஞ் சொல் *135*

*ஒட்டைத்தயிரினால் நற்பசி எடுக்கும். சிறுகரப்பான், இரணம் இவை உண்டாகும். தாகமும், மலக்கிருமிகளும் நீங்கும். மேனி வனப்புண்டாகும்.*

## மோர் வகைகளின் குணம்

### பசுமோர்

*வீக்க மகோதரமுள் வீறுகுன்மம் பாண்டுபித்தந்*
*தாக்குமருந் திட்டததி சாரமொடு - கூக்குரலே*
*மாறாத் திரிதோஷ மந்தமனற் றாகம்போம்*
*வீறாவின் மோருக்கு மெய்* **136**

*இம்மோரினால் வீக்கம், மகோதரம், வயிற்றுவலி, பாண்டு ரோகம், பித்தம், இடுமருந்தால் வரும் நோய்கள், பேதி, திரிதோடம், அக்கினிமந்தம், வெப்பம் இவை நீங்கும்.*

### எருமை மோர்

*தாகங் கிராணி சலக்கழிச்சல் காமாலை*
*ஆகங் குடைபுழுவு மற்றுப்போ - மோகமில்லாத்*
*தேவா மிரதமுமாஞ் சீர்மா னிடர்தமக்கு*
*மூவாமருந் தெருமை மோர்* **137**

*எருமை மோரினால் தாகம், கிராணி, நீர்க்கழிச்சல், காமாலை, கிருமி இவை நீங்கும். போகத்தில் விருப்பம் ஏற்படும். விரைவில் கெடாத அமுதமாகுமிது.*

### ஒட்டைமோர் - நெய்

*ஒட்டைமோர் மெத்தவன லோங்கியவா தந்தணிக்குங்*
*கிட்டுமந்த நெய்பெருமை கேட்பீரேல் - நெட்டுலகின்*
*மந்தஞ் செய்தாலும் வலிவிந்து வைப்பெருக்கும்*
*அந்தஞ்சேர் கண்ணா யறி* **138**

*இம்மோர் பித்த, வாத நோய்களைப் போக்கும். இதன் நெய் அக்கினிமந்தத்தை ஏற்படுத்தும்; சுக்கிலத்தை விருத்தி செய்யும்.*

# வெண்ணெய் வகைகளின் குணம்

## முலைப்பால் வெண்ணெய்

கண்ணெரிவுங் கையெரிவுங் காலெரிவு நாசிகளில்
அண்ணெரிவு மண்ணி லகன்றிடும்காண் - தண்ணார்
அலைப்பால்வண் மாதுக் கணிசெய்யு மாதர்
முலைப்பால் வெண்ணெய்க்கு முறிந்து *139*

*இது கண், கை, கால், நாசி ஆகியவற்றில் உண்டாகும் எரிச்சலை நீக்கும்.*

## பசுவெண்ணெய்

கண்ணி லெழுநோயுங் கண்ணெரிவும் பீளையும்போம்
எண்ணும் பசியு மெழும்புங்காண் - நண்ணரிய
ஆவினறும் வெண்ணெய்க் ககலும்வன் மேகமெல்லாம்
பூவினரர்க் கெல்லாம் புகல் *140*

*பசுவெண்ணெயால் கண்ணோய், கண்ணெரிச்சல், பீளை, சாரல் பிரமேகம் இவை நீங்கும். பசியுண்டாகும்.*

## எருமை - வெண்ணெய்

எருமைவெண் ணெய்க்கில் லெரிநீ ரிழிவு
பருவமயி லேகேளிப் பாரிற் - கிருமியுறும்
மந்தமாம் வாதமிகு மாறாக் கபங்கரப்பான்
தொந்தமா நோயடருஞ் சொல் *141*

*இது பித்த மூத்திரக்கிரீச்சரத்தைப் போக்கும். மலக்கிருமி, அக்கினி, மந்தம், வாதம், கபம், கரப்பான், தொந்தநோய் இவைகளை உண்டாக்கும்.*

### வெள்ளாட்டுவெண்ணெய்

வெள்ளாட்டு வெண்ணெயது வீறுசுரந் தான்போக்குந்
தள்ளாடு பித்தந் தணிக்குங்காண் - தெள்ளுமொழி
மானே பசியெழும்பும் வன்கரப்ப னைக்கடற்குள்
தானே துரத்திவிடுஞ் சாற்று 142

இது சுரம், பித்தம், கரப்பான் இவற்றைப்போக்கி, பசியை உண்டாக்கும்.

### ஒட்டை வெண்ணெய்

கட்டழகு செய்யுநற் காரிகையீர் கேண்மின்கள்
ஒட்டைவெண்ணெய் மந்த மொடுவாதங் – கிட்டவைக்கும்
நீரிழிவுக் கேற்கு நிறைபித்தம் போக்கிவிடும்
பாரறியச் சொன்னோம் பகுத்து 143

இது நல்ல அழகைத்தரும். மந்தம், வாதநோய் இரண்டையும் உண்டாக்கும். நீரிழிவையும் பித்தத்தையும் நீக்கும்.

## நெய் வகை குணம்

### பசுநெய்

தாக முழலைசுட்கஞ் சர்த்திபித்தம் வாயுபிர
மேகம் வயிற்றெரிவு விக்கலழல் - மாகாசங்
குன்மம் வறட்சி குடற்புரட்ட லஸ்திசுட்கஞ்
சொன்மூலம் போக்கு நிரைத்துப்பு 144

இது தாகம், உழலைப்பிணி, அதிசுட்கரோகம் வாந்தி, பித்தம், வாதவிடம், பிரமேகப்புண், வயிற்றெரிவு, பித்தவிக்கல், இருமல், வயிற்றுவலி, சினைப்பு, குடல்நெளிதல், சுரம், சோம்பல், மூலரோகம் ஆகிய இவற்றை நீக்கும்.

## காராம்பசுநெய்

காராம் பசுவினெய்யாற் கண்ணுக் கொளியுண்டாம்
நீரார்விழி புருவநெற்றி சிரச்-சூரொழியும்
மெய்யிற் குழைவு மிளிரிபொன் னிறமும்வரும்
நெய்யிலிது மேலா நிகழ்த்து 145

*இதனால் கண்ணொளிமிகுதல், உடல்பலம்பெறல், பொலிவு பெறல் போன்றன உண்டாகும். கண்புருவம், நெற்றி, தலைநோய்களை அகற்றும்.*

## எருமைநெய்

புத்திகெடு மெய்யழகு போதக்கெடு நயனம்
மெத்தவொளி மாறிவிடு மேதினியிற் - சத்தியமாம்
வாதமொடு பித்தமுறு மாறாக் கரப்பானாங்
கோதெருமை நெய்யருந்திற் கூறு 146

*எருமை நெய்யை அருந்தினால் அறிவு, அழகு, கண்ணொளி இவை மத்திமமாகும். வாத, பித்ததோடம், கரப்பான் இவை உண்டாகும்.*

## வெள்ளாட்டுநெய்

ஐயைப்போக் கும்வாதத் தாண்மையைக்கெ டுத்துவிடும்
மெய்யைவ ளர்க்கும்விழி யைத்துலக்கும் - வையகத்திற்
பத்தியத்திற் காகும் பயமிலைவெள் ளாட்டின்னெய்
நித்தியங்கொண் டாலுங்கொண் ணீ 147

*இந்நெய் சிலேட்டுமத்தையும் வாதத்தையும் போக்கி, உடலைவளர்த்து கண்ணொளியை உண்டாக்கும். பத்தியத்திற்குதவும்.*

## செம்மறியாடு - பள்ளையாடுஇவைகளின் நெய்

செம்மறியி னெய்யதனைத் தின்ன மதுரமுமாங்
கொம்மைமுலை மாதரசே கூறக்கே - ளம்மவுறும்
பள்ளையின்னெய் பித்தொழிக்கும் பாருலகி லெல்லவர்க்குங்
கொள்ளத்தான் மந்தமுறுங் கூறு 148

*செம்மறிநெய் கபநோயை அதிகமாக்கும். பள்ளையாட்டு நெய் பித்தநோயை ஒழிக்கும். மந்தத்தையும் ஏற்படுத்தும்.*

### கலப்புநெய்

நெய்யுட் பலநெய்க்கு நீள்சுக்கி லம்பெருகும்
வெய்யபசி யுண்டாம் விடும்பித்தம் - மெய்யனலால்
உள்ளபித்த வெக்கைபோ மோங்குயிருந் தானிலைக்குங்
கொள்ளத் தெரியுங் குணம் *149*

*எருமைநெய் முதலான கலப்புநெய்யால் விந்து பெருகும். நல்லபசி எடுக்கும் பித்ததோடம், பித்தசுரம் நீங்கும்.உடல் பலம்பெறும்.*

### பன்றி - உடும்பு - காக்கை - இவைகளின் நெய்

பன்றிநெய் நீர்க்கடுப்பு பாயுமூலத் திரத்தங்
கன்றிய வாதக் கடுப்புமுதற் - துன்றியநோய்
போக்கு முடும்பின்னெய் போமிரத்தம் போக்கிவிடுங்
காக்கைநெய்கா மாலைக்காங் காண் *150*

*பன்றிநெய் மூத்திரக்கடுப்பையும், இரத்தமூலக்கிராணியையும் நீக்கும். உடும்புநெய் இரத்தகிராணியை நீக்கும். காக்கை நெய் காமாலையைப் போக்கும்.*

### ஆமை - ஓணான் - கரடி - இவைகளின் நெய்

ஊணாமை நெய்மூல மோட்டும் ஓணானெய்க்குக்
காணாப் பிறவலிநோய் காணாது - பூணார்
முலையாய் கரடிநெய்க்கு முன்வாத மோடு
புலையாருங் கால்வெடிப்பும் போம் *151*

*ஆமைநெய் ரெத்தமூலம் நீக்கும். ஓணான் நெய் பின்னிசிவைப் போக்கும். கரடிநெய்யால் வாதம், பாதவெடிப்பு இவை நீங்கும்.*

### ஆமணக்குநெய்

ஆமணக்குநெய்யா லனலமுண்டா மியாவர்க்கும்
பூமணக்கு மேனிபுரிகுழலே - வாய்மணக்கக்
கொள்ளில் வயிறுவிடுங் கோரமுள்ள வாயுவறும்
உள்ளில்வரு குன்மம்போ மோது *152*

*அம்பொ னிறமும்விந்து மாங்குடலி னேற்றமறும்*
*ஐம்பொறிச் சூடெரிவு மாறுங்காண் - அம்புவியிற்*
*பாமணக்குமின்ப மொழிப் பாவாய் நலஞ் செறிந்த*
*ஆமணக்கி னெய்யை யருந்து* *153*

*விளக்கெண்ணெய் குடித்தால் பேதியாகும். கோர வாதம், குன்மம், குடலேற்றம், உடம்பு, கண், மூக்கு, செவி, வாய், இவற்றிலுண்டாகும் எரிச்சல் இவை நீங்கும்.*

### சிற்றாமணக்குநெய்

*மருந்தி னழலும் வளியான்மூ லத்துள்*
*பொருந்து மழலுமறப் போக்குங் - குருந்திற்கு*
*நற்றா யெனவளர்க்கு நாளும் அழலுந்தணிக்குஞ்*
*சிற்றாமணக் குனெய்தான் நேர்* *154*

*இது மருந்துகளால் ஏற்படும் சூட்டைத் தவிர்க்கும். வாயுவினால் மூலத்தில் உண்டாகிற வெப்பத்தை நீக்கும். உடல் வளர்ச்சிக்குத் தாயைப் போல உறுதுணையாகும்.*

### எள்ளுநெய்

*புத்திநய னக்குளிர்ச்சி பூரிப்பு மெய்ப்புளகஞ்*
*சத்துவங் காந்தி தனியிளமை - மெத்தயுண்டாங்*
*கண்ணோய் செவிநோய் கபாலஅழல் காசநோய்*
*புண்ணோய்போ மென்னெய்யாற் போற்று* *155*

*அறிவு தெளிவு, விழிக்குளிர்ச்சி, மனமகிழ்ச்சி, உடல்பலம், அழகு இவை எள்நெய்யால் உண்டாகும். கண்நோய், செவிநோய், கபால அழல்நோய், காசநோய் இவை நீங்கும்.*

### வாதுமைநெய்

அழலெல்லா மாற்று மரிய வுடம்பில்
அழலோடு விந்துவையுண் டாக்கும் - வழுவழுப்பைப்
பூண்டகபம் போக்கும் பொறிகட் கொளிவுசெய்ய
நீண்ட அடப்பம்விதை நெய் *156*

*இந்நெய் மருந்தாலும் கடின உழைப்பாலும் ஏற்பட்டவெப்பம் கபதோடம் இவற்றைப் போக்கும். விந்துவைப் பெருக்கும். ஐம்பொறி கட்கும் ஒளிவைத்தரும்.*

### வேப்பநெய்

வாதம்போம் பித்தமிகு மாறாக்கி ரந்தியொடு
மோதுகரப் பான்சிரங்கு முன்னிசிவும் - ஓதுடலின்
நாப்ப ணுறுசுரமு நாடுசந்நி யுந்தொலையும்
வேப்பநெய் யென்றொருக்கால் விள்ளு *157*

*இது வாதம், கிரந்தி, கரப்பான், சிரங்கு, முன்னிசிவு, சுரம், சன்னி ஆகியவற்றை நீக்கும். பித்தத்தை உண்டாக்கும்.*

### இலுப்பைநெய்

கரப்பா னடருங் கடிசிரங்கு புண்ணும்
உரப்பா மிடுப்புவலி யோடுங் - கரப்பான்
பாகுமொழி மாதே பலமுண்டாந் துறபலம்
தேகு மிலுப்பையினெய்க் கே *158*

*இந்நெய்யால் கரப்பான், கடிவிடம், சிரங்கு, இடுப்புவலி, புண், வலிமை இவை உண்டாகும். வாதம் நீங்கும்.*

### புன்னைநெய்

புன்னையிலுண் டாநெய்யாற் பொங்குசந்நி பாதமுதல்
மன்னியலைக் குங்கொடிய வாய்வும்முன் - பின்னிசிவும்
பொல்லா வலியினமும் புண்கிருமி யுந்தொலையும்
அல்லார் குழலே யறி *159*

*இதனால் சன்னிநோய், வாதநோய், முன்னிசிவு, பின்னிசிவு, ஐவகைவலி, புண், கிருமி ஆகியவை நீங்கும்.*

### புங்கின்நெய்

அங்க மழகிடும்வெற் பாம்புங்கி னெய்தனக்குத்
தங்கம்போற் காந்தியது தானுண்டாந் - திங்கண்முக
மானே கரப்பான்போம் வந்தசொறி யுஞ்சிரங்குந்
தானே விலகுமெனச் சாற்று *160*

*இது அழகும் ஒளியும் தரும். இதனால் கரப்பானும், சொறி, சிரங்கும் ஒழியும்.*

### தேங்காய்நெய்

தேங்காயி னெய்யதனாற் றீயால் வருபுண்போம்
பாங்காகக் கூந்தற் படர்ந்தேறு - நீங்காத
பல்லடியின் னோயும் படர்தா மரைசிரங்கும்
அல்லலறப் போமென் றறி *161*

*இதனால் தீப்புண் மூலம், படர்தாமரை, சிரங்கு ஆகிய இவைகள் போகும்.*

### முக்கூட்டுநெய்

நூவுநெய்க் கைய நுவலாநெய்க் குப்பித்தம்
மேவுமுத்து நெய்க் கனிலம் வீறாவாம் – பூவுலகின்
மூன்றுமள வாய்க்காய்ச்சி மூழ்கிவர முப்பிணியால்
ஊன்று நோய்போமே யொதுங்கி *162*

ஆவெண்ணே ரண்டமெண்முத் தாமுத்தா வெண்ணெய்
மூவெண்கா லாதி முறையேகேள் - மேவுநெறி
யொன்றிரண்டு மூன்றாகு மொன்றிரண்டு மூன்றாகு
மொன்றிரண்டு மூன்றாகு மூற்று *163*

*எள்நெய், பசுநெய், ஆமணக்குநெய் இவை முறையே கப, வாத, பித்தநோய்களை மீறாமல் பாதுகாக்கும். எனவே இம்மூன்றையும் விதிப்படி கட்டி காய்ச்சி தலைமுழுக்காடினால் முத்தோடங்கள் நீங்கும்.*

## ஐங்கூட்டுநெய்

அஞ்செண்ணெய் யைக்காணில் ஆலித்த பின்னிசிவுந்
தஞ்சமென வாய்வுந் தணியுங்காண் - பஞ்சாய்ப்
பறக்குமே சந்நிசுரம் பாரிலையச் சேஷ்டை
யிறக்குமே நன்றா யியம்பு *164*

*ஆமணக்கு, எள், வேம்பு, புன்னை, புங்கு இவற்றின் நெய்களைக் கலந்து தயிலமாக்கிப்பயன்படுத்தினால் பின்னிசிவு, வாதம், சன்னிபாத சுரம், கபதோஷம் இவை நீங்கும்.*

## கடுகுநெய்

கோஷ்டுநோய் பித்தரத்தங் குஷ்ட மடல்வாதம்
வீட்டுகப மூல விரணமறும் - பூட்டின்
முடுகியெழு சூலையொடு மொய்த்தநோ யேகுங்
கடுகின்னெய் யாலனலாங் காண் *165*

*கடுகுநெய் குன்மம், இரத்தபித்தம், குஷ்டம், வாதம், சயம், மூலப்புண், சூலை ஆகியவற்றை நீக்கும்.*

## நீரடி முத்துநெய்

பூசுகுடி வாதகணம் பொங்கு கிரந்திபுடை
வீசுகுட்டஞ் சூலையிவை விட்டேகும் - தேகஞ்சச்
சீரடியை யொத்தநடைத் தெய்வ மடமயிலே
நீரடி முத்தின் நெய்யை நீ *166*

*இதனை உடலின்மேல் பூசினாலும், உள்ளுக்குக் கொடுத்தாலும் வாத கணம், கிரந்தி, குட்டம், சிரங்கு, சொறி, பெருநோய், சூலை இவை நீங்கும்.*

## செங்கொட்டை நெய்

தாதுவும் புரூணமுமாந் தத்துரு பரங்கிப்புண்
கோதுபுரி யிருமைக் குட்டிணங்கன் - காதுங்
கரிமுகி யூரர் கரப்பான் நிமிர்போ
மெரிமுகி நெய்யாலென் றறி *167*

*இது தடிப்பு, பரங்கிப்புண், கருங்குட்டம், வெண்குட்டம், கருஞ் சொறி, கரப்பான், திமிர்வாதம் ஆகியவற்றை நீக்கும்.*

## சாணிவகை குணம்

### பசுவினது சாணி

*ஆவினது சாணம் அடிபடுவீக் கம்உதிரந்*
*தாவி வருகிருமி சார்ந்தகப - மேவுசுரந்*
*தங்குந்தா கம்போக்குஞ் சாற்றின்மெய்ச் சுத்தியப்பால்*
*தெங்கின்பா லுக்கொக்குஞ் செப்பு* 168

*கல் முதலியவற்றால் அடிபட்ட வீக்கம், ஒழுகும் உதிரம், கிருமி, கபசுரம், தாகம் இவற்றைப் பசுஞ்சாணம் நீக்கும். இது தேங்காய்ப் பாலிற்கு நிகரானது.*

### எருமைச்சாணி

*வயிற்றுப் பிசமிரத்த வாந்திகா மாலை*
*நியத்தபெரும் பாடுபுண் நீங்கும் - வியத்த*
*கருமைச்சா ரங்கவிழிக் காரிகையே நாளும்*
*எருமைச்சா ணத்தி னியல்பு* 169

*இது வயிற்றுப் பொருமல், ரத்த வாந்தி, காமாலை, பெரும்பாடு, புண் இவற்றை நீக்கும்.*

### வெள்ளாட்டுப்புழுக்கை

*உருக்கைநீ தாக்கு முதரநோய் போக்குந்*
*திருக்கான வாதநோய் தீர்க்கு - நெருக்கான*
*தோட்டுக் குழையணங்கே தொல்புவியோர் சொல்லிடுவெள்*
*ளாட்டுப் புழுக்கை யது* 170

*இது எஃகை பற்பமாக்கப் பயன்படும். மகோதரம், வாதநோய் இவற்றைப்போக்கும்.*

# மூத்திர வகைகளின் குணம்

## சிறுநீரின் குணம்

காணாக் கடிபோங் கதித்தெழுந்த வீக்கமது
காணாது காயசித்தி கைக்குளாம் - பூணே
பதித்தகொங்கை மாதே பகர்மாந்த ருக்குள்
உதித்தசிறு நீருக்கென் றோது 171

அங்கியுவ ருறை சிறுநீர் வாதம்போக்கும்
அதைப்பருகி லிருமலிரைப் பரத்த நோயும்
பொங்கிவரு மேகவிகா ரங்கி ரந்திப்
புண்களும்போம் அதைநசியம் புரியிற் சூடுந்
தங்கியதோர் அபஸ்மாரஞ் சந்நி யாசஞ்
சருவவிஷம் விஷசுரமுந் தவறுண் டோடும்
இங்கதனைத் தொட்டலம்பிற் கண்மு கங்கா
திவ்விடத்து ளெழும்விரண மிரியுங் காணே 172

*சிறுநீரினால் காணாக்கடிவிடம், சோபை, வாததோடம் இவை திரும், முறைப்படி பருகினால் இருமல், சுவாசம், அசிர்க்கரம், மேக மூத்திரம், கிரந்திப்புண் ஆகியவை போகும். நசியம் செய்தல் சுரம், அபஸ்மாரம், பல்வகைவிடம், விடசுரம் இவை நீங்கும். அந்நீரால் கழுவினால் விழி, முகம், செவி ஆகியவற்றில் பிறக்கின்ற கட்டிகள் விலகும்; இது காயசித்திக்குப் பயன்படும்.*

## பசுமூத்திரம்

விடபாண்டு சோபைபல வீக்கஞ் சகல
விடமுதிர மாலையென மெத்தப் - புடவிதனிற்
பேசலக்க னோடுதந்தப் பீடையும கன்றிடுமே
கோசலத்தா லாரணங்கே கூறு 173

*விடபாண்டு, பற்பல வீக்கங்கள், விடங்கள், காமாலை போன்றவையும் வேறுபல நோய்களும் பசுமூத்திரத்தால் அகலும்.*

### எருமை மூத்திரம்

உதிரநோய் பாண்டோ டுரத்தகா மாலை
விதிர வருசோபை மேகம் - முதிர்கிருமி
யாதியநோ யேகு மடரெருமை மூத்திரத்தால்
மீதிலன லுண்டாகு மே *174*

*இதனால் பெருவயிறு, பாண்டு, காமாலை, பிரமேகம், சோபை, கிருமி முதலிய நோய்களும் போம். இது உடற்சூட்டையும் உண்டாக்கும்.*

### வெள்ளாட்டுமூத்திரம்

சோபையொடு பாண்டுவைத்து ரத்தும் பலவீக்க
தாபமகற் றும்முதிரத் தைப்போக்குங் - கோபமுடன்
உள்ளாட்டுத் துற்சதையோ டோங்குதர நோயகற்றும்
வெள்ளாட்டு மூத்திரம்வி ரைந்து *175*

*வெள்ளாட்டு மூத்திரம் சோபை, பாண்டு, பல்வகை வீக்கங்கள், எரிச்சல், ரத்தப்போக்கு, மகோதரம் இவற்றைப் போக்கும்.*

### யானைமூத்திரம்

அதிதூலஞ் சோபை யனிலங் கிருமி
யெதிர்விஷங் கருங்கரப்பா னேகும் - அதிராத
யானை யெனப்பலமும் அங்கபுஷ்டி யுங்கொடுக்கும்
யானைவிடு மூத்திர மென் றோது *176*

*யானைமூத்திரத்தால் உடல்பருத்தல், சோபை, வாயு, கிருமிகள், விடம், கருங்கரப்பான் இவைபோம். உடல் வன்மையுண்டாகும்.*

### குதிரைமூத்திரம்

பாதவன் மீகம் படர்தடிப்பு நீள்கிருமி
வாதமொ டுகபமு மாறுங்காண் - ஓதரிய
பொற்குவட்டை யொத்தமுலைப் பூவையரே சூடுமுண்டாம்
நற்குதிரை மூத்திரத்தி னால் *177*

*இதனால் பாதப்புற்று, கண்டுகண்டாகத் தடித்தல், கிருமிரோகம், வாதநோய், கபதோடம் இவைகள் போம்.*

### ஒட்டைமூத்திரம்

*மேலையூ ருந்தடிப்பு வீசியெழுஞ் சந்நி*
*சூலையுதா வர்த்தந் தொடர்குன்மஞ் - சீலைநனை*
*மண்டல குஷ்டேகும்வரும் ஒட்டை மூத்திரத்தால்*
*உண்டனல மாதே யுரை* **178**

ஒட்டை மூத்திரத்தால் ஓடிப்புடைக்கும் தடிப்பு, சன்னிபாதம், சூலைப்பிடிப்பு, வாதம் வயிற்றுவலி, மண்டலகுட்டம் இவை நீங்கும்.

### கழுதை - மூத்திரம்

*வேசரிநீ ரால்வெப்பம் வீரியநஷ் டங்குஷ்டங்*
*காச மிரைப்புவிஷங் காற்கிருமி - வீசிடுபுண்*
*மேகம்பஸ் மாரம் வெடியக்க ருங்கிரந்தி*
*போகுமின்னுஞ் சேய்ப்பிணியும் போம்* **179**

*இதனால் சூடு, தாதுநட்டம், குட்டம், காசம், இரைப்பு சில விடங்கள், கிருமி, புண், தந்திமேகம், அபஸ்மாரம், சுரம், கிரந்தி, பாலரோகம் ஆகிய இவை நீங்கும்.*

## மதுரவகை குணம்

### செங்கரும்பு, ரசதாளிக்கரும்பு, புல்லகண்டங்கரும்பு

*செங்கரும் பதனற்சாறு தீர்த்திடும் பித்தமெல்லாம்*
*அங்குறு மிரசதாளிக் ககன்றிடுந் தாகம்வேகம்*
*மங்குறாப் புல்லகண்டம் வாதகோ பத்தைப் போக்குங்*
*கங்குல்வார் குழலினாளே காரிய மறிந்துகூறே* **180**

*செங்கரும்பு ரசம் பித்தம் நீக்கும். ரசதாளிக் கரும்புச் சாறு தாகத்தைப் போக்கும். புல்லகண்ட கரும்புச் சாறு வாதத்தை நீக்கும்.*

### நாணற்கரும்பு

*வாயுபித்தம் வாந்திநீர் மாறும் அதிதூல*
*நோயு ளெழும்வயிற்றி னோய்கலங்கும் - ஓயாத*
*ஈளையொடு பாண்டு மெதிரா தடங்கிநிற்கும்*
*நாளுநா ணற்கரும்பி னால்* 181

*நாணற்கரும்புபால், வாதபயித்தியம், வாந்தி, சுவையின்மை, உடல் பருத்தல், வயிற்று நோய்கள், ஈளை, இரைப்பு, பாண்டு இவை குணமடையும்.*

### கரும்பின்சாறு - வெல்லம்

*கரும்பிரச மெத்தவுண்டாற் காணுங் கபநோய்*
*விரும்பிவெல்ல மெத்தவுண்டால் மேகந் - தருமதுநீர்*
*உண்டா மதைமிதமா யுண்டால்மே கம்பித்தம்*
*மிண்டாமற் சாந்துமு றும்விள்* 182

*கரும்பின் சாற்றை அதிகமாகக்குடித்தால் சிலேட்டுமநோய்கள் உண்டாகும். வெல்லத்தை அதிகமாகத் தின்றால் மதுமேகம் ஏற்படும். மிதமாகப் புசித்தால் பிரமேகம், பித்தகோபம் இவை மீறாமல் அடங்கும்.*

## பாகுவகைகளின் குணம்

### தேன்பாகு

*அனலா ளெழுந்த வருசிசர்த்தி தாழும்*
*புனலாருங் கோழையது பொங்குங் - கனலாருந்*
*தேன்பாகுக் கென்றுமதைச் சேர்ஔஷதி யதனாற்*
*கான்பாவு நோய்க்கூட்டங் காண்* 183

*இதனால் பித்த அருசி, வாந்தி நீங்கும். கோழை கட்டும். மருந்து-களோடு சேர்த்துண்ணும் துணைமருந்தாக இது பயன்படும்.*

### மணப்பாகு

பித்த வருசிகெடும் பேசிலற்ப வாதமறுந்
தத்தனலும் மெள்ளவுள்ளே தாவிவரும் - மெத்த
வணப்பாகை யொத்தமொழி மாதே முறுகா
மணப்பாகுக் கென்றே மதி *184*

*பயித்தியம், அருசி, சிலேற்பனம் வாதம் இவை மணப்பாகுண்பதால் நீங்கும். உடலில் சூடுண்டாகும்.*

### முதிர்த்தபாகு - பழையவெல்லப்பாகு

முதிற்பாகுக் குள்ளெரிவு மூத்திரக்கட் டோடே
அதிர்வாத மாதியநோ யாகுந் - துதிபழைய
வெல்லப்பா குக்கருசி வீறுபித்தம் பேதிவாய்
வில்லைப்பார் மாதே யினி *185*

*முறுகிய வெல்லப்பாகு வயிற்றெரிச்சல், மூத்திரக்கட்டு, நடுக்கு வாதம் இவை ஏற்படும். பழைய வெல்லப்பாகினால் அருசி, பித்தம், கழிச்சல், வாதம் இவை நீங்கும்.*

## வெல்லத்தின் குணம்

### நல்லவெல்லம்

குன்மபித்தம் போக்குமதி கோழைதனை யுண்டாக்குந்
துன்மலத்துட் கிடத்தைத் தோற்றுவிக்கும் - நன்மைபோல்
மெல்லமது நீரை விளைவிக்கு மாமதுர
வெல்லமென நாளும் விளம்பு *186*

*பித்த குன்மத்தைப் போக்கும். கபக்கட்டு, மலக்கிருமி, மதுமேகம் இவை உண்டாகும்.*

### தெங்கின்வெல்லம் - பனைவெல்லம்

தெங்கின்வெல் லத்தாற் செரியாக் குணஞ்சோபை
யங்கமுறு நீரு மதிகரிக்குந் - தங்குபனை
வெல்லத்தால் வாதபித்தம் வீறுகபஞ் சந்நிநோய்
வல்லருசி குன்மமறு மால் *187*

*தெங்கின் வெல்லத்தால் செரியா மாந்தம், சோபையால் வந்த வீக்கம், நீரேற்றம் இவை அதிகமாகும். பனைவெல்லத்தால் வாத, பித்த சிலேட்டும நோய்கள். சன்னிநோய், ருசியின்மை, வாதகுன்மம் இவை தீரும்.*

### ஈச்சம் வெல்லம்

நீடுபே ரீச்சையர் நின்மலப் புத்திமந்த
மோடுகப வாதமுட்சீத - மாடுமிதி
பித்தமுடனே பெருந் திமிர்நோய் வியாதிகளை
யித்தரையி லுண்டாக்குமெண். *188*

*இது புத்திமந்தம், சிலேட்டுமவாதம், சளிப்பிடித்தல், பித்த கோபம், திமிர்வாயு இவற்றை உண்டாக்கும்.*

## சருக்கரை வகை குணம்

### சருக்கரை

அருந்து மருந்திற் கனுபான மாகப்
பொருந்து மடல் வாந்திபித்தம் போக்கும் - வருந்தருசி
நீக்கு மதிகபத்தைநீற்று மகிழ்ச்சியை யுண்
டாக்கு நறுஞ்சர்க்க ரை *189*

*சருக்கரை மருந்துகள் உண்ண துணை மருந்தாகப்பயன்படும். வாந்தி, பித்தம், ருசியின்மை இவற்றைப்போக்கி, கெட்டிபட்ட கபத்தை இளக்கி மகிழ்ச்சியை அளிக்கும்.*

**சீனிச்சருக்கரை**

சீனிச் சருக்கரைக்குத் தீராத வன்சுரமுங்
கூனிக்கும் வாதத்தின் கூட்டுறவும் - மேனிக்கும்
வாந்தி யொடுகிருமி மாறாத விக்கலுமே
போந்திசையை விட்டுப் புரண்டு **190**

*இதற்கு வாதசுரம், வாதநோய்கள், வாந்தி, கிருமி, நீங்காதவிக்கல் இவை நீங்கும்.*

**கற்கண்டின் குணம்**

ஈறின் தடிப்பு மிருமலும்பல் வாந்திகளுஞ்
சீறுகப முட்டினமுஞ் சேராதே - தேறியநற்
சொற்கண் டிளங்குயில்கள் சூழு மடவனமே
கற்கண் டெனவுரைக்குங் கால் **191**

*இது பல்லரணை, காசம், பற்பலவாந்தி, சிலேட்டுமம், வெப்பம் இவற்றைப்போக்கும்.*

**தென்னங்கற்கண்டு**

நெஞ்சிற் நிமிடுஞ்செஞ் நீரிலழுக் கும்படையு
மஞ்சுகப வாதமொடு வாதமுமே - விஞ்சுமிளந்
தெங்கின தேகர்க்கயர்வுந் தூயபுத்தி மந்தமுமாந்
தெங்கினது கண்டாற் றெளி. **192**

*இதனால் தொண்டைக்குள் திமிர், உதிரத்தில் அழுக்கு, சொறி-மேகம், சிலேட்டுமம், வாதநோய்கள், இளைத்த உடம்பினோர்க்கு ஆயாசம் மந்தபுத்தி ஆகிய இவை உண்டாகும்.*

**பனங்கற்கண்டு**

மேக வனலுமிக வீசும் சூரிகையால்
ஆக முறுகனலு மாறுங்காண் மேகனத்தில்
தங்கிவரு நீர்ச்சுறுக்குந் தாகவெப்ப முந்தணியும்
இங்குபனங் கற்கண்டுக் கே **193**

*இது மேகசுரம், வெப்பம் அகன்று உடல் குளிர்ச்சி பெறல், நீர்ச்சுருக்கு, வெப்பதாகம் இவை நீங்கும்.*

### ஈச்சங்கற்கண்டு

அரிய மருந்தையெலா மன்றே முறிக்குந்
திரிவித கபத்தைவரச் செய்யுந் - தெரிவரிய
பன்னோய் விளைக்கும் பகரறிவை மங்குவிக்கும்
மன்னோய் வீச்சங்கண் டிசை. 194

*மருந்தையும், அறிவையும் ஈச்சங்கற்கண்டு கெடுக்கும். மூன்றுவித சயங்களுடன் வேறுபல பிணிகளையும் தரும்.*

### தேனில் உண்டாகுங் கற்கண்டு

தேனிற் பிறந்த செழுங்கண்டாற் கண்விழிக்குள்
ஊனிற் படர்படல மோடிடுங்காண் - காணத்திற்
காகுஞ் சுரமாகு மண்டும் பசிகபங்கால்
ஏகுஞ் சுரமேகு மெண் 195

*தேனிலுண்டாகும் கற்கண்டினால் கண்ணில் படரும் கெட்ட மாமிசம் படலம், வயிற்றுநோய், வாதநோய், சுரம் இவை நீங்கும். இசைக்குரிய குரல் தொனியுண்டாகும்.*

## மதுவகைகளின் குணம்

### தெங்கின் மது

நாதவிந் தூறு நளிர்பாண் டொடுசோபை
வாதபித் தங்கிராணி வன்கரப்பன் - பேதியிவை
பொங்கி யதிகரிக்கும் புத்திகெடு மேகமுண்டாந்
தெங்கின்மது விற்கென்றே செப்பு 196

இதனால் சுக்கிலப்பெருக்கம், பாண்டுரோகம், சோபை, வாத பித்த நோய்கள், இரத்தக் கழிச்சல், கரப்பான், பேதி பிரமேகம் இவையுண்டாகும்.

### பனையின்மது

விந்துதிர மூறுமதி வெப்புடனே தாகம்போம்
பந்தமாந் தாதுவுமோ பாரிக்கும் - உந்துபித்தந்
தோன்றும்பா ஷாணங்கள் சுத்தியுமாந் தோகைமின்னே
யேன்ற பனைமதுவிற் கே 197

*பனங்கள், விந்துவிருத்தி, சப்ததாதுக்களின் உறுதி, பித்தம் இவற்றையுண்டாக்கும். உடல்வெப்பம், அதிதாகம் இவை நீங்கும், பாடாணவகைகளைத் தூய்மைசெய்யப்பயன்படும்.*

### ஈச்சமது

வெப்பகலு மெய்குளிரு மேகங் கிரீச்சரம்போஞ்
செப்பருசி போம்பித்தஞ் சேருங்காண் - எப்படியும்
பூச்ச திமிருண்டாம் பொங்கறிவுங் கெட்டிடுமே
ஈச்ச மதுவதற் கே 198

*ஈச்சமதுவினால் உள்ளழல், பிரமேகம், மூத்திரக் கிரீச்சரம், அருசி, இவை நீங்கும். உடல்குளிர்ச்சி, பித்தம், வீக்கம், திமிர்வாயு இவை உண்டாகும்.*

### முந்திரிகையின்மது

முந்திரிகைக் கள்ளுக்கு மூடுதிரி தோஷம்போம்
விந்துறுமி ரத்தமுறும் வெப்பகலும் - இந்தவகைக்
கள்ளெல்லாங் காமமுறுங் காமமற்றா ருண்டக்கால்
விள்ளரியதோஷமிலை மெய் 199

*இதனால் வாத, பித்த, கப தோடங்கள், தேக அழற்சி இவை நீங்கும், விந்துவும், இரத்த தாதுவும் விருத்தியடையும். இந்த மது வருக்கங்கள் எல்லாம் காமத்தை உண்டாக்கும். ஆதலால் காமமற்ற பெரியோர் அருந்தில் குற்றமில்லை என்க.*

### அரிசி - வேலம்பட்டை - தெங்கு இவைகளின் மது

சாலிமதுவாதத் தாற்சளிநீ ருண்டாக்கும்
வேலின்மது பிரித்தழைக்கும் வேண்டாவாஞ் - சாலவுயர்
தெங்கின்மது சீதந் திரிதோஷ முண்டாக்கும்
அங்குவிடுகள் குலையே யாம் 200

*அரிசியில் இறக்கிய சாராயம் விருத்தி வாதகபம், நீரேற்றம் இவற்றையுண்டாக்கும். வேலம்பட்டைச்சாராயம் பித்தத்தை வருவிக்கும். தென்னங்கள் குளிரச்சியையும், வாத, பித்த தோடங்களையும் உண்டாக்கும்.*

### அத்திமது

அத்திமே கஞ்சூ டதிமயக்கந் தாகமும்போம்
அத்திமர வேரிலண் டாமதுவில் - நித்தியமுஞ்
சீனியெ னும்பேயன் செங்கனியே னுங்கலந்தே
பானுவுதயங் குடித்துப் பார் 201

*அத்தி மரவேரிலிறங்கிய கள்ளில் சீனிச்சர்க்கரை, பேயன் வாழை கலந்து தினமும் சூரியன் தோன்றும் நேரத்தில் உண்டால் அத்திமேகம், உட்சூடு, மூர்ச்சை, தாகம் இவை நீங்கும்.*

## தேன்வகைகுணம்

### மலைத்தேன்

ஐயிரும லீளைவிக்க லக்கிப்புண் வெப்புடல்நோய்
பைய வொழியும் பசியுமுறும் - வையகத்தில்
எண்ணுமிசை யாமருந்திற் கேற்ற வனுபானம்
நண்ணுமலைத் தேனொன்றி னால் 202

*மலையிலிருக்கும் குறிஞ்சித்தேனினால் சிலேட்டும காசம், சுவாசம், விக்கல், கண்நோய், சுரம், உடல்கடுப்பு இவை நீங்கும். நல்ல பசியெடுக்-கும்; குரல்வளம் பெறும். மருந்துண்ண துணை மருந்தாகப் பயன்படும்.*

### கொம்புத்தேன்

வாதபித்த ஐயத்தை மாற்றுமுள மாந்தைதனைக்
காதமென ஓடக் கடியுங்காண் - பூதரமாம்
வம்புமுலை மாதே வருமருசி நீக்கிவிடுங்
கொம்புத்தே னன்றாகுங் கூறு 203

*மாமரம் முதலிய மரக்கொம்புகளில் கட்டுகின்ற தேன் முத்தோடங்-களையும், உள்மாந்தை, அருசி இவற்றையும் நீக்கும்.*

### மரபொந்துத்தேன்

பசிவெப்பாம் வாந்திமந்தம் பல்விக்கல் வெய்ய
ருசிமுக் கபந்தூல ரோகங் - கசிவகலாக்
கொந்துத்தேன் பாடுங் குழலணங்கே காவின்மரப்
பொந்துத்தே னுண்டாயிற் போம் 204

*மரப்பொந்து தேனினால் பசியும், வெப்பமும் உண்டாகும். வாந்தி, மந்தம், பலவித விக்கல், அருசி, இருமல், சுவாசம், சயம், உடல்பருத்தல் ஆகிய இவை நீங்கும்.*

### புற்றுத்தேன்

கொப்பணியு மாதே குவலயத்து ளெல்லார்க்கும்
ஒப்பநின்ற ஐய மொழிக்குங்காண் - கொப்பளிக்குங்
காசசுவா சம்வாந்தி கண்ணிலெழு நோய்களறும்
வீசபுற்றுத் தேனுக்கு மெய் 205

*புற்றுத்தேனால் கபம், இருமல், ஈளை, வாந்தி, கண்ணோய் ஆகியவைகள் நீங்கும்.*

### மனைத்தேன்

புண்ணும் புரையும்போம் போகாக் கரப்பனறும்
எண்ணிரிய தீபனமா மேந்திழையே - கண்ணுகளிற்
பூச்சிபுழு வெட்டுகபம் பொல்லா விருமலறும்
பேச்சின்மனைத் தேனுக்குப் பேசு 206

*மனைத்தேன் உண்டால் புண், புரை, கரப்பான், கண்ணோய், புழுவெட்டு, இருமல், சிலேட்டுமம், காசம் ஆகியவை நீங்கும். நல்ல பசியை உண்டாக்கும்.*

### புதிய தேன்

ஆயுளுட னுட்டிண மரோசிய கக்கபமு
மேயவழகும் வளர்ந் தேறுங் - காய்தூய
மதியமெனும் வதன மாதரசே நாளும்
புதிய நறுந் தேனாற் புகல் 207

*நிறைந்த ஆயுள், உட்டிணம், உடல்பொலிவு இவை புதிய தேனை உண்பதால் உண்டாகும். அதிகமாகச் சேர்த்துகொண்டால் கபம், அரோசிகம் தோன்றும்.*

### பழைய தேன்

வாதப் பெருக்கை வயிற்றெரிவைத் தந்துறையைச்
சேதப் படுத்துமின்னுஞ் செப்பவோ - மாதரசே
சத்திப் புறுமரசந் தன்னைத்தூண்டும் புளிப்புத்
தித்திப் புறும்பழைய தேன் 208

*புளிப்பும், இனிப்பும் கலந்த பழந்தேன் வாதநோய்கள், வயிற்றெரிவு, வாதமூலம் போன்றவற்றை விளைவிக்கும். மருந்தின் குணங்களைக்கெடுக்கும்.*

## மரவகை குணம்

### சந்தனமரம்

நற்சந் தனமரத்தா னல்லறிவு மின்புமெழிற்
பொற்செந் திருவருளும் பூதலத்துண் - மெச்சுஞ்
சரும வழகுந் தணிமோ கமுமாம்
பிரமிநோ யேகும் பிறழ்ந்து 209

*சந்தன மரக்கட்டையை முறைப்படி பயன்கொள்வோர்க்கு நல்ல விவேகம், மனமகிழ்ச்சி, செல்வம், ஒளிவு, மாதரிச்சை இவை உண்டாகும். கிழ்ப்பிரமியம் நீங்கும்.*

### தேவதார மரம்

தேவதா ரக்குணந்தான் சேர்ந்துவளர் பீநசத்தைக்
காவகத்தி லோட்டுங் கரப்பலவே - மாவலவர்
சொல்லும்பு ராண சுரமொடுநீ ரேற்றத்தை
வெல்லு மனற்றணிக்கு மெய் **210**

*தேவதாரம் நாசிநோய், பழஞ்சுரம், நீர்ப்பிடிப்பு, உடல்வெப்பம் இவைகளை நீக்கும்.*

### சரளதேவதாரு

*சரளமெனுந் தேவ தாருவினாற் கண்ணீர்
விரளமா குங்கபமும் வீடுந் - தளரவெயிற்
நாமயஞ் சுவாசம்வலி யண்ணாதம் வாதம்
போவயச் சுரத்துரமும் போம்* **211**

சரளதேவதாரக்கு சிலேட்டுமதோடம், பல்நோய், இரைப்பு, ஐவகை வலிகள், நடுக்குவாதம், கபச்சுரம் இவை நீங்கும்.

### அகில் மரம்

*தளர்ந்தவி ருத்தருக்காந் தக்க மணத்தால்
உளைந்த சுரமனைத்து மோடும் - வளந்திகழு
மானே யகிற்புகைக்கு வாந்திய ரோசகம்போந்
தானே தளர்ச்சியறுஞ் சாற்று* **212**

*அகில் உடலின் தளர்ச்சி போக்கி இறுக்கமடையச் செய்யும். இதன் மணத்தால் சில சுரங்கள் நீங்கும். இதன் புகை வாந்தி, அருசி, அயர்ச்சி இவைகளை நீக்கும்.*

### அகரு மரம்

*நாசி யடைப்பு நவிரவிடி தாளுநோய்
வீசுநமைப் புடைகள் விட்டேகும் - பேசிற்
சுகரு மயங்குந் துணைமுலையாய் நல்ல
அகரு மரத்தா லறி* **213**

*அகரு மரத்தினால் நாசியடைப்பு, தலையிடி, வாதம், தினவுள்ள புடைகள் ஆகியவை போகும்.*

## சரக்கொன்றை மரம்

குட்டங் கிருமி கொடுஞ்சூலை வாதமையந்
துட்ட மலம்அருசி தூரப்போந் - தட்டிச்
சுரக்கின்ற பேதியுண்டாந் துய்க்கத் துவர்க்குஞ்
சரக்கொன்றைக் சாரணங்கே சாற்று 214

*சரக்கொன்றை மரம் பெருவியாதி, கிருமி, சூலை, வாதம், ஐயம், விடமலம், அருசி இவைகளை விலக்கும். துவர்ப்புடைய இது பேதியை உண்டாக்குமென்க.*

## சிறுகொன்றை மரம்

சிறுகொன்றை நற்கசப்பாஞ் சென்னி யனலால்
உறுகின்ற கண்களினோ யோடே - பெறுமுடலின்
உட்டிணமுண் மூலமிவை யோடு மதிபலனுங்
கட்டழகு முண்டதனாற் காண் 215

*கசப்பையுடைய சிறுகொன்றையால் தலைச்சூட்டால் உண்டான கண்ணோய்கள், உடல்வெப்பம், உள்மூலம் இவை நீங்கும். உடல் வலிமையும் அழகும் உண்டாகும்.*

## நரிக்கொன்றை மரம்

பையவே யூறிப் படருமியா னைச்சொறியும்
நொய்ய கிருமிகொண்ட நுண்புடையு - மெய்யில்
அரிக்கின்ற வன்புடையு மாழிபுகு மாதே
நரிக்கொன்றை தன்னை நவில் 216

*இது யானைச்சொறி, தவிட்டுக்கிருமிப்புடையும், தினவுள்ள இரணப்புடைப்பும் நீக்கும்.*

## மைக்கொன்றை மரம்

குடல்வாதஞ் சூலை கொடுமேக மெல்லாம்
அடைவாகப் போக்க வலைந்தே - படிமீதில்
எக்கொன்றைக் தேடிநெஞ்சி லெண்ண மிடுவானேன்
மைக்கொன்றை யிங்கிருந்து மால் **217**

*இது குடல்வாதம், வாயு, சூலை, மேகநோய்கள் இவற்றைப் போக்கும்.*

## மருத மரம்

ஓதமெனு நீரிழிவை யோட்டும் பிரமேகங்
காதமென வோடக் கடத்துங்காண் - போத
மயக்க மொடுதாக மாறாச் சுரத்தின்
தயக்கமறுக் கும்மருதஞ் சாற்று **218**

குட்டரோ கங்கிருமி கோர வயிற்றுவலி
துட்டவறட் சூலை தொலையுங்காண் - கிட்டிப்
பொருதம்பா மென்னும்விழிப் பூவையரே நாளு
மருதம்பா ரென்றளவில் மாய்ந்து **219**

*இது வெகுமூத்திரம், பிரமேகம், மயக்கம், அதிகதாகம், ஆயாசம், மறாச்சுரம் பெருவியாதி, கிருமிநோய், வயிற்றுநோய், வறட்சூலை இவற்றைப் போக்கும்.*

## வேங்கைமரம்

குத்திருமல் வெட்டையொடு கூறுமுள மாந்தையிவை
யெத்திசையும் வாரா திடையுங்காண் - சத்தியமாய்ப்
புண்ணிருமல் சீழொழுகற் போகு மலமிறங்குங்
கண்ணொளிரும் வேங்கைக்கும் காண் **220**

*இது வெள்ளைவீழ்ச்சி, உளமாந்தை, இரணம், காசம், சீழ்ப் பிரமேகம், ஆகியவற்றை நீக்கும். கண்ணிற்கு ஒளியைத் தரும், சீழுடன் கூடிய கழிச்சலையுண்டாக்கும்.*

## வள்ளிமரம்

வாதசந்நி தோஷமறு மாறாத் தழலுளதென்
றோதுவரிவ் வன்னிக் குவமையுண்டோ - பூதலத்திற்
கானார் விஷமுங் கபமுஞ் சொறியும்போந்
தேனே யிதையறிந்து செப்பு 221

*வள்ளிமரத்துக்கு வாதசன்னி, முத்தோடம், விடம், சிலேட்டுமம், சொறி இவை நீங்கும்.*

## புரசமரம்

புரசுவா தம்பித்தம் பொங்குகபங் குன்மங்
கிருமி யுடனே கிராணி - பெருவலிநோய்
ஓட்டுமதி தீபனத்தை யுண்டாக்கு மப்பொழுதே
தீட்டியவேற் கண்ணாய்த் தெளி 222

*புரசமரத்தினால் வாத, பித்த, சிலேட்டும் தோடங்களையும், வயிற்று வலி, மலக்கிருமி, கிராணி, உடம்புக்குடைச்சல் ஆகியன நீங்கும். வயிற்றில் பசியுண்டாகும்.*

## இருவாட்சிமரம்

கண்ணொளிவு மெய்யிற் கமழ்மணமு நீடழகும்
நண்ணும் வலிமூர்ச்சை நாசமாம் - பண்ணளியுங்
கங்குலும்வாழ் வார்குழலே காரமொடு வெப்புமிகத்
தங்குமிரு வாட்சிமரத் தால் 223

*இருவாட்சி மரத்தால் உட்டிணமும், கார்ப்பு சுவையுமுள்ள இருவாட்சி கண்ணொளியும், உடம்பில் நல்லமணமும், அழகும் உண்டாகும். உடல்குத்தலும், மூர்ச்சையும் நீங்கும்.*

## காட்டாத்தி மரம்

அதிசார மந்தமிக வாலித்த காசம்
விதிராம் விஷமும் விலகும் - எதிரொருவர்
மூட்டாத்தீ யென்னுமதி மோகந் தருமணங்கே
காட்டாத்திக் கென்றுளத்திற் காண் 224

*காட்டாத்தி மரத்தினால் அதிசாரபேதி, அக்கினிமாந்தம், இருமல் தாவரசங்கமவிடம் ஆகியவை நீங்கும்.*

## பெருங்குமிழ மரம்

பெரியகுமி ழின்பேரைப் பேசின்மே கத்தின்
எரிவுசுக்கி லக்கடுப்பு மேகும் - பிரியாத
வல்ல வனற்சுரமும் வாதசுர முத்தணியும்
மெல்லெனமுத் தோஷம்போம் விண்டு 225

*இதனால் மேக எரிச்சல், வெட்டை, நீர்க்கடுப்பு, பித்த சுரம், வாதசுரம், முத்தோடம் இவைபோகும்.*

## மாவிலிங்கமரம்

சுரங்கடியின் தோஷந் தொலையாத வாதம்
உரம்பெறு விஷங்க ளொழியும் - அரமுங்
கருமா வடுவயிலுங் கண்டஞ்சுங் கண்ணாய்
ஒருமாவி லிங்குக் குரை 226

*மாவிலிங்மரத்தினால் சுரம், கடிவிஷங்கள், வாதநோய்கள், பாம்பின் விடம் ஆகிய இவைகள் போகும்.*

## அழிஞ்சில்மரம்

அழிஞ்சிலது மாருதத்தை யையத்தைத் தாழ்த்தும்
ஒழிஞ்சபித் தத்தை யுயர்த்தும் - விழுஞ்சீழாங்
குட்டமெனு நோயகற்றுங் கூறுமருந் தெய்திடில்
திட்ட மென்வறிந்து தேர் 227

*அழிஞ்சில் மரமானது வாத, கப நோய்களைப்போக்கும். பெரு நோயை நீக்கும். பித்தத்தை அதிகரிக்கும்.*

## கடலழிஞ்சில்மரம்

தீதிற் கடலழிஞ்சில் செய்யுங் குணங்கேளாய்
ஓதுமது மேகமொ ழிப்பதல்லால் - வாதத்தில்
வந்தசலம் பித்தசல மாகபச்ச லந்தாகத்
தொந்தசல மும்போக்குஞ் சொல் 228

கமல விரணங் கசிநீ ரகற்றும்
நிமல சுரம்விலக்கு நேரே - கமலமுக
மாதே கடலழிஞ்சில் வன்பட்டை பேதிகட்டுஞ்
சீதாமே கம்போக்குந் தேர் 229

*இதனால் மதுமேகம், வாத, பித்த, கபம் நீர்த்தாகங்கள், தொந்த மூத்திரம், படர்தாமரை, சொட்டுமூத்திரம், தனிச்சுரம், கழிச்சல், சீதமேகம் இவைகள் போகும்.*

## மோதகவல்லிமரம்

பொங்கிவரு வள்ளைப் புனலினசிர்க் குங்காலா
லங்கியுந்த வீழுமிரத் தாமயநோய் - தாங்கவே
போதகத் துச்சியெனப் பூரித்த மாமுலையாய்
மோதக பூரகத்தை முன் 230

*இதனைப் பயன்படுத்தினால் இரத்தப்போக்கு, வாதத்தால் ஏற்பட்ட இரத்தசீதம் இவை நீங்கும்.*

## பூதமரம்

பூதவி ருட்சமது போக்கும் பலவிஷத்தை
வாதமென்ற நோயனைத்து மாற்றுங்காண் - தீதுபுரி
சன்னிகளைத் தப்பாது சண்ணிவிடும் பூதலத்துள்
உன்னி மகிழ்வா யுரை 231

*பூதமரம் எனப்படும் ஆலமரம் சுரம், பலவகையான விடங்கள், வாதநோய்கள், சன்னி ஆகியவற்றை நீக்கும்.*

## வாகைமரம்

வாகைகா ரங்கசப்பை வைத்திருக்கு முள்ளபடி
யோகையு றப்பசியை யுண்டாக்குந் – தோகையரே
தீரா விஷத்தோடு சில்விஷத்தை யுந்தீர்க்கும்
ஆராயத் தோன்று மது 232

வாகை யனல்விரணம் வாத வறட்சியுடன்
தாக சுரமுந் தணிக்குங்காண் - ஆகமதில்
அக்கர மெல்லா மகற்றிவிடும் பூவனமே
யக்கணத்தி லென்றே யறி *233*

*இது பசியை அதிகப்படுத்தும், கடிவிடம், பித்தநோய், வாதசொறி, தாகசுரம் இவற்றை நீக்கும்.*

### கருவாகை மரம்

விரணமோ டுட்டிணமும் வீறுகின்ற வாய்வுந்
திரண மெனுங்கிருமிச் சேர்வு - மரணமுறச்
செய்யுங் கபத்தின் செயலுங் குடிவிலகும்
வெய்யகரு வாகைக்கு விள் *234*

*கருவாகை மரம் புண், வெப்பம், வாயு, கிருமி இவற்றை போக்கிவிடும்.*

### இலவ மரம்

நீர்க்கடுப்பு நீரெரிவு நீண்டொழுகு மேகமும்போம்
ஆர்க்கும்விந்து வோடைக்கு மாண்மையுறும் - பாருக்குள்
நிலவு மதிவதன நேரிழையே வெப்பாம்
இலவு மரத்தா லியம்பு *235*

*இதனால் நீர்க்கடுப்பு, நீரெறிவு, தந்துமேகம் இவை போகும். விந்துவும், ஆண்மையும் பலம்பெறும்.*

### முள்ளிலவமரம்

தந்துமேகஞ் சிறுநீர்த் தாரைவெப்பம் வாய்
வுந்தவரு பேதியிவை யோட்டுங்காண் - முந்திக்
கிளர்வள்ளை பாயும் வரிக்கெண்டை விழியாய்
வளர் முள்ளிலவ மரம். *236*

*முள்ளிலவமரம், தந்துமேகம், மூத்திரநாளச்சூடு, வாயுக் கோளாறினால் ஏற்படும் பேதி ஆகியவற்றை நீக்கும்.*

### விளாமரம்

காச சுவாசங் கதித்த வருசிமுதற்
பேசரிய தாகமிவை பேருங்காண் - வீசு
தபித்தலைச்செய் பித்தந் தரிக்குமோ பூவிற்
கபித்த மரமிருக்குங் கால் 237

*இதனால் இருமல், இரைப்பு, அருசி, பெருந்தாகம், பித்தம், கபநோய் ஆகியவை நீங்கும்.*

### கருநெல்லிமரம்

பதினைந் தெனுஞ்சந்நி பாதந் தயக்கம்
மதிநைந்தி டச்செய்வினை மாறும் - பதியிற்
சநித்த கருவுருவந் தானும்வே றாகுந்
தனித்தகுரு நெல்லிமரத் தால் 238

*இதனால் பதினைந்துவகை சன்னிநோய்களும், மயக்கமும், மனநோயும் நீங்கும். ஆயுள் நிலைத்து நீடிக்கும்.*

### அருள் மரம்

வாத மகலும் வளருகின்ற மந்தமறுஞ்
சீதரத்தஞ் சோபசுரந் தீருங்காண் - ஓதும்
இருளாருங் கூந்த லெழிலணங் கேமூத்த
அருள் என்னும் நன்மரத்தா லாய் 239

*அருள்மரம் எனப்படும் மாதுமரம் வாதம், மந்தப்படுதல், சீத, ரத்தப்போக்கு, சோபை ஆகியவற்றைப் போக்கிவிடும்.*

### வேப்பமரம்

ஓதரிய வேம்பை யுரைக்கிற் சுரமுடனே
வாதமறு மூலகண மந்தம்போந் - தீதாய்
உதிருமெரி பூச்சிகுன்ம மோதா தொழியுஞ்
சிதறுமலம் போகுமெனத் தேர் 240

*வேம்பினால் சுரம், வாதநோய்கள், மூலகணமாந்தம், எரிகிருமி, குன்மம், கழிச்சல் இவை நீங்கும்.*

## மலைவேப்பமரம்

மலட்டுப் புழுவும் வயிற்றின் வலியும்
அலட்டுவாய் வும்போ மடங்கிக் - கொலட்டும்
உலைவேஞ் சிணவேற்கண் ஓதிமமே கேளாய்
மலைவேம்பின் பேரை வழுத்து 241

*மலைவேம்பு மலட்டுக்கிருமி, வயிற்றுவலி, ஓடிக்குத்தும் வாதம் ஆகியவற்றைப் போக்கும்.*

## சருக்கரை வேப்பமரம்

காயசித்தி யாகுங் கடியசி லேஷமமறுந்
தூயவிந்து நாதமிவை சுத்தியுமாந் - தூயவருக்
கெத்திக்குங் கிட்டும் இலையருந்தில் வாயெல்லாந்
தித்திக்கும் வேம்பதற்குத் தேர் 242

*இது காயசித்தி, சுக்கிலம், சோணிதத்தூய்மை இவற்றையுண்டாக்கும். ஐயநோயை நீக்கும்.*

## பாலைமரம்

வாதப் பெருக்குபித்த மாறாச்சு வாசமுதல்
ஓதுசர்வ தோஷமும்விட் டோடுங்காண் - தீதுபுரி
வேலைப் பொருவுவிழி மெல்லியலே காட்டிலுறை
பாலைக்கென வுன்னிப் பார் 243

*இதற்கு வாதப்பெருக்கு, பித்தநோய், மாறாத சுவாசம், முத்தோடம் ஆகியவை நீங்கும்.*

## வெட்பாலைமரம்

அக்கினியை வைத்திருக்கு மார்ந்தவா தம்போக்குந்
திக்குள்திரி தோஷத்தைத் தீர்த்துவிடும் - சொக்கவிரு
கட்பாலைக் கூற்றைவைத்த கான மடமயிலே
வெட்பாலை நல்மருந்தாம் விள் 244

*சூட்டையுண்டாக்கும் குணமுடைய இம்மரம் வாத வலி, திரிதோடம் இவற்றைப்போக்கும்.*

## தீம்பாலைமரம்

மேகவெட்டை சந்நி விஷபாகம் நேத்திரநோய்
தாகமுத்தோ ஷஞ்சர்த்தி சாரனலம் - வேகமோ
டேறுசலம் பீநசம் ரத்தமுந்தீம் பாலையெனுந்
தூறுவா திக்ககலுஞ் சொல் *245*

*மேகவெட்டை, சன்னி, விடபாகம், கண்ணோய், தாகம், திரிதோடம் வாந்தி, பித்தம், நீரேற்றம், நாசிநோய், இரத்தக்கிராணி இவற்றை தீம்பாலை நீக்கும்.*

## மலைப்பாலைமரம்

விக்கல்வலி வாந்திகுன்ம மீறுபக்கச் சூலையொடு
மைக்கரப்பான் மந்தமிவை மாறுங்காண் - மைக்கண்
நிரைப்பாலை யொத்தமொழி நேரிழையே கேளாய்
வரைப்பாலையை யுண்ட வர்க்கு *246*

*மலைப்பாலை மரத்தினால் விக்கல், ஐந்துவகையான வலிகள், வாந்தி, வயிற்றுவலி, விலாக்குத்தல், கருங்கரப்பான், மந்தாக்கினி போன்றவை நீங்கும்.*

## குடசப்பாலைமரம்

வாதமறும் பேதிகட்டு மாறாத நீரிழிவுங்
காதம்போ மேகங் கடக்குங்காண் - தீதடரப்
பொங்கு கரப்பானும் போகா விரணமும்போம்
இங்குகுட சப்பாலைக் கே *247*

*இதனால் வாதநோய், பேதிக்கட்டு, நீரிழிவு, தந்திப்பிரமேகம், கரப்பான், சிரங்கு ஆகியவை நீங்கும்.*

## குளப்பாலைமரம்

சுவாச காசம்பக்கச் சூலையதி சாரம்
அவாச வியர்ப்போ டனலந் - தவாத
கரப்பா னிவைவிலகும் காரிகையே நாளும்
உரப்பாங் குளப்பாலை யுண் *248*

*இதனால் சுவாசகாசம், பக்கசூலை, அதிசாரம், வியர்வை, சுரம், கரப்பான் இவை நீங்கும்.*

## முள்முருக்க மரம்

முள்ளு முருக்கதுதான் மோதுகின்ற சர்த்திகுன்மங்
கள்ளமறத் தீர்க்குங் கனற்சுரமும் - விள்ளரிய
அக்கரமும் போக்கு மனல்வாய்வேக் காடகற்றும்
மிக்க வலிகொடுக்கும் விள் **249**

*இது வாந்தி, வயிற்றுவலி, பித்தசுரம், வாய்ப்புண் அனல், வாய்வேக்காடு ஆகியவற்றை நீக்கும். மிக்க வலிமையை உண்டாக்கும்.*

## ஊழலாற்றி மரம்

அடவி வதிரூழ லாற்றி யெனுமூலி
படவிரணம் புண்கொறுக்கை பாமை - கடிதடத்தால்
வந்தவரை யாப்பு வெள்ளை வாதப் பிடிப்புகுட்ட
மிந்தவகை நோயகலு மெண் **250**

*காட்டில் வளரும் இம்மரத்தால் மேகவிரணம், ஒட்டுப்புண், ஆண்குறிபுண், பாமை எனும் சிரங்கு, அரையாப்பு, வெள்ளை, கீல் வாதம், பெருநோய் ஆகியவை நீங்கும்.*

## வெள்வேல் மரம்

பித்தம யக்கமறும் பேருலகின் மானிடருக்
குற்ற சுரவாத மோடுங்காண் - குத்துகின்ற
சந்துக்கு டைச்சல்விடுஞ் சர்வாங்க வாதம்போங்
கொந்துலவும் வெள்வேலுக் கு **251**

*பித்தமயக்கம், வாதசுரம், சந்துக்குடைச்சல், அனைத்துவகை வாதநோய்கள் ஆகியவற்றைப் போக்கும்.*

## மூங்கில்மரம்

சூதக வாய்வினது சோணிதந்தங் காதுவரு
மாதே சுரந்தணியும் வாதம்போம் - பூதரமெல்
ஓங்கி வளர்ந்திழையு மோங்கலெனு மூங்கிலுக்கு
வாங்குஞ்சு வாசம்போம் வாழ்த்து **252**

*சூதகவாயு, சோணிதக்கட்டு, சுரம், வாதநோய், இரைப்பு இவற்றை மூங்கில் போக்கும்.*

## செடிவகைகுணம்

### ஆவாரை

சொல்லுதற்கு மட்டோ தொலையாத மேகநீர்
எல்லா மொழிக்கு மெரிவகற்று - மெல்லவச
மாவாரைப் பம்பரம்போ லாட்டுந்தொழிலணங்கே
யாவரை மூலி யது 253

*ஆவாரைச்செடி அனைத்து வகையான மூத்திர நோய்களையும் ஆண்குறி எரிவந்தத்தையும் தடுக்கும்.*

### பொன்னாவாரை

வெடிப்பு துவக்குதிரல் மேகப் புடைகள்
தடிப்பு தினவுகடி தங்கா - அடிக்கடியிங்
கென்னா வறைய விசையா வெழிலணங்கே
பொன்னா வரையதனைப் போற்று 254

*தோல்வெடிப்பு, சொறியும்போது தோல் தூள்விழல், மேகப்புடை, தடிப்பு, அரிப்பு, காணாக்கடி ஆகியவை போகும்.*

### நீர்ப்பூலா

மாந்தங்க ணம்பொருமல் மாறாச் சலத்துடனே
சேர்ந்த சொறிசிரங்குந் தீருங்காண் - எந்தெழிலைச்
சேர்ப்பாகக் கொண்ட செழுந்திருவே பூவிலுறை
நீர்ப்பூலாப் பூண்டை நினை 255

*மாந்தம், கணம், பொருமல், சீழுடன் கூடிய சொறிசிரங்கு அதிமூத்திரம் ஆகியன நீங்கும்.*

### பேய்மிரட்டி

மாந்தக ணங்கழிச்சல் மாறா வயிற்றுவலி
சேர்ந்து வருகரப்பான் தீச்சுரமும் - பேர்ந்துவிடும்
வேய்மிரட்டுந் தோளுடைய மெல்லியலே ராசியமாய்ப்
பேய்மிரட்டி யென்றொருக்காற் பேசு 256

*இச்செடியினால் மாந்தம், கழிச்சல், வயிற்றுவலி, கரப்பான், அதிகமான சுரம் ஆகியன போகும்.*

## குன்மக்குடோரி

சூலையோ டீளை தொலையாக்கா சங்கயநோய்
காலனென்ற குன்மங்க லங்குங்காண் - ஞாலமிசை
நன்மைக் குரியகுண நல்குவமென் றாற்றிலுறுங்
குன்மக்கு டோரிதனக் கு 257

சூலை, சுவாசம், இருமல், காசம், குன்மம் இவற்றைக் குன்மக்குடோரி போக்கும்.

## விடத்தேர்

முளையைவரு விக்கின்ற மூலரோ கத்தை
யளையுமுதி ரத்தை யடங்கா - துளைதாக
வேகத்தைப் போக்கிவிடும் வெய்யவிடத் தேர்சக்கிர
வாகத்தைக் காய்முலையாய் வாழ்த்து 258

முளையையே வருவிக்கும் மூலநோய், வயிற்றுவலி, ரத்த கிராணி, தாகம் இவற்றை விடத்தேர்போக்கும்.

## தகரை

தகரை படர்தா மரையைச் சொறியைத்
தகரவ டிக்குமந்தந் தன்னோ - டிகலான
அத்திசு ரத்தையும் தஞ்செய்யு மிம்மூலி
யுத்தமமா மென்றே யுரை 259

இது படர்தாமரை, சொறி, மந்தம், அத்திசுரம் ஆகியவற்றைப் போக்கும்.

## நின்றாற்சிணுங்கி - நிலம்புரண்டி

நின்றாற் சிணுங்கியது நீலவிஷம் போக்குமினுங்
குன்றாந் தனத்தியரைக் கூட்டுவிக்கும் - என்றும்
அலம்புரண்ட நோயகற்று மாள்வசிய மாக்கும்
நிலம்புரண்டி மூலி நினை 260

நின்றாற்சிணுங்கி பாம்பின் விடத்தைப் போக்கும்; பெண்வசியத் திற்குப் பயன்படும். நிலம்புரண்டிச் செடியானது சாதாரண விடங்கள், விடநோய்கள் இவற்றைப்போக்கும்; ஆடவர் வசியத்திற்குதவும்.

## உரலாமணக்கு

உரலா மணக்குக் குரத்தவலி சூலை
விரைவான குன்மமும்போம் விள்ளப் - பிரிவாம்
முளைமூல மோடிரத்தம் முன்கால் விரணங்
கொளுமேக மெல்லாம்போங் கூறு 261

எலியா மணக்கோ எலிவிஷமுஞ் சேர்ந்த
பலவிஷமு மோட்டிவிடும் பாரில் - வலுபேதி
யுண்டாக்கு விக்கு முரத்தகுன் மம்பிலீகம்
அண்டாம லோட்டிவிடு மால் 262

*உடல்வலி, குத்தல், குன்மம், முளைமூலம், கழல்வாத இரணம், இரத்தமேகம் முதலான சில மேகங்கள், எலிவிடம் போன்ற சிலவிடங்கள் வயிற்றுவலி, பீலிகைநோய் ஆகியவற்றை உரலாமணக்கஞ் செடி போக்கும்.*

## சணப்பின்குணம்

கைப்பும் உறைப்புங் கலந்திருக்குந் தின்றக்கால்
மெய்ப்புள்ள பித்தம் விலகுங்காண் - நெய்ப்பாங்
கருப்பங்க ளெல்லாங் கரைந்து விழுமே
உருப்பங்க மாஞ்சணப்புக் கோர் 263

*பித்தநோய்கள், சிலவகை வாதநோய்கள் இவற்றை நீக்கி இளங்கருப்பங்களைக் கரையச் செய்யும் தன்மை கசப்பும் காரமுமுள்ள சணப்புச் செடிக்குண்டு.*

## மாமாலை

பாண்டுடனே மெய்யிற் படர்சோபை யைத்துரத்துந்
தூண்டுநீ ராம்பலெனுந் துன்பொழிக்கும் - பூண்டதோர்
நீரை யிறக்கு நெடுந்துயர மாற்றிவிடும்
நாறியரே மாமாலை நன்று 264

*இது பாண்டுரோகம், சோகை, நீராம்பல்நோய் ஆகியவற்றை நீக்கும். அதிகமாக நீரைப்போக்கும்.*

### கோடகசாலை

கோடகசா லைக்குக் கொடியஅனல் மேகமொடு
போடகங்கி ரந்திகு ஷ்டம் புண்ணாறும் - நாடகஞ்செய்
யப்பித்த வாய்வு மலர்வாய் விரணமும்போம்
பொற்புற்ற பொன்னே புகல் 265

*இது உடல்சூடு, மேகம், கிரந்தி, குட்டம், இரணம், பித்த, வாதநோய்கள் ஆகியவற்றை விலக்கும் என்பர்.*

### வட்டக்கிலுகிலுப்பை

வட்டக் கிலுகிலுப்பை மாறாச் சொறிகிரந்தி
துட்டகண்ட மாலைபல சோபைநோய் - வட்டமுலை
மானே விரணவகை மாந்தமுத னோயெல்லாந்
தானே யகற்றுமெனச் சாற்று 266

*சொறி, கிரந்தி, கண்டமாலை, பல்வகைச் சோகை, இரணங்கள், மாந்தம் முதலிய பல நோய்கள் வட்டக் கிலுகிலுப்பையால் நீங்கும்.*

### வெள்ளைக்கிலுகிலுப்பை

விடவினங்க ளைப்பிடித்து விண்ணேற்றும் வந்த
விடசன்னி நோயை விரட்டுந் - தடமாரும்
வெள்ளைக் கிலுகிலுப்பை மென்பூண் டதுபுவிக்குட்
கிள்ளைக் குதலைமின்னே கேள் 267

*மலையில் இருக்கும் வெள்ளைக் கிலுகிலுப்பைச் செடியானது விடங்களையும், விடசன்னி நோயையும் போக்கும்.*

### சந்திரகாந்தி - சூரியகாந்தி

சந்திர காந்திக்குத் தழலெரிச்சல் நீர்க்கடுப்பும்
உந்திவலி யாவு மோடுங்குங்காண் - சந்திலுறும்
பாரிய வாதம் பருகுநீ ரேற்றமும்போஞ்
சூரியகாந் திக்குச் சொல் 268

*பித்த எரிவு, நீர்க்கடுப்பு, தொப்புள் வலி இவை சந்திரகாந்திச் செடியால் நீங்கும். சூரியகாந்திச் செடிக்கு பாரிசவாதம், நீரேற்றம் இவை நீங்குமாம்.*

### பேயகத்தியின் குணம்

தம்மைக் கண்டாலிரத தாதுவிலாம் பொருட்களும்
வெம்மைப் புடைநமையும் வீறாநெய் - யம்மையுறுந்
தூயகத்தி யுங்கலங்குந் தோதகக்கண் மாதே
பேயகத்தி மூலிகண்ட பேர் 269

*இதர தாதுக்கிருமிகள், வெப்பத்தால் ஏற்படும் சொறி, தினவு இவை பேயகத்தியால் நீங்கும்.*

### ஈச்சுரமூலி

பலபலவீக் கஞ்சந்நி பாதங்க ளோடு
நலகல்வி ஷங்கள் நடுங்குங் - கலகலெனப்
பேச்சுரமுண் டாகுமலர்ப் பெண்ணனமே நீகேளா
யீச்சுர மூலிதனக் கின்று 270

*இம்மூலி விடசோபை, முதலான சோபைகள், சன்னிகள், பல விடங்கள் ஆகியவற்றை நீக்கும். நல்ல குரல்வளத்தை உண்டாக்கும்.*

### நிலவிளா

அழன்றகண வேக மதிதாகந் தீருஞ்
சுழன்றுவரு பித்தந் தொலையும் - உழன்று
பொருநிலைமே கத்துடனே புண்சுரமும் போகும்
அருநிலவி ளாவுக் கயர்ந்து 271

*வெப்பம்தரும் கணச்சுரம், மிகுந்ததாகம், பித்தநோய், பிரமேகம் புண்,.சுரம் இவை நிலவிளாச் செடியால் நீங்குமென்பர்.*

### சங்கங்குப்பி

கரப்பான் கிரந்தி கருங்குட்ட ரோகம்
உரப்பான மேகம் ஒழியுங் - கருவாம்
கருங்கிரந்தி செவ்வாப்புக் கட்டிகளு மேகும்
அருஞ்சங்கங் குப்பிக் கறி 272

வெட்டை சொறிசிரங்கு வீறிவ ருஞ்சூலை
துட்டவா தங்கபந்து ணுக்கிருமல் - கெட்டவிஷம்
அங்கங்கொள் பூச்சியிவை யாவும்போம் பித்தமுறுஞ்
சங்கங்குப் பிக்கெனவே சாற்று 273

*இச்செடி கரப்பான், கிரந்தி, கருங்குட்டம், மேகம், வாத நோய், கர்ப்பத்திலுண்டாகும் கருங்கிரந்தி, செவ்வாப்புக்கட்டிகள், வெட்டை, சொறி சிரங்கு, சூலை, வாதம், கபம், இருமல், கெட்டவிடம், பூச்சி இவை அனைத்தும் நீங்கும். பித்தம் உண்டாகும்.*

### கறிமுள்ளி

ஈளை யிரும லிரைப்புச்சு வாசமறும்
வாளைவென்ற கண்ணாய் வழுத்தக்கேள் - நாளையினி
யில்லைக் கடலுலக மெங்குங்க பச்சுரநங்
கொல்லைக் கறிமுள்ளி கொள் 274

*கறிமுள்ளியால் ஈளை, இருமல், இரைப்பு, சுவாசம் கபச்சுரம் இவை நீங்கும்.*

### செம்முள்ளி

செம்முள்ளி யென்றாற்சி லேஷ்மந டுங்கிவிடும்
விம்முமுலை மாதேவி ளம்பக்கேள் - கம்முகின்ற
மாந்தகணம் ஐயமிவை மாறுஞ் சிறுவருக்குச்
சேர்ந்தசுர தோஷமும்போஞ் செப்பு 275

*கபவிருத்தி, கணமாந்தம், சுவாசம், குழந்தைகளுக்கு உண்டாகும் சுரம் ஆகியவற்றைச் செம்முள்ளி நீக்கும்.*

### கண்டங்கத்திரி

காசசு வாசங்க தித்தக்ஷய மந்தமனல்
வீசுசுரஞ் சன்னி விளைதோஷம் - ஆசுறுங்கால்
இத்தரையு ணிற்கா எரிகாரஞ் சேர்கண்டங்
கத்தரியுண் டாமாகிற் காண் 276

கண்டங்கத்திரியால் காசம், சுவாசம், சயம், அக்கினி மந்தம், சீதச்சுரம், சன்னிபாதம் எழுவகை தோடங்கள், வாதநோய் ஆகியன நீங்கும்.

## தேட்கொடுக்கி

தேட்கொடுக்குண் டாயிற் நினவடங்குந் தப்பாது
நாட்பட்ட புண்கரப்பான் நாசமாங் - கீழ்பட்ட
மாந்த கணமுமறு மானிலத்துட் சில்விஷம்போம்
போந்தமருந் தாகும் புகல் 277

*நாட்பட்ட புண், கரப்பான், அரிப்பு, பழம்புண், கடுவன், கணமாந்தம், சிறிய கடிவிடங்கள் ஆகியவற்றைத் தேட்கொடுக்கி நீக்கும்.*

## பெருந்தோட்கொடுக்கி

சுடுகாடு முட்டா னெனப்பெரியோர் சொல்லும்
நெடியபெருந் தேட்கொடுக்கால் நீரார் - பொடிக்கிருமி
புண்கிரந்தி மேகப்புண் பொல்லாக் கருங்கிரந்தி
விண்கரந்து போகாதோ விள் 278

*சுடுகாடுமுட்டான் எனப்படும் இச்செடிக்கு பொடிக்கிருமிகள், இரணக்கிரந்தி, மேகப்புண், கருங்கிரந்தி ஆகியவைகள் நீங்கும்.*

## சிறுதோட்கொடுக்கி

சிறுதேட் கொடுக்கதனாற் சேயிழையே கேளாய்
சொறிசிரங்கு புண்கரப்பான் சூலை - கொறுமாந்தை
மேகவெட்டை பித்தவெட்டை மீளா வெலும்புருக்கி
ஆகம்விடுத் தோடு மறி 279

*இது நமைச்சிரங்கு, இரணக்கரப்பான், கீல் வீக்கம், கொருக்கு மாந்தம், ஒழுக்குப்பிரமேகம், பித்தவெள்ளை, எலும்புருக்கி ஆகியவை நீங்கும்.*

## நிலவேம்பு

வாதசுர நீரேற்ற மாற்றுஞ் சுரதோஷங்
காதமென வோடக் கடியுங்காண் - மாதரசே
பித்த மயக்கறுக்கும் பின்புதெளி வைக்கொடுக்குஞ்
சுத்தநில வேம்பின் றொழில் 280

*இது வாதசுரம், நீரேற்றம், சுரம், பித்தமயக்கம் ஆகியவைகளை நீக்கும்.*

## சிவனார்வேம்பு

சாய்க்குமிடிப் புண்பழம்புண் சர்மகுட் டம்பிளவை
தீக்கடுகால் வன்பெருநோய் சிந்துமா - நோய்க்கு
விதையாதி வேம் பினாமெய்க்கழகு காலை
யுதையாதி வேம்பினா லுன்னு *281*

*சாய்க்குமிடிப்புண், பழையபுண், தோல்குட்டம், ராஜப்பிளவை, பாம்பின்விடம், பெருவாதம், அக்கினிமந்தம் இவை நீங்கும். அழகுண்டாகும்.*

## நீர்முள்ளி

பாண்டுகு ளுப்பையறும் பாரில்வரு நீரேற்றம்
மாண்டுவிடும் நீர்க்கட்டு மாறுங்காண் - பூண்டதொரு
வீக்கமெல்லாம் நீராய் விடுமேநீர் முள்ளிக்குத்
தாக்கு மயில்விழியாய் சாற்று *282*

*இதனால் பாண்டு, குளுப்பை, நீரேற்றம், சிறுநீர்ச்சிக்கல், வீக்கம் ஆகியவை நீங்கும்.*

## பெருமருந்து

திரிதோஷம் வெப்பு சிரங்குசொறி நஞ்சோ
டரிதேமல் வன்புடையு மண்டா - தொருவான்
அருமருந்தை யொத்த வணங்கே யுலகிற்
பெருமருந்தை நீயெடுத்த பின்பு *283*

*இதனால் முத்தோடம், வெப்பு, சிரங்கு, நஞ்சு, தினவு, தேமல், மேகப்படை இவை நீங்கும்.*

## ஊமத்தை

நாய்க்கடியால் வந்துநலிசெய் விரணமும் போம்
வாய்க்குழிப்புண் கட்டிகளு மாறுங்காண் - திக்குணத்தைச்
சேமத்தில் வைத்தவிஷந் தீருமுத்தோ ஷங்களறும்
ஊமத்தை யின்குணத்தை யுன்னு *284*

*நாய்க்கடிப்புண், குழிப்புண், கட்டிகள், நஞ்சு, முத்தோடம் இவற்றை ஊமத்தை போக்கும்.*

## கருவூமத்தை

விந்திரதங் கட்டுமெழின் மேனிதருங் குஷ்டமொடு
வந்த வியர்ப்பரிப்பு மாற்றுங்காண் - முந்தப்
பெருமத்தஞ் செய்சுரத்தைப் போக்குங் கயப்பாங்
கருவூமத்தம் நன்மூலி காண் *285*

*இது சுக்கிலத்தையும், பாதரசத்தையும் கட்டும். உடலுக்கு அழகை யுண்டாக்கும். பெருநோய், வியர்வைத்தினவு, பயித்தியம், சுரம் இவை நீங்கும்.*

## பொன்னூமத்தை

பொன்னூமத்தம் உண்டாகிற் பூவையரே புண்கிரந்தி
தொன்மைக் கிராணிவரு சூசிகா - வன்பேதி
பித்த சுரத்துடனே பேரா விஷசுரமுஞ்
சுத்தவதி சாரமும்போஞ் சொல் *286*

*புண்கிரந்தி, நாட்சென்ற கிராணி, பேதி, பித்தவிட சுரங்கள் இவை பொன்னூமத்தையால் நீங்கும்.*

## மருளூமத்தை

சீதசுரம் நீரேற்றஞ் சில்விஷங்கள் மந்தத்தோ
டூதையிவை யெல்லாம் ஒழியுங்காண் - போத
இருளுருங் கூந்த லெழின்மாதே காண
மருளூமத் தைக்கறிந்து வை *287*

*இது குளிர்சுரம், நீரேற்றம், சிலவகை விடங்கள், அக்கினி மந்தம், வாததோடம் இவற்றைப்போக்கும்.*

## நிலக்குமிழ்

பேதியொடு கண்சொருகற் பேராத சீதளமும்
வாதவலி கொட்டாவி மாந்தமும்போம் - ஓதச்
சலக்குமிழை யொத்தத னக்கருங்கண் மாதே
நிலக்குமிழைக் கையிலெடு நீ *288*

*மந்தத்தால் ஏற்பட்ட நீர்ப்பேதி, விழி சொருகுதல், நீர்ப்பிடிப்பு, வாதக்கடுப்பு, அதிகக்கொட்டாவி, மந்தம் ஆகியவற்றைப் போக்கும் தன்மை நிலக்குமிழிக்கு உண்டு.*

## நிலத்துத்தி

*தொடங்கர சங்கட்டி தொலையவப் புலோக*
*மடங்கி நீறாக வெண்ணி னம்பொற் - குடம்போ*
*னலத்துத்தி பூத்ததனை நல்லா ரமிர்தே*
*நிலத்துத்தி மூலியை நினை* 289

*இம்மூலி ஆரம்ப மூலநோய், வித்திரதிக்கட்டிகள் இவற்றைப் போக்கும். கருவங்கத்தைப் பற்பமாக்கப் பயன்படும்.*

## பெரும்பீளை

*பாடாண பேதியெனப் பன்னுபெரும் பீளைக்கு*
*மேடான வீக்கம் விலகுங்காண் - நாடறிய*
*பேய்பூத மும்போகும் பேசிற் பலபிணிபோந்*
*தூயோ ரறிவரிதைச் சொல்* 290

*இது மிகுதியான சோபையை நீக்கும். பேய்பிசாசுகளை அண்டவிடாது. பல பிணிகளை நீக்கும்.*

## சிறுபீளை

*பாண்டுபெரும் பாடு பகர்மூத்தி ரக்கிரீச்சம்*
*பூண்டதிரி தோஷமிவை போகுங்காண் - தாண்டிப்*
*பறியவே ளைத்துரத்தும் பார்வையிற்கண் மாதே*
*சிறிய பீளைக்குச் சிதைந்து* 291

*நீரடைப்பு கல்லடைப்பு நீங்காக் குடற்சூலை*
*பேரிடரி ரத்தகணம் போக்குங்காண் - வாரிறுக்கும்*
*பூண்முலையே கேளாய் பொருந்துஞ் சிறுபீளை*
*யாமிதுகற் பேதி யறி* 292

*இச்செடி பாண்டு, பெரும்பாடு, மூத்திரக்கிரீச்சரம், முத்தோடம், மூத்திரச்சிக்கல், கல்லடைப்பு, குடற்சூலை, இரத்தகணம், போன்ற வற்றைப் போக்கும்.*

## பல்லிப்பூண்டு

*வல்விஷந் தோஷசுரம் வாயுபித் தங்களொடு*
*பல்வலியும் பஞ்சாய்ப் பறக்குங்காண் - நல்லோர்பால்*
*சொல்லிப்பார் பாஷான தாளகமுஞ் சுத்தியதாம்*
*பல்லிப்பூண் டுண்டாயிற் பார்* *293*

*இதனால் பாம்பின்விடம், சுரதோஷம், வாதம், பித்தம், பல்வலி இவை போகும். பாடாணம், தாளகம் இவற்றைச் சுத்திசெய்ய இம்மூலி பயன்படும்.*

## தாணிப்பூண்டு - பொரிப்பூண்டு

*தாணிப்பூண் டேயிருந்தால் தாவிவரு மேகத்தை*
*நாணிப்போ கச்செய்யும் நானிலத்துள் - வீணில்*
*எரிகிரந்தி மேக மிருக்குமோ வூறிற்*
*பொரிபூண்டின் பேரைப் புகல்* *294*

*தாணிப்பூண்டு இரத்த பிரமேகத்தை நீக்கும். பொரிப்பூண்டு எரிகிரந்தி, மேகம் இவற்றைப்போக்கும்.*

## குருவிச்சிப்பூண்டு

குருவிச்சிப் பூண்டெனவே கூப்பிட்டாற் போதும்
வருவிச்ச குஷ்டம் மலடும் - ஒருமிச்ச
மேகக் கரப்பான் விஷமாத்தஞ் சீதரத்தம்
பேதமறப் போமொருக்காற் பேசு *295*

இப்பூண்டுக்குப் பெருவியாதி, மலடு, சிலேட்டுமம், மேகக் கரப்பான், விடமாந்தம், சீதரத்தம், கிராணி இவை நீங்கும்.

## தலைச்சுருளி

*பாண்டகற்று மெய்யிற் படர்குஷ்ட நோய்விலக்கும்*
*நீண்ட விருதயநோய் நீங்குங்காண் - தாண்டதம்பை*
*முன்னே யொழித்துவிடு மூவாத் தலைச்சுருளி*
*யென்னே யுலகிலிசை* *296*

*இது உடல்வெளுப்பு, படர்குட்டம், இருதயநோய், தாண்ட தம்பை ஆகியவற்றைப் போக்கிவிடும்.*

## கறுப்புமணித்தக்காளி

வெவ்வழலு மாறும் விரிகுரந்தகம் மற்போகும்
ஒவ்வுசிசு வுக்காம் உலவைவிடுஞ் - செவ்வி
அருமணிக் கச்சுமுலை யாயிழையே கேளாய்
கருமணித்தக் காளிதனைக் கண்டு 297

*இதனால் அதிகவெப்பம், குரற்கம்மல், சுரசாதநோய், வாத தோடம் இவை நீங்கும். குழந்தைகள் மருத்துவத்திற்கு இது பயன்படும்.*

## சிவப்புமணித்தக்காளி

கந்ததா ளிப்புண்ணுங் காங்கையினால் உள்ளுக்குள்
வந்தவேக் காடுமிக மாற்றுங்காண் - முந்தனில
ஐய விளையும் அகற்றிவிடும் நற்புலத்துச்
செய்ய மணித்தக்காளிச் சீர் 298

*வாய்ப்புண், உள்சுரம், வாத, கபநோய்கள் இவற்றை சிவப்பு மணித்தக்காளி போக்கும்.*

## நல்வேளை

சிரநோய் வலிகுடைச்சல் தீராச் சயித்தியம்
உரநோ யிவைக ளொழியும் - உரமேவும்
வில்வேளைக் காயும் விழியாய் பசிகொடுக்கும்
நல்வேளை தன்னை நவில் 299

நல்லவே ளைப்பூண்டை நாடுங்கால் வாதமும்போஞ்
சொல்லும்ஐ யத்துடனே சோபையறும் - மெல்லமெல்லத்
தக்கவன லும்பித்துந் தானெழும்புஞ் சாந்தமின்றி
யக்கரநோய் மிஞ்சு மறி 300

*தலைநோய், குடைச்சல், நீர்ப்பிடிப்பு, மார்புவலி, வாத தோடம், கபநோய், வீக்கம் இவை நீங்கும். பசி, சூடு, பித்தம் இவற்றை உண்டாக்கும். தொண்டை, நாக்கு ஆகியவற்றில் நோய்களை உண்டாக்கும்.*

### நாய்வேளை

வாதம் உடற்கடுப்பு வன்சூலை காதிரைச்சல்
ஓதிமிகு பீநசமும் ஓடுங்காண் - போதெறிந்து
காய்வேளைக் காயும்விழிக் காரிகையே வையமதில்
நாய்வேளை யுண்ண நவில் *301*

*வாதப்பொருமல், உடற்கடுப்பு, குத்தல், காதிரைச்சல், சிலேட்டுமம், பீனிச நோய்கள் ஆகியவற்றை நாய்வேளை போக்கிவிடும்.*

### கொள்ளுக்காய்வேளை

வாதமிக்க தென்பார்க்கும் வாய்வறட்சி யென்பார்க்கு
மீதுதந்த மூலநோ யென்பார்க்கு - மோதமுற்ற
கொள்ளுக்கா தாரகபந் தோற்றியதென் பார்க்குமொரு
கொள்ளுக்காய் வேளைதனைக் கூறு *302*

*வாதம், நாவறட்சி, தந்தமூலநோய், கபம் இவற்றை இக்கொள்ளுக் காய்வேளை போக்கும்.*

### கல்லுருவிப்பூண்டு

கல்லுருவிப் பூண்டுபல கட்டிகளை யுங்கரைக்கும்
வல்லுதிரக் கட்டறுக்கும் வந்தபுண்ணை - வெல்லரிய
மேகத்தை வல்விஷத்தை மீறாத கற்றிடும்
லோகத்தைச் சத்திசெய்யு மோது *303*

*இப்பூண்டு பலவகைக் கட்டிகளைக் கரைக்கும். இரத்த தடிப்பு, புண், மேகம், விஷம் இவற்றைப்போக்கும்.*

### எரிசாலை - குதிரைக்குளம்படி

பூவில் எரிசாலைப் பூண்டுக் கிழுப்புவலி
கூவியமுஞ் சூலைஅனி லங்குறையுந் - தாவு
குதிரைநடை வாயுசந்நி கூறுதின வும்போங்
குதிரைக் குளம்படியைக் கூறு *304*

*எரிசாலைப்பூண்டு இழுப்புவலி, கீல்குத்தல், வாதம் இவற்றை நீக்கும். குதிரைக் குளம்படி பூண்டு வாயு, சன்னி, தினவு இவற்றைப் போக்கும். இதனைக் குளிர்ச்சி பூண்டென்பர்.*

## சுளுக்குநாயகம்

சுளுக்கு நாயகந் தோஷஞ் சுரமொடு
சுளுக்கும் வாங்குந் தொடுத்தகை கால்களின்
சுளுக்கு மேற்கறடுங் கரைக்குஞ் சொன்னோஞ்
சுளுக்கு மேல்வீ ழிரத்தந் துடைக்குமே 305

*இது தோடம், சுரத்தால் உண்டான சுளுக்கு, உடற் சுளுக்கு, ரத்தத் தடிப்பு. இவற்றைப்போக்கும்.*

## கிரந்திநாயகம்

சீதமறு மாவிஷமுந் தீரும்விழி நோயகலும்
பூதமொடுமருளும் போகுங்காண் - மேதினியுள்
ஆயகத்துப் புண்கிரந்தி யாறுமயி லேகிரந்தி
நாயகத்தி னாலே நவில் 306

*கிரந்திநாயகப்பூண்டு சீதளம், பாம்பின்விடம், கண்ணோய், உள்புண், கிரந்தி போன்றவற்றை நீக்கும்.*

## பிளவைக் கொல்லிப்பூண்டு

பிளவைக் கொல்லிப் பூண்டிருந்தாற் புண்விரணம் பேரும்
அளவையுறா மேக மடங்கும் - உளமாந்தை
யாறாப் பிளவைகட்டி யெல்லா முலர்ந்திடுமே
மாறாக் கவினணங்க வாழ்த்து 307

*சிறுசிரங்கு, புண், ஒழுக்குப்பிரமேகம், உள மாந்தை, இராசப் பிளவை ஆகியவற்றைப் பிளவைக் கொல்லிப்பூண்டு நீக்கும்.*

## மலைதாங்கிப் பூண்டு

வாதம்எண்ப துஞ்சுரமும் வாத சயித்தியமுங்
காதுவலி பாரங்க ரத்திடுங்காண் - போதச்
சிலைதாங்கி நின்றதுதற் செந்திருவே நீயும்
மலைதாங்கிப் பூண்டை வழுத்து 308

*இது வாதம், சுரம், வாதநோய்கள் எண்பது, கர்ணசூலை, உடல் பருத்தல், காதுவலி ஆகியவற்றை நீக்கும்.*

### குடியோட்டுப்பூண்டு

புண்ணொடுக ரப்பான் பொடிசிரங்கு சில்விஷங்கள்
சண்ணிருமல் மேகவலி தண்மேகம் - அண்ணிந்
படியோட்டு மாவிஷமும் பல்நோயுந் தீருங்
குடியோட்டுப் பூண்டாற் குலைந்து 309

*புண், கரப்பான், சிறுசிரங்கு, சிலவகை விடங்கள் காசம், மேக வாயு, நீர்ப்பிரமேகம், பாம்பின்விடம், தந்தநோய் ஆகியவை நீங்கும்.*

### ஆடுதிண்டாப்பாளை

ஆடுதொடாப் பாளைக் ககக்கிருமி வன்சிலந்தி
நீடுகருங் குஷ்டம் நிறைகரப்பான் - ஆடிடச்செய்
யெண்பது வாய்வும் இகல்குஷ்ட முந்தீருந்
தின்பெறுநற் றாதுவுமாஞ் செப்பு 310

*மலக்கிருமிகள், சிலந்தி, கருங்குட்டம், கரப்பான், வாதநோய்கள் எண்பது, கிடிகுட்டம் ஆகியவைகள் நீங்கும். உடல்பலமும், சுக்கில விருத்தியுமுண்டாகும்.*

### குழிமீட்டான்

கணத்திலெழு மாந்தத்தைக் காணாவுட் சூட்டைக்
கணத்திலே வேரைக் களையும் - மனித்தமுலைப்
பாலைச் சுரப்பிக்கும் பாரிற் குழிமீட்டான்
காலைத் தொழுதுண்ணுங் கால் 311

*இப்பூண்டு கணமாந்தம், உட்சூடு இரண்டையும் போக்கும். முலைப்பாலைச் சுரக்கும்படிச் செய்யும்.*

### செருப்படை

செருப்படைக்கு வாதமந்தஞ் சேர்வான மேகம்
இருப்படிகொள் பொல்லா இசுவும் - விருப்படிக்குஞ்
சூலையொடு வாதகுன்மந் தோற்றா தொருநாளும்
வேலையொத்த கண்ணாய் விளம்பு 312

*இது வாதம், மந்தம், வெள்ளை வீழ்தல், இசிவு, சூலை, வாதகுன்மம் போன்றவற்றைப் போக்கும்.*

## கல்தாமரை

*வீரிய விர்த்திதரு மெய்க்குப் பலங்கொடுக்குங்*
*கூரிய குஷ்டுதனைக் கோபிக்குங் - காரீயத்தை*
*நற்றாம் பரமாக்கு நங்கா யடுக்கலுறை*
*கற்றா மரையதனைக் காண்* **313**

*இது சுக்கிலத்தையும், பலத்தையும் விருத்தியாக்கும். குட்டத்தைப் போக்கும். காரீயத்தைச் செம்பாக்கும்.*

## கஞ்சாங்கோரை

*மாந்தக் கழிச்சலுறும் மாந்தஞ்சு ரங்கணம்போஞ்*
*சேர்ந்தமூ லத்தின் தினவடங்கும் - பூந்தடக்கை*
*யன்னமே மேகம் அறுங்கஞ்சாங் கோரையினை*
*யுன்ன இருமலிலை யோது* **314**

*கஞ்சாங்கோரை மாந்தபேதி, அக்கினிமாந்தம், கணச்சூடு, சுரம், நமைச்சல், பிரமேகம், காசம் இவை நீங்கும்.*

## கீழ்வாய்நெல்லி

*சீதம்அதி பித்தவிஷஞ் செவ்விழியி லின்னோய்க் கூட்டம்*
*பூதமொடு பேயிரத்தப் போக்குகளும் - பூதலத்துள்*
*தாழ்வாய்ப் பணிந்தேகுந் தப்பாது பொய்யலவே*
*கீழ்வா யெனுநெல்லிக் கே* **315**

*கீழாநெல் லிக்குணந்தான் கேளாய் மதுமேகந்*
*தாழாக்கா மாலைகளைச் சண்ணுந்தா - தேழனலுந்*
*தொக்கினை லுந்தொலைக்குந் தொன்மேகம் போக்கிவிடுந்*
*தக்கவிர ணங்கெடுக்குந் தான்* **316**

*இப்பூண்டு சீதம், அதிபித்தம், விஷம் கண்ணோய், பூதம் முதலான தோடங்கள், இரத்தப்போக்கு, மதுப்பிரமேக மூத்திரம், காமாலை, தாதுவெப்பம், பழம்மேகப்புண் போன்றவற்றை அகற்றும்.*

## மயிர்மாணிக்கம்

மயிர்மாணிக் கத்தால் வளர்மேகம் போகுஞ்
செயிரான மேகவெட்டை தீருஞ் - சயரோகம்
மாவிரணம் போக்கஇதில் வல்லிரதஞ் சேர்த்தரைத்துத்
தாவியுண்பா ருண்டறிந்தோர் தரம் *317*

*மேகம், வெள்ளை, சயம் ஆகியவற்றை மயிர்மாணிக்கம் நீக்கும். முறைப்படி இரச செந்தூரம், இரச பற்பம் இவற்றை இதனுடன் சேர்த்தரைத்து உண்டால் இரணம் ஆறும்.*

## துளசி

ஐயம் வயிறுளைச்சல் அஸ்திசுரந் தாகமும்போம்
பையசுர மாந்தம் பறக்குங்காண் - மெய்யாக
வாயின் அரோசகம்போம் வன்காரஞ் சூடுள்ள
தூய துளசிதனைச் சொல் *318*

*துளசி ஐயம், வயிற்றுளைச்சல், அத்திசுரம், தாகம், மாந்தம், சுவையின்மை ஆகியவற்றை நீக்கும்.*

## செந்துளசி

செய்ய துளசிவிஷந் தீர்க்குங் கபமறுக்கும்
வெய்ய கடிவிஷத்தை விண்ணேற்றுந் - சதயலரே
முத்தோஷத் துண்டா முரணோட்டும் அவ்வழிசேர்
எத்தோஷ மும்போக்கு மென் *319*

*விடம், கபம், அக்கினி, கீடவிடம், திரிதோடத்தால் ஏற்படுகிற நோய்கள் ஆகியவற்றைப் போக்கும்.*

## கருந்துளசி

இருமலொடு நெஞ்சி விழுப்புச்சு வாசங்
கிருமி சலதோஷங் கேவல் - மருமச்
சளிருட்சை சூலைவிஷஞ் சந்நியிவை போக்குந்
தளிரார் கருந்துளசி தான் *320*

இத்துளசி இருமல், நெஞ்சிழுப்பு, இரைப்பு, கிருமி, நீர்க்கோவை, கேவல், மார்புச்சளி, சுரம், குத்தல், விடம், சன்னி போன்ற அனைத்தையும் போக்கும்.

### நிலத்துளசி

நிலத்துளசி மாதர்தரு நின்முலைப்பால் மந்தம்
வலுத்தசுரம் பித்தகண மாற்றும் - அலத்துகண
மாந்தசுரம் பித்தசுரம் மாபெரிய சீதசுரஞ்
சேர்ந் தோடச் செய்யுந்தெளி 321

*குழந்தைகளுக்கு தாய்ப்பாலால் ஏற்படுகிற மந்தம், வாதசுரம், பித்தநோய்கள், கணச்சூடு, மாந்தசுரம், குளிர்சுரம் இவை நிலத்துளசி யினால் நீங்கும்.*

### நாய்த்துளசி

கபத்தோடு குத்திருமல் காணா தொழியுஞ்
சபத்தைச்செய் முத்தோஷமுஞ் சாடும் - விபத்தழலைச்
சாய்த்துடலைப் போஷிக்குந் தாரணியி லுள்ளோர்க்கு
நாய்த்துளசி தன்னை நவில் 322

*கோழை, குத்திருமல், திரிதோடத்தால் ஏற்பட்ட நோய்கள் போன்ற வற்றை நீக்கி, உடலை பொலிவாக்கும் பண்பு நாய்த்துளசிக்கு உண்டு.*

### கல்துளசி

தாபச் சுரமுந் தனிவித் திரதிகளுஞ்
சோபச் சிலவிஷமுந் தோற்றாதே - கோபிச்சங்
குற்றுளசி லேட்டுமத்தால் ஊன்றுகா சம்பறக்குங்
கற்றுளசிப் பேருரைக்குங் கால் 323

*இதனால் தீச்சுரம் வித்திரதிக்கட்டி, நீர்வண்டு முதலான சில விடங்கள், கபகாசம் போன்றவை நீங்கும்.*

### முள்துளசி

எலிவிஷம்போம் வெட்டுண் டிருக்கும் விரணக்
கிலிவிடும்வி ஷங்கள் கிளைக்கா - உலவிவரு
மட்டுறச்சி வந்தமலர் மண்டபத்துள் வாழனமே
முட்டுளசிப் பேரை மொழி 324

*இத்துளசி எலிவிடம், வெட்டுப்புண், அற்பவிடம் போன்ற வற்றை நீக்கும்.*

## கழுதைத்தும்பை

அரையாப்புக் கட்டி யனிலம் உதிரம்
பிரியாச்சீ தக்கடுப்பும் பேருந் - தரையிற்
பழுதைக்கொள் ளாச்செய்ய பங்கயப்பெண் ணேகேள்
கழுதைத்தும் பைச்செடியைக் கண்டு 325

*இதனால் அரையாப்புக்கட்டி, இரத்தமும் சீதமும் கலந்து விழாமல் தடுக்கின்ற கடுப்பு, வாதநோய் ஆகியன நீங்கும்.*

## நெய்ச்சட்டி

நெய்ச்சட்டி யென்றால் நிறையுமெய்யுட் சுக்கிலமுங்
பொய்ச்சிட்ட கண்ணொளியாம் பூவையரே - வெய்ச்சிட்ட
மேகமறுந் தீபனமாம் வெட்டையழ லுந்தணியுந்
தாகமறும் பித்தமும்போந் தான் 326

தூயழகு றப்பரியுஞ் சூதகந்த மாதிகளால்
வாயழுகி நாறுபுண்ணை மாற்றிவிடுந் - தீயழலை
நீக்கிவிடு நிம்பநெய்யை நெய்யாக்கிடும் வமனம்
போக்கிவிடு நெய்ச்சட்டிப் பூண்டு 327

*இப்பூண்டு வீரியவிருத்தி, கண்ணொளி, பசி, அழகு இவற்றை உண்டாக்கும். பித்தமேகம், வெள்ளை, வெப்பம், தாகம், இரசகந்தகத்தால் உண்டான வாய்ப்புண், அழற்சி, வாந்தி இவற்றை நீக்கும். வேப் பெண்ணைக்குரிய கசப்பினை நீக்கும்.*

## எழுத்தாணிப்பூண்டு

பழமலங்கள் சாறும்ப ருங்குடற்சீ தம்போம்
எழுமலச்சீ தக்கடுப்பு மேகும் - ஒழியாக்
கரப்பான் சொறிசிரங்குங் காணா தகலும்
உரப்பாம் எழுத்தாணிக் கோது 328

*மலக்கட்டு, சீதக் கடுப்பு, கரப்பான் சொறி, சிரங்கு இவற்றை எழுத்தணிப் பூண்டு நீக்கும்.*

## கொட்டைக்கரந்தை

கொட்டைக்க ரந்தைதனைக் கூசாம லுண்டவர்க்கு
வெட்டை தணியும்அதி மேகம்போந் - துட்டச்
சொறிசிரங்கு வன்கரப்பான் றோற்றாது நாளும்
மறிமலமுந் தானிறங்கு மால் 329

*வெள்ளை மேகம், சொறி, சிரங்கு, கரப்பான், மலக்கட்டு ஆகியன கொட்டைக் கரந்தையால் நீங்கும்.*

## சிவகரந்தை

வாந்தி அரோசகத்தை மாற்றும் பசிகொடுக்குஞ்
சாய்ந்தவிந்து வைக்கட்டுந் தப்பாதே - ஏந்தழகைத்
தண்டா துறச்சேர்க்குஞ் சாந்த பரிமளத்தைத்
தண்டாச் சிவகரந்தை தான் 330

கந்தநாறு கரந்தை யதின்குணம்
மந்தவாதங் கரப்பனை மாற்றிடுந்
தொந்தரோகந் துடைக்கு மிருமலா
மந்தநோயுந் தணிக்கநம் மாணையே 331

*இது வாந்தி, சுவையின்மை, விந்து வீணாதல், மந்தவாத கரப்பான், வாதநோய், காசம், அக்கினிமாந்தம் இவற்றை நீக்கும். பசி கொடுக்கும். உடலுக்கு அழகைக் கொடுக்கும்.*

## வெள்ளறுகு

குன்மமொடு வாய்வு குடல்வாதஞ் சூலையிவை
சென்மம்விடுத் தோடிச் சிதையுங்காண் - வன்முலையாய்
உள்ளுறுகி ரந்திசொறி யொட்டியசி ரங்குமறும்
வெள்ளறுகு தன்னை விரும்பு 332

*வெள்ளறுகு, குன்மம், வாதப்பிணிகள், வாதக்குடல், ஃவிருத்தி, கீல் பிடிப்பு, நரம்புத் தினவு, சிறுசிரங்கு, கிரந்தி இவற்றைப் போக்கும்.*

### ஓரிலைத்தாமரை

ஓரிலைத் தாமரையின் உற்றகுணத் தைக்கேளாய்
மார்பிற்பால் இல்லாத மங்கையர்க்கு - மோரில்
குடிக்கப்பால் உண்டாகுங் கோரமே கத்தைப்
படிக்குளிருக் காதொழிக்கும் பார் *333*

*இதனை எலுமிச்சங்காயளவு அரைத்து அரையாழாக்கு பசுமோரில் 40 நாள் 2 வேளை கொடுத்தால் பாலில்லா தாய்மார்களுக்கு பால் சுரக்கும். வாதமேகம் நீங்கும்.*

### ஓரிதழ்த்தாமரை

தாதுவையுண் டாக்குந் தனிமேகத் தைத்தொலைக்கும்
ஆதரவா மேனிக் கழகுதருஞ் - சீதம்போஞ்
சீரிதழ்த் தாமரைவாழ் செய்ய மடவனமே
ஓரிதழ்த் தாமரையை யுண் *334*

*தாதுவிருத்தி, அழகு இவற்றை உண்டாக்கி, மேகநோய், சீதம் இரண்டையும், ஓரிதழ்த்தாமரை நீக்கும்.*

### அந்தரத்தாமரை

அழுகிரந்தி குஷ்டம் அடர்ந்த கரப்பான்
புழுவுறுமக் கூடுமுதற் போகும் - அழகாரும்
இந்திரநீ லக்கருங்கண் ஏந்திழையே யெப்போதும்
அந்தரத் தாமரையா லாய் *335*

*இத்தாமரை அளிந்தபுண், குட்ட மடர்ந்த கரப்பான், மார்பில் கட்டும் கிருமிக்கூடு முதலிய நோய்களை நீங்கும்.*

### பற்பாடகம்

சீதவா தச்சுரமுத் தீராத தாகமும்போம்
போதவிரு கண்குளிரும் பொய்யலவே - பூதலத்துள்
வற்பார் பயித்தியமு மாபித்த முந்தொலையும்
பற்பாட கத்தையுன்னிப் பார் *336*

*பற்பாடகத்தில் சீதவாதசுரம், பித்தகாசம், உளைமாந்தம் பித்ததோடம், தீராத தாகம் இவை போகும். கண்குளிரச்சியடையும்.*

## திருநீற்றுப்பச்சை - உருத்திரச்சடை

திருநீற்றுப் பச்சைசி லேஷ்மசர்த்தி தன்னை
விரிநீற்றைப் போலாக்கு மெய்யே - பெரிய
சுரத்திரத்த வாந்தி சுரம்அருசி நில்லா
அருத்திரச் சடைக்கே யுரை *337*

திருநீற்றுப் பச்சை கப வாந்தியைப் போக்கும். உருத்திரசடை சுரத்தால் ஏற்பட்ட இரத்த வாந்தி, பித்தசுரம், சுவையின்மை ஆகியவற்றை நீக்கும்.

## மாசிபத்திரி

புளிப்புந் துவர்ப்பும் பொருந்தியிருந் தாலுந்
தவிர்த்த வாய்வைக்கனலைச் சாடும் - நெளித்த
வலிதனைவிட் டோட்டுமட மாதேநீ கேளாய்
வலிமாசிப் பத்திரிதான் வாழ்த்து *338*

இது வாதநோய், வெப்பம், ஐவகை வலி இவற்றை நீக்கும்.

## மருக்கொழுந்து

கண்ணிலுறு தோஷங் கபஞ்சு டிவைபோக்கும்
ஒண்அனல்கைப் புக்காரம் உள்ளமரும் - மண்ணிற்
கொழுந்தம் மருக்குணத்தைக் கொண்டிருந்த போதுந்
தழைந்தபசி வன்மைதருஞ் சாற்று *339*

கைப்பு, காரம், வெப்பம் கொண்ட இம்மருக்கொழுந்து, கண்படலம், கபதோடம், உட்காங்கை போன்ற கண்தோஷங்கள் இவற்றை நீக்கும். நல்ல பசியை உண்டாக்கி பலத்தையும் கொடுக்கும்.

## கொடிவகைகுணம்

### ஆதொண்டை

மண்டைக்கு டைச்சலறும் வாதத்தின் பீநசம்போந்
தொண்டைக் கபமுந் தொலையுங்காண் - மிண்டுசெய்யும்
வாதக்க டுப்பகலு மாதே ஆதொண்டைக்குப்
போதப்பல பிணிபோம் போம் *340*

*இது மண்டைக் குடைச்சல், வாத பீநசம், தொண்டைக்கபம், வாதக் குடைச்சல் ஆகியவற்றை நீக்கும்.*

### பெருங்கட்டுக்கொடி - சிறுகட்டுக்கொடி

பெரியகட் டுக்கொடிக்குப் பேசுபெரும் பாடும்
அரியமல பேதியும்போம் அப்பால் - உரிய
சிறுத்தகட் டுக்கொடிதான் சீதரத்தம் நீக்கும்
இறுத்த புனலைக்கட்டு மென் *341*

*பெருங்கட்டுக்கொடி பெரும்பாட்டையும் மலக்கழிச்சலையும் போக்கும். சிறுகட்டுக்கொடி சீதரத்தம், மேகநீர் இவற்றைப் போக்கும்.*

### சிறுகுறிஞ்சாக்கொடி

சிறுகுறிஞ்சா வாதமொடு சீதத்தை நீக்கும்
மறுவுதிரம் இல்லாத மாதர்க் - குறுமுலகில்
அத்தி சுரமும் அகலாக் கடிவிஷமுந்
தத்தியக லத்தகர்க்குந் தான் *342*

வாதசுரஞ் சந்நிசுரம் மாறாக்க பச்சுரமும்
பூதலம்விட் டோடப் புரியுங்காண் - மாதேகேள்
அக்கரங்கள் தீர்க்கும் அதிசுரந்தா கந்தொலைக்குந்
தக்க சிறுகுறிஞ்சா தான் *343*

*வாதவிடம், சீதம், மாதாந்திர உதிரச்சிக்கல், அத்திசுரம், காணாக் கடிவிடம், வாதசுரம், சன்னிசுரம், கபசுரம், அட்சரம், சுரம், தாகம் ஆகியவற்றை நீக்கும்.*

## இண்டு

பீநசத்தைப் போக்கும் பெருகியதோர் நீரேற்றந்
தானசிக்கச் செய்யும்இது சத்தியங்காண் - வானசைக்கும்
மண்டைக்கு டைச்சல் மருவுமுக சந்நியும்போம்
பண்டையுற்ற இண்டினுக்குப் பார் *344*

கட்டுவா தங்களறுங் காரிகையே மேகம்போம்
முட்டுவா தங்களெல்லா முன்பொழியுங் - கிட்டும்
புனலினறுந் தண்டுக்குப் போரீளை சூலை
யனலிலெழு புண்ணு மறும் *345*

*இண்டுக்கொடி, பீநசம், பல்வகை தோடங்கள், நீரேற்றம், தலைக் குடைச்சல், முகசன்னி, வாதத் தடிப்பு, பிரமேகம், சூதகவாய்வு, சுவாசம், கீல்பிடிப்பு, தீப்புண் ஆகியவற்றை நீங்கும்.*

## கற்பூரவள்ளி

காசம் இருமல் கதித்தம சூரிஐயம்
பேசுபுற நீர்க்கோவை பேருங்காண் - வீசுசுரங்
கற்பாறை யொத்துநெஞ்சிற் கட்டுகபம் வாதமும்போங்
கர்ப்பூர வள்ளிதனைக் கண்டு *346*

*இது குத்திருமல், காசம், அம்மைக்கொப்புளம், ஐயதோடம், புறநீர்க்கோவை, மார்புகபம், வாதக்கடுப்பு ஆகியவற்றைப் போக்கும்.*

## மூசுமல்லிகை

வீக்கமறுங் காமாலை விட்டோடுஞ் சோபைவிடும்
நீக்கமற விம்முமுலை நேரிழையே - ஏய்க்கும்
விடபாகம் மேகமும்போம் வீரியமுண் டாகும்
படர்மூ சுமல்லிகைக்கும் பார் *347*

*சோகை, காமாலை, வீக்கம், பிரமேகம் இவை நீங்கும். வீரிய விருத்தியுண்டாகும்.*

### ஊசிமல்லிகை

மாந்தக ணம்பொருமல் வாராது மைந்தர்களுக்
கூர்ந்தேயி ரத்தகணம் ஓடுங்காண் - கூந்தன்முடி
மானே சுரந்தணியும் வாங்காத வீக்கம்போங்
கானூசி மல்லிகைக்குக் காண் *348*

*இம்மல்லி கணமாந்தம், வயிற்றுப்பிசம், குழந்தைகட்கு ஏற்படும் இரத்தநோய்கள், சுரம், சோகை ஆகியவற்றை நீக்கும்.*

### மிளகரணை

ஐயம கற்றும் அசீரணவா தம்போக்குஞ்
செய்யபித்த சூலைகளைத் தீர்க்குங்காண் - பையவரும்
ஈளை யிரும லிரைப்புப்பி சந்தொலைக்கும்
நாளு மிளகரணை நன்று *349*

*ஐயம், அசீரணவாயு, பித்த சூலை, சயம், காசம், சுவாசம், வயிற்றுப்பிசம் ஆகியவற்றை நீக்கும்.*

### நாய்ப்பாகல்

நாய்ப்பாக லின்குணத்தை நன்றா யுரைக்கக்கேள்
வாய்ப்பான பீநசத்தை மாற்றுங்காண் - மாய்ப்பாக
லிங்கமதைச் சுத்திசெய்யும் நேரிற்பா ஷாணத்தைப்
பங்கமறச் சுத்திசெய்யும் பார் *350*

இது பீநசத்தை நீக்கும். சாதிலிங்கம், பாசாணம் இரண்டையும் சுத்தி செய்யும்.

### பிரண்டை

பிரண்டையைநெய் யால்வறுத்துப் பின்பரைத்து மாதே
வெருண்டிடா தேற்று விழுங்கில் - அரண்டுவரும்
மூலத் தினலடங்கும் மூலவி ரத்தமறும்
ஞாலத்தி லுள்ளே நவில் *351*

மாந்தம் வயிற்றுவலி வாயுஅதி சாரமுளை
சேர்ந்தமூ லங்கபம்உட் செம்புனற்போக் - கோய்ந்தநடை
யெல்லா மகலும் எழும்பும் அதிகபசி
மல்லார் பிரண்டையுண்டு வா 352

பிரண்டையை நெய்விட்டு வறுத்து அரைத்து கொட்டைப்பாக்களவு எட்டுநாள் காலை, மாலை சாப்பிட்டால் மூலத்தால் ஏற்பட்ட தினவும், மூலமும் நீங்கும். வேறுவகையில் மருந்துகளாகப் பயன்படுத்தும்போது அக்கினி மந்தம், குன்மம், வாதம், கழிச்சல், முளைமூலம், கபதோடம் இரத்தபேதி இவை குணம்பெறும். பசியையுண்டாக்கும்.

## களிப்பிரண்டை

ஐயமறும் பித்தம் அணுகாம லோடிவிடுந்
தையலார் போகமிகச் சாருங்காண் - பையக்
கரப்பான் விலகுங் கடிசிலந்தி யும்போம்
உரப்பாங்க ளிப்பிரண்டை யுண் 353

இதனால் ஐயம், பித்தம், கரப்பான், காணாக்கடி சிலந்திவிடம் ஆகியன நீங்கும். வீரியம் விருத்தியடையும்.

## தீம்பிரண்டை - புளிப்பிரண்டை

தீம்பிரண்டை தன்னாற் செரியாமந் தம்ஆமந்
தேம்பிரைப்பு விக்கல்ஐயந் திண்வாதம் - போம்பலரும்
பார்க்கும் புளிப்பிரண்டை பாண்டுரநோய் குன்மகயம்
போக்குமது சூடாம் புகல் 354

தீம்பிரண்டையினால், செரியாமந்தம், சீதபேதி, மிகுதியான கொட்டாவி, சுவாசவிக்கல், சிலேட்டுமம், வாதம் ஆகியவை நீங்கும். வெப்பமான புளிப்பிரண்டை உடல் வெளுப்பு, மார்பு நோய், வயிற்றுவலி, சயம் இவற்றை விலக்கும்.

## நறுந்தாளி

நாவுகளார் மார்பு நாபிமூலங் களிலுட்
டாவி வருமிரணஞ் சாத்தியமாங் - கூவலிடு
மெய்யழலு மோதணியு மேகமறும் வீரியமா
முய்யவெனி னற்றாளி யுண். 355

நறுந்தாளிக்கொடி, தொண்டை, மார்பு, வயிறு, மூலம் இவற்றில் ஏற்படும் புண்கள், உடல் வெப்பம், பிரமேகம் இவற்றை நீக்கும்.

## பேய்ப்பாற்சொரி

பேய்ப்பாற் சொரியதுதான் பேதிமுதல் வெப்பகற்றும்
வாய்ப்பார் கடுப்புதிரம் மாற்றுங்காண் - போய்ப்பாயந்
துருவாம லுள்ளலைக்கும் ஓங்கயிற் கண்மாதே
பொருவார்ப யித்தியம்போக் கும் *356*

*இதனால் பேதிமுதலான வெப்பநோய்கள், இரத்தக்கடுப்பு, பித்ததோடம் ஆகியவை நீங்கும்.*

## குதிரைவாலி
## (மரியாற்கூந்தல்)

கடுப்பு கழிச்சல் கனன்றசுர தாகம்
இடுப்புவலி வாதம் இவற்றோ - டடுப்ப
விதிரைவா வென்றழைக்கும் மேகமும் போகும்
குதிரைவா லிக்குக் குலைந்து *357*

காசம் பருப்படுவன் கண்மயக்கம் ஈளையொடு
வாசங் கமழ்குழலாய் மாந்தமும்போம் - பேசத்
தரியாது வாதகபந் தானே சொறிபோம்
மிரியார்கூந் தற்கு விரைந்து *358*

*இதனால் மூலக் கடுப்பு, பேதி, சுரத்தால் வந்த நாவறட்சி, இடுப்பு வலி, நடுக்கத்தோடு கூடிய மேகம், இருமல், படுவன், கண் மங்குதல், கோழை, அக்கினிமந்தம், தினவு ஆகியவைகள் நீங்கும்.*

## பவளக்குன்றிக்கொடி

பவளக்குன் றிக்கொடிக்குப் பற்றிநின்ற மேகங்
கவிழிரத்த பித்த கயமும் - நவமாஞ்
சொறிகரப்பன் புண்கிரந்திதோலார் கடுவன்
மறுகரப்பன் போமே மலைந்து *359*

*இக்கொடி, மேகம், இரத்தபித்தம், சயம், சொறி, கரப்பன், புண், கிரந்தி, தோல் கடுவன், அழுக்குக் கரப்பான் ஆகியவற்றை நீக்கும்.*

## முசுட்டை

மாதே முசுட்டையது வாதமொடு ஐயத்தைத்
தீதே புரிநீரைத் தீர்க்குங்காண் - வேதனைசெய்
வன்மலத்தைத் தள்ளும் வறட்சி சொறிசிரங்கைச்
சன்மமறப் போக்கிவிடுஞ் சாற்று 360

*இது வாதம், ஐயம், பிரமேகநீர், தினவுபடை, வறட்சி, மலத்தை வெளித்தள்ளும், சிறுசிரங்கு இவற்றை நீக்கும்.*

## பொன்முசுட்டை

வாதமொடு பித்தத்தை மாற்றுமே மாநிலத்திற்
சீத மகற்றுந் தினவடக்கும் - மாதேகேள்
உண்டிக்கும் வாசனையாம் ஓங்கி வளரனலைக்
கண்டிக்கும் பொன்முசுட்டை காண் 361

*வாதவலி, மயக்கம், சீதம், நமச்சல், உட்சூடு இவைகளை நீக்கும்.*

## நஞ்சறுப்பான் பூண்டின் குணம்

தொடுநஞ்சு நாவாரத் துய்க்குனஞ்சு மற்றோ
ரிடுநஞ்சுந் தாவர நஞ்சேறிப் - படுநஞ்சுங்
கூண்டுட னேகாதோ குயின்மொழியாய் நஞ்சறுப்பான்
பூண்டுதனை நீயெடுக்கும் போது. 362

*தொடுநஞ்சு, தாமே உண்ட நஞ்சு, இடுமருந்து, பாடாணம் இவற்றில் ஏற்பட்ட நஞ்சு, ஆகியனவற்றில் உண்டான விடம் தீரும்*

## நீர்மேல் நெருப்பான் குணம்

வாதமகா ரோகம் வாரினுங் கறையல்கி
மீதடா வன்றிமிரே மேவுகினு-மோதரிய
சீர்மே னிலம்பரவு தெய்வ மடமயிலே
நீர்மே நெருப்பை நினை 363

*மகாவாதநோய், திமிர்வாதநோய் இவை நீர்மேல் நெருப்புக் கொடியினால் நீங்கும்.*

### முடக்கற்றான்

சூலைப் பிடிப்பு சொறிசிரங்கு வன்கரப்பான்
காலைத் தொடுவாய்வுங் கண்மலமுஞ் - சாலக்
கடக்கத்தான் ஓடிவிடுங் காசினியை விட்டு
முடக்கற்றான் றன்னை மொழி 364

*சூலைப்பிடிப்பு, சொறிசிரங்கு, கரப்பான், கணுக்கால்வலி, மலக்கட்டு ஆகியன நீங்கும்.*

### கொல்லங்கோவை

சூலைபாண் டூதைதிரி தோஷம்அக்கி வெப்புகண்ட
மாலை குடலின்வலி மாகுஷ்டம் - ஆலவிஷம்
உட்கரப்பான் மெய்யரிப்பும் ஊண்டோகொல் லங்கோவை
கைக்குளிருக்க வின்னுங் காண் 365

*இக்கோவைக்கொடி, சூலைவலி, உடல்வெளிறல், பாண்டு, திரிதோடம், அக்கிப்புண், உட்சூடு, கண்டமாலை, பித்தவாதம், குட்டம், பெருவிடம், கரப்பான், நமைச்சல் ஆகியவற்றை நீக்கும்.*

### கற்கோவை, வரிக்கோவை, அப்பைக்கோவை, செங்கோவை, அருங்கோவை

வீக்க மகற்றுநஞ்சை வீட்டுநீர்ப் பேதிதரும்
போக்கு மதுவையழற் புண்ணொழிக்குற் - றேக்குறுகற்
கோவைவரிக் கோவையப்பைக் கோவை செங்கோவைகருங்
கோவை முறையேயுயர் குணம்

*கற்கோவை சோகையையும், வரிக்கோவை விடத்தினையும், அப்பைக்கோவை மேகப்புண்ணையும் நீக்கும்.*

### நரிப்பயற்றங்கொடி

நரிப்பயற் றங்கொடிக்கு நாடாது பித்தந்
தரிப்புற்ற ஐயமெல்லாந் தாழும் - இருப்பொழிக்கும்
மேகவெட்டை பித்தவெட்டை மீளாக் கரப்பனிவை
யாகம்விடுத் தோடு மறி 366

*இதனால் பித்தம், ஐயம், மேகவெட்டை, பித்தவெட்டை, மீளாக்கரப்பான் ஆகியவை நீங்கும்.*

### மூக்குறட்டை

சீதம கற்றுந் தினவடக்குங் காந்திதரும்
வாதவினையை மடிக்குங்காண் - பேதி
கொடுக்குமதை யுண்டாக்காற் கோமளமே பித்தம்
அடுக்குமே மூக்குறட்டை யாய் *367*

*இது சீதம், தினவு, வாதம் இவற்றைப் போக்கும். அழகு, பேதி, பித்தப்பிணி இவற்றையுண்டாக்கும்.*

### வெள்ளைச்சாறடை

வித்திரிதி மூலம் விழிப்படல மார்புநோய்
தத்து சுவாசந் தனிக்கருப்பை - யுற்ற
கருச்சிதறச் செய்சூசி காவாதமும்போம்
விருச்சிகத்தின் பேரை விரி

*இது வித்திரதிக்கட்டி, மூலவாயு, கண்படலநோய், மார்புநோய், சுவாசநோய், சூசிகாவாதம் (கர்ப்பத்தைச் சிதைக்கும் நோய்) ஆகியவற்றைப் போக்கும்.*

### பொன்னாங்காணி

காசம்பு கைச்சல் கருவிழிநோய் வாதமனல்
கூசும்பீ லினசகு தாங்குரநோய் - பேசிவையால்
என்னாங்கா ணிப்படிவ மேமமாஞ் செப்பலென்னைப்
பொன்னாங்கா ணிக்கொடியைப் போற்று *368*

இதனால் விழியில் ஏற்படும் வாதகாசம், புகைச்சல், கருவிழிநோய், வாததோடம், உடற்சூடு, பீனசம், மூலநோய் இவை போகும். உடல் நல்ல நிறம்பெறும்.

### புனற்றண்டு

கபவமன நாடிக் கமலங் காப்ப
ளிபமறு களத்தொலியு நீங்காச் - சுபமா
ரனற்றண்டைக் காட்டா வற்றசுர மேகும்
புனற்றண்டைச் சிந்திக்கும் போழ்து.

கட்டுவாதங் கொடிய கான்மேகங் கீல்கடொறு
முட்டுவாதஞ் சூலை மூடிரணம் - விட்டுவிடுஞ்
சொல்லவொண் ணாவின்ப சுகமளிக்கு மாரமிர்தே
நல்ல புனற் றண்டி னால்

*ஐயவாந்தி, நீர்ப்பிடிப்பு, கரப்பான், சீத சுரம், கட்டுவாதம், வாதப்பிரமேகம், சந்திகாவாதம், சூலை இவற்றைப் புனற்றண்டு நீக்கும்.*

### அம்மான்பச்சரிசி

காந்தல் விரணமலக் கட்டுமே கந்தடிப்புச்
சேர்ந்த தினவிவைகள் தேசம்விட்டுப் - பேர்ந்தொன்றாய்
ஓடுமம்மான் பச்சரிசிக் குண்மை யினத்துடனே
கூடுமம்மா னொத்தகண்ணாய் கூறு *369*

*எரிபுண், மலக்கட்டு, மேகத்தடிப்பு, தினவு, உடற்தடிப்பு ஆகியவற்றை அம்மான் பச்சரிசி நீக்கும்.*

### சிவப்பு அம்மான் பச்சரிசி

அரத்தவம் மான்பச் சரிசியெனு மூலிக்
குரத்த வன் மேக மொழியும் - அரத்ததொரு
விந்துவு முண்டாகும் வெள்ளி பொடியா
பிந்துவினும் வாண்முகத்தா யெண்

*இது வாதப் பிரமேகத்தை நீக்கும் விந்து, தாது இவற்றை விருத்தி யாக்கும். மேலும், இது வெள்ளியைப் பற்பமாக்கப் பயன்படும்.*

### சிறு அம்மான் பச்சரிசி

பாதுபுகல் வேனமுதா லங்கிகரு மெழுகாற்
தீதுபுரி மேகவெப்பந் தீருமினு - மோதுங்காற்
நேரம்மான் சீரமாக்குந் தின்னுதையஞ் செம்மைநிறச்
சீரம்மான் பச்சரிசிச் சீர்.

*இவ்வம்மான் பச்சரிசி சாதிலிங்கத்தை மெழுகாக்கும். மேக வெப்பத்தை நீக்கும். பாலுக்குச் சமமான இதனை தினந்தோறும் உண்பது நன்று.*

### பொடுதலை

பொடுதலையின் பேருரைத்தால் போராமம் போக்கும்
அடுதலைச்செய் காசமும் அடங்குங் - கடுதிவரு
பேதியொடு சூலைநோய் பேசரிய வெண்மேகம்
வாதமும்போ மெய்யுரக்கும் வாழ்த்து *370*

*இதனால் பேதி, சீதபேதி, இருமல், சூலைநோய், வெண்மேகம், வாதம் இவை நீங்கும்.*

### கொத்தான்

சித்த ரறிவார் செறிகுழலே நீகேளாய்
கொத்தான் மிகக்குளிர்ச்சி கொண்டக்காற் - சுத்தப்
பிரீமேகம் உட்கிரீச்சம் பித்தம் இளைப்பும்
அறுமே தவறா தறி *371*

*அதிக குளிர்ச்சியுடைய கொத்தான் புல், ஒழுக்குப் பிரமேகம், மூத்திரக் கிரீச்சரம், பித்தநோய், அயர்ச்சி ஆகியவற்றை நீக்கும்.*

### நல்லநெருஞ்சில்

நல்ல நெருஞ்சிதுல நாளுங் கிரிச்சரத்தை
வல்ல சுரம்அனலை மாற்றுங்காண் - மெல்லியலே
மாநிலத்தில் கல்லடைப்பும் வாங்காத நீர்க்கட்டுங்
கூனுறுமெய் வாதமும்போக் கும் *372*

மேகவெட்டை நீர்ச்சுருக்கு வீ றுதிரி தோஷம்புண்
வேகசுர தாகவெப்பும் விட்டொழியும் - போகந்
தருஞ்சின் மதலைமொழித் தையலே நல்ல
நெருஞ்சி லதனை நினை *373*

*இதனால் சொட்டு மூத்திரம், சுரவெப்பம், திரி தோடம், புண், சுரத்தினால் வந்த தாகம், நீரடைப்பு, முடவாதம், பிரமேகவெள்ளை, கல்லடைப்பு, வெப்பம் ஆகியவை நீங்கும்.*

## யானை நெருஞ்சில்

மேகத்தைப் போக்கிவிடும் வெண்குஷ்டந் தானழிக்குந்
தேகத்திற் கல்லடைப்பைத் தீர்க்குங்காண் - நாகத்தாற்
தேனையரும் பாகைத் திருத்துங் கிளிமொழியே
யானை நெருஞ்சி லது *374*

யானை நெருஞ்சி லதுசீ தளமாகும்
மானே யெலும்புருக்கி மாற்றுங்காண் - மேனிதனில்
உள்ள எரிச்சல் உழலையுள் தாகமொடு
தள்ளுபித்த மும்போக்குந் தான் *375*

*இது வெள்ளை வீழ்ச்சி, வெண்குட்டம், கல்லடைப்பு, எலும் புருக்கி, உடல் எரிவு, உழலை, தாகம், தள்ளுபித்தம், ஆகியவற்றை நீக்கும். சீதளத்தை உண்டாக்கும்.*

## செப்பு நெருஞ்சில்

செப்புநெ ருஞ்சில் திரிதோஷம் போக்கிவிடும்
வெப்பு முதல னைத்தும் வீட்டுங்காண் - செப்பரிய
சுக்கிலமே கம்போக்குந் தொல்லை யனல்மாற்றும்
மிக்கு மருந்துநீ விள் *376*

*இது திரிதோடம், சுரம், சுக்கிலமேகம், உட்சூடு ஆகியவற்றை நீக்கும் நல்ல மருந்தாகும்.*

## பேய்ப்புடல்

பித்தசுரஞ் சீதசுரம் பீரிக்குங் காமாலை
யுற்றம சூரி யுழற்றாக - நித்தியமுங்
காய்ப்புடலை யுண்ணக் கவிழ்க்கின்ற பித்தமும்போம்
பேய்ப்புடலை யுண்பாரைப் பேணு *377*

*இது பித்த ஐய சுரங்கள், காமாலை, மசூலிகை, தாகம், மயக்கம் ஆகியவற்றைப் போக்கும்.*

### வல்லாரை

அக்கரநோய் மாறு மகலும் வயிற்றிழிவு
தக்கவிரத் தக்கடுப்புத் தானேகும் - பக்கத்தில்
எல்லாரை யும்அருந்தென் றேயுரைத்து நன்மனையுள்
வல்லாரை யைவளர்த்து வை 378

*அக்கரநோய், மலக்கழிச்சல், இரத்தக் கடுப்பு இவற்றைப் போக்கும் பண்பு வல்லாரைக்குண்டு.*

### பிரமிய வழுக்கை

கீலின் பசையாற் கிளைத்த வலிவீக்கங்
காலின் பிடிப் பொடுகை காலெரிவு - மேலிலெழு
வாத்ததா நோவு மலக்கட்டுஞ் சோபையும் போஞ்
சீதத்தாஞ் சபதலைக்குத் தேர்.

*கீல்களின் பசையால் உண்டான வலி, வீக்கம் கால்பிடிப்பு, கைகால் எரிவு, வாதக் கடுப்பு, மலபந்தம் சோகை ஆகியவைகள் நீங்கும்.*

### கையாந்தகரை

குரற்கம்மற் காமாலை குட்டமொடு சோபை
யுரற்பாண்டு பன்னோ யொழியு - நிரற்சொன்ன
மெய்யாந் தகரையொத்த மீளியண்ணு நற்புலத்துக்
கையாந்த கரையொத்தக் கால் 379

*குரல் கம்மல், காமாலை, குட்டம், சோபை, பாண்டு ஆகிய நோய்க கையாந்தகரையால் குணமாகும்.*

### பொற்றலைக்கையாந்தகரை

பொற்றலைக்கை யாந்தகரை பொன்னிறமாக் கும்முடலை
சுத்தமுறக் கட்குச்சு கங்கொடுக்குஞ் - சிற்றிடையாய்
சிந்தூரங் கட்காகுஞ் சிந்தைதனைத்துலக்கும்
உந்திவளர் குன்மமொழிக் கும் 380

இது குன்மத்தைப் போக்கும். கண்ணிற்குப் பொலிவைத் தரும். பல்வகைச் செந்தூரம் செய்யப் பயன்படும். உடற்குப் பொலிவைத் தந்து பொன்னிறமாக்கும்.

## விஷ்ணுகிராந்தி

*செய்யமா லின்கிராந்தி தீராத வல்லசுரத்*
*தைய மறுக்கும் அனல்தணிக்கும் - வெய்யகப*
*காச இருமலையுங் கட்டறுக்கும் வாதத்தால்*
*ஊசலா டும்பிணிபோக் கும்* *381*

*தீராத கடுமையான சுரத்தாலுண்டான ஐயம். உட்சூடு, கோழை, இருமல், வாதநோய்கள் இவற்றை நீக்கும்.*

## தொட்டாற்சுருங்கி

*மேகநீரைத் தடுக்கு மேதினியிற் பெண்வசிய*
*மாகவுன் னி நல்குமதுவுமன்றித் - தேகமிடைக்*
*கட்டாகக் காட்டுகின்ற காலைத்து ரத்திவிடுந்*
*தொட்டாற் சுருங்கியது சொல்*

*இது மேகநீரை நீக்கும். பெண்வசியம் செய்யும், வாதத்தடிப்பை நீக்கும்.*

## கொட்டைப்பாசி

*மேகமறுந் தீபனமாம் வெஞ்சுரமும் ஏகிவிடுந்*
*தேகமதில் தேமலினஞ் சேருமோ - பாகுமொழி*
*மின்னே வெகுகுணஞ்செய் மென்கொட்டைப் பாசியினால்*
*துன்னகரப் பானும்போஞ் சொல்* *382*

*மிக்குகக்கு வானகலும் வெய்ய கிரந்தியறுந்*
*தக்கஐய வாதந் தணியுங்காண் - மிக்ககிலின்*
*மட்டைப் பாய்ச் சுங் கூந்தன் மாதே யுலகத்திற்*
*கொட்டைப்பா சிப்பெயரைக் கூறு* *383*

*இது பிரமேகம், பித்த சுரம், தேமல், கரப்பான், கக்குவான், கிரந்தி, ஐயவாதம் இவை நீங்கும். பசியை ஏற்படுத்தும்.*

### கானாம்வாழை

கானாம்வா ழைக்குமுலைக் கங்குழிப்புண் ஆறிவிடும்
ஆனாலும் போகம் அதிகரிக்கும் - மானேகேள்
ஐயம் விளையும் அனல்தணியும் நீங்காத
பையுதிர மாறுமுன்னிப் பார் 384

*இதனால் முலையில் வரும் குழிப்புண் ஆறிவிடும். சுக்கில விருத்தி, ஐயப்பெருக்கம் இவையுண்டாகும். அனல் தணியும்.*

### சிறுபுள்ளடி

மாந்தகணம் போராமம் வன்மந்தம் நீங்கிவிடும்
ஓய்ந்தமுலைப் பாலும் ஒழுகுங்காண் - மோந்தே
சிறுபுள் ளடிதுதையாத் தேமலர்ப்பூங் கோதாய்
சிறுபுள் ளடியைநிதஞ் சேர் 385

*இச்சிறுபுள்ளடியால் எட்டுவகை மாந்தம், சீதக்கட்டு வாதசலம் ஆகியவை நீங்கும் வற்றிய தாய்ப்பாலைப் பெருகச் செய்யும்.*

### உப்பிலாங் கொடி

பிள்ளை மந்தபேதி பேராத ரூட்சையும் போம்
வெள்ளை செய்யந் தங்கத்தை மென்மலராற் – றெள்ளைபுரி
வேளுநடுங்குவடி வேலைதிகர் கூர்விழியாய்
நாளுமுப் பிலாங்கொடியி னால்

*குழந்தைகள் மாந்தம், பேதி, நீங்காத சுரம் இவற்றைப் போக்கும். தங்கத்தைப் பற்பமாக்கப் பயன்படும்.*

### பம்பந்தாரா

பாலிராக் கொங்கைகளிற் பாலாங் கருப்பைப்பை
மூலியிறை யழுக்கு முன்பிழியும் - மேலெழுந்
தப்பமெனத் தங்குஞ் சலனமரோ சகம்போம்
பம்பந்தரா யருந்திப் பார்.

*பால்வற்றிய பெண்களுக்குப் பாலை உருவாக்கும் வாதத் தடிப்பு, உணவில் சுவையின்மை, போன்றவற்றை இப்பம்பந்தாரை நீக்கும்.*

## புல் வகைகளின் குணம்

### சதுரக்கள்ளி

*கரப்பான் சொறியுங் கடியுங் கபமும்*
*உரப்பான குன்மம் ஒழிக்கும் - நிரைப்பான*
*பேதிதருஞ் சீதமென்ற பேச்சகற்றும் பூவுலகிற்*
*சாறுசது ரக்கள்ளி தான்* 386

*இக்கள்ளி கரப்பான், சொறி, காணாக்கடி, கபம், குன்மம், சீதம் இவற்றை நீக்கும், பேதியை உண்டாக்கும்.*

### நாகதாளிக்கள்ளி

*செந்துவி ஷங்கள் செடிவிஷங்க ளைத்தொலைக்கும்*
*நொந்திடர்செய் வாதத்தை நூறுங்காண் - முந்தவெகு*
*வேகமா லிக்கும்வடி வேல்விழிமா தேபனைத்த*
*நாகதா ளிக்குணத்தை நாடு* 387

*இது சிற்றுயிர்களால் (விடவுயிர்கள்) ஏற்படும் விடம், விடச் செடிகள் ஏற்படுத்தும் விடம் இவற்றைப் போக்கும். வாதநோயை நீக்கும்.*

### பேய்க்கற்றாழை - செங்கற்றாழை

*பேய்க்கற்றா ழைக்குப் பெருமேகம் மெய்யெரிச்சல்*
*ஏய்க்கக்கூ டாஅழலும் ஏகுங்காண் - தாய்க்குறிக*
*ராஞ்சிவந்த கற்றாழை யங்கங் குளிர்விக்கும்*
*பாயுஞ் சயத்தைப் பொன்னாக்கும் பார்* 388

*பேய்க்கற்றாழை, பெருமேகம், உடல் எரிவு, சுரம் இவற்றைப் போக்கும். செங்கற்றாழை உடற்சூட்டை நீக்கும். இரும்பைத் தங்கமாக்கப் பயன்படும்.*

### கற்றாழை

*பொல்லாமே கங்கபம்பு ழுச்சூலை குஷ்டரசம்*
*அல்லார்மத் தம்பகந்த ரங்குன்மம் - எல்லாம்விட்*
*டேகு மரிக்கு மெரிச்சற் கிரீச்சரமு*
*மா கு மரிக்கும ருண்டு* 389

*வாதமேகம், கபமேகம், கிருமி, பெருநோய் மூலம், உன்மாதம், பகந்தரம், வயிற்றுநோய், பித்தகிரீச்சரம் இவற்றை நீக்கும்.*

### கள்ளிமுளையான்

வாய்க்குப் புளித்திருக்கு மன்பசியை யுண்டாக்கும்
ஏய்க்குமுடல் வாதத்தை யேறுபித்தஞ் - சாய்க்குந்
தெள்ளிய வின்பமொழித் தெய்வ மடவனமே
கள்ளிமுளை யானருந்திக் காண் *390*

*இது பசியையுண்டாக்கி, வாதபித்த தோடத்தை மாற்றும்.*

### மேகநாதப்பூண்டு

இரத்த பித்தரோக மெரிசருவ காள
முரத்த வுன்மாதமிவை போட்டு - மிரத்தனப்புண்
வாரணிவான் கொங்கை மடவார் தொழுந்திருவே
தாரணிவாழ் மேக நாதம்

*இப்பூண்டு இரத்தபித்தம், தாவர விடசந்துகளின் விடங்கள், உன்மாதம் இவற்றைப்போக்கும்.*

### அறுகம்புல்

அறுகம்புல் வாதபித்த ஐயமோ டீளை
சிறுக அறுக்கும் இன்னுஞ்செப்ப - அறிவுதருங்
கண்ணோ யொடுதலைநோய் கண்புகையி ரத்தபித்தம்
உண்ணோ யொழிக்கு முரை *391*

இது திரிதோடம், கண்ணோய், கோழை, தலைநோய், கண்புகைதல், இரத்த பித்தம் இவற்றை நீக்கும்.

### சோதிப்புல்

காசம் படலங் கருவிழித்தோ ஷம்பில்லம்
பூசாந்தி ரஞ்சதைவெண் பூசுக்கிரன் - கூசலென
ஓதியவிந் நோய்முழுதும் ஒண்விழியை விட்டகலுஞ்
சோதியெனும் புல்லுக்குச் சொல் *392*

*இதனால் விரிகாசப்படலம், கருவிழிநோய், நீர்ப்பில்லம், பூசாந்திரம், ஊன்பலம், கண் வெண்புள்ளியில் பூ, சுக்கிரன், கண்கூசுதல் போன்றவை நீங்கும்.*

### தருப்பைப்புல்

தோடஞ் சிறியவிஷஞ் சோராக்க பப்பெருக்கஞ்
சாடுஞ் சகலசுரந் தாகமிவை - யோடும்
அரிப்பு மகலும் அடல்வேள்வி கட்காந்
தருப்பையெனும் புல்லுக்குத் தான் *393*

*தோடம், சிறியவிடம், கபம், அனைத்துவகைச் சுரங்கள், தாகம், அரிப்பு போன்றவற்றை நீக்கும் தர்ப்பைப்புல் யாகங்கட்கும் பயன்படும்.*

### மாந்தப்புல் - காவட்டம்புல்

மாந்தப்புற் பேதிகட்டு மந்தம் அசீரணத்தைக்
சாந்திசெய்யும் வந்தசுரத் தைப்போக்கும் - ஏந்திழையே
காவட்டம் புற்குக் கணமாந்தம் பேதியறும்
நாவொட்டிக் காய்ச்சலும்போ நாடு *394*

*மாந்தப்புல் கழிச்சல், மந்தம் அசீரணம், சிலேட்டும சுரம் ஆகிய வற்றைப் போக்கும். காவட்டம்புல்லிற்குக் கணமாந்தம், நாவொட்டிக் காய்ச்சல் ஆகியவை விலகும்.*

### பீநசப்புல்

பீநசப்புல் லுண்டாயிற் பேர்ந்துவிடு மாந்தமெலாம்
பீநசமுந் தீரும் பெருமூலந் - தானொழியும்
ஐய மகன்றுவிடும் அக்கரநோய் நிற்காதே
மெய்யா யிதனை விளம்பு *395*

எட்டுவகையான மாந்தம், நாசிநோய், பெருமூலம், சிலேட்டும நோய், அக்கரநோய் ஆகியவை நீங்கும்.

### வாசனைப்புல்

வாசனைப்புல் வாதபித்த மாற்றுவது மல்லாமற்
சூசவையாய் வந்த சுரம்போக்கும் - பேசரிய
ஐயமறுக்கும ரோசகத்தை விண்ணேற்றுத்
துய்யபசி யைக்கொடுக்குஞ் சொல் *396*

*இது வாத, பித்த நோய்கள், சுரம், கோழை, சுவையின்மை இவற்றை நீக்கி, பசியையுண்டாக்கும்.*

## பேய்ப்புல்

இறுத்துரோ கம்போம் எலிவிஷம்போம் மெய்யில்
உறுத்துகின்ற சூலை யொழியுங் - கறுத்தஅளி
ஏய்ப்பற்ற கண்ணா யெழில்வரைவா யுண்டான
பேய்ப்புல்லைக் கண்டறிந்த பேர்க்கு 397

*மார்புநோய், எலிவிடம், வாயுகுத்தல் இவற்றை மலையில் முளைக்கின்ற பேய்ப்புல் போக்கும்.*

## பருங்காளான்

*கயங்கிரந்தி தாகங் கரக்குமண் டம் விக்கல்*
*மயங்கு விக்கும் பித்த மடல்வாதம் - பயங்கரத்தைச்*
*செய்யவரு பேதி திட்டிமந்த நோய்களுண்டாம்*
*வெய்யபரு மாம்பியல் விள்*

இக்காளான் சயம், இரணம், தாகம், இவற்றை நீக்கும். குடல் விருத்தி, விக்கல்நோய் பித்தநோய், வாதம், கழிச்சல், கண்புகைச்சல் ஆகியவற்றை நீக்கும்.

## புற்றுக்காளான், வளைக்காளான், பொறிக்காளான், வரிக்காளான்

புற்றுக் கா ளான்வலையைப் போலும் பொறிவரியை
யுற்றெழு காளானென் றுரைக்குமவை - முற்று
பழுதின்று நற்குணமும் பண்ணுவன மாந்தர்
தொழுதின்று முண்பரெனச் சொல்.

*இந்த நால்வகைக் காளான்களை உண்பதால் குற்றமில்லை. நன்மைகளைச் செய்தாலும் செய்யலாம்.*

## மரத்தின்சமூல வகை குணம்

### அரச சமூலம்

அரசம்வேர் மேல்விரணம் ஆற்றுமல் வித்து
வெருவவரும் சுக்கிலநோய் வீட்டுங் - குரல்வறள்வி
தாகமொழிக் குங்கொழுந்து தாதுதரும் வெப்பகற்றும்
வேகமுத்தோ ஷம்போக்கும் மெய் 398

*அரசின் வேர் மேல்புண்ணை மாற்றும். விதை விந்துக் கெடுதியையும், கொழுந்து தொண்டையை வறட்டுகின்ற தாகத்தையும் மகரந்தம் தேகஉட்டிணத்தையும், திரிதோடத்தையும் நீக்கும்.*

### ஆலசமூலம்

சொல்லுகின்ற மேகத்தைத் துஷ்ட அகக்கடுப்பைக்
கொல்லுகின்ற நீரிழிவைக் கொல்லுங்காண் - நம்ஆலின்
பாலும் விழுதும் பழமும் வி தையும்பூவும்
மேலும் இலையுமென விள் 399

வடமரவீழ் பல்லிறுக்கு மாமேகம் போக்கு
மடர்கொழுத் திரத்தப் போக்காற்றும் - படரதிலாம்
புல்லுருவி யென்றெயதிற் பொல்லா விடபாக
வில்லுருவி லுண்மை மதி

*இதன் பால், விழுது, பழம், விதை, பூ, பட்டை, இலை, இவைகள் மேகவயிற்றுக் கடுப்பு, மேகநீர் இவற்றை நீக்கும். ஆலம்விழுது, தந்தங் களை இறுகச் செய்யும். பிரமேகத்தை நீக்கும். கொழுந்து ரத்த பேதியை நீக்கும். இந்த மரத்தில் முளைத்த புல்லுருவியால் விடபாகம் நீங்கும்.*

### வில்வ சமூலம்

பல்லவம் பூ பிஞ்சின் பழ மியாவும் முறையே
வல்லவம் மே கம் மந்தமா குன்மஞ் - செல்லுகின்ற
நோக்கமருள் விந்துநட்ட நூறுமடுத் தவர்கட்
காக்கமருள் வில்லுவத்தி லாம்.

*இதன் தளிர் நீர்மேகத்தையும், பூ மந்தத்தையும் பிஞ்சு குன்மத்தை-யும், பழம் கண்ணிருளையும், பிசின் விந்து நட்டத்தையும் நீக்கும்.*

### பூவரச சமூலம்

நூறாண்டு சென்றதொரு நுன்பூ வரசம்வேர்
நூறாண்ட குஷ்டைந்தொ லைக்குங்கான் - வீறிப்
பழுத்த இலைவி தைபூ பட்டை யிவைகண்டாற்
புழுத்தபுண் விரோசனமும் போம் *400*

குட்டங் கடிசூலை கொல்லும் விஷபாகந்
துட்ட மகோதரமுஞ் சோபையொடு - கிட்டிமெய்யில்
தாவுகரப் பான்கிரந்தி தண்மேகம் போக்கிவிடும்
பூவரசங் காய்பட்டை பூ *401*

*நூறு வருடம் வாழ்ந்த பூவரசம் வேர், நாட் பட்ட குட்டத்தை நீக்கும். பழுப்பு, இலை, பூ, விதை பட்டை, காய் இவை கிருமி, இரணம், கழிச்சல், பெருநோய், காணாக்கடி, சூலை, குத்தல், விடபாகம் பெருவயிறு, வீக்கம், கரப்பான், சிரங்கு, நீர்ப்பிரமேகம் ஆகியவற்றைப் போக்கும்.*

### இலந்தை சமூலம்

வேருக்கா யாசம்விலகும் பசியுண் டாஞ்
சீரொத் திடு இலைக்குச் சீழ்மூலஞ் - சோரிவிழல்
மேவெரிச்ச லுங்கடுப்பு மேகபித்த மும்போகுந்
தாவமதில் வாழுமிலந் தை *402*

*இலந்தை வேர், அயர்ச்சியை நீக்கும். பசியை உண்டாக்கும். இலை சீழ் மூலம், இரத்தக் கழிச்சல், உடல் எரிச்சல், வயிற்றுக் கடுப்பு, பித்தமேகம் இவற்றை நீக்கும்.*

### காட்டிலந்தை சமூலம்

விறகுணுமெண் ணெய்க்கனலா மெய்யெரிவு நீக்குஞ்
சிறியவிலைக் குக்கடுப்புத் தீரும் - முறிக்கு
அழைத்திடு பித்தும்போ மதன்கனி யடைக்குத்
தழைத் திடுமிக் காட்டி னிலந்தை.

*இதன் விறகு உடல் வெப்பத்தைக் குறைக்க தைலம் காய்ச்சுவதற்குச் சிறந்த விறகாகும். இதனிலை தேக எரிவையும், கொழுந்து வயிற்றுக் கடுப்பையும் பழம் பித்தத்தையும் நீக்கும்.*

### நறுவலீ சமூலம்

நறுவலியி லைக்கிரைப்பு நாசமவ் வேர்க்கு
மறுவில் எலும்புருக்கி மாறும் - நறுவலியின்
தன்பழமி ரத்தபித்தஞ் சார்மேக முந்தீர்க்கும்
இன்புறயா வர்க்கு மிசை *403*

*இதன் இலை இரைப்பையும் வேர் எலும்புருக்கியையும் பழம் இரத்த பித்தத்தையும், பிரமேகத்தையும் நீக்கும்.*

### நுணாசமூலம்

பட்டை கரப்பனொடு பாரச்சி லேஷ்மசுரம்
ஒட்டிநின்ற புண்கிரந்தி யோட்டுங்காண் - மட்டலரை
எந்து னாவின் இலைமந்தந் தீர்த்துநல்ல
காத்திரு மேகமடுங் காண் *404*

*நுணாப்பட்டை, கரப்பான், கபச்சுரம், புண், கிரந்தி இவற்றைப் போக்கும். இலை மந்தம், மேகம் இவற்றை விலக்கும். ஒளியைத் தரும்.*

### முருங்கைச் சமூலம்

பிஞ்சால் திரிதோஷம் பேரும்பூ வால்போகம்
உஞ்சுவிழிக் குக்குளிர்ச்சி யுஞ்சேரும் - விஞ்சிலைவெப்
பாற்றுந்தோல் நஞ்சறுக்கும் அவ்வேர்வாதச் சினத்தை
யாற்று முருங்யை னது *405*

*முருங்கை இளம்பிஞ்சு திரிதோடத்தைப் போக்கும். பூ புணர்ச்சியில் வலிமையையும், கண்ணிற்குக் குளிர்ச்சியையும் உண்டாக்கும். இலை சுரத்தையும், பட்டை விடத்தையும், வேர் வாத நோயையும் நீக்கும்.*

### காட்டுமுருங்கைச் சமூலம்

தின்றாற் கசப்பாகுந் தீயாங் கொடுவிஷத்தைக்
கொன்றுவிடுங் கட்குங் குளிர்ச்சிதரும் - என்றும்ஐயம்
ஒட்டும்வேர் பூஇலைகாய் உற்றபிசினும் பிஞ்சுங்
காட்டுப் புனமுருங்கை காண் *406*

*கசப்புள்ள காட்டு முருங்கைமர வேர் கொடியவிடத்தையும், இலை, பிசின், காய், பிஞ்சு இவை சிலேட்டு நோய்களையும் நீக்கும். பூ கண்ணிற்குக் குளிர்ச்சி தரும்.*

### பசுமுன்னை சமூலம்

முன்னைவேர் வாதம் முதிரேப்பந் தான்போக்கும்
அன்னமி றக்கும் அதன்இலைதான் - சொன்ன
இயல்வாதம் எண்பதையும் இல்லையெனச் செய்யுங்
கயல்பொருவுங் கண்ணாய் கருது 407

*வேர் வாதநோயை நீக்கும். ஏப்பத்தைப்போக்கும். இலை எண்பது வகை வாத நோய்களைப் போக்கும்.*

### மாதுளைச் சமூலம்

மாதுளைவேர் பிஞ்சிவைக்கு வாந்திஅதி சாரம்போந்
தாதுவுமாம் அக்கனிக்குத் தாகம்போஞ் - சூதைநிகர்
வன்னமுலை யாய்இலைகாய் மாமலர்க ளுக்குமுனஞ்
சொன்னவையெ லாம்போகுஞ் சொல் 408

*இந்த வேர், பிஞ்சு, வாந்தி பேதியை நீக்கும். பழம் தாகம் போக்கி வீரிய விருத்தியுண்டாக்கும். இலை, காய், மலர் இவை முற்கூறிய நோய் போக்கும்.*

### உசிலமரசமூலம்

அள்ளுமந்த நெய்ச்சிக் கழன்மேக நீங்குநிதங்
கொள்ளு தயிலக்கறைக்கு கொள்விறகாம் - விள்ளுமதி
லோதியடை வாளினமென் றொன்று குழலே கவிகை
யாதி யடைபிசின் கட்டை

*உசில மரத்தின் வேர், பட்டை இவை அள்ளுமாந்தத்தையும், இலைத்தூள், எண்ணெய் சிக்கையும், பிசின் பித்தமேகத்தையும் நீக்கும். குடிக்கின்ற எண்ணெய் காய்ச்ச இது நல்ல விறகாகும்.*

### தாளிப்பனை சமூலம்

எழுத்திற் கிடமா யிருக்கு நெடுங்காலம்
வழுத்தில் தன்மாழை மடலாற் - கழுத்திலுறுஞ்
சோறு மலமிருக்குந் தூறுபாளைப் பிழியா
மூறுமுடலுக்கிந்தாளிக் கோர்

*தாளிப்பனையின் ஓலை எழுதி பாதுகாக்க உதவும். சோறு மலங்கட்டும். கள், மாமிசத்தை வளர்க்கும்.*

## தாழை சமூலம்

மடிச்சோற்றான் மங்கையர்க்கு மாதாந்த பூப்பாம்
வெடிச்சபூ நற்பசி விளைக்குந் - தடிச்சமுலை
சுக்கிலத்தை நெய்யைத் துலக்குவிக்குஞ் சோபையெனு
மக்குலத்தை நீக்கு மறி

*தாழையின் சோறு மாதப்போக்கைச் சீராக்கும். பூ நல்ல பசியை ஏற்படுத்தும். விழுது, விந்து, இரத்தம் இவற்றை வளம்பெறச் செய்யும், சோகையை நீக்கும்.*

## வாழைச் சமூலம்

நற்கதலிக் கந்தம்அனல் நல்குந்தண் டோகுடலிற்
சிக்கு மயிர் தோல் நஞ்சுந் தீர்த்திடுங்காண் - தொக்குறுபூ
மேகமொழிக் கும்பிஞ்சால் வெங்கடுப்பே குங் காயால்
தேகமுழுக் கக்காலாந் தேர் 409

*வாழைத் தண்டு குடலிற் சிக்கிய முடி, தோல், விடம் இவற்றைப் போக்கும். பூ பிரமேகத்தை நீக்கும். பிஞ்சு மூலக்கடுப்பைத் தீர்க்கும். காய் வாயுவை உண்டுபண்ணும்.*

## நாட்டுவாழை - கருவாழைச் சமூலம்

நாட்டுக் கதலியது நாருந்து வர்ப்பதனால்
தீட்டுபித்தம் ஐயஞ் செருக்குங்காண் - நாட்டுகரு
வாழை திரிதோஷ மாற்றும் அதன்கிழங்கால்
ஆழுஞ் சுரங்குருத்து வம் 410

*துவர்ப்பான நாட்டுவாழை பித்த ஐய தோடங்களை உண்டாக்கும். கருவாழை திரிதோடங்களை நீக்கும். இதன் கிழங்கு சுரத்தையுண்டாக்கும்.*

# செடியின் சமூலவகை குணம்

## ஆவாரைப்பஞ்சகம்

மேகத்தி னால் விளைந்த சலம் வெட் டையனல்
ஆகத்தின் புண்ணோ டருங்கிரணி - போகத்தான்
ஆவாரைப் பஞ்சகங்கொள் அஸ்திசுரந் தாகமும்போம்
ஏவாரைக் கண்மட மாதே *411*

*ஆவாரை வேர், இலை, பூ, காய், தண்டு ஆகிய ஐவகை அங்கங்களால் பிரமேக மூத்திரம், வெள்ளை, உட்சூடு, இரணம், வாதகிராணி, சுரம், தாகம் இவை நீங்கும்.*

## சங்கஞ்செடி சமூலம்

வீக்கங் கரப் பான் தாகங் கிரந்திகுன்மம்
ஊக்கமிகு சூலைவாய் வோடுபித்தந் - தாக்குவிஷம்
வீறுமோ கண்துலங்கும் வீசுபசி ரத்தம்உண்டாங்
கூறுசங்கம் வேரிலை கட்கு *412*

முட்சங்கம் வேர், இலை இரண்டும் சோகை கரப்பான், தாகம், கிரந்தி, புண், குன்மம், கீல் வீக்கம், வாத பித்த நோய்கள், பல்வகை நஞ்சு, ஆகியன நீங்கும். கண்ணொளி பெறும். மிகுந்த பசியுண்டாகும். இரத்தம் பெருகும்.

## கருப்புப்பூலா சமூலம்

காட்டமதில் வீரியமாங் காணவிலை மூலரத்த
லோட்ட மறிக்கு முதிருமுனைக் - கூட்டமெழச்
சித்தம்வைக்கி லவ்வண்ணஞ் செய்யுங் கருங்கணிதா
தைத்தமுற்ற பூலாவி லாம்

*பூலாங்குச்சியால் பல் துலக்கினால் வீரிய விருத்தியுண்டாகும். இவை மூல ரத்தத்தைத் தடுக்கும். பழைய உரோமங்களை உதிராமல் தடுக்கும்.*

## கண்டங்கத்தரிசமூலம்

வேரிலைபூ காய்பழம் மது வித்தும்அதன் பட்டையுமிவ்
வூரி லிருக்க வுடற்கனப்பும் - நீராய்
வரும்பீந சங்கயஞ்சு வாசமுந்தங் காதே
அருங்கண்டங் கத்தரியு ளார் *413*

*கண்டங்கத்தரியின் வேர், இலை, பூ, காய், பழம், விதை, பட்டை இவை நீரேற்றம், நீர்ப்பீநசம் ஈளை, சுவாசம் இவற்றை நீக்கும்.*

### மணித்தக்காளிசமூலம்

காய்க்குக் கபந்திருங் காரிகையே யவ்விலைக்கு
வாய்க்கிரந்தி வேக்காடு மாறுங்காண் - தீக்குள்
உணக்கிடு வற்றலுறு பிணியோர்க் காகும்
மணித்தக் கா ளிக்குள்ள வாறு.

*மணித்தக்காளியின் காய்க்கு சிலேட்டும நோயும், இலைக்கு நாப்புண்ணும் வேக்காடும் நீங்கும். இதன் வற்றல் நோயாளிகளுக்கு நல்லது*

### நாயுருவிச் சமூலம்

மலிகாரங் கைப்புள்ள அபமார்க்கியின் வேரால்வசிய முண்டாம்
இலைமூல உதிரமந்தம் பேதிகபம் வியர்வுதந்தி யிறங்குமேகம்
மலையேறும் படிபுரியு முள்ளரிசி பசிமாற்றும் வன்சமூலம்
பலமாதர்க்குள்ளழுக்கை நீக்கும்வங்கசிந் தூரம்பண்ணுமாதோ *414*

*கார்ப்பும் கைப்பும் உள்ள நாயுருவியின் வேர் முகவழகைக் கொடுக்கும். இலை இரத்த மூலம், கபநோய், பேதி, வியர்வை, தந்திப் பிரமேகம் இவற்றை நீக்கும். இதன் விதை பசியை நீக்கும். மகவு பெற்ற தாய்க்கு வரும் உதிரப் போக்கை இதன் சமூலச் சாம்பல் கட்டுப்படுத்தும். வங்கத்தைச் செந்தூரிக்கும்.*

### செந்நாயுருவிச் சமூலம்

ஓதமுறு சோபை யுயர்பாண்டு வைப்போக்குந்
தீதுறுகா மாலைநோய் தீர்க்குமினார் - சூதகநீர்
பொய்ப்புறுகா லத்ததனைப் பொங்குவிக்குங் காரமொடு
கைப்புறுசெந் நாயுருவி காண் *415*

*இதன் சமூலம் ஏறுவீக்கம், பாண்டு, காமாலை, இவற்றை நீக்கும். மாதவிடாயைச் சீராக்கும்.*

## கொடியின் சமூல வகை குணம்

### தூதுவளையின் சமூலம்

தூது பத்திரி யூண்சுவை யாக்கும்பூ
தாது வைத்தழைப் பித்திடுங் காயது
வாத பித்த க பத்தையு மாற்றும்வேர்
ஓதும் வல்லிபன் னோயுமொ ழிக்குமே 417

*இதன் இலைத் துவையல் உணவுக்குச் சுவை கூட்டும். பூ, சுக்கிலத் தாதுவை விருத்தியாக்கும். காய் திரி தோடங்களை நீக்கும். வேரும் கொடியும் சுவாசம் முதலிய சிலேட்டும நோய்களை நீக்கும்.*

### சுரையின் சமூலம்

சுரையிலையோ சோபையொடு தோன்றுநீர்க் கட்டைத்
தரையிலையோ வைக்காமற் சண்ணுஞ் - சுரையினது
தண்டோபித் தத்தைத் தரிக்கவொட் டாதடிக்குங்
கண்டோ ருரைப்பார்கள் காண் 418

*இதன் இலை வீக்கம், மூத்திரச் சிக்கல் இவற்றைப் போக்கும். கொடி வாதநோய்களைப் போக்கும். சுரையின் தண்டு பித்தத்தைச் சேர்க்காது நீக்கும்.*

### நரளையின் சமூலம்

நரளையிலை தன்குணங்கேள் நாரியர் வயிற்றில்
உருளிரத்தக் குன்மம் ஒழிக்கும் - நரளைக்
கிழங்குக்கு மேகமொடு கிறுக ரப்பான்
புழுங்குபுண் மூலமிவை போம் 419

*நரளை இலை பெண்களின் இரத்தக் குன்மக் கட்டியைப் போக்கும். கிழங்கு பிரமேகம், கரப்பான், புண் மூலம் இவற்றை நீக்கும்.*

### வெண்குன்றி சமூலம்

வீரியத்தை யுண்டாக்கும் வெண்குன்றி வித்ததன்வேர்
பாரிய தாகத்தைப் பறக்கடிக்குஞ் - சீரியவோர்
சிற்றிலையி னாற்சுளுக்குத் தீருங் கொடிக்காயாற்
சுற்றிலைப்போய்க் கூட்டமெனச் சொல்.

*இதன் விதை சுக்கிலத்தை விருத்தி செய்யும், வேர் தாகத்தையும், இலை சுளுக்கையும், காயும், கொடியும் பைசாசங்களையும் நீக்கும்.*

## மரத்தின்கிழங்குவகை குணம்

### பனங்கிழங்கு - ஒடிகிழங்கு

பனங்கிழங்கால் அத்திவெப்பும் பன்மேக மும்போம்
இனங்குளிர்ச்சி யோடழகு மெய்துந் - தினவையும்
புண்ணுங் கரப்பானும் பூரிக்கு மெய்யில் உரம்
நண்ணும் ஒடிகிழங்கி னால் **420**

*பனங்கிழங்கால் சுரம், பித்தமேகம், எலும்புச்சூடு முதலிய பல மேகங்களும் நீங்கும். உடற்குக் குளிர்ச்சியையும், அழகையும் உண்டாக்கும். ஒடிகிழங்குகளுக்கு நமைச்சல், இரணம், கரப்பான், வன்மை இவை உண்டாகும்.*

### நிலப்பனங்கிழங்கு

மேக வனல்தணியும் வெண்குஷ்டந் தான்விலகும்
போக மிகவுமுறும் பொற்கொடியே - போகாத
சூலைமே கங்களொடு துன்னுகரும் புள்ளியும்போஞ்
சாலநி லப் பனைக்குத் தான் **421**

*இதனால் மேகமூத்திர வெப்பம், வெள்ளை குட்டம், விலாக்குத்தல், ஒழுக்குப் பிரமேகம், சூலைமேகம், கரும்புள்ளி நோய் இவை நீங்கும். புணர்ச்சியில் இச்சையுண்டாகும்.*

### மரவள்ளிக் கிழங்கு

பித்தங் கலந்த பெருவாய்வை யுண்டாக்கும்
மெத்தஅனல் மந்தத்தை மேலெழுப்புஞ் - சுத்த
இரவள்ளிக் கொண்டகுழ லேந்திழையே யிந்த
மரவள்ளிக் கந்தமென வை **422**

*இது பித்தங்கலந்த பெருவாயுவை நீக்கும். அக்கினி மாந்தத்தை உண்டாக்கும்.*

## செடியின் கிழங்கு வகை குணம்

### மெருகன்கிழங்கு

மெருகன் கிழங்கதுதான் மேகத்தைப் போக்குந்
துருவுகுன்மம் மூலந் துடைக்கும் - பெரும்ஈளை
அஸ்த்திசுரம் ஐயறுக்கும் அங்கங் குளிர்விக்கும்
அத்திமுலை மாதே யறி 423

*இது மேகம், வயிற்று நோய், மூலம், ஈளை, எலும்பு சுரம், சிலேட்டுமம் இவைகளைப் போக்கி, உடலுக்குக் குளிர்ச்சியை உண்டாக்கும்.*

### அமுக்கிராக்கிழங்கு

கொஞ்சந் துவர்ப்பாங் கொடியகயஞ் சூலையரி
மிஞ்சுகரப் பான்பாண்டு வெப்பதப்பு - விஞ்சி
முசுவுறு தோஷமும்போ மோகம்அன லுண்டாம்
அசுவகந் திக்கென் றறி 424

*இக்கிழங்கு சயம், வாதசூலை, வாதக்கரப்பான், பாண்டு, சுரம், வீக்கம், நீரேற்றம், தோடம் இவற்றை நீக்கும். மாதர்மேல் விருப்பை யுண்டாக்கும். நல்ல பசியெடுக்கும்.*

### பேதிக்கிழங்கு

பேதிதனை யுண்டாக்கும் பித்தந் தனையெழுப்புந்
தோதக் குடலதனைச் சுத்திசெய்யும் - ஓதியகால்
பேதிக்குந் தாதுவைப்பெ ருக்கிவிடும் எப்போதும்
பேதிக்கி ழங்கதனைப் பேசு 425

*இதன் கிழங்கு பேதி, பித்தம், குடற்சுத்தி, வீரியவிருத்தி இவற்றையுண்டாக்கும். வாதத்தைக் குறைக்கும்.*

### சேவகனார்க்கிழங்கு

கபரோகந் தன்னைக் கடலில் விழச் செய்யும்
அபமிருந்து வாம்விஷத்தை யாற்றும் - இபமுலவுங்
காவக நாடாக் கருங்குயிலே கண்டுரைத்த
சேவக னார்கிழங்க தே 426

*இது கபநோயைப் போக்கும், விடங்களை நீக்கும்.*

### பூமிச்சருக்கரைக்கிழங்கு

மேகமறும் உள்ளுருக்கு வெட்டை அனல்தணியும்
போகுமே மூலம் புகலக்கேள் - பாகுமொழிப்
பொன்ன னையாய் பூமிச் சருக்கரைக்கி ழங்குக்கு
வன்னவுடல் பருக்கும் வாழ்த்து *427*

இதனால் மேகம், உருக்கு வெட்டை, சுரம், மூலம் ஆகியவை நீங்கும். உடல் பருக்கும்.

### முள்ளங்கிக்கிழங்கு

வாதங் கரப்பான் வயிற்றெரிவு சூலைகுடல்
வாதங் காசம்ஐயம் வன்தலைநோய் - மோதுநீர்க்
கோவைபன்னோய் பல்சிலந்தி குன்மம்இரைப் புக்கடுப்புஞ்
சாவுமுள்ளங் கிக்கந்தத் தால் *428*

*இக்கிழங்கு வாதம், கரப்பான், வயிற்றெரிச்சல், சூலை, குடல் வாதம், காசம், ஐயம், தலைநோய், நீர்க்கோவை, பல்நோய், பல்சிலந்தி, குன்மம், சுவாசம், மூலக் கடுப்பு இவைகளை நீக்கும்.*

### மஞ்சட் கிழங்கு

பொன்னிறமாம் மேனிப் புலால்நாற்ற மும்போகும்
மன்னு புருஷ வசியமாம் - பின்னியெழும்
வாந்திபித்த தோஷம்ஐயம் வாதம்போந் தீபனமாங்
கூர்ந்தமஞ்ச ளின்கிழங்குக் கு *429*

தலைவலிநீ ரேற்றஞ் சளையாத மேகம்
உலைவுதரு பீநசத்தி னூடே - வலிசுரப்பு
விஞ்சு கடிவிஷமும் வீறுவிர ணங்களும்போம்
மஞ்சட் கிழங்குக்கு மால் *430*

*இது உடலைப் பொற்சாயலாக்கும். புலால் நாற்றத்தை நீக்கும். ஆண் வசியத்தையும், பசியையும் உண்டாக்கும். அம்மை, வாத, ஐய நோய்கள், தலைவலி, நீரேற்றம், பிரமேகம், வீக்கம், ஐந்துவகை வலிகள், வண்டுகடி, விடம், பெருவிரணம் இவற்றை நீக்கும்.*

## கத்தூரிமஞ்சட்கிழங்கு

புண்ணுங் கரப்பானும் போகாக் கிருமிகளும்
நண்ணுமந் தாக்கினியும் நாசமாம் - வண்ணமலர்த்
தொத்தே றளகமின்னே சுக்கிலமும் புந்தியுமாங்
கஸ்தூரிமஞ் சளுக்குக் காண் **431**

*இது புண், கரப்பான், கிருமிநோய், அக்கினி மந்தம் இவற்றைப் போக்கி அறிவை வளர்க்கும்.*

## மரமஞ்சட்கிழங்கு

அழன்றகண மூலம் அருசி யுடனே
யுழன்ற கணச் சுரமும் ஓடுஞ் - சுழன்றுள்ளே
வீறுசுர முந்தணியும் வீசுமர மஞ்சளுக்குத்
தேறு மொழி யனமே செப்பு **432**

*முக்குணம், மூலநோய், ருசியின்மை, கணச்சுரம், உட்சுரம் ஆகியவற்றை மரமஞ்சள் நீக்கும்.*

## இஞ்சிக்கிழங்கு

இஞ்சிக் கிழங்கு இருமல்ஐயம் ஒக்காளம்
வஞ்சிக்குஞ் சன்னிசுரம் வன்பேதி - விஞ்சுகின்ற
சூலையறும் வாதம்போந் தூண்டாத தீபனமாம்
வேலையுறுங் கண்ணோய் விளம்பு **433**

*இஞ்சியானது, இருமல், கபம், ஒக்காளம், சன்னி சுரம், கடியபேதி, சூலை, வாதம் இவற்றைப் போக்கிப் பசியை உண்டாக்கும்.*

## காறுகருணைக்கிழங்கு

கரப்பான்சி ரங்குசொறி காணாக் கிரந்தி
யுரப்பாக்கும் மூலநோ யோட்டும் - நிரைப்பான
மந்தமொடு கோழைதரும் மாறாத் தினவுநல்கும்
அந்தமிகுங் காறுகரு ணை **434**

*இக்கிழங்கு, கரப்பான், பொடிசிரங்கு, சொறி, உட்கிரந்தி, கபக்கோழை, மந்தாக்கினி, நமைச்சல், மூலம் ஆகியவற்றை நீக்கும்.*

## காறாக்கருணைக்கிழங்கு

*ஞால மதிற் கபநோய் நாடாது வாதமறும்*
*மூல முளையிரத்தம் முன்பொழியும் - ஓலமிட்டு*
*மாறாக் கனல்மந்த மாறும்அதி தீபனமாங்*
*காறாக் கருணைதனைக் காண்* **435**

*இக்கிழங்கு சிலேட்டும நோய், வாத நோய், இரத்த மூல முளை, அக்கினி மந்தம் இவற்றைப் போக்கி பசியை உண்டுபண்ணும்.*

## காட்டுக்கருணைக்கிழங்கு

*மேகமணு காது வெகுதீ பனமாகுந்*
*தேகமதில் மூலமுளை சேராதே - போகாச்*
*சுரதோஷம் போங்கரப்பான் றோன்றும் வனத்திற்*
*பரவுகரு ணைக்கிழங்காற் பார்* **436**

*இது வாதம், பிரமேகம், மூலமுளை, சுரதோடம், இவற்றைப் போக்கி, நல்ல பசியையும், கரப்பானையும் உண்டு பண்ணும்.*

## சேம்புக்கிழங்கு

*வாதக பத்தையுள்ளே வைத்திருக்குந் தின்றக்கால்*
*கோதிலாத் தொண்டைதனிற் கோழைகட்டும் - மாதரசே*
*உண்மருந்தின் நற்குணத்தை யோட்டுஞ்சேம் புக்கிழங்கு*
*தண்மேக சாந்தி யென்பர் தாம்* **437**

*சேம்புக் கிழங்கு வாத பித்த நோய்களை உண்டாக்கும். தொண்டையில் கோழை கட்டும். நல்ல மருந்தின் குணத்தைக் கெடுத்து விடும். இக்கிழங்கை மேகவிந்தி என அழைப்பர்.*

# கொடியின் கிழங்கு வகை குணம்

## பிரப்பன் கிழங்கு

தந்தரோ கத்தைத் தணியாத வாதத்தை
உந்துசூ லைப்பிடிப்பை யோட்டுங்காண் - வந்து
கரப்புத் திறப்புமெனக் காட்டுநகை மாதே
பிரப்பங்கி ழங்கதனைப் பேணு *438*

*தந்த மூலநோய், வாதநோய், கீல்பிடிப்பு, சிலேட்டும நோய் ஆகியவற்றைப் பிரப்பங்கிழங்கு நீக்கி விடும்.*

## சாறடைக்கிழங்கு

சீதஞ் சலதோஷந் தேமல்த ழும்புகுன்மம்
வாதஞ் சிறுசிரங்கு வன்மேகம் - ஓதரிய
காசமுதல் நோயெல்லாங் கான்சா றடைக்கிழங்கால்
நாசமுறு மென்றே நவில் *439*

*காட்டுச் சாறடைக் கிழங்கு சீதளம், நீரேற்றம், தேமல், தடிப்பு, குன்மம், வாதவலி, சிறுசிரங்கு, பிரமேகம், இருமல் இவற்றைத் தீர்க்கும்.*

## கோவைக்கிழங்கு

முத்தோஷஞ் சூலைபித்தம் மூடுகுஷ்டஞ் சிக்குவைநோய்
எத்துசுவா சங்கபம்இ னிப்புநீர் - இத்தனையுங்
கூட்டோ டகற்றுங்கு ளிர்ச்சியொடு காரத்தைக்
காட்டியகோ வைக்கிழங்கு காண் *440*

*குளிர்ச்சியும் காரமும் உடைய கோவைக் கிழங்கு திரிதோடம், சூலை, பித்தம், குத்தல், தோல்குட்டம், அக்கரம், இரைப்பு, கோழை, மதுப் பிரமேகம் இவைகளை நீக்கும்.*

## கொல்லன்கோவைக்கிழங்கு

துட்டவிஷம் பாண்டுவெப்பு சூலைவா தங்கிரந்தி
குட்டம் அரிப்பக்கி கோண்குடல்நோய் - கெட்டகண்ட
மாலைபோங் கொல்லன்கோ வைக்கிழங்கால் முத்தோஷ
வேலைபோம் பாரில் விளம்பு *441*

*இக்கிழங்கிற்கு கொடியவிடம், தேக வெளுப்பு, சுரம், வாதசூலை, சிரங்கு, பெருநோய், நமைச்சல், கண்நோய், குடல்வலி, கண்டமாலை, முத்தோடம் ஆகியவை நீங்கும்.*

### சீந்திற்கிழங்கு

*சீந்திற் கிழங்கருந்தத் தீபனமா மேகவகை*
*போந்தவுதி ரப்பித்தம் பொங்குசுர – மாந்தம்*
*அதிசாரம் வெய்யகணம் ஆம்பலநோ யோடே*
*கதிவிஷமுங் கெட்டுவிடுங் காண்* **442**

*மேகநோய்கள், உதிரப்பித்தம், சுரம், மாந்தம், கழிச்சல், பித்தகணம், பாம்பின்விடம் ஆகியவற்றைப் போக்கி பசியை உண்டாக்கும்.*

### பொற்சீந்திற் கிழங்கு

பொற்சீந்தி லின்கிழங்கு பொங்கு மதுமேகம்
எச்சுகய ரோகம் இளைப்புவிஷம் - பச்சையாய்
ஓடிரத்த பித்தம் உயர்சுரங்க ளைக்களையுந்
தேடரிய மேனிதருஞ் சேர் **443**

*இது மதுமேகம், சயநோய், இளைப்பு, பாம்பின்விடம், இரத்த பித்தம், சுரம் இவற்றை நீக்கி, காயசித்தியை உண்டுபண்ணும்.*

### கருடன்கிழங்கு

*அரையாப்பு வெள்ளை யகலாக் கொறுக்கை*
*கரையாத கட்டியிவை காணார் - வரையில்*
*திருடரெனச் செல்லும்விஷஞ் சேர்ப்பாம்பும் அஞ்சுங்*
*கருடன் கிழங்கதனைக் கண்டு* **444**

*கருடன் கிழங்கால் அரையாப்புக் கட்டி, வெள்ளைநோய், கொறுக்கு மாந்தை, கரையாத கட்டிகள் மலைப் பாம்பின்விடம் ஆகியன நீங்கும்.*

### கூகைக்கிழங்கு

மேனியிடும் வாய்க்கு மிருதுவாம் ஆக்கியுண்ணத்
தானிருமல் வெப்பதிக தாகமிவை - ஏனிருக்கும்
அம்பே றிளங்கிழங்கி தியாவர்க்கு மாமணப்பூங்
கொம்பேகூ கைக்கிழங்கைக் கூறு **445**

*நீர் நிறைந்துள்ள இக்கிழங்கைச் சமைத்துண்டால் உடல் பலம் பெறும். இருமல், சுரம், தாகம் இவை நீங்கும்.*

## புளிநரளைக்கிழங்கு

*புளிநரளை யின் கிழங்கோ பொன்போலச் செம்பைத்*
*தெளிவாகச் சுத்தியது செய்யும் - வெளியான*
*மூல முளை யறுக்கு முந்துசுவைக் கேதுவுமாங்*
*கோல மட மயிலே கூறு* **446**

*இது வெளிமுளை மூலத்தைப் போக்கும். உணவில் சுவை தரும். செம்பைச் சுத்திசெய்ய பயன்படும்.*

## மாகாளிக்கிழங்கு

*அனலையதி பித்தத்தை யாற்றும் பசியாம்*
*அனலையெழுப் புங்கபம றுக்கும் - அனிலத்தாம்*
*வேகாளத் தைத்தணிக்கு மென்கொடியே காட்டில்வளர்*
*மாகாளிக் கந்தமிது வாம்* **447**

*இது உட்சூடு, அதிக பித்தம், சிலேட்டும, வாதநோய்கள் இவற்றை நீக்கும். பசியை உண்டாக்கும்.*

## தண்ணீர்விட்டான்கிழங்கு

*நீரிழிவைப் போக்கும் நெடுநாட்சு ரத்தையெலாம்*
*ஊரைவிடுத் தோடவு ரைக்குங்காண் - நாரியரே*
*வெண்ணீர்பெய் சோமநோய் வெட்டை யனல்தணிக்குந்*
*தண்ணீர்விட் டான்கிழங்கு தான்* **448**

*இதனால் நீரிழிவு, நாட்பட்டசுரம், சோமநோய், வெள்ளை, உட்சூடு போன்றவை நீங்கும்.*

## தாமரைக்கிழங்கு

*கண்ணுக் கொளிகொடுக்குங் காசபித் தம்போக்கும்*
*எண்ணுங் குளிர்ச்சிதரும் ஏந்திழையே - புண்ணுகளில்*
*தூமரைப் புண் ணும்போக்குந் தொந்திக்க கடுப்பகற்றுந்*
*தாமரைக்கந் தமது தான்* **449**

*இக்கிழங்கு கண்ணிற்கு ஒளியும், குளிர்ச்சியும் தரும். பித்தகாசம், தவளைச் சொறி, வயிற்றுக்கடுப்பு ஆகியவற்றை நீக்கும்.*

## சிவந்த அல்லிக்கிழங்கு

செம்பைக்க ளிம்பகற்றிச் சிந்தூரம் ஆக்கிவிடும்
வெம்புபித்த மேகம் விலக்குங்காண் - அம்புவியில்
அல்லிற் கறுத்தகுழ லாரணங்கே நற்சிவப்பாம்
அல்லிக்கி ழங்கென்ப து 450

*பித்தமேகத்தை விலக்கும். இக்கிழங்கு செம்பின்களிப்பை நீக்கும். செம்பைச் செந்தூரமாக்கப் பயன்படும்.*

## நெய்தற் கிழங்கு

கண்ணுங் குளிரும்அக்கி காணாது காந்துபித்தம்
எண்ணுந்தோ ஷம்மேகம் ஏகுங்காண் - பெண்ணே
வயிற்றுக் கடுப்பிரத்த மாறுநெய்த லுக்குப்
பயித்தியம்போம் விந்தூறும் பார் 451

*இது அக்கினிப்புண், பித்த எரிச்சல், திரிதோடம், வயிற்றுக் கடுப்பு, பிரமேகம், இரத்தகிராணி, பித்தநோய் ஆகியவற்றை நீக்கும். கண்ணிற்கு குளிர்ச்சியும், சுக்கில விருத்தியும் உண்டாகும்.*

## செங்கழுநீர்க்கிழங்கு

கண்ணுங் குளிர்ந்திருக்குங் காசம்போம் பித்தமறும்
எண்ணரிய மேகம் இடையுங்காண் - பெண்ணேகேள்
பொங்கமொடு மாதைப்பு ணர்ந்தவழ லுந்தணியுஞ்
செங்கழு நீர்க்கிழங்காற் றேர் 452

*இதனால் கண்குளிரும். இருமல், பித்தம் பலவகை மேகங்கள், புணர்ச்சி அழல் போன்றவை நீங்கும்.*

## கொட்டிக்கிழங்கு

கொட்டிக் கிழங்கு குளிர்ச்சியென்பார் தேமலுடன்
ஒட்டிநின்ற மேகம் ஒழிக்குங்காண் - வட்டமுலை
மானே யகக்கடுப்பும் வந்தஅழ லுந்தணிக்குந்
தானே யிதையறிந்து சாற்று 453

குளிர்ச்சியுடைய நெய்தற்கிழங்கு தேமல், பிரமேகம், உடல்கடுப்பு, உட்சூடு ஆகியவற்றை நீக்கும்.

## கிட்டிக்கிழங்கு

கிட்டிக் கிழங்கால் கிளர்தீ பனமுண்டாம்
எட்டிக் கிழமேகம் ஏகுங்காண் - துட்டஞ்செய்
பித்த சமனமுமாம் பேசில்கப நாசமுமாம்
நிர்த்த மயிலே நிகழ்த்து *454*

*பித்தம், கபம், மேகம் இவை நீங்கும். பசியுண்டாகும்.*

## நிலப்பூசனிக்கிழங்கு

மெய்யிறுகுத் தாதுகளும் வீறுமதி தேசசுமாம்
நொய்ய வுடலம்பருக்கு நுண்ணறிவாம் - பைய
மலப்பூச லேகு மலர்த்திருவே நல்ல
நிலப்பூ சனிக்கிழங்கு னீ

*இக்கிழங்கு தளர்ந்த தேகத்தை இறுக்கும். தாதுக்கள், செழுமை பெறும். உடல் நல்ல ஒளி பெறும். நல்ல அறிவு வளர்ச்சியும் உண்டாகும்.*

## பருங்கிழங்கு

பருங்கிழங் கொன்றெய்திற் பறையறவும் வாத
மருங்கணையா தெவ்விடமு மாறுங் - கருங்கலென
வீக்குமடல் வீக்கமொடு மேகப் பிணியுமறு
மாங்குயிலே நாளும் வழுத்து

*வயிற்றில் இரைச்சலை ஏற்படுத்தும் வாதம், எல்லாவகையான விடங்கள், கபச்சோலை, பிரமேகம் இவை பருங்கிழங்கால் நீங்கும்.*

## சின்னிக்கிழங்கு

சின்னிக் கிழங்கு சிறுசிரங்கு புண்வளர்க்கும்
உன்னிலது வூர்ப்பன்றிக் கொவ்வுங்காண் - அன்னமே
மூலம றுக்கும்அது மோதுரத்தஞ் சீழ்மாற்றுந்
தால மறியுநிசந் தான் *455*

*ஊர்ப்பன்றி இறைச்சிக்கு ஒப்பான சின்னிக் கிழங்கு, பொடிக் கிரந்தி, புண் இவற்றை ஏற்படுத்தும். மூலநோய் இரத்தக் கிராணியையும் நிவர்த்தி செய்யும்.*

## பெருவள்ளிக்கிழங்கு

வாதகபம் பித்தமொடு மாமூலம் வாதகுன்மம்
ஓதுபல நோய்மந்தம் உண்டாகும் - போதின்
மருவள்ளிக் கொண்டகுழல் மாதே வுலகிற்
பெருவள்ளி யின்கிழங்காற் பேசு *456*

*பெருவள்ளிக் கிழங்கிற்கு வாத, பித்த கப தோடங்கள், மூலம், வாதகுன்மம், அக்கினி மாந்தம் போன்றன உண்டாகும்.*

## சிறுவள்ளிக்கிழங்கு

மந்தமிகுந் தீபனம்போம் மாறாக் கரப்பானுஞ்
சிந்த மிகு கபமுஞ் சேருங்காண் - தொந்தமாய்
மூல முளைவளரும் முட்டைச் சிறுகிழங்கால்
ஏல வளகமின்னே யென் *457*

*இக்கிழங்கு மந்தம், கரப்பான், சிலேட்டும விருத்தி, கபம், முளை மூலம் ஆகியவற்றை உண்டாக்கும். பசியெடுக்காது.*

## காய்வள்ளிக்கிழங்கு

அக்கினி வெப்பை யடக்குமென்பார் வாதமொடு
தொக்கில்அதி புண்சிரங்கைத் தூண்டிவிடும் - மிக்குபசும்
வேயையுடை தோளணங்கே வெற்றிலையாம் வள்ளியெனுங்
காயையுடை வள்ளியது காண் *458*

*இக்கிழங்கு வாதநோய், தோற்புண்கள் இவற்றை ஏற்படுத்தும். வெப்பத்தைக் கட்டுப்படுத்தும்.*

## சருக்கரைவள்ளிக்கிழங்கு

உள்ளிற் கொள் நன்மருந்தை யும்முறிக்குஞ் சர்க்கரையாம்
வள்ளிக் கிழங்கதிக மந்தத்தால் - உள்ளில்முளை
மூலம் விளையுநிதம் மோடிரைச்ச லுண்டாகுங்
கோலவயி றுங்கடுக்குங் கூறு *459*

அதிகமந்தமுள்ள சர்க்கரை வள்ளிக்கிழங்கு மருந்தின் நல்ல குணங்களைக் கெடுத்துவிடும். மூலமுளை, குடலிரைச்சல், கிராணி ஆகியவற்றை விளைவிக்கும்.

## புல்லின் கிழங்குவகை குணம்

### அறுகங்கிழங்கு

ஆறா அழலெல்லா மாறுமுத் தோஷமது
வீறா திருக்குநல்ல மேனிதரும் - மாறாக்
கடியமர லங்கலணி காரளக மின்னே
கொடியறுகம் புற்கிழங்கைக் கூறு 460

*நீங்காத பலவகையான வெப்பம், திரிதோடம் இவற்றை நீக்கி, உடலுக்கு அழகைக் கொடுக்கும் இயல்பு அறுகங்கிழங்கிற்கு உண்டு.*

### கோரைக்கிழங்கு

சீத சுரந்தீர்க்குஞ் செம்புனல்பித் தம்போக்கும்
வாத சுரந்தணிக்கும் வையகத்தில் - வேதைசெய்ய
வந்த பிணியையெல்லாம் வாட்டும்முத் தக்காசு
கொந்துலவும் வார்குழலே கூறு 461

அதிசாரம் பித்தம் அனற்றாகம் ஐயங்
குதிவாதஞ் சோபங் கொடிய - முதிர்வாந்தி
யாரைத் தொடர்ந்தாலும் அவ்வவர்க்கே வாங்குளத்துக்
கோரைக் கிழங்கைக் கொடு 462

*முத்தக்காசு எனும் கோரைக்கிழங்கு குளிர்சுரம், இரத்தபித்தம், வாதசுரம், பேதி, பித்ததாகம், கபநோய், குதிகால் வாயு, மூர்ச்சை, திரிதோடவாந்தி போன்ற பல நோய்களையும் நீக்கும்.*

### மருட்கிழங்கு

தொண்டைக்கட் டையந் தொலையும் மகோதரமும்
பண்டைப்பல் வீக்கம் பறக்குங்காண் - கெண்டைவிழி
மானே மருட்கிழங்கால் மாறுமூ வங்களெலாந்
தானே பசியெழும்புந் தான் 463

*தொண்டைக்கட்டு, கபம், பெருவயிறு, பல்சோகை, மூலம் இவற்றைப் போக்கிப் பசியையுண்டாக்கும் இயல்பு மருட்கிழங்கிற்கு உண்டு.*

## வெங்காயக்கிழங்கு

வெப்பமூ லங்கிரந்தி வீறுரத்த பித்தமுடன்
செப்புநா அக்கரந்தீ ராத்தாகம் - வெப்புக்
கடுப்பறும்மந் தஞ்சந்நி காசம்வயிற் றுப்பல்
தடிப்பேறும் வெங்காயத் தால் 464

*இதனால் உடல் வெப்பம் மூலம், சிரங்கு, இரத்த பித்தம், அக்கரநோய், தாகம், கடுப்பு, இவை நீங்கும். மாந்தம், சன்னி, இருமல் வயிற்றுப் பிசம் இவை விருத்தியாகும்.*

## நரிவெங்காயக் கிழங்கு

நஞ்சோடு சீதகபம் நாடாதி ரைப்பும்அறும்
பஞ்சாக மூல பகந்தரம்போம் - பஞ்சணைசேர்
வீட்டுள் ளிருக்கும் வினோத மடமயிலே
காட் டுள்ளிகிழங்கைக் கண்டு 465

*இதனால் பாம்பின் விடம், சீதளத்தால் ஏற்பட்ட கோழை, சுவாசம், மூலகபநோய் ஆகியவை நீங்கும்.*

## கிட்டிக்கிழங்கு

கிட்டிக்கிழங்கால் கிளர்தீ பனமுண்டா
மெட்டிக் கிழமேக மேகுங்காண் - துட்டஞ்செய்
பித்த சமனமுமாம் பேசில்கப நாசமுமாம்
நீர்த்த மயிலே நினை.

*இக்கிட்டிக் கிழங்கு நாட்பட்ட பிரமேகம், சிலேட்டும நோய் இவற்றை நீக்கி, மிகுந்த பசியை உண்டாக்கும்.*

## சகல கிழங்குகள்

கிழங்குவகை யின்பேரைக் கேட்கின் மூலத்துள்
முழங்கும்வா தத்தின் முரசம் - வழங்குகின்ற
சூரணக்கி ழங்குகளைத் துயத்தார்பேர் சொல்லிற்
முரணக்கு டும்பமெங்கே விள் 466

*பல்வகைக் கிழங்குகள் மூலவாயுவை விருத்தி செய்யும். கருணைக் கிழங்குகளால் மூல நோய் நீங்கும்.*

## மரத்தின்வேர் வகை குணம்

### வில்வமரவேர்

வில்லுவத்தின் வேருக்கும் வீறுகுன்ம வாயுகபஞ்
சொல்லவொணாப் பித்தந் தொடர்சோபை - வல்லகப
தாகசுரம் நீரேற்றஞ் சந்நியொடு மெய்வலியும்
வேக மொடுநீங்கு மே 467

அக்கனி மந்தம் அராசியதி சாரம்விக்கல்
நிற்கரிய பித்தசுரம் நீள்வாந்தி - சுட்கநோ
யாதியநோ யேகும் அழகோடு புஷ்டியுண்டாம்
கோதில்வில்வ வேரதனைக் கொள் 468

*வில்வமரவேர், வாதகுன்மம், கபம், பித்தசோகை, கபதாகம், நீர்க்கோவை, சன்னி, உடற்கடுப்பு, அக்கினி மாந்தம், அருசி, உட்டிணபேதி, விக்கல், பித்தசுரம், வாந்தி ஆகியவற்றை நீக்கி உடல் பலத்தையுண்டாக்கும்.*

### பாதிரிமரவேர்

பாதிரியின் வேர்க்குணந்தான் பார்க்கில்மது மேகம்போம்
ஓதுகரப் பான்உழலை யோடிவிடும் - மாதேகேள்
கண்ணெரிவு காதெரிவு கையெரிவு காலெரிவும்
நிண்ணயமாய்ப் போகு நிசம் 469

மேகத்தால் வந்த மிகுபிளவை மாவிரணம்
போகத்தால் வந்து பொருமூலம் - ஆகத்தில்
வந்தசொறி யோடுகப வாதமந்த மும்போகுங்
கொந்தடரும் பாடலத்தாற் கூறு 470

*இவ்வேர் மதுமேகம், கரப்பான், உழலை, கண், காது கை எரிவுகள், மிகுந்த மேகப்பிளவை, சொறி, மூலநோய், புண், சிலேட்டுமநோய், அக்கனிமந்தம் ஆகியவற்றை நீக்கும்.*

### சண்பகமரவேர்

தீராத வுட்டிணத்தைத் தீர்க்குஞ் சுரம்போக்கும்
நேரே பசியெழுப்பும் நிச்சயமே – ஒருங்கால்
பண்புறுகண் தோஷத்தைப் பற்றறுக்கும் வாசமுள்
சண்பக மரத்தின்வேர் தான் 471

*இது உட்டிணம், சுரம், கண்தோடம் ஆகியவற்றை நீக்கி பசியையுண்டாக்கும்.*

### மாமரவேர்

சீதரத் தப்போக்கை சிக்கெனவே தான்பிடிக்கும்
போதவயிற் றுக்கடுப்பைப் போக்குங்காண் - ஓதுகின்ற
வாந்தியையுந் தீர்க்கும்வெளி மாமரத்தின் வேர்ப்பட்டை
பூந்துகின் மாதே புகல் 472

*மாமரவேரின் பட்டை சீத இரத்தபேதி, வயிற்றுக் கடுப்பு, வாந்தி ஆகியவற்றைப் போக்கும்.*

### இலுப்பைமரம் வேர்

புண்ணும் புரையும்அறும் போதத் துவர்ப்பாகும்
எண்ணும் அகக்கடுப்பி ருக்குமோ - பெண்ணேகேள்
நீரிழிவும் ஏகும்நெடு மோமை மூலத்தாற்
போரடர் கடுப்புரத்தம் போம் 473

மந்தம் அரோசிம காசூலை சர்வசுரம்
விந்துநஷ்டந் தாகமொடு மெய்யிளைப்பும் - முந்த
அலுப்பைப்பெற் றேகும் அளகத்திற் காகா
இலுப்பைக்குச் சூடதிக மென் 474

*துவர்ப்புடைய இலுப்பைவேர் புண், புரை வயிற்றுக் கடுப்பு, நீரிழிவு, இரத்தகிராணி, அக்கினிமாந்தம், சுவையின்மை, வாதசூலை அனைத்து வகை சுரம், விந்துநட்டம், தாகம், உடல் அயர்வு, போன்றவற்றை நீக்கும். தலைமுடிக்கு இது ஆகாது, இது ஒரு சூட்டுப் பொருளாம்.*

## மருதோன்றிமரவேர்

சோணித தோஷமெலாஞ் சொல்லாம லேகிவிடும்
பேணுவர்க்கி ரத்தமொடு பித்தம்போங் - காணா
ஒருதோன்ற லென்னுமத னோதுமெழின் மாதே
மருதோன்றி வேரால் மறைந்து 475

*மருதோன்றிமரவேர், மாதவிடாய் தோடங்கள், இரத்தநோய், பித்த நோய், ஆகியவற்றை நீக்கும்.*

## வெண்காலிமரவேர்

விம்மு மகோதரமும் மேல்நோக்கு பித்தமொடு
ஜிம்மகி ருஷ்ணதோ ஷமும்உட் சேருமோ - கம்முகின்ற
கள்ளைப் பொருநீருங் காணாது கைப்பையுறும்
வெள்ளைக் கருங்காலி வேர்க்கு 476

*கசப்பு சுவையுடைய வெண்காலிமரவேர் பெருவயிறு, ஏறுபித்தம், நாக்கைக் கறுக்கச் செய்யும் கிருட்டிணசிம்மதோடம், சுறாமேகம், இவற்றை நீக்கும்.*

## கருங்காலிமர வேர்

கைப்புற் றிருக்குங் கருங்காலி வேருக்கு
மைப்புழுவும் பாகாம் மதுநீரும் - மெய்க்குளெழு
குஷ்டும்உதி ரப்போக்குங் கவி யழுதகலும்
மட்டுறுபூங் கோதாய் வழுத்து 477

கைப்புள்ள இவ்வேர் மலப்புழுக்கள், மது, நீர், குட்டம் இரத்தப் போக்கு இவற்றைப் போக்கும்.

## எட்டிமரவேர்

ஆலவிஷம் ஒக்கும் அருந்தக் கடிதீரும்
ஞாலமதிற் பித்தகுண நாசமாம் - ஆலைக்கோல்
அட்டியபா காமொழியே யானவிஷ முஷ்டியெனும்
எட்டி மரவே ரிது 478

*கடுமையான விடமுடைய பாம்பின் விடங்களை எட்டிமரவேர் நீக்கிவிடும். பித்தத்தைப் போக்கிவிடும்.*

### புங்கமரவேர்

வாதக் கடுப்பு மகாமூர்ச்சை தாபசுரம்
வாதகுன்மம் ரத்தத்தால் வந்திடுநோய் - ஓதுகின்ற
புண்புரையும் வல்விஷமும் போகுந் திரண்டுருண்டே
பண்புறுபுங் கம்வேர்க்குப் பார் 478ஏ

*புங்கமர வேரானது வாதக் கடுப்பு, மகா மூர்ச்சை, தாபசுரம், வாயுகுன்மம், இரத்தத்தால் உண்டாகும் நோய்கள், இரணம், பாம்பின் விடம் ஆகியவற்றை நீக்கும்.*

### நாவல்மர வேர்

வாத மறுங்கரப்பான் மாறும் விரணமொடு
ஓதமுறு நீரிழிவும் உந்துரத்த - சீதமுங்காய்
மாவன் சுரமும் வளர்மேக மும்போகும்
நாவன்மர வேரதனை நாடு 479

வாதம், கரப்பான், புண், நீரழிவு, இரத்த சீதபேதி, வாயுசுரம், மேகம் இவை நாவல் மர வேரால் நீங்கும்.

### கருவேல்மரவேர்

கருவேலின் வேர்க்குக் கடுப்பிரத்தம் மாந்தம்
பருவாதம் ஊறுகரப் பானும் - பெருகு
பெரும்பேதி யும்போகும் பேசவி னிக்குங்
கரும்பே யிதனைக் கருது 480

இரத்தக் கடுப்பு, அக்கினி மாந்தம், பெருவாதம், கரப்பான், பேதி ஆகியவற்றை கருவேலமர வேர் போக்கும்.

### ஓதிமரவேர்

புண்புரைகி ராணிரத்தப் போக்கதிசா ரங்கடுப்புந்
திண்பெறுதா கஞ்சோபஞ் சீதளமும் - நண்பில்
அதிவிரைவாய்த் தாண்டு மணங்கே பருத்த
ஓதிமரத்தின் வேருக் கொதுங்கி 481

ஓதிமரவேரினால் புண், புரை, கிராணி, இரத்தபேதி, பெருங் கழிச்சல், சீதக்கடுப்பு, தாகம், மூர்ச்சை, பித்த சீதளம் இவை நீங்கும்.

### அகத்திமரவேர்

நல்லகத்தி வேரதனை நாடுங்கால் மேகமெனுஞ்
சொல்லகலுந் தாகம்அறும் தோகையே - மெல்லமெல்ல
மெய்யெரிவு கையெரிவு மேகனத்தி னுள்ளெரிவும்
ஐயெரிவும் போமென் றறி **482**

மேகம், அதிதாகம், உடல், உள்ளங்கை, ஆண்குறி ஆகியவற்றில் ஏற்படும் எரிவு இவை நீக்கும் பண்பு அகத்திமர வேருக்குண்டு.

### நெல்லிமரவேர்

வமனம் அரோசியறும் வாதமுதன் மூன்றுஞ்
சமண முறும்மலமுஞ் சாறும் - அமானசுரம்
புல்லிவரு தோஷசந்நிப் பொல்லாச் செயலும்போம்
நெல்லிமர வேரை நினை **483**

வாந்தி, அருசி, திரிதோடம், மலக்கட்டு, முறை சுரம், சன்னி இவற்றை நெல்லிமரவேர் நீக்கும்.

### அருநெல்லிமர வேர்

சுத்த சுரம்அருசி தோலாப் பெரும்வாந்தி
பித்தசந்நி பாதமிவை பேருங்காண் - மெத்தமணம்
நாறுமலர்க் கூந்தன்மின்னே நாவுக் கினிமையெனக்
கூறுமரு நெல்லியின்வேர்க் கு **484**

சுரம், சுவையின்மை, வாந்தி, இரத்த புஷ்டி, அதிசன்னி ஆகியன அருநெல்லிவேரால் குணமடையும்.

### ஆடாதோடைவேர்

காசமொடு மந்தங்கதித்த பித்தங் கொடுஞ்சு
வாசங் கழுத்துவலி முதநோய் - கூசியே
யோடாதி ராதிங் கொருநாளு மொண்டொடியே
யாடா தொடைக்குருக் கஞ்சி

இவ்வேர் இருமல், அக்கினிமந்தம், பித்தம் கொடுஞ்சுவாசம், கழுத்துவலி, போன்றவற்றைப் போக்கும்.

## சங்கம்வேர்

சங்கம்வேர்ப் பட்டை சளியிரு மலைச் சுரத்தை
யங்க வாதக் கடுப்பை யாடத்தைப் - பங்கே
செய்யும் கிரந்தியையுட் பீகாமல் கிருமியையிவ்
வையற் தனிலொழிக்கு மால்

*சளி, இருமல், சுரம், வாதக் கடுப்பு, சிலேட்டும சோகை, கிரந்தி, உட்சுரம், வாதம் கிருமிநோய் போன்றவற்றைச் சங்கஞ்செடிவேர் நீக்கும்.*

## பேராமுட்டிவேர்

வாதசுரத் தாகம் மதலைக் கணமாந்தஞ்
சீதசுரம் பித்தமெனச் செப்பணங்கு - மோது நம்மாற்
சேரா முட்டிக்கேகுஞ் செய்ய மடமயிலே
பேரா முட்டித் தூரைப் பேசு

*இவ்வேர் வாதசுரம், தாகம், மாந்தகணம், குளிர் சுரம், பித்த நோய் ஆகியவைகளை நீக்கும்.*

## சிற்றாமுட்டிவேர்

அத்திசுர முதலனந்த சுரம்பித்த மும்போ
மெத்தவிழிக் கொளியாம் வீறுதயி - லத்திற்காம்
நற்றா மரைதருவு நாடு மெழிற் றிருவே
சித்தா முட்டித் தூரைச் செப்பு

*இவ்வேர் அத்திசுரம் முதலான சுரங்களையும், பித்தநோயையும் நீக்கும். கண்ணுக்கு ஒளியை உண்டாக்கும். தயிலஞ்செய்ய பயன்படும்.*

## செந்தொட்டி வேர்

சந்துவலி வாதந் தாகஞ் சுரங்கரப்பா
னுந்து சுவாசந்தப மோடுங்கா - ணந்தமிகு
மிந்தொட் டியவதன வின்ப மடமயிலே
செந்தொட்டி வேராற் றெளி

*இது சந்துவலி, வாதம், தாகம், சுரம், கரப்பான், உந்துசுவாசம், கபம் ஆகியவற்றை நீக்கும்.*

## முட்காவேளை வேர்

தாகாதி மந்த மதிசார நாவறட்சி
போகாச் சுரந்தாபம் போக்கமருந் - தோகையிற்
சிக்காவேளைப் பதத்தைத் திண்ணச் செய்விக்க வென்றான்
முக்காவேளைப் பதத்தை முன்

*வாததாகம், மந்தாக்கினி, கழிச்சல், நாவறட்சி, சந்தசுரம், வெப்பம், அன்னவெறுப்பு போன்றவற்றை முட்காவேளை வேர் போக்கும்.*

## செங்கத்தாரி வேர்

செங்கத்தாரிக் கடைக்குத் தீராத வன்மோகம்
பொங்கி வருகிரந்திப் புண்புரைகள் - தங்குகின்ற
சந்திக சிலேஷ்மந் தனித்த மகாவாத
முத்திகை விட்டோடும் மொழி

*நாள்பட்ட வன்மேகம், கிரந்தி, புண்புரைகள், கீல்களை வீங்கச் செய்யும் கபம், பெருவாதம் இவற்றை செங்கத்தாரி வேர் நீக்கும்.*

## மரக்காரை வேர்

சீதங் கடுப்பு திரிதோஷ மாந்தபித்த
வாதங் கரனைய மாந்தகண - மியாதிங்
கிரிக்கான மருந் தென்பா ருலகில்
மரக்காரை வேரால் மதி.

*இவ்வேர் சீதக்கடுப்பு, திரிதோடம், உதிரபித்தம், வாதநோய், கரப்பான், கபம், கணமாந்தம், வாந்தி இவற்றைப் போக்கும்.*

## குத்துக்காற் சம்மட்டிவேர்

சாரமுறு குத்துக்காற் சம்மட்டி வேரெனச் சொற்
கோரமுள்ள மாவாதக் கூட்டமெங்கே - வீரமுறு
மேகத் தகுப்பெங்கே வீறுதிமிர் வாதமெங்கே
சோகத் தளர்ச்சியெங்கே சொல்.

*மகாவாதம், பல்வகை மேகக் கட்டிகள் திமிர்வாதம், மூர்ச்சை, அயர்வு இவை குத்துக்காற் சம்மட்டி வேர்க்கு நீங்கும்.*

### அவுரிவேர்

எல்லா விஷங்களுக்கு மேற்ற முறிப்பாகும்
பொல்லாச் சுரமூர்ச்சை பொங்குவட்டை - நில்லாப்
பவுரிதருங் குன்மமுதற் பன்னோ யொழியு
மவுரிதரு வேருக் கறி

*அனைத்து விடங்களும், சுரமூர்ச்சை, வெள்ளை, வயிற்றுநோய் இவை அவுரிவேரால் நீக்கப்படும்.*

### களாவேர்

விடத்துருநோய் பித்தமைய வேர்வை யதிதாகந்
திடத்தக வுதிரத்தினது சிக்கற் - கடத்துளெழு
மக்கினி மாந்தமிவை யண்டா தொருநாளுஞ்
சிக்கெனக் களாவேரைச் சேர்.

*இவ்வேர் விடம் தொடர்பான நோய்கள் பித்தம், ஐயம், வியர்வை, அதிதாகம், பிரசவ அழுக்கு, மந்தாக்கினி இவற்றைப் போக்கும்.*

### வெட்டிவேர்

பித்த விதாகஞ் சசிகாமிலங் கறைப்பித்தமனம்
தத்திடு குட்டஞ் சிரநோய் களமடி - தாதுநட்ட
மத்தமணற் புண்டடைப்புண் வண்மூர்ச்சை வரி விழிநோய்
வித்திரமேகத்தின் கட்டியும் போம் வெட்டி வேரினுக்கே.

*வெட்டிவேர், பித்தத்தால் ஏற்படும் தாகம், காமாலை, பித்தம் சுரம் இவற்றை அதிமாக்கும். குட்டம், தலைநோய், கழுத்துநோய், விந்து நட்டம், உன்மாதம், தீப்புண் முலைச்சிலந்தி, திரிதோட மூர்ச்சை, கண் நோய்கள் மேகக்கட்டி இவை நீங்கும்.*

### நாகமல்லிகை, நாகமுட்டிவேர்

சீராரு நாகல்வகைச் சின வரையைக் கண்டக்காற்
தீரா நமைச்சற் செறிபுடைக்க - ணீராருஞ்
சன்னப் புழுச்சங்கற் தாங்காவாஞ் சாம்புனத
வன்னக் குயிலனையாய் வாழ்த்து.

*நாகமல்லிகை வேர், நாகமுட்டிவேர் இவற்றிற்கு தீராத நமைச்சல், புடைகள், இரச தாதுவைப்பற்றிய கிருமிக் கூட்டம் ஆகியவை நீங்கும்.*

### காட்டுமல்லிகைவேர்

சுரங்களொடு நாவறட்சி தொந்திமந்தம் பேதி
யுரங்கதித்த தாகம்இவை யோட்டும் - வருஞ்சோரர்
தாமல்லி லோடுந் தகைமைபோல் ஓடிவிடுங்
காமல் லிகைவேராற் காண் *485*

*இவ்வேர் சுரங்கள், நாவறட்சி, அக்கினி மந்தம், கழிச்சல், அதிதாகம் ஆகியவற்றைப்போக்கும்.*

### சிறுகுறிஞ்சாவேர்

சிறுகுறிஞ்சா வேர்விஷத்தைத் தீர்க்கும் அனிலத்
துறுசுரங்கள் வாதம் ஒழிக்கும் - தெறிபாணக்
கண்ணா யிருமல்முதற் காசசுவா சந்தணிக்கும்
விண்ணாட ருக்கிதனை விள் *486*

*இவ்வேர் விடம் தீர்க்கும். சுரங்கள், வாதம், இருமல், சுவாசகாசம் ஆகியவற்றைப் போக்கும்*

### பேய்ச்சுரை

கடுவேறு பேய்ச்சுரைவேர் கண்டால் அரவின்
கடுவேறா துண்மைமுக் காலுங் - கொடுவிஷமும்
ஈளை யிருமலும்விட் டேகும்உண்டால் வாந்தியுண்டாம்
வாளையுறுங் கண்ணாய் வழுத்து *487*

இது பாம்பின் விடங்கள், கோழை காசம், இருமல் இவற்றை நீக்கும். வாந்தியை உண்டாக்கும்.

### முசுமுசுக்கை

கந்தம் பரவு களிச்சளியும் புன்விட்மு
மந்தம் பெறுவிடமும் வாந்திகளும் - அந்தம்
பெருகுரங்குக் கிச்சூடும் பித்தமுமி ருக்கா
திருகுரங்குக் கைவேருக் கே *488*

*இறுக்கம் பெற்ற கோழை, அற்ப வீரிய விடம், வாந்தி, மந்தம், மார்பு நோய், குன்மம், பித்தம் இவற்றை முசுமுசுக்கை நீக்கும்.*

### வெண்காக்கட்டான்

மாதரால் வந்தவெட்டை வன்மேகஞ் சென்னிவலி
ஓது சுரம்விழிநோ யோடுங்காண் - பேதியொடு
மாக்கட்டாஞ் சீதம்அறும் மாமூலி யாம்வெள்ளைக்
காக்கட்டான் வேரைக் கருது 489

*மாமூலி எனும் காக்கட்டான்வேரினால் வெள்ளை, வன்மேகம், தலைவலி, சுரம், கண்நோய் ஆகியவை நீங்கும்.*

### கருங்காக்கட்டான்

மாந்தங் கிருமியடல் வாதங் சுபஇனமுஞ்
சேர்ந்தமலக் கட்டுஞ் சிதையுங்காண் - சூழ்ந்த
அருங்காக் குவடுகளி லண்டா மயிலே
கருங்காக்கட் டான்வேரைக் கண்டு 490

*இவ்வேர்க்கு மாந்தம், மலக்கிருமி, வாதம், கபம், மலக்கட்டு ஆகியவை நீங்கும்.*

### கொடிவேலி

கட்டிவிர ணங்கிரந்தி கால்கள் அரையாப்புக்
கட்டிசூ லைவீக்கங் காழ்மூலம் - முட்டிரத்தக்
கட்டுநீ நேரற்றங் கனத்த பெருவயிறும்
அட்டுங் கொடிவேலி யாம் 491

*கட்டி, புண், சொறிசிரங்கு, அரையாப்பு, சூலை, வீக்கம், சோபை, மூலநோய், உதிரக்கட்டு நீரேற்றம், பெருவயிறு இவற்றைக் கொடி வேலிவேர் நீக்கும்.*

### பெருமருந்து

பெருமருந்தின் வேர்பித்தம் பீறிரைப்பு காசம்
வருசுரம் உடம்புவலி வாதம் - உருவுவிஷம்
ஒன்றிய மாகடிகள் ஓட்டும் உலகிலிது
அன்றியது கோச்சிசிகிச்சைக் காம் 492

*இது பித்தகோபம், சுவாசம், இருமல், சுரம் உடற்குத்தல், வாதம், சாதாரணவிடக்கடிகள் ஆகியவற்றை நீக்கும், பசு, எருது முதலியவற்றின் சிகிச்சைக்கும் ஆகும்.*

### பெருங்காஞ்சொறி

காசஞ் சுவாசங் கபச்சுரங்க ளோடிவன
வாசஞ்செய் யும்ஊர்க்குள் வாராமல் - வாசம்
பெருக்கு முலையாய் பெருங்காஞ் சொறிவேர்
இருக்க மெனமனத்து ளெண்ணி *493*

*இருமல், இரைப்பு, சீத சுரம் இவற்றைப் பெருங்காஞ்சொறி வேர் நீக்கும்.*

### சிறுகாஞ்சொறி

சிறுகாஞ் சொறிவேர் சிலேஷ்மசுவா சத்தைக்
குறியாத முச்சுரக்கு ழாத்தைச் – சொறியுங்
கரப்பான் சிறுசிரங்கைக் காலைத்தா கத்தை
உரப்பாகச் சாடுமென வோது *494*

*இது சிலேட்டுமம், திரிதோடசுரம், கரப்பான், புண், காலைத் தாகம் ஆகியவற்றைப் போக்கும்.*

### கருங்காஞ்சொறி

குத்திருமல் நீரேற்றங் கோர கபரூட்சை
நித்தியஅ ரோசகமும் நீங்குங்காண் - ரத்ன
அருங்காஞ்சி வாய்ந்தவிடை யன்னமே சுத்தக்
கருங்காஞ் சொறிவேரைக் கண்டு *495*

*குத்திருமல், நீரேற்றம், கபம், உணவில் வெறுப்பு, ஆகியவற்றைக் கருங்காஞ்சொறிவேர் போக்கும்.*

### பச்சைத்திப்பலி

தாகமுடன் சோபந் தணிக்குங்காண் எவ்வகையின்
மேகமுடன் பித்தம் விலக்குமே - போகமிகும்
நவ்விய ரன்ன நயங்கொடுக்கும் பச்சையாஞ்
செவ்விய மூலச் செயல் *496*

*தாகம், சோபம், பித்தம் இவற்றை நீக்கி சுக்கிலத்தை விருத்திசெய்து அழகைக் கூட்டும் பண்பு பச்சைத் திப்பிலி வேர்க்குண்டு*

## இன்புறா

இன்புறா வேரை யிதமாய் அருந்தினர்க்குப்
பின்புறா தையமொடு பித்தமுமே - துன்பாம்
இருமல் சுவாசம் எரிசுரம்வ யிற்றுப்
பொருமல்உப்பி சம்பறந்து போம் 497

*இது கபம், பித்தம், இருமல், ஈளை, பித்தசுரம் வயிற்றிரைச்சல், விக்கல் இவற்றை நீக்கும்.*

## நன்னாரி

நன்னாரிவேரை நறுக்கி யரைத்து மதன்
வின் னாரியூணால் வெதுப்பியே - தின்னவெறி
தோணாது கற்றாழைச் சோற்றிற் கலந்துண்ணக்
காணாது வண்டு கடி 498

சலதோஷம் பித்தம்அதி தாகம் உழலை
சலமேறு சீதமின்னார் தஞ்சூ - டுலகமதிற்
சொன்மதுமே கம்புண் சுரம்இவையெ லாம்ஒழிக்கும்
மென்மதுர நன்னாரி வேர் 499

*நன்னாரிவேரை அரைத்துத் தேனில் பாகுஞ்செய்து உண்டால் அதிக பித்தம் தீரும். இதையே கற்றாழை சோற்றோடு உண்டால் வண்டுகடி நீங்கும். முறைப்படி இன்னும் உண்போமானால் நீரேற்றம் பித்தநோய், அதிக தாகம், வாய்நீர்சுரத்தல் புணர்ச்சியின் சூடு, மதுநீர்க்கிரந்தி, சுரவேகம் ஆகியவை நீங்கும்.*

## புல்லின்வேர்க்குணம்

### பச்சைவிலாமிச்சு

திரிதோஷந் தாகஞ் சொறி குஷ்டம் ஈளை
பெரிதான சூலைமந்தம் பேராச் - சுரவெப்பம்
மச்சையுண்ணுங் கீடமுதன்மாறு மெய்க்குங் காந்தியுண்டாம்
பச்சைவிலா மிச்சுக்குப் பார் 500

*இது திரிதோடம், தாகநோய், பெருநோய், சொறி, சுவாசம், உடற்கடுப்பு, அக்கினிமந்தம், உட்டிணசுரம், மச்சைத் தாது, கிருமி ஆகியவற்றை நீக்கி அழகையுண்டாக்கும்.*

### பஞ்சமூலம்

செவ்வியம் பேரரத்தை சித்திரமூ லஞ்சுக்கோ
டொவ்வுகண்டு பாரங்கி யோரைந்தும் - வெவ்வினையைச்
சண்ணுப்ஞ்ச மூலமெனத் தாரணியெ லாம்அறிய
வண்ண மயிலே வழுத்து 501

*திப்பிலிமூலம், பேரரத்தை, கொடிவேலிவேர், சுக்கு கண்டுபாரங்கி ஆகியன (பஞ்சமூலம்) கொடிய நோய்கள் பலவற்றைப் போக்கும்.*

### சிறுபஞ்ச மூலம்

சிறிய வழுதுணைவேர் சின்னெரிஞ்சில் மூலஞ்
சிறு மலிகண்டங்கத் தரிவேர் - நறிய
பெரியமலி யோரைந்தும் பேசுபன்னோய் தீர்க்கும்
அரிய சிறுபஞ்ச மூலம் 502

*சிறுவழுதுணம், சிறுநெருஞ்சில், சிறுமல்லிகை, கண்டங்கத்தரி, பெருமல்லிகை ஆகியவற்றின் வேர்கள் பல நோய்களைப் போக்கும்.*

## பெரும்பஞ்சமூலம்

பாதிரிவேர் வாகை பருங்குமிழ் - மாலூரம்
ஒதுதழு தாழையிவ்வேர் ஓரைந்தும் - போதிலம
ருஞ்சிலைநு தற்றிருவே யோதுபெரும் பஞ்சமூ
லஞ்சிலநோ யேகுமிதி லாய் *503*

*பாதிரி, வாகை, பெருங்குமிழ், வில்வம், தழுதாழை ஆகிய (பஞ்சமூலம்) வற்றின் வேர் சில நோய்களைப் போக்கும்.*

## அஷ்டமூலம்

கோரை யரிகரந்தை கூலங்களுசி கஞ்சாங்
கோரையா டாதோடை கோத்துளசி - வீரியபற்
பாடகமிவ் வெட்டும் பல்விஷக் குழாமிரியச்
சாடுமஷ்ட மூலமென்பர் தாம் *504*

*முத்தக்காசு, விட்ணுகிரந்தை, பேய்ப்புடல்வேர், சீந்தில்வேர், கஞ்சாங்கோரை, ஆடாதோடை, கருந்துளசி, பற்பாடகம், இவற்றின் வேர்கள் விடங்களைத் தீர்க்கும்.*

## தசமூலம்

வில்வம் பெரியகுமிழ் மென்னெரிஞ்சில் முன்னையிரு
மல்லி சிறிய வழுதுணைவேர் - நல்லகண்டங்
கத்தரி புன்காலிபெரு வாகையிவை வன்னோயைக்
குத்துத் தசமூலங் கூறு 505

*வில்வம், பெருங்குமிழ், யானைநெருஞ்சில், முன்னை, சிறுமல்லிகை, சிறுவழுதுணம், கத்திரி, பாதிரி, பெருவாகை, இப்பத்தும் (தசமூலம்) கடினமான நோய்களைத் தீர்க்கும்.*

## மரப்பட்டைகளின் குணம்

### அத்திமரப் பட்டை

வீறு கடுப்பிரத்தம் வெண்சீத ரத்தமொடு
நாறுவிர ணங்களெலாம் நாடாவாங் - கூறுங்கால்
அத்திதரு மேகம்போம் ஆயிழையே யெஞ்ஞான்றும்
அத்திப்பாற் பட்டைக் கறி 506

*இதனால் ஆசனக்கடுப்பு, இரத்தப்போக்கு, சீத இரத்த பேதி, புண், தத்துப்பிரமேகம் ஆகியவை நீங்கும்.*

### நாவல்மரப்பட்டை

ஆசியநோய் காசம் அசிர்க்கரஞ்சு வாசவினை
கேசமுறு பால கிரகநோய் - பேசரிய
மாவியங்க லாஞ்சனம்இவ் வன்பிணியெ லாமேகும்
நாவலுறு பட்டையத னால் 507

*வாயிற்பிறக்கும் நோய்கள், இருமல், பெரும்பாடு, ஈளை, பிள்ளை தோடங்கள், வியங்கம், லாஞ்சனம், மச்சபேதங்கள் ஆகியவை தீரும்.*

### முருங்கைமரப்பட்டை

முருங்கைவேர்ப் பட்டைக்கு மூடு கபத்தோ
டொருங்குறாச் சன்னிசுரம் ஓடும் – அருங்கனக
வட்டைப் பொருமுலையாய் வாய்வொடுவி ஷங்களுமேற்
பட்டைக்குப் போமே பறந்து 508

*இம்முருங்கை வேர்ப்பட்டை கபதோடம், சன்னிசுரம், இவற்றையும், வாததோடம், சிலவிடம் இவற்றையும் நீக்கும்.*

### புளியமரப்பட்டை

புளிய மரத்தின் புரணிதனைக் கண்டால்
உளைமாந்தை குன்மவலி யோடும் - வளியார்ந்த
பேதிகட் டுஞ்சுரம்போம் பித்தமுறுந் தீபனமாம்
ஓதஅ சிரணமே துன்னு 509

*உளைமாந்தை, குன்மவலி, பேதிக்கட்டு, ஆசீரணம் இவை நீங்கும். பித்தமும் பசியும் விருத்தியாகும்.*

## பெருமரப்பட்டை

பெருமரப் பட்டையது பேதி கிராணி
மருவிரத்த நோயினத்தை மாற்றுந் - திருவே
நடலைபுரி வாதத்தை நாடாத கற்றும்
உடலையிரட் சிக்குமென வோது 510

*பேதி, கிராணி, உதரநோய், வாதம் இவற்றை பெருமரப்பட்டை நீக்கி உடலைப் பருக்கச் செய்யும்.*

## கருவேல்மரப்பட்டை

தந்தம் இறுகுந் தனிச்சூதப் புண்ஆறும்
வந்தசுரம் பித்தம் மடியுங்காண் - பந்த
மருவே யகலா மலரளக மாதே
கருவேலம் பட்டைக்குக் காண் 511

*இவ்வேலம்பட்டை இரச வேகத்தின் வேக்காடு முதலிய இரணங்களும் சுரமும், பித்தநோயும் நீங்கும். பல் இறுக்கம்பெறும்.*

## கருங்காலிமரப்பட்டை

மேகநீ ரைக்கெடுக்கும் வீறுதந்த மூலத்துள்
ஆகிய வேதனையை யாற்றுங்காண் - சோகந்
தருங்காசம் ஈளையிவை சாரா தகற்றுங்
கருங்காலிப் பட்டையது காண் 512

மேகநீர், தந்தமூலநோய், இருமல், காசம், ஈளை ஆகியவை இம்மரப்பட்டையால் நீங்கும்.

## மாவிலிங்கு - எருக்கு - கருவேல் இவற்றின் பட்டை

மாவிலிங்கப் பட்டையினால் வாதமொடு சன்னிகளும்
பாவுகின்ற கல்லடைப்பும் பாறுமே - மாவெருக்கம்
பட்டைசந்நி வாதம் பல்விஷம்போக் குங்கருவேல்
பட்டை நாநோய்தீர்க்கும் பார் 513

*மாவிலிங்குப்பட்டை வாதம், சன்னி, கல்லடைப்பு இவற்றை நீக்கும், எருக்கம் பட்டை வாதம், சன்னி, வாதம், பலவிடம் இவற்றை நீக்கும். கருவேல் பட்டை நாப்புண்ணை நீக்கும்.*

## கள்ளி-நொச்சில்-இவற்றின் பட்டை

நரம்புச் சிலந்தி நளிர்வாத சன்னி
உரம்பெரிய வாதம்இவை யோடும் - பெரும்புவியிற்
கள்ளிமரப் பட்டையினாற் காரநொச்சிற் பட்டையது
துள்ளு சந்நிவாதம் அகற் றும் *514*

*கள்ளிமரப்பட்டை, நரம்புச்சிலந்தி, கபநோய், வாதம், சன்னி, ஆகியவற்றைப் போக்கும். நொச்சில் மரப்பட்டை சன்னியால் பிறந்த வாதத்தைப் போக்கும்.*

## கிளியூறற்பட்டை

மணவருக்க மாகும் வருசுரத்தைப் போக்குந்
தணலாய வெப்பைத் தணிக்கங் - குணமார்
கிளியூறற் பட்டையது கீதம் பயிலும்
அளியூருங் கூந்தன்மின்னே யாய் *515*

*சுரம், உடற்கொதிப்பு இவற்றை கிளியூரல் பட்டை நீக்கும்.*

## அக்காரப்பட்டை

அக்காரப் பட்டைக் கறல்நா வறட்சிகளும்
எக்குசன்னி பாதசுரம் என்பவையும் - பக்கச்
சகலதலை நோய்வாய்வுந் தாழ்ந்தே யொழியும்
புகலிரத்த கந்தமது போம் *516*

*இம்மரப்பட்டையால் நாவறட்சி, சன்னிசுரம், அனைத்து வகை தலைநோய்கள், வாதம், உதிரநாற்றம் ஆகியவை நீங்கும்.*

## கோங்குமரப்பட்டை

கோங்கினறும் பட்டையார் கூறறிய மேகம் போந்
தாங்கிய பற்பிணியுஞ் சாந்தமாம் - வாங்கு வெண்மைக்
கன்னா ரதுவெள்ளிக் காசெனவே பஸ்மிக்கும்
மின்னார்ச் சிகாமணியே விள்.

*இது பிரமேகசமுத்திரம், பல்நோய் இவற்றை நீக்கும், கல்நாரைப் பற்பமாக்கப்பயன்படும்.*

### கொஞ்சிப்பட்டை

மாந்த மகற்றும் வயிற்றுப்பி சந்த விர்க்கு
மாந்த கணச்சுரத்தை மாற்றிவிடும் - சேர்ந்தசிறு
வாதநோ யோட்டும் வகை கொஞ்சிப் பட்டையது
மாதரசே நீயுமுணர் வாய்.

*காட்டுக் கொஞ்சிப்பட்டையானது பாலர் மாந்தம், வயிற்றுப் பொருமல், கணச்சூடு, வாதநோய் இவைகளைப் போக்கும்.*

### பஞ்சவர்க்கம்

ஆலரசு சம்புடனே யத்திகுரு வேல்அவற்றின்
தோல்ஐந்தும் பஞ்சவற்கந் தொல்லுலகில் - ஏலுமதால்
காசஞ் சுவாசங் கபங்கொங்கை வித்திரதி
நாசமுறு மென்றே நவில் 517

ஆல், அரசு, நாவல், அத்தி, இத்தி என்ற ஐந்து மரங்களின் பட்டைகளும் இருமல், இளைப்பு, சிலேட்டுமம், கொங்கைக் கட்டி ஆகியவை நீங்கும்.

## மரப்பிசின்களின் குணம்

### மாம்பிசின்

பெரும்பா டெங்கேயிரத்த பேதியெங்கே முக்க
றரும்பாழும் வெள்ளையெங்கே சாற்றாய் - கரும்பாம்பின்
நாதநிரி யாசஞ்செய் நங்காய் வனத்திலுறை
சூதநிரி யாசமெனச் சொல்

*பெரும்பாடு, இரத்த பேதி, வெள்ளை இவற்றை மாம்பிசின் நீக்கிவிடும்.*

### பிரமதருபிசின்

*சந்திகட்கு நாடிகட்குந் தங்குசுக்கி லந்தனக்கும்*
*புந்தியுரங் கட்குரமும் பூட்டுங்கா - ணுந்து*
*சரமதனுக் காகமநூல் சாற்றுமலர் மாதே*
*பிரம தருவிற்சம் பிசின்*

*இப்பிசின் கீல்கள், நரம்புகள், சுக்கிலம், அறிவு, மார்பு ஆகியவற்றிற்குப் பலத்தையுண்டாக்கும்.*

### மலைவேப்பம் பிசின்

*மலைவேம்பு தன்பிசின்தான் வாத கரப்பான்*
*வலுமேகக் கட்டியிவை மாற்றும் - நலமீறு*
*தாதுவைஉண் டாக்குஞ் சலப்பேதி யைக்கட்டும்*
*மாதே யிதனை வழுத்து* **518**

*கருங்கரப்பான், வாதகரப்பான், மேகக்கட்டி, நீர்ப்பேதி இவற்றை நீக்கி விந்துவை விருத்தி செய்யும்.*

### கருங்காலிப்பிசின்

*கருங்காலி யின்பிசின்றான் காரார் கரப்பான்*
*வருமேக நீரிழிவை மாற்றும் - விரைவாய்ப்*
*பெரும்பாட்டை நீக்கும் பெருந்தாது விர்த்தி*
*அரும்பு மெனக்கண் டறி* **519**

*இது கருங்கரப்பான் மேகமூத்திரம், நீரிழிவு, பெரும்பாடு ஆகியவற்றைப் போக்கி விந்துவை வளர்க்கும்.*

### வாகைப்பிசின்

*வாகைப் பிசின்மேகம் வன்கிரந்தி கட்டியையும்*
*ஏகத் துரத்தும் இதுநிசமே - மாகனக*
*மேனி கொடுக்கு மிகுத்தபலன் உண்டாக்குந்*
*தேனினிய மென்மொழியே தேர்* **520**

*இவ்வாகைப்பிசின் மேகம், வன்கிரந்தி, கட்டி ஆகியவற்றை விலக்கி அழகையும், வலிமையையும் உண்டாக்கும்.*

### இலவம்பிசின்

மேகவெட்டை நீர்ச்சுருக்கு மெய்யனற் கிருச்சரத்தின்
வேகமதி காரமென விள்ளுநோ - யேகவென்றால்
வாரணியுங் கும்பமுலை மாதே மறைப்பின்றிப்
பூரணி ரசத்தைப் புகல்

மேகவெட்டை, மூத்திரக்கடுப்பு, நீர்ச்சுருக்கு உட்சுரம், கிரீச்சர வேகம், பேதி ஆகியவற்றை இலவம்பிசின் நீக்கும்.

### விளாம்பிசின்

நல்ல விளாம்பிசினை நற்பாகஞ் செய்தருந்தத்
தொல்லையதி சாரந் தொலைவதொன்றோ - மெல்லியரால்
வந்தவெள்ளை தன்னுடனே மாதர் பெரும்பாடும்
உந்துநீர்ப் போக்கும்போம் உன் **521**

*சுத்தம் செய்யப்பட்ட விளாம்பிசினை, சூரணம், மாத்திரை, முதலியவைகளாகச் செய்துண்டால் கழிச்சல், புணர்ச்சியால் ஏற்பட்ட வெள்ளை, பெரும்பாடு, வெகுமூத்திரம் போன்றவை நீங்கும்.*

### முருங்கைப்பிசின்

முந்துநீ ரைத்தடுக்கும் மோரைப்போ லேயொழுகும்
விந்துவைத்த டிப்பித்து மேனிதருந் - தொந்தக்
கரியநிற வாயுதனைக் காதிவிடு நாளும்
பெரிய முருங்கைப் பிசின் **522**

*இப்பிசின் அதிக மூத்திரம், குட்டம், தொந்தநோய் இவற்றை நீக்கும். சுக்கிலத்தை இருக்கி, அழகையுண்டாக்கும்.*

### விடத்தேரின் பிசின்

விடத்தேரின் றன்பிசின்றான் வெண்மேகம் போக்கும்
அடுத்தபிற மேகத்தை யாற்றுந் - தொடுத்த
மேகக் கரப்பானை விட்டோட்டும் என்றுலகில்
நாகரிக மாதே நவில் **523**

*இதனால் வெண்மேகம், சிழ்ப்பிரமேகம், மேகவெப்பத்தால் ஏற்பட்ட கரப்பான் ஆகியவை நீங்கும்.*

### அடப்பமரப்பிசின்

நெஞ்ச முரக்கு நிகழ்விந்தை யுங்கட்டும்
நஞ்சு மருந்துகளு நல்லமிர்தாம் - விஞ்சுகயக்
கோழை யடக்குங் குலவாதுமை யெனவே
வாழை யுடம்பின் சளிக்குமால்

*இப்பிசினால் விந்துகட்டும். விடமான மருந்துகளும் அமிர்தமாகும். சயத்தால் அதிகமான கபக்கோழை தனது நிலையை விட்டுப் பெயரா தடங்கும்.*

### கருவேலம்பிசின்

நீத்தொழுகும் விந்துவை நிலைக்கப் புரியுமெரி
பூத்தொழுகும் வெள்ளைதனைப் போக்குமிம் – மாத்திரமோ
தேசுதரு மும்முரமுஞ் செய்யும் பெரியோராற்
பேசு கருவேலம் பிசின்

*இது நீர்த்துப்போன சுக்கிலத்தை இறுகச் செய்யும். எரிச்சலுடன் விழும் சீழ்ப்பிரமேகத்தை நீக்கும். அழகையுண்டாக்கும்.*

### ஆவாரைப் பிசின்

பெருநீர் மறிக்கும் பிரமேகம் போக்கும்
வருநீர்ச் சுறுக்குதனை மாற்றுந் - தருநீர்மை
பூணுமேனிக் கமலப் பொன்னே பிடகரெலாம்
பேணு மேகாரிப் பிசின்.

*ஆவாரைச் செடியின் பிசின் வெகுமூத்திரம், பிரமேக நோய், வாதகிரீச்சரம், எரிச்சல் இவற்றைப் போக்கும்.*

### புற்பிசின்

நெஞ்சிற் குரஞ்சலம்போ நீத்தவிந்து விற்குறுதி
வஞ்சியர்தம் போகத்தில் வன்மையா - நஞ்சைத்
தடவியகூர் வாளென்னச் சாற்றும் விழியா
யடவிவரு புற்பிசினென் றால்

*காட்டிலுள்ள புற்பிசினால் மார்பு, நீர்த்த சுக்கிலம், புணர்ச்சி இவை பலம்பெறும்.*

## மர இலைவகைகளின் குணம்

### மரியங்கொழுந்து

வாயருசி நீர்ச்சுரப்பு வாந்தி கடிதேகும்
பேயிரத்த சீதமென்ற பேதியறும் - பாயு
மரியங்க மொத்தவிடை யாரா வமிர்தே
மரியங் கொழுந்தை வழுத்து

*இதனால் ருசியின்மை, வாய்நீர்ச்சுரப்பு, வாந்தி, இரத்தபேதி, சீதபேதி ஆகியவை நீங்கும்.*

### கருவேல் கொழுந்து

கண்டாலு வின்றளிரைக் கல்லிரைத் துத்தயிரி
லுண்டாற் பாஷாணவெப்ப மோடுங்காண் - கண்டாவி
வந்தசிவப் பேகுமதை மாதர் பாலா லரைத்து
வெந்தவடை கண்ணிலொத்த வே.

*இக்கொழுந்தைத் தயிரில் அரைத்துக் குடித்தால் பாடாணவேகம் நீங்கும். முலைப்பாலில் அரைத்து அடைதட்டி காய்ந்த சட்டியிலிட்டு வெதுப்பி அற்ப சூடாக ஒத்தடமிட்டால் கண்சிவப்பு மாறும்.*

### புளியிலை

அழுபுண்ணை நீக்கும் அடல்சோபை மாற்றும்
எழுபாண்டு வைப்போக்கும் இப்பால் - முழுதும்
அளியச்சி வந்தகண்ணோ யாற்றுங் கனலாம்
புளியிலையை நன்றாய்ப் புகல் **524**

*வெப்பமான புளியிலை அளிந்த புண், சோபை, பாண்டு, கண்சிவத்தல் இவற்றை நீக்கும்.*

## வேப்பிலை

கிருமிகுஷ்ட மாந்தங் கெடுவிடஞ்சு ரங்கள்
பொருமியம சூரிகையின் புண்க - ளொருமிக்க
நிம்பத் திலையிருக்க நீடுலகி னீங்காமற்
கம்பத் திலையிருக்கக் காண் 525

*வேப்பிலையால் புழுக்கள், பெருவியாதி, மாந்தம், மகாவிடம், சுரநோய், அம்மை கொப்புளத்தால் ஏற்பட்ட புண் இவைகளை நீக்கும்.*

## முருங்கை இலை

செறிமந்தம் வெப்பந் தெறிக்குந் தலைநோய்
வெறிமூர்ச்சை கண்ணோய் விலகும் - மறமே
நெருங் கையிலை யொத்தவிழி நேரிழையே நல்ல
முருங்கை யிலையை மொழி 526

*இது அக்கினிமந்தம், உட்சூடு, தலைநோய், பித்த மூர்ச்சை, கண்ணோய் ஆகியவற்றை நீக்கும்.*

## அகத்தி இலை

மருந்திடுதல் போகுங்காண் வன்கிரந்தி வாய்வாந்
திருந்த அசனஞ் செரிக்கும் – வருந்தச்
சகத்திலெழு பித்தமது சாந்தியாம் நாளும்
அகத்தியிலை தின்னு மவர்க்கு 527

*அகத்தியிலை மருந்திடுதலை (இடுமருந்து) நீக்கும். பித்தம், வன்மையான கிரந்தியைப் போக்கும் உணவைச் செரிக்கச் செய்யும்.*

## செவ்வகத்தி இலை

செவ்வகத்திப் பன்னஞ் சிலே ஷ்மமதை யுண்டாக்கும்
வவ்வுபல சிந்தூ ரம் வைப்பதற்காங் - கவ்வு
நவநீத பஸ்பமதை நாளுமுடிப் பிக்குஞ்
சிவமாக்குந் தாளகத்தைத் தேர் 528

*இது சிலேட்டுமத்தை உண்டாக்கும். பலவகை செந்தூரங்கள், நவநீத பற்பம், தாளகசுத்தி இவற்றிற்கும் இது துணை நிற்கும்.*

## பசுமுன்னை இலை

வாயருசி சோபைஐய மாறாக் கரப்பனெழும்
வாயுமந் தாக்கினிம யக்கமென்ற - நோய்கள்
அறுமுன்னை யுன்னுவர்கட் காழி யுலகில்
நறுமுன்னை தன்னிலையை நாடு 529

*சுவையின்மை, வீக்கம், கபம், கரப்பான் இவற்றையுண்டாக்கும். வாததோடமும், அக்கினிமாந்தமும் மயக்கமும் நீங்கும்.*

## கருவேப்பிலை

வாயி னருசி வயிற்றுளைச்சல் நீடுசுரம்
பாயுகின்ற பித்தமுமென் பண்ணுங்காண் - தூய
மருவேறு காந்தளங்கை மாதே யுலகிற்
கருவேப் பிலையருந்திக் காண் 530

இது சுவையின்மை, வயிற்றுளைச்சல், பழஞ்சுரம், பித்தம் இவற்றை நீக்கும்.

## சிற்றுழா பேருழா இலை

சிற்றுழா மூலரத்தஞ் சீழ்மூலம் போக்கிவிடு
மற்றதொரு பேருழா வாய்த்திடினோ - உற்றகுத
மூன்றாம் வலைய முளையாசனக் கடுப்பைத்
தோன்றா தகற்றிவிடுஞ் சொல்

*சிற்றுழா இலை இரத்தமூலம், சீழ்முலம் இரண்டையும் போக்கும். பேருழாமரம் ஆசனக்கடுப்பை நீக்கும். சூதகக் கடுப்பைப் போக்கும்.*

## தெங்கு - பனை - இவைகளின் குருத்து

தென்னங் குருத்தாற் சிலேஷ்ம வலிநீங்கும்
மன்னுதிர மூலமது மாறுங்காண் - உன்னும்
பனங்குருத்து தின்றாற் பகர்உதிர மூலங்
கனம்பெருகும் பேதியுமாங் காண் 531

*தென்னங்குருத்து, சிலேட்டும வலியை நீக்கும். இரத்த மூலத்தைப் போக்கும். பனங்குருத்து இரத்த மூலத்தையும் பேதியையும் உண்டாக்கும்.*

### பேரீச்சு - சிற்றீச்சு - இவைகளின் குருத்து

*பேரீச்சு தன்குருத்தைப் பேணியே தின்பவருக்*
*கீரிச்ச குன்மவலி யேகுங்காண் - ஊரிற்*
*சிறியாச் சுக்குருத்தைத் தின்றால் வயிற்றின்*
*மறியுதிர வாயுவறும் வாழ்த்து* **532**

பேரீச்சுக் குருத்து சிலேட்டும குன்மத்தைப் போக்கும். சிற்றீச்சுக் குருத்து வயிற்றிலேற்படும் இரத்ததவாத குன்மத்தைப் போக்கும்.

### மூங்கில் இலை

குடற்கட்டுச் சூலையுடன் குன்மம் உதிரம்
உடற்கெட்டா தோடி யொழியும் - அடற்றங்கு
வேல்விழிமா தேகேளாய் வேயின் இலைதனக்குக்
கால்வழியுஞ் சோணிதம்போங் காண் **533**

இதனால் குடற்சூலை, வயிற்றுவலி, இரத்தத் தடிப்பு, பிரசவ அழுக்கு இவை நீங்கும்.

## செடியின் இலை வகைகளின் குணம்

### ஆடாதோடையிலை

*ஆடாதோ டைப்பன்னம் ஐயறுக்கும் வாதமுதற்*
*கோடாகோ டிச்சுரத்தின் கோதொழிக்கும் - நாடின்*
*மிகுத்தெழுந்த சன்னிபதின் மூன்றும் விலக்கும்*
*அகத்துநோய் போக்கும் அறி* **534**

*இவ்விலை கபம், வாதம், பல்வகைசுரம், 13 வகை சன்னி, வயிற்று நோய் ஆகியவற்றை நீக்கும்.*

### வெண்நொச்சி இலை

*நாசந் தருவாதம் நாசிப் பிணியழற்சு*
*வாசந் தசனவுரு வன்றோடங் - காசம்அறல்*
*உச்சி யடையை யுறைநோயும் என்படுமோ*
*நொச்சி யடையை நுவல்* **535**

*வெண்நொச்சி இலை வாதம், நாசிப்பிணி, அழல்சுரம், இரைப்பு, பல்வலி, தோடம், இருமல், தலைநோய் இவற்றை விலக்கும்.*

### கருநொச்சி இலை

வாதக் கடுப்பகலும் மாறாத பீநசம்போம்
ஓதப்பேய் ஓடி யொளிக்குங்காண் - வேதைசெய்யும்
மண்டைக் குடைச்சலறும் மாசில்கரு நொச்சிலுக்குப்
பண்டைத் தலைவலிபோம் பார் *536*

*வாதவலி, நாசிவலி, ஐயம், மண்டைக் குடைச்சல் இவற்றை கருநொச்சில் இலை நீக்கும்.*

### வெள்ளாமணக்கிலை

மந்தங் கதித்தெழுந்த வாதம் மருமவலி
பந்தமல மியாவும் பறக்குங்காண் - சந்ததமும்
பூமணக்கு நெய்த்த புரிகுழன்மா தேவெள்ளை
யாமணக்குப் பத்திரியால் ஆய் *537*

இதனால் அக்கினிமந்தம், வாதவலி, மார்புநோய், மலக்கட்டு இவை நீங்கும்.

### செவ்வாமணக்கிலை

குன்மமொடு மந்தங் கொடுவாதம் மெய்வலியுஞ்
சன்மமட்டும் வாராமல் தாண்டுங்காண் - நன்மைதரும்
எவ்வா மணக்குகட்கும் ஏற்றமென்பார் காந்தியுள்ள
செவ்வா மணக்கிலையைச் சேர் *538*

இவ்வாமணக்கிலை வயிற்றுநோய், செரியாமை, வாத நோய், உடற்கடுப்பு இவை விலகும்.

### செம்பை இலை

கட்டியொடு வீக்கங் காயத்துள் நீரேற்றம்
ஒட்டிவரு வாதகபம் ஒட்டுவது - தொட்டுவிடும்
அம்பையிலை வேலைவென்ற வங்கண் மடமாதே
செம்பையிலை வேலையெனத் தேர் *539*

*வாயுக்கட்டிகள், வீக்கம், உடல் நீரேற்றம், வாத, ஐய நோய்கள் இவை செம்பையிலையினால் நீங்கும்.*

## கருஞ்செம்பை இலை

விப்புருதிப் புண்ஆறும் மீறு கரப்பானும்போந்
தப்பாம ல்மேகந் தணியுங்காண் - வெப்பார்
கபரோகம் ஏகுங் கருஞ்செம்பை யொன்றுக்
கிபமா முலைமாதே யெண் 540

*இவ்விலை விப்புருதிக்கட்டி, கரப்பான், பிரமேகம், பித்தம், சிலேட்டும நோய்கள் ஆகியவைப் போக்கும்.*

## வறட்பூலா இலை

சீதரத்தஞ் சேர்த்தேனுஞ் சேர்க்கையின்றி யேனும் வரு
பேதிகள் வயிற்றின் பிடுங்கலினு - பாதிகளும்
பூதலத் திராநல்வறட் பூலாவிலை யரைத்து
மேதித் தயிரிலுண்ண வே.

*இதனை அரைத்து எருமைத்தயிரில் கரைத்துக் குடித்தால் சீதரத்தம் ஏற்படுத்தும் பேதி, இதனால் ஏற்படும் வயிற்றுநோய் அயர்ச்சி இவை நீங்கும்.*

## பாவட்டை இலை

சீதவா தங்களறுந் தீபனமோ உண்டாகும்
வாதங் கபம்ஒழியும் வார்குழலே - போதவே
ஆவட்டைத் தாகசுரம் அற்றுவிடும் தோஷம்போம்
பாவட்டைப் பத்திரிக்குப் பார் 541

*இப்பாவட்டையிலையால் ஐயவாதம், வாதம், ஐயம், அயர்ச்சி, தாகசுரம், திரிதோடம் ஆகியன நீங்கும்.*

## பெருஞ்சின்னி இலை

காணாக் கடியும்எதிரி கண்ட விஷக்கடியும்
நாணா திருந்திடவும் ஞாயமுண்டோ - தோணா
வருஞ்சின் மதலைமொழி மாதரசே கேளாய்
பெருஞ்சின்னி மூலியுண்ட பேர்க்கு 542

*இவ்விலையைப் பயன்படுத்தினால் காணாக்கடிவிடம் காணும் கடிவிடம் இவை நீங்கும்.*

## சிறுசின்னி இலை

கடிவிஷமுங் காணக் கடிவிஷமும் மாதர்
இடுவிஷமும் ஓடும்இது வன்றி - நெடியவிழிக்
கன்னிகையே மேகங் கணக்காய்ச்சல் மாந்தமும்போஞ்
சின்னி யிலைக்குத் தெறித்து 543

*வண்டுமுதலான கடிவிடம், காணாக்கடிவிடம் இடுமருந்து, பிரமேகம், கணச்சுரம், அக்கினிமந்தம் இவற்றை நீக்கும்.*

## தழுதாழை இலை

வாதப் பிடிப்பெற்ற வற்காலி யைப்புலிபோற்
போதப் பிடிக்கும் புகலனற்றோ - காத
அழுதாழைப் பீநசத்தை யண்டா தகற்றுந்
தழுதாழைப் பன்னமது தான் 544

சேர்ந்த சொறிசிரங்குஞ் சேர்வாதம் எண்பதும்போம்
ஆய்ந்திடிற்பித்தம் அதிகரிக்கும் - மாந்தம் அறும்
ஐயின் சுரந்தணியும் ஆனதழு தாழைக்கு
மெய்யின் கடுப்பும்போம் விள் 545

*இது பக்கவாதம் முதலான 80 வகை வாதநோய்கள் ஐயபீநசம், புடைகிரந்தி, திண்வாதம், மந்தகபசுரம், தேகக்குடைச்சல் இவற்றை நீக்கி பித்தத்தை உண்டாக்கும்.*

## விராலி இலை

ஆன்ற துரிசிநீ றாகமனத் துன்னினவே
ரூன்ற வருகட்டி யோடதைப்பு - தோன்றிற்
கராலிக் குதளையிளந் தோகாய் விரைவாய்
விராலிக் குழையோடு விள்.

*துரிசை வெளுப்பாக்கவும் அடிகனத்த கட்டிகள் வீக்கம் இவற்றை போக்கவும் விராலி இலை பயன்படும்.*

## எருக்கிலை

எலிவிஷங் குஷ்டம்ஐயம் ஏறு கிருமி
வலிசூலை வாயுவிஷம் மந்தம் - மலபந்தம்
எல்லாம் அகலும் எருக்கிலை யைக்கண்டால்
வில்லார் நுதலே விளம்பு 546

இதனால் எலிவிடம், பெருநோய், ஐயநோய், கிருமிநோய், ஐவகை வலி, கீல் வீக்கம், வாதநோய், விடம், அக்கினிமந்தம், மலக்கட்டு இவை நீங்கும்.

## காட்டாமணிக்கிலை

கட்டிவிரணங் கரப்பான்பி லீகம்அதி
கெட்டியுறு குன்மங் கிளைத்தசிரங் - கொட்டுமே
கூட்டோ டொழியுங் குவடனைய கொங்கைமின்னே
காட்டா மணக்கிலையைக் கண்டு 547

காட்டா மணக்காற் கபவாத சூலையுடன்
வீட்டு தலைநோய் விரிகிரந்தி - வாட்டுகின்ற
உண்மூலம் போகும் உடம்புலர்த்தல் வெட்டைஅறுந்
திண்மூலதாதுவுமாஞ் செப்பு 548

இவ்விலை மேகக்கட்டி புண், கரப்பான், பிலீகம், கண்டக்கட்டி, ஜுரங்கள், ஐயவாதக் குத்தல், தலை நோய், பெரும்புண், உள்மூலம், உள்ளுருக்கு வெள்ளை இவற்றைப்போக்கி சுக்கில விருத்தியை உண்டாக்கும்.

## தவசுமுருங்கை இலை

தவசுமுருங் கைத்தழைக்குத் தையலே கேளாய்
அவசியம் பீநசம்உண் ணாக்கும் - உவசர்க்க
ஐயஞ்சு வாசகபம் அண்டாது குத்திருமல்
வையம்விடுத் தேகும் வழுத்து 549

இவ்விலை வாத பீநசம், உண்ணாக்கு, சுவாசநோய், கபம், பொடியிருமல், இவற்றை நீக்கும்.

### வெதுப்படக்கி இலை

*வெள்ளெடுப்பு சீதம் வெதும்பல் சுரத்துடனே*
*அள்ளெடுக்கு மாந்தம் அதிவாதந் - தெள்ளுமொழி*
*மாதே வெதுப்படக்கி வன்றழையுட் காய்ச்சலொடு*
*கோதேறி ரத்தமும்போக் கும்* **550**

*வெளுப்பான பேதி, சிலேட்டுமநோய், தாபம், ரூட்சை, அள்ளுமாந்தம், வாதம், உட்சுரம், வெதுப்பு இவற்றைப் போக்கும்*

### பெரியாநங்கை இலை

*பெரியாநங் கைத்தழைக்குப் பித்தம்என்ப தெல்லாந்*
*தெரியாமல் ஓடும்இது திண்ணம் - பிரியா*
*மலம்அறுக்கும் பஸ்பவகை வைப்பதற்கும் ஆகுஞ்*
*சிலைநுதலே நன்றாய்த் தெரி* **551**

இப்பெரியாநங்கை இலை பித்தநோய்கள், மல பந்தம் இவற்றை நீக்கும்.பல்வகை பற்பங்கள் செய்யப் பயன்படும்.

### சிறியாநங்கை இலை

*சிறியாநங் கைத்தழையைச் சேவித்த பேரைப்*
*பிறியார் மடந்தையர்கள் பின்னும் - அறியதனால்*
*டங்கணமும் நீறுந் தனியழகும் உண்டாகுந்*
*திங்கண்முக மாதே தெளி* **552**

*இம்மூலிகை பெண்வசியம் செய்யும். வெங்காரத்தை பற்பமாக்கும். உடல் வனப்பு தரும்.*

### பருத்தி இலை

*பருத்தியிலை மொட்டிரண்டைப் பாலிலரைத் துண்ண*
*வருத்துகின்ற மேகமெல்லா மாறும் - பருத்த*
*விரத்தபித்தத் தோடு விரணவீக் கம்போம்*
*அரத்தவிதழ் மாதே யறை* **553**

*பலம் அளவு இலை அல்லது மொட்டை அரைத்துப் பசும்பாலில் உண்டால் மேகங்கள், இரத்த பித்தம், புண், சோபை இவை நீங்கும்.*

### கூத்தங்குதம்பை இலை

குத்துகின்ற நோய்போக்குங் கோரபித்தம் உண்டாக்கும்
அத்திசெய்யுஞ் சந்நி யகற்றுங்காண் - சத்திக்கு
மாத்தங்கு வாய்வொழிக்கும் மண்டூரத் திற்குதவுங்
கூத்தங் குதம்பைக் குழை **554**

*இவ்விலை சூலநோய், சன்னிவாதம், வாதநோய் ஆகியவற்றை நீக்கும். பித்தகோபத்தை விருத்தி செய்யும். மண்டூரத்தைச் செந்தூரமாக்க உதவும்.*

### அரிவாள் மூக்குப் பச்சிலை

வெட்டுக் காயத்தை விரைவி லுலர்த்திவிடுந்
துட்டக் கடுவோட்டுந் தோன்றிமிகக் - கெட்ட
பிரிவாற் றலையைப் பிளக்கும் வளிநீக்கு
மரிவாள் மூக்குப்பச் சிலை

*இது வெட்டுக்காயம், பெருவிடம் உதிரக்கெடுதியால் பிறந்த தலைவலி இவற்றைப் போக்கும்.*

### துத்தி இலை

மூலநோய் கட்டி முளைபுழுப்புண் ணும்போகுஞ்
சாலவதக் கிக்கட்டத் தையலே - மேலும்அதை
எப்படியே னும்புசிக்க எட்பிணியுஞ் சாந்தமுறும்
இப்படியிற் றுத்தியிலை யை **555**

*இவ்விலையை ஆமணக்கு நெய்யால் வதக்கிக் கட்டினால் மூலநோய் கட்டியின் இரணமுளைகள், கிருமி, இரணம் இவை நீங்கும். இவ்விலையை எப்படி உண்டாலும் பலவகைநோய்கள் அகலும்.*

### விழுதி இலை

விழுதித் தழைகரப்பான் வெண்மேகம் நீக்கும்
பழுபடுவன் சூலைநோய் மாறும் - எழுபேதி
யாக்கும்அதி மாந்தம் அகக்கிருமி துன்மலமும்
போக்கும் அதுவே புகல் **556**

*விழுதியிலை கரப்பான், வெண்மேகம், படுவன், சூலை மந்தம், மலக்கிருமி இவற்றைப் போக்கும். பேதியை உண்டாக்கும்.*

## கணப்பூண்டின் இலை

கணப்பூண் டிலைமேகக் கட்டியைக்க ரைக்கும்
மணக்குமிக வாய்க்கு மதுரஞ் - சிணுக்கான
வாதகணம் பித்தகணம் மாற்றுங் கபச்சுரத்தின்
பேதம்அறப் போக்கும்மெனப் பேசு 557

*இவ்விலை மேகக்கட்டியைக் கரைக்கும். தேரைக் கணம், ஆமக்கணம், சிலேட்டும சுரம் ஆகியவற்றை விலக்கும்.*

## காரை - சேம்பு - இவைகளின் இலை

காரைத் தழைக்குக் கடுப்பிரத்தம் போம்புளியைச்
சோரப்பெய் தாக்கிச் சுவைத்தறிநீ - பாரிலுள்ள
சேம்பிலைக்கு நற்புளியைச் சேர்த்துச் சமைத்துண்டால்
கூம்பிட்ட மூலம்அறுங் கூறு 558

*புளியிட்டுக் கடைந்த காரைஇலை இரத்தக்கடுப்பைப் போக்கும். அவ்வாறே அமைந்த ஊர்ச் சேம்பிலை மூலத்தைப் போக்கும்.*

## பிடங்குநாறி இலை

பிடங்குநாறிப் பன்னப் பேச்சை யெடுக்கி
லடங்கு மலச மிஃதன்றித் - தொடங்குகின்ற
நீர்ச்சுரப்பும் வாங்கிவிடு நீடுசட ராக்கினியாந்
தேர்ச்சியுறும் புத்திக்குத் தேர்

*இவ்விலை செரியா மாந்தம், நீர்க்கோவை இரண்டையும் போக்கும். பசியும் புத்திரதனிவும் உண்டாகும்.*

## அவுரியிலை

உரியஅவு ரித்தழைத்தான் ஓது பதினெண்
அரியநஞ்சைத் தின்றவர்க்கும் ஆகும் - தெரிவரிய
வாதவெப்பு காமாலை மைந்தர்க் குறுமாந்தஞ்
சீதம் அகற்றுந் தெரி 559

சந்நி பதின்மூன்றுஞ் சந்தொடித்த வாதமுதல்
உன்னு விஷக்கடியும் ஓடுங்காண் - மின்னுங்
கவுரிநிறம் உண்டாகுங் காசினியுள் நல்ல
அவுரியிலை தன்னால் அறி 560

*18 வகை தாவரவிடங்கள், வாதசுரம், காமாலை, மாந்தம், சீதளம், சன்னிநோய்கள் 13, கீல்வாதம், பாம்பின் விடங்கள் இவற்றை நீக்கும். உடற்கு நல்ல நிறத்தைக் கொடுக்கும்.*

## குப்பைமேனியிலை

தந்தமூ லப்பிணித்த் தந்திடுபுண் சர்வவிஷம்
உந்துகுன்மம் வாதம் உதிரமூ - லந்தினவு
சூலஞ்சு வாசம் தொடர்பீந சங்கபம்போம்
ஞாலங்கொள் மேனியத னால் 561

*தீப்புண் பலவகைத் தாவரவிடங்கள், வயிற்றுவலி, வாதநோய், இரத்த மூலம், தினவு, சூலை, இரைப்பு, பீநசம் கபாதிக்கம் ஆகியவற்றை நீக்கும்.*

## மிளகுத்தக்காளி இலை

மந்தரக் கினிசோபை வாந்திகழல் வாயுவெப்பம்
இந்துநோய் பாண்டோ டெதிர்விக்கல் - முந்த
வளருமுத் தோஷநோய் மாற்றுங்கைப் பான
மிளகுதக் காளியிலை மெய் 562

மிளகுதக் காளியிலை வெண்நாகங் கட்டும்
இளகுபல சிந்துரத்திற் கேற்குங் - கொளுவுகின்ற
மேகச் சொறியகற்றும் வெட்டை யனல்தணிக்கும்
மாகச் சணிமுலையாய் வாழ்த்து 563

*கசக்கும். இவ்விலை அக்கினிமந்தம், வீக்கம், வாந்தி, வாதம், சுரம், சோமநோய், பாண்டு, விக்கல், திரிதோடம், மேகச் சொறி, வெள்ளை உட்சூடு இவற்றை நீக்கும். வெள்ளியத்தைக் கட்டும். பல்வகைச் செந்தூரங்கட்குப் பயன்படும்.*

## தும்பை இலை

சீறுகின்ற பாம்போடு சில்விஷம்கால் சென்னிவலி
ஏறுகபம் மாந்தம் இருக்குமோ - நாறுமலர்க்
கொம்பனைய மாதே குளிர்சீத சந்நிவிடுந்
தும்பையிலை யென்றொருக்காற் சொல் 564

தும்பையிலை யையுண்ணு சோற்றுக்கெ லாங்கறியாய்
அம்புவியோர் மிக்க அருந்துங்கால் - வெம்பிவரு
மேகமொடு கண்புகைச்சல் வீறுகை காலசதி
தாகம்அதி சோம்பலுறுந் தான் 565

*இவ்விலை பாம்பின் விடம், வாதநோய், தலைவலி, கபதோடம், அக்கினி மந்தம், சிலேட்டுமம், சன்னி இவற்றை நீக்கிவிடும். புளியிட்டுக் கடைந்து உணவோடு உண்டால் பிரமேகம், கண்புகைச்சல், கைகால் அசதி, தாகம், சோம்பல் இவை ஏற்படும்.*

## முள்ளங்கி இலை

வாயுமிகும் பித்தம் வளரும் கிருமியுமாம்
ஓய்வுறா நெஞ்செரியும் உண்டாங்காண் - தூயநிற
முள்ளங்கி யின்இலையை முற்றும்உண்டாற் குன்மவலி
யுள்ளாங் கிளம்பா துரை 566

இவ்விலை வாயு, கிருமி, நெஞ்செரிவு, இவற்றை உண்டாக்கும். வயிற்றுவலியைப் போக்கும்.

## சுவற்றுமுள்ளங்கி இலை

நீரையிறக்கிவிடு நெஞ்சுவலியைத் தொலைக்குங்
கோர வதைப்பைக் குடிகெடுக்கு - நேரே
தவத்தி லுயர்ந்தோர் மயங்குஞ் சாயக்கண் மாதே
சுவற்று முள்ளங்கியது சொல்

*நீர்க்கட்டு, நெஞ்சுவலி, வாதநோய் இவற்றைப் போக்கும்.*

### கறுப்பு வழுதுணை, பருவழுதுணை, சிறுவழுதுணை

வழுதுணையின் பேதம் வழுத்தின் மிகநோய்க்காம்
வழுதுணக டம்மை நவில் வாமை – வழுதுணைப்பன்
னஞ்சலம் போக்குங்கா லடக்கும் பருது சன்னம்
பஞ்சமூலத்தி லொன்றாகும் பார்

*கறுவழுதுணை நீர்க்கட்டையும், பருவழுதுணை வாதநோயையும், சிறுவழுதுணை (பஞ்சமூலத்தொன்பது). பல பிணிகளையும் போக்கும்.*

### புகை இலை

மருந்தை முறித்துவிடும் வாய்வறளச் செய்யுந்
திருந்து பலவீனஞ் சேர்க்கும் – பொருந்துபித்தம்
உண்டாக்கும் விந்தழிக்கும் ஒது புகையிலையைக்
கண்டார்க்கும் ஆகாது காண் **567**

*இது வாய்வறட்சி, கெட்ட நாற்றம், பித்தம், பலமின்மை, விந்தழிவு, மருந்துமுறிவு இவற்றையுண்டாக்கும்.*

## கொடியின் இலை குணம்

### தூதுளை இலை

காதுமந்தங் காதெழுச்சி காசந் தினவுமதம்
ஒதுமந்த முத்தோஷம் உட்சூலை - தாதுநட்ட
மீதுளைப் பத்திரியை மேவச்செய் வாராய்ந்தோர்
தூதுளைப் பத்திரியைத் துய்த்து **568**

காதுமந்தம், காதெழுச்சி, காசம், நமைச்சல், அக்கினிமந்தம், திரிதோடம், உட்குத்தல், விந்து நட்டம், மேலிளைப்பு ஆகியவை தீரும்.

### பறங்கி இலை

பித்தமொடு வாதம் பெருந்தாக மும்பெருகுஞ்
சத்தமொடு பேதி தலைப்படுங்காண் - சுற்றுங்
கறங்காகு மேனியுள்ளே கவ்வுபுழுச் சேரும்
பறங்கி யிலைக்குப் பகர் **569**

பித்தம், வாதம், பெருந்தாகம், இரைச்சலுடன் கூடிய பேதி, உடல் படபடத்தல், கிருமி இவைகளுண்டாகும்.

## சுரை இலை

நீரிழியும் வீக்கம்போம் நேரே மலம்இறங்கும்
பாரமுறு சோபை பறக்குங்காண் - தீராத்
திரிதோஷம் போகுஞ் செறிந்த சுரையின்
உரிய கொழுந்திலையை யுண் 570

*நீரழிவு, வீக்கம், முத்தோடம் இவை நீங்கும். மலம் இளகி இறங்கும்.*

## பேய்ச்சுரை இலை

மூலரோ கத்தின் முளையைக் களைந்துவிடும்
ஆவவி ஷத்தையும்அ கற்றுங்காண் - ஞாலமதில்
வாய்ச்சிவிடங் கிட்டுவது மாவருத்தம் வெற்பிலுறும்
பேய்ச்சுரையின் பத்திரத்தைப் பேணு 571

முளை மூலநோய், கொடிய பாம்பின் விடங்கள் இவற்றைப் போக்கும்.

## , பாகல் இலை

பிறியாக் கிருமியறும் பேதியுண்டாந் தோஷம்
முறியும் இரதம் முறியுங் - குறியாத
மாகற் புடைய மடமயிலே யெப்போதும்
பாகற் றழைக்குப் பயந்து 572

*கிருமி நோய், முத்தோடம் இவை நீங்கும். இரசத்தை முறிக்கும், பேதி உண்டாகும்.*

## அவரை இலை

அவரையிலைக் குத்தலைநோய் ஆழ்ந்தகி ராணி
யிவரும் விஷசிமுதல் ஏகந் - தவறாமல்
கொண்டவர்க்குத் தீபனமாங் கோதாய் விரணமறுங்
கண்டவர்க்குத் தோற்றுமிது காண் 573

*தலைநோய், கிராணி விடம், சிரங்கு ஆகியவை நீங்கும். பசியை உண்டாக்கும்.*

## காராமணி இலை

காரா மணியிலையைக் காய்ச்சியுண்டால் நாவுரிசை
வாராத வாயுமிக வந்துமே - நேரேறு கேள்
மூலம் விளையும் முசியாக் கழிச்சலுண்டாற்
தாலம்அதில் அவ்விலையை தள் 574

*இதனைச் சமைத்துண்டால் வாத நோய், வாத மூலம், நீங்காபேதி இவை உண்டாகும்.*

## கொடிக்குறிஞ்சா இலை

கரப்பான் கிரந்தி கடிய விருமல்
உரப்பாம் விஷபாகம் ஓட்டும் - நிரைப்பான
அக்கரத்தை மாற்றிவிடும் ஆயிழையே பித்தமுமாந்
தக்ககுறிஞ் சாவினிலை தான் 575

*பித்த குணமுடைய இவ்விலை கரப்பான், கிரந்தி, புண், காசம், கடுமையான விடங்கள், நாப்புண் இவற்றை நீக்கும்.*

## கறிப்பாலை இலை

மேகம்அனல் வெட்டைசுரம் வீறுபித்த முந்தொலையும்
போகமுறும் மெய்மருந்தும் பொய்மருந்தாம் - பாகுமொழி
மானே கறிப்பாலை மன்னும்இலை யைத்தினமுந்
தானே யருந்துவர்க்குத் தான் 576

*மேகவனல், கீழ்மேக சுரம், பித்தம் இவற்றை நீக்கி சுக்கில விருத்தியை உண்டாக்கும்.*

## ஊதிப்பாலை இலை

மேக மகலும் விழிகுளிரு நாளத்தின்
வேக மகலுங்க மேனியிடும் - மோகமண
வாசிப் பாலைப் பருவ மாந்தரை வீக்குங் கொடியே
ஊசிப் பாலைப் பன்ன முண்

*பிரமேகம், ஆண்குறி துவார வெப்பம் இவை நீங்கும். கண் குளிர்ச்சியடைந்து தேக பலம் உண்டாகும். அழகை மிளரச் செய்யும்.*

## கோவை இலை

கண்ணுங் குளிர்ச்சிபெறுங் காசமொடு வாயுவறும்
புண்ணுஞ் சிரங்கும் புரண்டேகும் - நண்ணுடலம்
மீதிலார் வெப்பகலும் வீழாநீர்க் கட்டேகுங்
கோதிலாக் கோவையிலைக் கு 577

*இது இருமல், பெருவிரணம், சிறு சிரங்கு, தேகச்சூடு, நீரடைப்பு இவை நீங்கும். கண் குளிர்ச்சிடையும்.*

## முசுமுசுக்கை இலை

இருமலுடன் ஈளை யிரைப்பு புகைச்சல்
மருவுகின்ற நீர்த்தோஷம் மாறுந் - திருவுடைய
மானே முசுமுசுக்கை மாமூலி யவ்விலையைத்
தானே யருந்துவர்க்குத் தான் 578

*இருமல், ஈளை, இரைப்பு, புகைச்சல், நீர்த்தோடம் இவற்றை முசுமுசுக்கை இலை நீக்கும்.*

## கோழியவரை இலை

ஆழிசுற்றும் வையத் தடர்ந்தபே ராமையொரு
நாழியினிற் கெட்டு நலியுங்காண் - கோழிகேள்
கோழியவ ரைத்தழைக்குக் குன்மங் குடல்வாதம்
ஊழிவரைக் கும்வாரா தோது 579

*இந்த இலை வயிற்றிலுள்ள ஆமக்கட்டி, வயிற்று நோய், ஆந்திர பித்தவாதம் இவற்றைப் போக்கும்.*

## முசற்காதி இலை

பீசத் தெழுந்த பெருவீக்கங் கைகாலில்
வீசிப்பு டைத்த வெறும்வீக்கம் - பேசாமல்
ஏகும் முசற்கா திலையிருக்கும் ஊரைவிட்டுப்
பாகுமொழி மாதே பகர் 580

*இது குடலண்ட வீக்கம், கைகால் முட்டுக்களின் வீக்கம் இவற்றை விலக்கும்.*

## கழற்சி இலை

விரைவாதஞ் சூலையறும் வெட்டையனல் ஏகும்
நிரைசேர்ந்த குன்மம் நிலையா - துரைசேர்
அழற்சி விலகும் அருந்திற் கசப்பாங்
கழற்சியிலை யென்றுரைக்குங் கால் 581

*இந்த விதை வாதம், சூலைக்கட்டு, பிரமேகம், சுரம், பல்வகை குன்மங்கள், உள்ளழலை ஆகியவற்றை ஒழிக்கும்.*

## வெண்கழற்சி இலை

ஏற்ணடத் தோடே யிறங்கண்டம் மெத்தவுமே
வீறண்டம் எல்லாம் விலக்குங்காண் - தூரண்ட
வள்ளைக் குழையடிபோம் வாள்விழிமா தேநல்ல
வெள்ளைக் கழற்சியிலை விள் 582

*ஏறண்டநோய், இறங்கண்டநோய், தசையண்ட பிணியையும் போக்கும் பண்பு வெண்கழற்சியிலைக்கு உண்டு.*

## வரிக்குமட்டி இலை

பற்றுதிரப் பூச்சிகளைப் பற்பலவா மந்தத்தைச்
சுற்றுதிரப் பித்தத்தைத் தூவிடத்தை - முற்றும்
அரிக்கும் அட்டி யாயிலைமா தங்கருரையன்றோ
வரிக்குமட்டி யாயிலைமா தே 583

*இதன் இலை உதிரப்பூச்சிகள், பலவகை மந்தங்கள், இரத்த பித்தம், தலையைப் பற்றிய சர்ப்ப விஷங்கள் ஆகியவற்றை விரைவாகக் கொடுக்கும்.*

## சிறுபூனைக்காலி இலை

சிறுபூனைக் காலியிலை சிவ்விஷத்தைப் போக்கும்
உறுகாந்தத் தைச்சிந் தூரிக்குஞ் - சிறுமாந்தம்
ஐயங் கபந் தீர்க்கும் ஆர்ந்த கய நோய் விலக்கும்
வையந்தனில் இதனை வாழ்த்து 584

*வண்டுகடி முதலான சிலவிடங்கள், மந்தம் சிலேட்டுமநோய், கோழைக்கட்டு, சயம் ஆகியவற்றை இவ்விலை போக்கும். காந்தத்தைச் செந்தூரமாக்கப் பயன்படும்.*

## வேலிப்பருத்தி இலை

ஆவித் தெழுந்தநோய் அத்தனையுந் தீருமே
வேலிப் பருத்தியதின் மெல்இலையால் - வேலொத்துக்
கண்டிக்கும் வாதங் கடுஞ்சந்தி தோஷமும்போம்
உண்டிக்கும் வாசனையாம் ஒது 585

உத்தா மணியிலையால் உள்வயிற்றுக் குன்மமொடு
குத்தாம்வலியுங் குளிரும்போம் - பற்றி
இசிக்கும் வலியிரைப்பும் எத்தடிப்பும் ஏகும்
பசிக்கும் அதி மாந்தமும்போம் பார் 586

*இவ்விலை வாதம், சன்னி, முத்தோடம் வாதகுன்மம், சரீரக் குடைச்சல், குத்தல், நடுக்கல், தனுர்வாதம், சுவாசம், பலவிதத் தடிப்புகள் அக்கினிமாந்தம் இவற்றை நீக்கி பசியை உண்டாக்கும்.*

## தரா இலை

புண்கிரந்தி கட்டி பொருசந்தி கிடமும்போங்
கண்புகைச்சல் காசங்க திக்கும்என்பார் - பெண்களுக்குப்
பாலும் பெருகும் உள்ளே பற்றுதிரச் சிக்கல்விடும்
ஏலுந் தராவின்இலைக்கு 587

*இவ்விலை புண், கிரந்தி, வித்திரிதிக்கட்டி, சன்னி, எரிகிருமி, உதிரச்சிக்கல் இவற்றைப்போக்கும். கண்புகைச்சல், கண்காசம், முலைப்-பால் விருத்தி ஆகியனவற்றை உண்டாக்கும்.*

## செந்தரா இலை

அனில முளையும் அரோசகமும் நீங்கும்
தனியான தோஷம்அது தாழுங் - கனிமொழியே
வெந்தாரைச் சூடும்விடாயும் போந்தீ பனமாஞ்
செந்தரா வின்தழைக்குச் செப்பு 588

*வாதமுளை மூலம், சுவையின்மை, வாதம் முதலிய தோடங்கள், நீர்த்தாரைச்சூடு, களைப்பு இவை நீங்கும்.*

### விஷமூங்கில் இலை

பிளவையுகிர்ச் சுற்று பெரும்படுவன் வீக்கம்
அளவில்நோய் காதெழுச்சி ஆற்றும் - அளவையுறா
தோங்கி வளர்ந்தமுலை யோவியமே நீண்டவிஷ
மூங்கில்இலை நன்மூலி முன் 589

*இராசப்பிளவை, நகச்சுற்று, பெரும்படுவன், சோபை, சிலேட்டும காதெழுச்சி, கர்ணசூலை முதலிய நோய்களைப் போக்கும்.*

### சதாபலை இலை

கணமாந்த ரூட்சை கணக்கழிச்சல் வாந்தி
குணமாம் பசியுங் குலவும் - வணமயிலே
கூடுநிறை கருப்பக் கோதையர்க்காம் வேதகலு
நாடுசதா யலையிலையி னால்.

*பால்மந்தம் முதலானவற்றால் உண்டாகும் சுரம், கணக்கழிச்சல், கர்ப்பிணிகளின் வலிகள், இவற்றை நீக்கி, பசியை உண்டாக்கும்.*

## கீரைவகைகளின் குணம்

### கருணைத்தண்டு

சுத்தகு தாங்குரத்தைத் துட்டகபம் மேதையதி
கத்தை விலக்குங் கறிஅமைக்கில் - பத்தியமாஞ்
சீரணத்தையுங் கொடிய தீபனத்தை யுங்கொடுக்குஞ்
சூரணத்தின் தண்டெனவே சொல் 590

*கருணைக்கிழங்கால், மூலம், கபம் இவை நீங்கும். தாதுவிருத்தியும் சீரணமும், பசியும் உண்டாகும்.*

### கீரைத்தண்டு

தண்டுமெத்த வாய்வு தணியாத சீதளமாம்
விண்டுரைக்கில் சின்னோய்போம் விள்ளவோ - கொண்டக்கால்
நீர்க்கடுப்பு வெட்டையனல் நில்லாது நேரிழையே
போர்க்கடுப்பி ரத்தமும் போம் 591

*வாதமும், நீர்ப்பிடிப்புக் குணமும் கொண்ட கீரைத்தண்டு நீர்க் கடுப்பு, வெட்டை, இரத்தபேதி, பிரமேகச்சூடு போன்ற சில நோய்களைப் போக்கும்.*

### வெண்கீரைத் தண்டு

வெண்கீரைத் தண்டுவி யாதியற்ற நற்கறியாங்
கண்காணா தோடிவிடுங் காந்தலெல்லாங் - கண்காணும்
மூலம்அதற் கேற்கும் மூசியா எரிவகற்றுந்
தாலமதில் அக்குணத்தைச் சாற்று 592

*வெப்பம், வெளிமூல நோய், பித்த எரிச்சல் இவற்றை இக்கீரைத் தண்டு நீக்கும்.*

### புதியன்மூலி (புதினா)

அருசியொடு வாந்தி யக்கினியா மந்தங்
குருதி யழுக்குமலக் கொட்ட - விரியுந்
துதிய தன்று சோறிரங்குந் தொல்லுலகி நாளும்
புதியன் மூலிகையைப் புகல்

*இதனால் சுவையின்மை, வாந்தி, அக்கினி மாந்தம், இரத்த அழுக்கு, மலப்போக்கு இவை நீங்கும். உணவில் விருப்பு உண்டாகும்.*

### செங்கீரைத்தண்டு

செங்கீரைத் தண்டதுதான் தீராத பித்தத்தைத்
தங்காமல் ஒட்டிவிடுந் தையலர்க்குப் - பொங்கும்
பெரும்பாட்டை நீக்கும் பெரிய கறியாந்
தரும்பாட்டு வெப்பகற்றுந் தான் 593

*பித்தம், பெரும்பாடு, சன்னிசுரம், இவற்றை செங்கீரைத் தண்டு நீக்கும்.*

### முளைக்கீரை

தளர்ந்தவர்க்கும் பாலருக்குந் தக்கவய தோர்க்கும்
இளங்கீரை நாவுக் கிதமாங் - கிளம்பு
சுரகாசம் போக்குந் தொடர்பசிஉண் டாக்கும்
பிரகாச மாயெடுத்துப் பேசு 594

*காசசுரத்தை நீக்கி பசியைத் தருகின்ற முளைக்கீரை எல்லா வயதோர்க்கும் சிறந்ததாகும்.*

## முள்ளிக்கீரை

நீரைப் பெருக்கிவிடு நீடனலைத் தானெழுப்பும்
பாரநறுந் தங்கத்தைப் பஸ்பிக்கும் - நேரே
விடவிருக்கும் பொற்றட்டை மேவுமல் குன்மாதே
அடவிநிற்கு முள்ளிக்கீ ரை 595

*இக்கீரை நீர்ப்பேதியையும் பசியையும் உண்டாக்கும். தங்க பஸ்பம் செய்ய பயன்படும். தாகம் போக்கும்.*

## அறுகீரை

காய்ச்சல் குளிர்சந்நி கபநோய் பலபிணிக்கும்
வாய்ச்ச கறியாய் வழங்குங்காண் - வீச்சாய்க்
கறுவுமோ வாயுவினங் காமமிக வுண்டாம்
அறுகீரை யைத்தின் றறி 596

*நல்லுணவாகும். அறுகீரை சுரம் நடுக்கம், சன்னி, கபம், வாதம் இவற்றைப் போக்கி தாதுவை விருத்தி செய்யும்.*

## புளிச்சிறுகீரை

தேகசித்தி யாகுஞ் சிறுகாசம் மந்தம்அறும்
போகம்உறும் விந்துவும்நற் புஷ்டியுண்டாம் - வாகாம்
வெளிச்சிறுமான் நோக்கும்விழி மென்கொடியே நாளும்
புளிச்சிறு கீரையுண்ணும் போது 597

*சிற்றிருமல், மந்தம், இவற்றை நீக்கி காயசித்தியையும் புணர்ச்சியில் விருப்பத்தையும் வீரிய விருத்தியையும் உண்டாக்கும்.*

## சிறுகீரை

கண்புகைச்சல் நேத்திரநோய் காசம்படலம் ரசப்
புண்கிரிச்ச ரஞ்சோபை பொங்குபித்தம் - மண்பரவு
தாவரவி ஷங்களும்போம் தாழாத் திருவும்உண்டாம்
கூவுசிறு கீரைதனைக் கொள் 598

*கண்புகைச்சல், கண்ணோய்களான காசம், படலம், இரசப்புக்கண், கிரீச்சரம், சோபை, பித்தம், தாவரவிடங்கள் போன்றவற்றைப் போக்கி சிறுகீரை அழகையுண்டாக்கும்.*

## கலவைக்கீரை

வாதபித்த ஐயத்தை மாற்றும் மலம்அறுக்கும்
ஓதுகுடல் வாதம்அதை ஒட்டுங்காண் - போதின்
பலகலவைக் கோதாய்நற் பத்தியத்திற் கொவ்வும்
பலகலவைக் கீரையுண்டு பார் 599

*பலவகையும் கலந்தகீரை வாத பித்த, கபதோடங்களையும், மலச்சிக் கலையும், குடல் வாதத்தையும் போக்கும். பத்தியத்திற்குப் பயன்படும்.*

## மணலிக்கீரை

வாதம்அறும் நெஞ்சேறி வந்த கபம்விலகும்
சீதமுடன் நோய்பலவுந் தீருங்காண் - போதவுள்ளே
வீறு கிருமியொடு மேவாப் பயித்தியம்போங்
கூறுமண லிக்கீரைக் கு 600

*வாதம், கபம், மார்புச்சளி, சிலேட்டுமம் முதலான பல நோய் களையும், கிருமிநோய், பயித்தியம் இவற்றையும் மணலிக்கீரை நீக்கும்.*

## நீர்ஆரைக்கீரை

தின்றால் உரிசைதருந் தீராப் பயித்தியத்தைப்
பொன்றாத நீரிழிவைப் புண்ணீரை - என்றும்இந்த
ஊராரைச் சாராமல் ஒட்டிவிடும் நால்இதழாம்
நீராரைக் கீரையது நீ 601

*இக்கீரை பித்தம், அதிமூத்திரம், இரத்தப்பிரமேகம் இவற்றை நீக்கும்.*

## புளியாரைக்கீரை

பித்த மயக்கம்அறும் பேருலகில் மானிடர்க்கு
நித்தம்அருள் வாதகபம் நேருமோ - மெத்தெனவே
மூலக் கிராணிஅறும் மூலஉதிரம் அறுங்
கோலப் புளியாரைக் கு 602

*பித்தமயக்கம், வாதகபநோய்கள், மூலகிராணி, இரத்த மூலம் ஆகியவை நீங்கும்.*

### வள்ளைக்கீரை - பருப்புக்கீரை

வள்ளைக்கீ ரைக்கனிலம் மாறும்பால் உண்டாகும்
பிள்ளைப் பருப்பிலைக்குப் பித்தம் அறுங் - கொள்ளத்
தெரியுங் கடல்சூழ் இத்தேசத்தோ ருக்குக்
கரிய குழலணங்கே காண் 603

*வள்ளைக்கீரை வாதத்தை நீக்கி தாய்ப்பாலைப்பெருக்கும். பருப்புக்கீரை பித்தத்தைப் போக்கும்.*

### வங்கார வள்ளைக் கீரை

மாரிக்கா லத்தாய லங்கார வள்ளையினாற்
பூரித்த வாதம் பொருமலொடு - காரித்
திறங்கா மலசல மிறங்கு மின்புண்டா
முறங்கா விழியணங்கே யுள்

*மழைக்காலத்து வங்கார வள்ளைக்கீரையினால் வாதநோய், வயிற்றுப்பிசம் இவை நீங்கும். கருத்து சிக்கலான மலம், மூத்திரம் இவை சரியாக இறங்கும். குடலுக்குச் சுகமுண்டாகும்.*

### கொடிவசலைக்கீரை

போகம் மிகக்கொடுக்கும் போர்செய்கபத் தைப்பெருக்கும்
ஆகம்அதிற் றாகம்அன லைத்தணிக்கும் - மாகுடரின்
மன்னு மலம்இளக்கும் மாறா உரிசைதருந்
தின்னுங் கொடிவசலை செப்பு 604

*புணர்ச்சியின் விருப்பம், கபப்பெருக்கு தாகம், சூடு தணிவு, மலம் இளகல் போன்றவற்றை ஏற்படுத்தும்.*

### பசலைக்கீரை

நீர்க்கடுப்பு நீர்அடைப்பு நீங்காத மேகமும்இவ்
ஊர்க்கடுத்து வாராமல் ஓட்டுங்காண் - பார்க்கவொண்ணா
அற்பவிடை மாதே அரோசிசர்த்தி யைத்தொலைக்கும்
நற்பசலைக் கீரையது நன்று 605

*நீர்க்கடுப்பு, நீரடைப்பு, மேகம், சுவையின்மை, வாந்தி இவை நீங்கும்.*

### பாற்சொரிக்கீரை

வயிற்றுக் கடுப்பு மலஞ்சீதம் பேதி
நியத்தரத்தப் போக்கிவைநி றுத்துங் - குயத்தையொரு
பாற்சரியக் காட்டும் பருவ வணங்கரசே
பாற்சொரிக் கீரையது பார் 606

*இக்கீரை வயிற்றுக் கடுப்பு, மலம், சீதம், இரத்தம் இவ்வகைப் பேதிகளையும் நீக்கும்.*

### சாணாக்கிக்கீரை

கோழையொடு மாந்தம் குழந்தைச் சுழிக்கணமும்
பேழையெனச் சொல்லும் பெருவயிறுங் - கீழ்ஒருவர்
காணாக் கிருமிகளைக் கக்கும் அளிபுண்ணுஞ்
சாணாக்கிக் கீரையிற்போஞ் சாற்று 607

*கபம், அக்கினமாந்தம், சுழிக்கணம், மகோதரம் எனும் பெருவயறு புழுநெளியும்புண் இவை நீங்கும்.*

### துயிலிக்கீரை

சீதம் விளையுஞ் சிறுசிரங்கு புண்ணுமாங்
காது பழமலமுங் கட்டறுங்காண் - சீதக்
குயிலனையாய் வெட்டைபோங் கூறஅழ கில்லைத்
துயிலி இலைக்கறிக்குச் சொல் 608

*சீதம், சிறுசிரங்கு புண், இரணம் உண்டாகும், மலக்கட்டு, பிரமேகம், வெள்ளை இவை நீங்கும்.*

### பண்ணைக்கீரை

பண்ணையிளங் கீரையது பற்று மலம்இளக்கும்
எண்ணுங் குடலுக் கிதங்கொடுக்கும் - பெண்ணேகேள்
சீதங் கரப்பான் சிரங்குபுண் மாற்றிவிடுங்
கோதங் கிலையதனைக் கொள் 609

*இக்கீரை வயிற்றுக்கு நன்மை தரும். கரப்பான் கிரந்தி, புண் இவற்றை நீக்கி மலத்தை இளக்கும்.*

### பரட்டைக்கீரை

பரட்டைநறுங் கீரையது பத்தியத்திற் காகும்
வெருட்டுகின்ற பித்தம் மிகமீறும் - புரட்டுங்
கபமுடனே வாதங் கரப்பானும் ஏகுஞ்
சுபவசன மாதேநீ சொல் 610

*இது பத்தியத்திற்காகும். சிலேட்டும, வாத கரப்பான் நோய்கள் நீங்கும். பித்தத்தை உண்டாக்கும்.*

### கோழிக்கீரை

சொறியுங் கரப்பானுந் தோற்றும் மேன்மேலுஞ்
செறியுங் கிருமிமிகச் சேரும் - எறிகின்ற
ஆழிக்கீ டானவிழி யாரணங்கே வையகத்திற்
கோழிக்கீ ரைக்குணத்தைக் கூறு 611

*இக்கீரை , படை, கரப்பான், கிருமி ஆகியவற்றை உண்டாக்கும்.*

### புளிப்புக்கீரை

வாதம்அறும் பித்தம்உறும் மாறாஅ ரோசிவிடுஞ்
சீதம்உடனே அகலுஞ் சேயிழையே – பேதாப்
புளித்த இலைக்கறிக்குப் போம்இரத்த பித்தங்
களித்த கரப்பனொடு காண் 612

*வாதநோய், சுவையின்மை, சீதளம், இரத்தபித்தம், கரப்பான் ஆகியன நீங்கும்.*

### பிண்ணாக்குக்கீரை

மலம்இறங்கும் வாதமுடன் வன்கரப்பன் உண்டாஞ்
சலம்இறங்கு மேகந் தணியும் - மலர்விழியாய்
உண்ணாக்குக் கின்பமாம் ஒடும்அனல் வெட்டையெலாம்
பிண்ணாக்குக் கீரைஉண்ட பேர்க்கு 613

*இக்கீரை மலத்தையும் மூத்திரத்தையும் சரியாய் இறக்கும். வாததோடம், கரப்பான் இவை உண்டாகும். பிரமேக வெள்ளையும், அரித்திராமேகமும் நீங்கும்.*

## முக்குளிக்கீரை

*ஐயம் மிகக்கொடுக்கும் ஆர்ந்தபோ கந்தருங்காண்*
*மெய்அனலை எல்லாம் விலக்குமே - தையலே*
*பேதி அளிக்கும் பெருமுக் குளிக்கீரை*
*சீதா விளைக்கும்எனச் செப்பு* *614*

*இது கபம், புணர்ச்சியில் இச்சை, அதிசாரம், ஆமம் இவற்றை உண்டாக்கும். வெப்பத்தைப் போக்கும்.*

*பொருமல் மந்தம் வாயுகபம் போராடுகின்ற*
*இருமல் அருசியிவை ஏகுந் - தரையில்*
*தீதி லுயர்நமனைச் சீறும் விழியணங்கே*
*கோதில்வெந்த யக்கீரை கொள்* *615*

*இது வயிற்றுப்பிசம், அக்கினிமாந்தம், வாதம், சிலேட்டுமம், காசம், உணவில் வெறுப்பு ஆகியவற்றை நீக்கும்.*

## கொத்துமல்லிக்கீரை

*கொத்துமல்லிக் கீரைஉண்ணில் கோர அரோசகம்போம்*
*பித்தம்எல்லாம் வேருடனே பேருங்காண் - சத்துவமாம்*
*வெச்செனவே போகம் விளையுஞ் சுரந்தீருங்*
*கச்சுமுலை மாதேநீ காண்* *616*

*இக்கீரை வாதம், பித்தசுரம் இவற்றைப் போக்கி வன்மையையும், சுக்கில விருத்தியையும் உண்டாக்கும்.*

## கொடிக்காசரைக்கீரை, செடிக்காசரைக்கீரை

*கொடிக்கா சரையிலையாற் கூறுபித்த மேகுஞ்*
*செடிக்கா சுரைக்குச் சிலேஷ்மந் - தடிக்காவா*
*மிவ்விதைகளாற் கருப்பமின்றெனவே பொய்த்துவிடுஞ்*
*செவ்விய மெல்லிதழாய் தேர்.*

*இக்கீரை பயித்திய நோயை நீக்கும். செடிக்காசரைக் கீரையால் கபம் நீங்கும். இதன் விதையால் கர்ப்பங்கரையும்.*

### காசினிக்கீரை

அத்திவெப்ப நீக்கு மடர்சோபை யைத்தொலைக்கு
மெத்த வுதிரத்தழுக்கை விலக்கு - மத்தரத்தின்
மாசினியி லைங்காத வார்த்தையெனப் பேசுவிக்குங்
காசினி யீலைக்குணத்தைக் காண்

*அத்திதாது, கதசுரம், வீக்கம், உதிரவழுக்கு இவற்றை நீக்கி இரத்தத்தை விருத்தி செய்யும்.*

### போகம்விளைக்கும்கீரைகள்

தாளி முருங்கைத் தழைதூ துளம் பசலை
வாளில்அறு கீரையும்நெய் வார்த்துண்ணில் - ஆளியென
விஞ்சுவார் போகத்தில் வீம்புரைத்த பெண்களெலாங்
கெஞ்சுவார் பின்வாங்கிக் கேள் *617*

நறுந்தாளி, நன்முருங்கை, தூதுளம், பசலை, அறுகீரை, இவற்றுள் ஒன்றை புளிநீக்கிப் பாகம் செய்து உணவுடன் நெய்சேர்த்து ஒரு மண்டல அளவு சாப்பிட்டால் புணர்ச்சியில் நிர்வாகம் உண்டாகும்.

## மரத்தின் மலர்க்குணம்

### பச்சைக்குங்குமப்பூ

கங்கையின் மதுரதோஷஞ் சலதோஷம் பீநசங்கள்
செங்கயற் கண்ணின்தோஷஞ் செவித்தோஷம் பித்ததோஷங்
கெங்கையாங் கபதோஷங்கள் கெஞ்சிடும் பச்சையான
குங்குமப் பூவினாலே கோதையே யிதனைக்கொள்ளே *618*

*இப்பூவால் இனிப்பினால் ஏற்பட்ட கெட்ட குணங்கள், நீரேற்றம், மூக்கு, கண், செவி நோய்கள், பயித்தியநோய், சிலேட்டும தோடம் ஆகியவை நீங்கும்.*

## கொன்றைப்பூ

மலக்கிருமி யோடும் மதுநீர் குடலாந்
தலத்துநோ யுங்குலைந்து சாயும் - நிலத்திற்குள்
என்றைக்கும் வாடாத வின்ப மலர்க்கொம்பே
கொன்றைப் பசுமலரைக் கொள் 619

*இது மலக்கிருமிகள் மதுமேகம், குடலைப் பற்றியநோய்கள் ஆகியவற்றைப் போக்கும்.*

## மைக்கொன்றைப்பூ

மைக்கண் விழியனமே வையகத்தில் எப்போதும்
மைக்கொன்றைப் பூமேகம் மாற்றுங்காண் - மக்கவதைக்
கொண்டால் சலமேகங் கூகூவென் றேபதறி
அண்டாதீ துண்மை அறி 620

*இப்பூ பிரமேகத்தையும், சலமேகத்தையும் நீக்கும்.*

## காட்டாத்திப்பூ

உதிரக் கடுப்போ டுதிரக் கழிச்சல்
விதிரக் கடும்பேதி மேகம் - எதிர்நிற்க
மாட்டா தகலும் வனச மலர்த்திருவே
காட்டாத்திப் பூத்தனக்குக் காண் 621

*காட்டாத்திபூ இரத்தக்கடுப்பு, இரத்தக்கழிச்சல், வெளுத்த மலக்கழிச்சல், பிரமேகம் ஆகியவற்றைப்போக்கும்.*

## சண்பகப் பூ

வாதபித்தம் அஸ்திசுரம் மாமேகஞ் சுத்தசுரந்
தாதுநஷ்டங் கண்அழற்சி தங்காவே - மாதேகேள்
திண்புறு மனக்களிப்பாந் திவ்யமணம் உட்டிணஞ்சேர்
சண்பகப் பூவதற்குத் தான் 622

*வாதம், பித்தம், அத்திசுரம், மாமேகம், கண் அழற்சி, பிரமேகம், தனித்தோட சுரம், சுக்கில நட்டம் இவற்றைப் போக்கி மனக்களிப்பை உண்டாக்கும்.*

## பாதிரிப்பூ

பித்த சுரந்தணியும் பெண்வசியம் உண்டாகும்
முற்றியதோர் வெட்டை முடியுங்காண் - மெத்தவுமே
மாதுரியம் நிங்கா வசன மடவனமே
பாதிரியின் பூவையுண்டு பார் **623**

*பித்தசுரம், மேகம் இவற்றைப் போக்கி பெண்வசியத்திற்குப் பாதிரிப்பூ பயன்படும்.*

## மந்தாரப்பூ

மந்தாரப் பூகுளிர்ச்சி மன்னர் வசியமுமாம்
செந்தா மரைத்திருவே செப்பக்கேள் - மந்தாரங்
கண்ணுக்கு மாகுளிர்ச்சி காணுங் கொதிப்பகற்றும்
மண்ணில்நறும் பூவெனவே வை **624**

*இது உடல் வெப்பம் நீக்கி கண்ணிற்குக் குளிர்ச்சி தரும். ஆண் வசியத்தையுண்டு பண்ணும்.*

## புன்னைப்பூ

புன்னைப்பூ பித்தம்என்பார் போராடு வன்மேகம்
வின்னப்ப டாச்சித்த விப்பிரமம் - பின்னுங்
கரப்பான் சொறிசிரங்குங் காணா தகற்றும்
உரப்பாம் மயக்கமுண்டாக் கும் **625**

*இது மேகம், சித்தவிப்பிரமம், சன்னி, கரப்பான், படை, விரணம் இவற்றை நீக்கி மயக்கமுண்டாக்கும்; பித்தமாகும்.*

## மகிழம்பூ

வெகுஅனலம் ஆகும் விரகமிக உண்டாம்
முகர அரோசி முறியும் - மிகவும்
மகிழச் சுரத வகைகாட்டு மாதே
மகிழத் துரும மலர்க்கு **626**

*உடல்வெப்பம், புணர்ச்சியிலிச்சை இவற்றையுண்டாக்கி, முகரும் போது அரோசகத்தை நீக்கும் பண்பு மகிழம்பூவிற்குண்டு.*

## பன்னீர்ப்பூ

சர்த்திஅ ரோசகம்உள் தாதுநஷ்டம் மேல்வறட்சி
ஒத்த அழலும் ஒதுங்குங்காண் - எத்தரத்துந்
தன்னீர்மை குன்றாத் தளிர்வண்ண மாதரசே
பன்னீர் மரப்பூவைப் பார் 627

*வாந்தி, சுவையின்மை, சுக்கிலநட்டம், நாவறட்சி, பித்தம் இவற்றைப்போக்கும்.*

## குருக்கத்திப்பூ

சிரரோகந் தாகஞ் சிலேஷ்ம விரணம்
பொருபித்தம் பல்விஷமும் போக்கும் - வரிசேர்
கருக்கொத்த வாள்விழியாய் கைப்புமது ரஞ்சார்
குருக்கத்திப் பூவின் குணம் 628

*குருக்கத்திப்பூ தலைநோய், மிகுதாகம், சிலேட்டும விரணம், பித்தம், பல்வகைவிடம் இவற்றை நீக்கும்.*

## செந்தாழம் பூவின்குணம்

தலைநோய் சலதோஷஞ் சண்ணுகபங் காசம்
உலைவாதம் எல்லாம் ஒடுக்கும் - நிலைசேர்
திருந்துடற்குக் காந்திதருஞ் செம்மணமுஞ் சூடும்
பொருந்துகின்ற செந்தாழம் பூ 629

*மணமிக்க இப்பூ தலைநோய், நீரேற்றம், கபம், இருமல், வாதம் இவற்றைப் போக்கி உடற்கு அழகைத் தரும்.*

## முருங்கைப்பூ

விழிகுளிரும் பித்தம்போம் வீறருசி யேகும்
அழிவிந்துவும் புஷ்டி யாகும் - எழிலார்
ஒருங்கையக லாக்கற் புடைவா ணகையே
முருங்கையின் பூவை மொழி 630

முருங்கைப்பூவினால் பித்த தோடம், உணவில் வெறுப்பு இவை நீங்கும். கண்குளிர்ச்சியும் சுக்கில விருத்தியும் உண்டாகும்.

### அகத்திப்பூ

புகைப்பித்த மும்அழலாற் பூரிக்கும் அந்த
வகைப்பித்த மும்அனலும் மாறும் - பகுத்துச்
சகத்தி லருந்தாத் தனியமிர்தே நாளும்
அகத்தி மலருக் கறி *631*

*இப்பூவில் சுருட்டு முதலானவற்றால் உண்டாகும் புகை உட்டிணப் பொருட்களால் ஏற்படும் பித்தங்கள் தேக அழல் ஆகியவை நீங்கும்.*

### செவ்வகத்திப்பூ

நாடிற் பணிப்பீணி நாசிக்கறைக் கதழ்வை
யோடித் துடைத்துள் ளொளியாற்றும் - பாடெத்
தவரகத்தி னுந்துனங்கைத் தண்டா மயிலே
துவரகத்தி பூண்காண் டுதி.

*செவ்வகத்திப்பூவினால் நாசியில் ஏற்படும் இரத்தப் பெருக்கு விரைவில் நின்றுவிடும். உடல் வெப்பம் நீங்கும், பித்தமயக்கத்தை வேரறுக்கச் செய்யும்.*

### வேப்பம்பூ

பித்தத் தெழுந்த பெருமூர்ச்சை நாத்தோடஞ்
சத்தத் தொழுதமனந் தங்கருசி - முற்றியகா
லேப்பமல கிருமி விவையேகு நாட்சென்ற
வேப்ப மலருக்கு வெகுண்டு

*சன்னி, நாத்தோடம், மூர்ச்சை, வாந்தி, பேதி நீடித்த வாதம், ஏப்பம், மலக்கிருமி இவை முதிர்ந்த வேப்பம்பூவினால் நீங்கும்.*

### மாதுளம்பூ

வாந்தி பித்த தோடமொடுமாறாக் கடும்பனலஞ்
சேர்ந்து நின்ற மூலரத்தந் தீர்க்குங்காண் - மாந்தளிர்க்கை
மாதே கறைப்புஷ்டி வல்லபல னுண்டாகும்
பூதலத்துண் மாதுளையின் பூ

*இப்பூ பித்தவாந்தி, வயிற்றுளைதல், ஏப்பம், கடுப்புடன் கூடிய இரத்த மூலம் இவற்றை நீக்கி இரத்தவிருத்தி, பலம் இவற்றைத் தரும்.*

## புளியம்பூ

பித்தத் துடனே பெருத்தஅ ரோசகம்போம்
மெத்தஎழும் வாந்திமி தத்துள் நிற்கும் - மெத்தக்
கனத்துப்பூ ரித்தமுலைக் காரிகையே வெற்பார்
வனத்துப் புளியம்பூ வால் **632**

*மலையைச் சார்ந்த காட்டில் முளைத்த புளியம்பூவினால் பித்தம், அருசி, வாந்தி இவை நீங்கும்.*

## இலுப்பைப்பூ

குன்றா இலுப்பையின்பூ கூர்மதுரம் வாசனையாந்
தின்றால் பயித்தியமுஞ் சேருங்காண் - மன்றல்உறுந்
தார்குழலே பித்தசுரந் தாகந்தணிந்து விடும்
வார்தயக்கம் எய்தும் வழுத்து **633**

*சுவையும் பித்தமணமும் கொண்ட இலுப்பைப்பூ பித்த சுரம், தாகம் இவற்றை நீக்கி, அதிக பித்தத்தையும் பிரமையையும் உண்டாக்கும்.*

## வாகைப்பூ

வாதசம னஞ்செய்யும் வல்விஷத்தைப் போக்கிவிடுஞ்
சீதசிலேஷ் மத்தைச் சிதைக்குங்காண் - போதவுள்ளே
மாகைப்பை வைத்திருக்கும் மாநிலத்தி லேபெரிய
வாகைப்பூத் தன்னை வழுத்து **634**

*கருப்பையில் கட்டிய இரத்த குன்மத்தைப் போக்கும்.*

## முள்முருக்கம் பூ

கருப்பா சயத்திற் கறுத்துத் தடித்தே
பருத்தவுதி ரத்திரளைப் பஞ்சாய்த் - துரத்திவிடும்
பண்முருக்கு மின்பமொழிப் பாவா யுலகறிய
முண்முருக்கம் பூவை மொழி **635**

*இது கைப்புச் சுவையுடையது. வாதம் பாம்பின் விடம், சிலேட்டும நோய் இவற்றை நீக்கும்.*

### தென்னம்பூ

மேகம் அகக்கொதிப்பு வீறுவி ரத்தபித்தம்
வேக அசிர்க்கரநோய் வீழ்பிரமி - தேகத்தில்
வின்னம்பா லிக்கும் விஷபாகம் போகவென்றால்
தென்னம்பா ளைப்பூவைத் தின் 636

*தென்னம்பூ பிரமேகம், உட்காய்ச்சல், இரத்தம் பித்தம், அசிர்க்கரம், ஒழுக்குப் பிரமியம், விடபாகம் இவை நீங்கும்.*

### பனம்பூ

பனையில்உறு பூவதுதான் பங்கமுறாக் குன்ம
வினைஅகற்றும் நீர்க்கட்டை மீட்கும் - முனையான
பன்னோய் ஒழிக்கும் பழஞ்சுரத்தைப் போக்கிவிடும்
மின்னே இதனை விளம்பு 637

*வாதகுன்மம், நீர்க்கட்டாகிய மூத்திரச் சிக்கல், பல்நோய், பழஞ்சுரம் ஆகியவற்றைப் பனம்பூபோக்கும்.*

### வேப்பம்பூ

பித்தத்தெழுந்த பெருமூர்ச்சை நாத் தோஷஞ்
சத்தத் தெழுவமனத் தங்கருசி - முற்றியகால்
ஏப்பமலகீட மிவை யேகு நாட்சென்ற
வேப்பமல ருக்கு வெருண்டு 638

*சன்னி, நாத்தோடம், மூர்ச்சை, வாந்தி, பேதி, நீடித்த வாதம், ஏப்பம், மலக்கிருமி இவை முதிர்ந்த வேப்பம்பூவில் நீங்கும்.*

### வாழைப்பூ

வாழைப்பூ மூலரத்தம் மாபிரமி வெட்டைபித்தங்
கோழைவயிற் றுக்கடுப்பு கொல்காசம் - ஆழியனல்
என்னளரி கைகால் எரிவுந் தொலைத் துடலில்
மன்னவளர்க் குந்தாது வை 640

*இரத்தமூலம், பிரமேகம், வெள்ளை, பித்தம், கோழை, வயிற்றுக் கடுப்பு, இருமல், கைகால் எரிச்சல் இவற்றை நீக்கும். சுக்கில விருத்தியுண்டாகும்.*

# செடியின் பூ வகை குணம்

## ஆவாரம்பூ

தங்கம் எனவே சடத்திற்குக் காந்திதரும்
மங்காத நீரை வறட்சிகளை - அங்கத்தாம்
மாவைக் கற்றாழை மணத்தை அகற்றிவிடும்
பூவைச்சேர் ஆவாரம் பூ 641

*இப்பூ பிரமேகநீர் வறட்சி, உடம்பில் பித்த உப்பு, கற்றாழை நாற்றம் ஆகியவற்றை நீக்கும். உடற்குப் பொலிவைத் தரும்.*

## கருஞ்செம்பைப்பூ

தலைக்குத்தல் ஐயஞ் சலதோஷம் வாதம்
உலைப்பீ நசமும்இந்த ஊர்க்குள் - நிலைக்கா
தருஞ்சண் பகநாசி யாயிழையே சுத்தக்
கருஞ்செம்பைப் பூஇருக்குங் கால் 642

*கருஞ்செம்பைப்பூ தலைக்குத்தல், நீரேற்றம், வாததோட பீநசம், போன்றவற்றை நீக்கும்.*

## செம்பரத்தம்பூ

செம்பரத்தை மேகவெட்டை தீராப் பிரமியொடு
வம்பிரத்த வெள்ளை வழுவழுப்பும் - வெம்பும்
பெரும்பாடு ரத்தபித்த பேதம் அகற்றுங்
கரும்பா மொழிமயிலே காண் 643

*இப்பூ மேகவெட்டை, பிரமியம், இரத்தபிரமேகம், பெரும்பாடு ஆகியவற்றை நீக்கும்.*

## அலரிப்பூ

வெப்பருசி குஷ்டம் விதாகஞ் சொறிசிரங்கு
செப்பிரத்தம் புண்பித்தஞ் சென்னியெரி - விப்படியில்
தங்குமோ கும்பத் தனத்தணங்கே வாசஞ்சேர்
கொங்கலரிப் பூப்பெயரைக் கூறு 644

*சுரம், உணவில் வெறுப்பு, குட்டம், அதிகதாகம், புடை கிரந்தி, இரத்தக் கட்டி, பித்தநோய், தலை எரிச்சல் ஆகியவற்றை அலரிப்பூ நீக்கும்.*

## செம்பருத்திப்பூ

செம்பருத்திப்பூ அழலைத் தீயரத்த பித்தத்தை
வெம்புவயிற் றுக்கடுப்பை விந்துவைநீற் - றம்பெனச்செய்
மேகத்தை வெட்டையை விஷீசிமுதற் பேதியையுள்
தாகத்தை ஓட்டிவிடுந் தான் **645**

*இது தேக அழற்சி, இரத்த பித்தம், இரத்தக் கடுப்பு, நீர்மேகம், வெள்ளை, விஷீசி முதலான பேதிகள், தாகம் இவற்றை நீக்கும்.*

## நந்தியாவட்டப்பூ

காசம்படலங் கரும்பாவைத் தோஷம் எனப்
பேசுவிழி நோய்கள்தமைப் பேர்ப்பதன்றி - ஓசைதரு
தந்திபோ லேதெறித்துச் சாருமண்டை நோய்அகற்றும்
நந்தியா வட்டப் பூ நன்று **646**

*கண்காசம், படலம், லிங்கநாத தோடங்கள், தலைநோய் ஆகியவற்றை நந்தியாவட்டப் பூ நீக்கும்.*

## துத்திப்பூ

துத்தி மலரைநிதந் துயக்கின்ற பேர்களுக்கு
மெத்தவிந்து வும்பெருகும் மெய்குளிருஞ் - சத்தியமே
வாயால் விழும்இரத்தம் மாறும் இருமல்அறும்
தேயா மதிமுகத்தாய் செப்பு **647**

*இரத்த வாந்தி, காசம், இவற்றை நீக்கி, சுக்கில விருத்தியையும் உடல் குளிர்ச்சியையுமுண்டாக்கும் பண்பு துத்திப்பூவிற்குண்டு.*

## செவ்வந்திப்பூ

அலைமயக்கஞ் சுற்றல்அறும் அட்சிக் கொளியாந்
தலைமயிர்உண் டாம்அனலஞ் சாரும் - நிலைமணமாம்
ஒவ்வந்தி வான்பிறையை யொத்த நுதற்றிருவே
செவ்வந்திப்பூ அதனைச் செப்பு **648**

*இப்பூவால் மூர்ச்சை, தலைச்சுற்றல், கண்ணுக்கொளி, உரோமச் செழிப்பு இவையுண்டாக்கும்.*

## தும்பைப்பூ

தாகங் கடிதொழியுஞ் சன்னிபாதங்கள் அறும்
ஆகந் தனில்விழிநோய் அண்டுமோ - மாகந்த
வம்பைப் பிறுங்குயத்து மாதேநில் செங்கரத்தால்
தும்பைப்பூந் தன்னைத் தொடு *649*

*தாகம், சன்னிபாத சுரம், கண்ணோய் பற்றிய தோடங்கள் ஆகியவற்றைத் தும்பைப்பூ போக்கும்.*

## வேளைப்பூ

கணமாந்தம் வாதங் கபக்கோவை கோழை
அணுமாந்த வெப்பும் அகலும் - மணமாரும்
பாளைக் குழலே பசிமெத்த உண்டாகும்
வேளைப்பூ என்றொருக்கால் விள் *650*

*மாந்தம், கணம், வாதம், நீரேற்றம், மார்புச்சளி, மாந்தசுரம், இவற்றை நீக்கி பசியையுண்டாக்கும் பண்பு வேளைப் பூவிற்குண்டு.*

## சிற்றாமரைப்பூ

சிற்றா மரைப்பூவால் சேர்ந்தமலக் கட்டுவிடும்
உற்றவெப்பு தாகம்அதி ஒக்காளஞ் - சற்றும்விடா
மூலஎரிவு ரத்த மூத்திரம் வயிற்றிசிவும்
ஞாலம்விடுத் தேகும் நவில் *651*

*மலக்கட்டு, சுரம், தாகம், வாந்தி, ஆசன எரிச்சல், இரத்தப் பிரமேகம், வயிற்றிசிவு இவற்றை சிற்றாமரைப் பூ நீக்கும்.*

## களாப்பூ

கண்ணிற் படருங் கரும்படலம் வெண்படலம்
வண்ண உதிரப்படலம் வன்சதைகள் - எண்ணற்
களவினோய் போக்கும் அணங்கே சிறிய
களவினது பூவொன்றுங் காண் *652*

*இப்பூ கண்கருப்படலம், வெண்படலம், இரத்தப்படலம், சதைப்படலம் முதலிய நோய்களை நீக்கும்.*

## கொடியில் பூ வகை குணம்

### தாமரைப்பூ

பருத்தநற் தாமரைப்பூ பல்வாந்தி நோயைத்
துரத்திவிடும் இன்னுஞ் சொலவோ - கரத்தில்
எடுத்தணைக்கக் கண்குளிரும் ஏகுஞ் சுரமும்
எடுத்த விதாகமும்போம் எண் 653

*பல்வகை வாந்தி நோய்கள், கண்ணெரிவு, சுரம், அதிகதாகம் ஆகியவற்றைப் போக்கும்.*

### வெள்ளைத்தாமரைப்பூ

ஈரலைப் பற்றிமிக ஏறுகின்ற வெப்பமும்போங்
கோர மருந்தின் கொடுமைஅறும் - பாருலகில்
தண்டா மணத்தையுள்ள தாழ்குழலே காந்தல்விடும்
வெண்டாமரைப் பூவால் விள் 654

*இப்பூவினால் ஈரலில் அதிகமாக உள்ளவெப்பம் சூடான மருந்தின் வேகம் (எட்டு), வெப்பம் இவை நீங்கும்.*

### அல்லிப்பூ

மேகம்அறும் புண்ஆறும் விட்டேகும் நீரிழிவு
தாகந் தணியுந் தழல்அகலும் - வாகான
மெல்லியலே ஆயுண்மறை வேதியரெல் லாம்உரைக்கும்
அல்லி மலரால் அறி 655

*மேகம், ஆண்குறி துவாரப்புண், வெகுமூத்திரம், தாகம், உட்சூடு ஆகியவை நீங்கும்.*

### செவ்வல்லிப்பூ

செவ்வல்லிப் பூவுக்குச் சேர்ந்திறங்கு நீர்ப்பிணியோ
டொவ்வுமே கப்பிணியும் ஓய்வதன்றி - இவ்வுலகிற்
கண்ணின்நோய் தீரும் கனத்தபித்த ரத்தமொடு
புண்ணின்நோய் பன்னோயும் போம் 656

*சிறுநீர்நோய், சங்கவாதம், மேக மூத்திரம் வெயிலாற் பிறந்த கண்ணோய்கள், இரத்த பித்தம், புண், தாதுநட்டம் ஆகியவற்றைச் செவ்வல்லிப்பூ நீக்கும்.*

## கழுநீர்ப்பூ

உடற்குக் குளிர்ச்சியதாம் உள்உழலை மாற்றும்
அடற்கபஅ ரோசகத்தை ஆற்றுங் - கடற்குள்
எழுநீர்க் குமிழி யிகழு முலையாய்
கழுநீர் மலர்எனவே காண் 657

*தாகநோய், சிலேட்டுமம் பேதி, சுவையின்மை, இவற்றை நீக்கி, உடலுக்குக் குளிர்ச்சியை உண்டாக்கும்.*

## கருநெய்தற்பூ

பிரசவித் தாரைத்தேற்றும் பேரசிர்க்கை மாற்றும்
வருசிலேத் மப்பிணியை மாட்டுந் - துருசாம்
விடைபாகரோகம் விலக்கும் புவியிற்
றடமாக்கு நெய்தனாற் றான்.

இப்பூ பெரும்பாடு, கபநோய், விடபாகம் இவற்றைப் போக்கும்.

## சாதிப்பூ

முத்தோஷஞ் சென்னிவலி மூடுஞ்ச ரீரவெப்பம்
ஒத்த விழிகளின்நோய் ஓடுங்கான் - நித்தம்
விலகாத காந்தியுண்டாம் மேனிதனில் வாசங்
குலவுசா திப்பூவுக் கு 658

*இதனால் முத்தோடம், தலைவலி, உடல்சூடு, கண்படலம் இவை நீங்கும். உடலில் நீங்கா ஒளியும் மணமும் உண்டாகும்.*

## மல்லிகைப்பூ

போகமிக உண்டாகும் பொங்குகபங் கட்பிரமை
ஆகஅனல் சூனியமும் அண்டுமோ - பாகனையாய்
மன்னு திருவசியம் வாய்க்குஞ்சூ டென்றெவரும்
பன்னுமல்லி கைப்பூவாற் பார் 659

*புணர்ச்சியில் விருப்பையுண்டாக்குகின்ற மல்லிகைப்பூ கோழை, கண்மயக்கம், தேக உட்டிணம், சூனியம் ஆகியவற்றை நீக்கும். இலட்சுமி கிருபையுண்டாக்கும்.*

## முல்லைப்பூ

முல்லையெனும் ஊசிமல்லி மொய்த்தமலர் எவர்க்கும்
ஒல்லைமன நோயை ஒழிக்குங்காண் – மெல்ல
அழலைத் தணிக்கும் அரோசகத்தைப் போக்கும்
மழலைமொழி யாயறிந்து வை 660

*ஊசி மல்லிப்பூ மனநோய், உள்வெப்பம், உணவில் வெறுப்பு இவற்றைப் போக்கும்.*

## வெட்சிப்பூ

வெட்சிப்பூ மேகஅழல் விட்டோட்டும் வாசனையாம்
அட்சிவழி யாயுயிர்கொள் ளாரணங்கே - எச்சுஞ்
சுரமுடனே தாகந் தொலைக்கும் உலகில்
விரைவாய் இளைப்பகற்றும் விள் 661

இப்பூ மேகச்சூடு, சுரம், தாகம், இளைப்பு இவற்றை நீக்குமென்பர்

## தூதளம்பூ

புஷ்டியுண்டாந் தாதுவுமாம் பொங்கழகோ டாற்றன்மிகும்
முட்ட நரைத்து முதிர்ந்தவனைக் - கட்டழகு
மாதுளத்தி னீங்காது வைத்திடவும் எண்ணம்உற்றால்
தூதுளத்தின் பூவுண்ணச் சொல் 662

*இப்பூவால் தேகபலம், தாதுவிருத்தி, வனப்பு, பெண்வசியம் இவைகளுண்டாகும்.*

## வெங்காயப்பூ

வயித்துச் சிறுநோயை வாத வலியை
உயித்திஞ் செய்யாமல் ஓட்டும் - குயிற்றாத
சிங்காரக் கொங்கைச் செழுந்திருவே நாட்டிலுறை
வெங்காயப் பூஎனவே விள் 663

*நாட்டு வெங்காயப்பூ வயிற்றுவலி, வாதவலி, வாதநோய்கள் இவற்றை நீக்கும்.*

## மரத்தின் பிஞ்சு வகை குணம்

### வாழைப்பிஞ்சு

உதிரம் விழுகடுப்போ டுண்மூல ரத்தம்
எதிரில்விழு நீரிழிவும் ஏகும் - மதிநுதலே
பேழை வயிற்றுப்புண் பேருந் துவர்ஆர்ந்த
வாழைக்கச் சற்கு மருண்டு 664

*துவர்க்கும் வாழைப்பிஞ்சிற்கு இரத்தக்கடுப்பு, மூல இரத்தம், நீரிழிவு, வயிற்றுப் புண் இவை நீங்கும்.*

### பலாப்பிஞ்சு

தாகம்போம் வந்தபித்தஞ் சாந்தமாம் ஆடவர்க்குப்
போகம் மிகப்பொழியும் பொய்யன்றே - முகம்
அலஜமந்தங் குன்மம்இவை அண்டிவருஞ் சொன்னேன்
கலசப்ப லாப்பிஞ்சுண் காண் 665

*பலாப்பிஞ்சு தாகம், பித்தம் இவற்றை நீக்கி சுக்கில விருத்தியைத் தந்து நீர்மந்தம், குன்மம் இவற்றை உண்டாகும்.*

### அத்திப் பிஞ்சு

மூலக்கி ராணிஅறும் மூவிரத் தந்திருஞ்
சாலக் கடுப்புந் தரிக்குமோ - மாலரவத்
துத்திப் படவல்குற் றோகாய் துவர்ப்பைஉறும்
அத்திச் சிறுபிஞ்ச ருந்து 666

*மூலவாயு, கிராணி, இரத்த மூலம், வயிற்றுக்கடுப்பு இவை விலகுமென்பர்.*

### முருங்கைப்பிஞ்சு

சிக்குருக்கு யப்பிஞ்சத் திச்சுரத்திற் குஞ்சநிக்கும்
அக்குருக்கு ருப்பம் அரோசிகட்குஞ் - சுக்கிலத்தின்
கொச்சை யுறவருந்திக் கூறுவற்கு மாமதனைப்
பச்சையுற வருந்திப் பார் 667

*அத்திசுரம், எலும்புருக்கும் வெப்பம், உணவில் வெறுப்பு, விந்து நட்டம் இவை நீங்கும்.*

### மாம்பிஞ்சு

கவைவாத பித்த கபம்அருசி வாந்தி
சுவைமறுத்த மந்தமெனுந் தோஷம் - இவையெல்லாங்
காதத்துக் கப்புறம்போங் கான மடமயிலே
சூதத்தின் புன்வடுவைத் துய் 668

*வாதம் போன்ற முத்தோடங்களை நீக்கும். சுவையின்மை, அக்கினி மந்தம் இவற்றை நீக்கும்.*

### நாரத்தங் கச்சல்

சீதம் விளையாது தீபனமும் உண்டாகும்
போத வயிற்றுப் பொருமலும்போம் - மாதேகேள்
எச்சும் வயிற்றில் எரிப்புமுச்சாம் நாரத்தங்
கச்சல் தனைஅருத்துங் கால் 669

அன்னம் இறங்கும் அரோசிகெடுந் தீபனமாம்
வன்னமிகுந் தாதுவும்வ ளர்தோறும் - மன்னுமலர்
வாசனையே றுங்குழலீர் வன்னோய் தனில்உண்ணும்
போசனகந் தூரிக்கெப் போதும் 670

*நீர்ப்பிடிப்பு, சுவையின்மை, வயிற்றுப்பொருமல்,எரிகிருமி இவை நீங்கும். சுக்கிலம் விருத்தியடையும், கபம் நீங்கும், பசியுண்டாகும். இதற்குப் போசன கத்தூரி என்றுபெயர்.*

### மாதளம் பிஞ்சு

மலக்கழிச்சல் சீதத்தால் வந்த கழிச்சல்
சலக்கழிச்சல் சோரியாற் சாரும் - பலக்கழிச்சல்
மாளும் புளிப்பான மாதளம்பிஞ் சால்அயிலை
ஆளுங்கண் மாதே அறி 671

*மலக்கழிச்சல், சீதக்கழிச்சல், சலக்கழிச்சல் இன்னும் பிற கழிச்சல்கள் மாதுளம்பிஞ்சால் நிற்கும்.*

### முகிழ்விரியாக்கத்தரிப்பிஞ்சு

அனலுடனே பித்தம் அகலும் மலம்போந்
தொனியுண்டாம் ஐயந் தொலையுஞ் - சனியாத
முத்திருக்கும் வெண்ணகையீர் மூடு முகழ்விரியாக்
கத்தரிப்பிஞ் சுண்பவர்க்குக் காண் 672

*முகிழ்விரியாத கத்திரிப்பிஞ்சு சுரம், பித்ததோடம், கபம் இவற்றை நீக்கும். மலம் சரியாக இறங்கும். குரல் ஒளி வன்மை பெறும்.*

### அவரைப்பிஞ்சு

கங்குலுண விற்குங் கறிக்கு முறைகளுக்கும்
பொங்குதிரி தோடத்தோர் புண்சுரத்தோர் - தங்களுக்குங்
கண்முதிரைப் பில்லநோய்க் காரருக்குங் காழுறையா
வெண்முதிரைப் பிஞ்சாம் விதி 673

*விதைமுதிராக வெள்ளையவரைப்பிஞ்சு, இரவுணவு, மருந்துண் போர், முத்தோடங்கள், புண், சுரம், விழிக்குள் முதிர்ந்த நீர்ப்பில்லநோய், சிலேட்டுமம் முதலியவற்றிற்குச் சிறந்தது.*

## மரத்தின்காய் குணம்

### வாழைக்காய்

வாந்திபித் தம்பேதி வாய்நீர் வயிறுளைதல்
ஆர்ந்தஅன லங்காசம் அண்டாதாஞ் - சூழ்ந்தேறு
செம்புனலுந் தென்பும்உண்டாந் திண்டிமிகப் பெருகும்
அம்புவியுள் வாழைக்காய்க் காய் 674

*வாந்தி, பித்தம், பேதி, உமிழ்நீர்ச் சுரப்பு, வயிறுளைதல், உட்டிணம், இருமல் இவை நீங்கும். இரத்தம் பெருகும்; பலனும் உண்டாம்.*

### பலாக்காய்

உண்ணில் மிக மந்தம் உறுதியாம் வாதநோய்
அண்ணும் இளைப்பிரைப்பும் அண்டுங்காண் - வண்ணப்
பலாக்காய்க்கு விந்துவுமாம் பாரி லுவமை
சொலாக்காம வாரிதியே சொல் 675

*மந்தம், வாதநோய், இளைப்பு, சுவாசம், சுக்கில விருத்தி ஆகியவை உண்டாகும்.*

### அத்திக்காய்

அத்திக்காய் தன்னை அருந்தினால் ஆரணங்கே
எத்திக்கும் மேகம் இருப்பதுண்டோ - சத்திக்கும்
வாதம் அகலும் மலங்கழியுஞ் சூலையொடு
மீதனலும் புண்ணும்போம் விள் 676

*இதனால் பிரமேகம், வாதநோய், உடல்வெப்பம், இரணம் ஆகியவை நீங்கும். மலம் நன்றாகக் கழியும்.*

### முருங்கைக்காய்

சொல்லும் பிணியெல்லாந் தோல்வியாம் ஐயம்அறும்
பல்லுயிர்க்குந் தாதுமிகும் பத்தியமாம் - வில்லார்
பெருங்கைக்கா மன்றுதிக்கும் பெண்ணே நறிய
முருங்கைக்காய் தன்னை மொழி 677

*இது பலபிணிகளை நீக்கும் மருந்தாகவும், நல்ல தொடு கறியாகவும் இருக்கும். முருங்கை கபத்தை நீக்கும். விந்தை பெருக்கும்.*

### அருநெல்லிக்காய்

அருநெல்லிக் காய்குளிர்ச்சி யாம்பித்தம் போக்கும்
மருவுதுவர்ப் பால்துரிசை மாற்றும் - விரியுலகில்
தாகத் துயர்நீக்கும் சார்இருமலைத் தொலைக்கும்
ஆகக் கொதிப்பகற்றும் ஆங்கு 678

*இது சீதபித்தம், தாகம், காசம், இருமல், உட்சூடு ஆகியவற்றைப் போக்கும்.*

## நெல்லிக்காய்

பித்தமன லையம் பீநசம்வாய் நீர்வாந்தி
மத்தமலக் கட்டும் மயக்கமுமில் - ஒத்தவுரு
வில்லிக்கா யம்மருங்கா மென்னாட்கா லந்தேர்ந்தே
நெல்லிக்கா யம்மருந்து ணீ 679

நெல்லிக்காய்க்குப் பித்தம் நீங்கும் அதன்புளிப்பால்
செல்லுமே வாதம்அதிற் சேர்துவரால் - சொல்லும்ஐயம்
ஓடும்இதைச் சித்தத்தில் உன்ன அனலுடனே
கூடுபிர மேகமும்போங் கூறு 680

*நெல்லிக்காய், பகலில் உண்டால் பித்தம், கபம், உட்சூடு, பீநசம், உமிழ்நீர்ச்சுரப்பு, வாந்தி, உன்மத்தம், மலபந்தம், தலைச்சுழற்சி, பிரமேகம் இவை நீங்கும். நல்லழகுண்டாகும். இதன்புளிப்பால் வாயுவும் துவர்ப்பால் கபமும் நீங்கும்.*

## புளியங்காய்

சோபமொடு பித்தந் தொலைக்கும் உரிசைதருங்
கோபமுற வாயுவையே கொண்டாடுந் - தாபக்
கருப்பமட வார்க்குக் கனவிருப்பம் உள்ளே
பருப்பைஉறாப் பைம்புளியங் காய் 681

கொட்டைமுதிராத புளியம்பிஞ்சு, சோர்வு, பித்தம் இவற்றை நீக்கி வாதத்தை உண்டாக்கும். கர்ப்பமுடைய பெண்கள் இதை மிக விரும்புவர்.

## மாங்காய்

தாதுநஷ்டம் வாதந் தனிக்கிரந்தி யாம்பசிபோங்
காதுமுட்டப் பக்குவிடுங் காயமதில் - ஓதுகின்ற
பாங்காறாப் புண்வளரும் பற்கூசுஞ் சொற்குளறும்
மாங்காய்உண் பாரை மறு 682

*தாதுநட்டம், மிகுவாய்வு, சிரங்கு, தேக வெடிப்பு, ஆறாப்புண், பல்கூச்சம், சொற்குளறல் இவை உண்டாகும்; பசிபோகும்.*

### *மரியங்காய் (புளி மாங்காய்)*

*வாயின் கசப்பகலும் மாறா அரோசகமும்*
*ஓயுஞ் சுரத்தோர்க் குவப்பாகுந் - தூயவரித்*
*தேனமரும் வார்கூந்தற் றெய்வப் பெடையனமே*
*கானமரி யங்காயைக் கண்டு* **683**

*காட்டிலுள்ள இம்மரியங்காய் வாய்க்கசப்பு, உணவில் வெறுப்பு, இவற்றை நீக்கும். சுரநோயாளிகட்கு மிகவும் நல்லது.*

### *பச்சைக்கடுக்காய் (பரிதிக்காய்)*

*பச்சை அரிதகிக்காய் பண்ணும் வகைகேளாய்*
*இச்சைஉறத் துவைத்துப் பிட்டழுத்தி - வைச்செடுத்துத்*
*திச்ச அரோசிஅறுந் தீபனமாம் முன்மலம்போம்*
*அன்னநடை மாதே அறி* **684**

*இதனைக் கொட்டை நீக்கி இடித்து ஐந்தில் ஒரு பங்கு உப்பிட்டு 105 நாள் சென்றபின் பிசைந்து அதனை உணவுடனோ தனித்தோ உண்டால் உணவில் விருப்பமுண்டாகும்; நல்லபசி எடுக்கும்; மலங்கழியும்.*

### இத்திக்காய், பிஞ்சு

வாயு மலக்கட்டு மலக்கழிச்சல் கால்வழியே
சாயு மசிர்ச்சிக்குள்ளே தங்கு வெப்பி - னோயினங்க
ளெத்திக்கா தாரமுற் றிருப்பன விராவேநல்
லித்திக்காய் பிஞ்சுகளை யெண்

*இத்திக்காய்க்கு வாதமலக்கட்டு நீங்கும். பிஞ்சுக்கு கழிச்சல், பெரும்பாடு, உட்சூட்டால் ஏற்படும் பிணிகள் இவை நீங்கும்.*

### கொடியெலுமிச்சங்காய்

வாந்தி மயக்கம் வயிற்றுக் கழிச்சல்அனல்
சேர்ந்த அரோசகமுந் தீருங்காண் - தீர்ந்த
தொடியமரு மங்கையிளந் தோகாய் - அடவிக்
கொடியெலுமிச் சங்காயைக் கூறு **685**

*இக் காயால் வாந்தி, பித்தமயக்கம், மலபேதி, பித்தத்தினால் அமைந்த சுவையின்மை இவை நீங்கும்.*

### எலுமிச்சங்காய்

*தீதில்எலு மிச்சங்காய் சேர்முத்தோ ஷத்தையும்உள்*
*வாதகபஞ் சூலையையும் மாகொடிய - சாதியெனுஞ்*
*சர்த்திகுன் மத்தையும்உள் தங்கமருந் திட்டதையும்*
*பித்தவெப்பை யுந்தணிக்கும் பேசு* 686

*இதுமுத்தோடம், வாதசிலேட்டுமம், சூலை, சத்திக் குன்மம், இடுமருந்து, பித்த உட்டிணம் இவற்றைப் போக்கும்.*

### கலுமிச்சங்காய்

*தந்தம்விழப் பண்ணுஞ் சலவை தனைக்கொடுக்கும்*
*வெந்துமிக விந்துவைவி ழச்செய்யும் - அந்த*
*எலுமிச்சங் காய்போல் இருக்குங் கொடிய*
*கலுமிச்சங் காய்க்குணத்தைக் காண்* 687

*கலுமிச்சங்காய் பற்களை விழச்செய்யும். சீதளம், வீரிய நட்டம் இவற்றை உண்டாக்கும்.*

### நாரத்தங்காய்

*நன்றி யுறவுலகில் நாரத்தங்காய் அருந்த*
*வென்றி தரும்புளிப்பால் மெய்ச்சுத்தம் - அன்றியுமோ*
*வாதமொடு குன்மம்அறும் வாற்கிருமி யும்போகும்*
*காதலுறு தீபனமாங் காண்* 688

*இது வாதநோய். வாலுள்ள மலக்கிருமி இரண்டையும் நீக்கிப் பசியையுண்டாக்கும். குன்மத்தைப் போக்கும். இதன் புளிப்பு உடலைத் தூய்மைப்படுத்தும்.*

### கடாரநாரத்தங்காய்

*பித்தமொடு வாயிற் பெருகறல் அரோசகம்போம்*
*பத்தியமாம் நோயிற் பருகலாங் - குத்துங்*
*கடாரி யனையவிழிக் கன்னிமட மாதே*
*கடார நரந் தங்காயைக் கண்டு* 689

*இது பீத்தநோய், வாய்நீரூறல், சுவையின்மை இவற்றைப் போக்கும். பத்தியத்திற்கும், நோயாளிக்கும் நல்லது.*

### கொளுஞ்சிநாரத்தங்காய்

சொல்லுங் கொளுஞ்சிக்காய் தோன்றுகின்ற காசத்தை
வல்லஉள் சீதத்தை மாருதத்தைப் - பொல்லாத
ஐயத்தைத் தாகத்தை அப்பொழுதே நீக்கிவிடும்
வையத்துட் பெண்ணரசே வாழ்த்து 690

*இருமல், ஆமதோடம், வாத விரணம், கபம், தாகம், இவற்றை நீக்கிவிடும் இயல்பு கொடி நாரத்தை எலுமிச்சை என்றும் துரிஞ்சி என்றழைக்கப்படும் கொளுஞ்சி நாரத்தைக்குண்டு.*

### பனைநுங்கு

நீர்வரா வியர்க்குருவை நீக்குமன லாக்குந் தோற்
சார்வா மயஞ்சீதந் தானொழிக்குஞ் - சேர்வார்
விழிக்கரையாந் துள்ளிக்கு மென்சுரத மானே
கழிக்கரையாந் தாளியிளங் காய்.

*நுங்குநீர் வியர்க்குருவை நீக்கும். பசியைத் தரும். தோலொடு உள்ள நுங்கு சீதபேதியை நீக்கும்.*

## செடியின்காய்குணம்

### கத்தரிக்காய்

பண்டு மாண்ட கிரந்தியைப் பாலிக்கும்
உண்டகைக்குந் தினவை யுண் டாக்கிடும்
நண்டுகட்டுங் குரங்கென நாளுமாங்
கண்டு விட்டது கத்தரிக் காயதே 691

*இது ஆறிய சிரங்கையும் அரிப்பையும் உண்டாக்கும்*

## கத்தரிக்காய் - அதன்பிஞ்சு

கத்தரிக்காய் பித்தங் கனன்றகபந் தீர்த்துவிடுந்
தொத்து சொறி சிரங்கைத் தூண்டிவிடும் - மெத்தவுந்தான்
பிஞ்சான கத்தரிக்காய் பேசுமுத்தோ ஷம்போக்கும்
மஞ்சார் குழலே வழுத்து 692

*இது பித்தத்தினால் வந்த கபத்தை நீக்கும். புண்ணையும் கிரந்தியையும் அதிகப்படுத்தும். பிஞ்சு திரிதோடத்தை விலக்கும்.*

## கண்டங்கத்தரிக்காய்

ஐயம்அறுந் தீபனமாம் ஆமமலக் கட்டுகளும்
பையவெளி ஆகிவிடும் பார்மீதிற் - செய்யமலர்த்
தொத்திருக்கும் வார்குழலே தூமண லா ருங்கண்டங்
கத்தரிக்கா யைப்புசிக்குங் கால் 693

*இதனால் சிலேட்டுமநோய் தீரும். சீதங் கலந்த மலமும் பசியும் உண்டாகும்.*

## முள்ளிக்காய்

வாதபித்த ஐயத்தை மாற்றும் அனல்போக்கும்
ஓது சு வாசத்தை ஓட்டுங்காண் - பூதலத்துள்
துள்ளிப்பாய் கெண்டைவிழித் தோகாய்கேள் எப்போதும்
முள்ளிக்காய் செய்யும் முறை 694

*வாத பித்த கபதோடங்கள், சுரம், சுவாச நோய், இவற்றைக் கறிக்குப் பயன்படாத முள்ளிக்காய் நீக்கும்.*

## கொத்தவரைக்காய்

கொத்தவரைக் காய்பித்தங் கூடாது பத்தியத்தில்
மெத்தெனவும் ஐயம் விளைக்குங்காண் - பித்தத்தால்
சீதம் அகற்றும்என்பார் தின்மருந்தைப் பாழாக்கும்
வாதக் கு டைச்சல்தரு மால் 695

*இது பித்தம், கபம், வாதக்கடுப்பு இவற்றை உண்டாக்கும். குளிரையும் மருந்தையும் முறிக்கும்.*

## வெண்டுக்காய் (வெண்டைக்காய்)

கண்ட கிராணி கடிய அதிசாரம்
விண்டவெண் சீதரத்தம் மேவுங்காண் - ஒண்டொடியே
வண்டற்காம் வெய்யகப வாதமிகும் வாய்க்குணவாம்
வெண்டுக்காய் உண்பார்க்கு விள் **696**

*வெண்டைக்காய் கிராணிபேதி, சீதரத்தக் கழிச்சல், சிலேட்டும வாதம், ருசி இவற்றை உண்டாக்கும்.*

## மணித்தக்காளிக்காய்

மலம்இளகுந் தானே மகாகபமும் போகும்
பலமிகுந்த வாதம்போம் பார்க்குள் - மலைபோற்
பணைத்துப்பூ ரித்தமுலைப் பாவாய்கேள் நல்ல
மணித்தக்கா ளிக்காயை வாழ்த்து **697**

*இக்காய் மலத்தை இளக்கும்; கபத்தை வெளியேற்றும். சிலேட்டுமம், வாதம் இவற்றை நீக்கும்.*

## மணித்தக்காளி வற்றல்

நீர்ப்பேதி யாகும்நிலை வமனம் போம்வாயிற்
கூர்ப்ப இளைப்பும்அறுங் கூறுவதோ - பார்க்கிலினும்
மிக்கான நோயோர் விரும்புகின்ற நல்லமணித்
தக்காளி வற்றலுக்குத் தான் **698**

*இது நீர்ப்பேதியை உண்டாக்கி வாந்தியையும் இளைப்பையும் நீக்கும்.*

## சுண்டைக்காய்

நெஞ்சின் கபம்போம் நிறைகிருமி நோயும்போம்
விஞ்சுவா தத்தின் விளைவும்போம் - வஞ்சியரே
வாயைக் கசப்பிக்கும் மாமலையில் உள்ளசுண்டைக்
காயைச் சுவைப்பவர்க்குக் காண் **699**

*இம்மலைச் சுண்டைக்காய் மார்புச்சளி, கிருமிரோகம், வாதம் இவற்றை நீக்கும். வாயைக் கசப்பாக்கும்.*

### சுண்டைக்காய்வற்றல்

பித்தஅ ரோசகம்போம் பேராப் புழுச்சாகும்
உற்ற கிராணிஅறும் உட்பசியாஞ் - சத்தியமாய்ப்
பண்டைக் குதஆமம் பற்றறும்இங் கியாரையுந்தான்
சுண்டைக்காய் வற்றல்உண்ணச் சொல் 700

*இவ்வற்றல் பித்தத்தால் ஏற்பட்ட சுவையின்மை, மலக்கிருமி, கிராணி, ஆசனத்துவாரச் சீதக்கட்டு இவற்றைப்போக்கி பசியை உண்டாக்கும்.*

### விதுகங்காய்

விதுகங்காய் பத்திய வியஞ்சன மத்தாற்
புதுநெய் விந்தொழிற் பலமும் பூணு - முதுபித்த
வேக மொழியு மிகு துர்ப் பலமகலும்
பாகனைய வின்மொழியே பார்

*இக்காயால் உதிரம், தாது, அழகு, பலம் இவை விருத்திபெறும். பித்தம் நீங்கும்.*

### பாவட்டங்காய்

வாத சுரந்தணியும் வாய்அருசி ஏகிவிடும்
சீதக் கடுப்பகலுந் தேமொழியே - வாதுபுரி
பித்தஅதி சாரமொடு பேராக் கபமுமறும்
உற்றபா வட்டங்காய்க் கு 701

*இக்காய் வாதசுரம், சுவையின்மை, சீதக்கழிச்சல், பித்தக் கழிச்சல், சிலேட்டுமம் ஆகியவற்றை நீக்கும்.*

### ஊசிமிளகாய்

சீதக் கழிச்சற் சிறுநீர்ச் சுருக்காசங்
காதக் குதநெகிழ்ச்சி காட்டுங்கா - ணாதித்தன்
வீறு கி ரணம் பருகிமேனோக்கிக் காய்த்தபங்காக்
காரமுறு மூசிமிள காய்

*இக்காய் சீதபேதி, மூத்திரக்கிரீச் சரம், மூலம், சூதகநெகிழ்ச்சி நோய் இவற்றையுண்டாக்கும்.*

### வெண்மிளகாய், கருங்குண்டுமிளகாய், பச்சைமிளகாய்

வெண்டு மிளகாய்க்களில் மேவுமிடம் பாக்குமணிக்
குண்டு மிளகாய்க் கனலங் கூடுங்கா - மூண்டுபயிர்ப்
பச்சை மிளகாய்க்குப் பதமிறக்குஞ் கோவையுரிஞ்
திச்சையுற வுண்ணின் மறுவில்

*வெண்டுமிளகாய், வாதம் போக்கும், குண்டுமிளகாய் உட்டிண-மாகும். பச்சைமிளகாய் காயுடன் சேர்த்துண்ணில் நல்ல தொடுகறியாகும்.*

### களாக்காய்

காதுவிடாய் தாகங் கடியபித்தம் வாந்தியும்போம்
மாதே அரோசகமும் மாறுங்காண் - தீதாம்
இரத்தபித்தம் போகும் இனிய களாக்காய்க்
குரத்த பசியும் உண்டாம் ஓது. 702

*காதடைப்பு, பித்தம், தாகம், வாந்தி, சுவையின்மை, இரத்தபித்தம் இவற்றைப்போக்கும். பசியை உண்டாக்கும்.*

### ஊமத்தங்காய்

வாதம்அறும் பித்த மயக்கம்உறும் மாநிலத்தில்
தீது கரப்பான் சிரங்ககலுங் – கோதாய்கேள்
மாமத்த மாகும் வறட்சிஎல் லாம்போகும்
ஊமத்தங் காய்க்கென் றுரை 703

*இக்காயினால் வாதம், கரப்பான், சொறி, கிரந்தி, வறட்சி இவை நீங்கி பித்தமயக்கமும் உள்மாந்த நோயும் உண்டாகும்.*

# கொடியின் காய்குணம்

## கலியாணப்பூசனிக்காய்

பெரும்பூ சனிக்காய்க்குப் பித்தமொடுட் காய்ச்சல்
அருஞ்சார நீர்க்கட் டருகல் - மருந்திடுதல்
பித்தசுரம் அஸ்திசுரம் பேய்வறட்சி மேகமும்போம்
மெத்த அனிலம்உறும் விள் 704

*இக்காயால் பித்தநோய், உட்சுரம், சாரமேக மூத்திரக் கிரீட்டை, இடு மருந்து, பித்த சுரம், அத்தி தாது கதசுரம், பேய்ச்சொறி, பிரமேகம் ஆகியவை நீங்கும். வாதம் பெருகும்.*

## பரங்கிக்காய் (பூசனிக்காய்)

அனல்அழலை நீக்கும் அதிபித்தம் போக்குங்
கனல்எனவே வன்பசியைக் காட்டும் - புனல்ஆரும்
மிக்கஐயம் உண்டாக்கும் மென்கொடியே எப்போதும்
சர்க்கரைப்ப ரங்கிக்காய் தான் 705

*பரங்கிக்காய் சூட்டால்வரும் அழற்சி, அதிக பித்தம், இரண்டையும் நீக்கும். பசி, கபம் இவற்றையுண்டாக்கும்.*

## குழிப்பரங்கிக்காய்

வாதக் குடைச்சலுறும் மாறாத ஐயமுமாம்
போதவளிச் சூலையுண்டாம் பொற்கொடியே - ஓதுங்
குழிப்பரங்கிக் காய்க்குக் குளிர்ச்சி நிறையும்
பழிக்கடுத்த மாந்தமிகும் பார் 706

*இது குளிர்ச்சியுடையது. வாதக்கடுப்பை விருத்திசெய்யும். வாதசூலை, அக்கினி மாந்தம் இவற்றை உண்டாக்கும்*

### குமட்டிக்காய்

தந்தம் விழுந்திடுமே தாது மெலிந்திடுமே
விந்தைமிகுங் காந்தி விலகிடுமே - சந்ததமும்
வாதம் மிகுந்திடுமே வந்துகபஞ் சேர்ந்திடுமே
ஓதுகுமட் டிக்காயால் உன் 707

*இதனால் பல்விழுதல், சுக்கில நட்டம், உடலொளிகெடல், வாதம், சிலேட்டுமம் இவை உண்டாகும்.*

### சுரைக்காய்

வாதபித்தம் வாய்அருசி வன்பீலி கஞ்சீதம்
ஓதிருத்து நோயும்உண்டாம் உள்ளனல்போம் - ஓதத்
திருப்பாற் கடற்றிருவே தீக்குணத்தை மேவுஞ்
சுரைக்காயைத் தின்பவர்க்குச் சொல் 708

*உட்டிணமுள்ள இக்காயால் வாதபித்தம், சுவையின்மை, பீலிக-ரோகம், ஆமம், மார்புநோய் இவை உண்டாகி உட்சூடு நீங்கும்.*

### வெள்ளரிக்காய்

உண்டருந்தத் தீஎழுப்பும் உண்மருந்தைத் தான்முடுக்குங்
கண்டகரப் பானைக் கடுக்குங்காண் - பண்டிதரே
உள்ளரிப்பை நீர்க்கடுப்பை ஊரைவிடுத் தோட்டிவிடும்
வெள்ளரிக்கா யின்குணத்தை விள் 709

வெள்ளரிக்காய் கரப்பான், தினவு, நீர்ச்சுருக்கு இவற்றை நீக்கி, பசியுண்டாக்கும். உண்ட மருந்தை முறிக்கும்.

### வெள்ளரிப்பிஞ்சு - காய் - பழம் - விதை

பிஞ்சுவெள்ள ரிக்காய்க்குப் பேசுதிரி தோஷம்போம்
வஞ்சியரே முற்றியகாய் வாதமுமாம் - நைஞ்சகனி
உண்டாற் சயித்தியமாம் உள்ளிருக்கும் அவ்விதையைக்
கண்டாலும் நீர்இறங்குங் காண் 710

*இதன் பிஞ்சு முத்தோடம் நீக்கும். காய் வாதத்தையும், பழம் கபத்தையும் உண்டாக்கும். வித்து நீரினைப்பெருக்கி வெளியாக்கும்.*

## கக்கரிக்காய் (முள்வெள்ளரிக்காய்)

கக்கரிக்காய் பித்தங் கடியுங் கபமுயர்த்தும்
மெய்க்குக் குளிர்ச்சிதரும் மென்னுதலே - முக்குகின்ற
மூல அழல்தணிக்கும் மூடிரத்த பித்தத்தைச்
சால அகற்றிவிடுஞ் சாற்று 711

*இது பித்தம், மூலச்சூடு, இரத்த பித்தம் இவற்றை நீக்கும். கோழையையும் குளிர்ச்சியையும் உண்டாக்கும்.*

## ஆகாயக்கக்கரிக்காய்

ஐயம்விளையும் அழல்கரப்பான் பித்தமும் போம்
மெய்யுள் அதிபோகம் விளையுங்காண் - செய்மருந்தின்
காந்தியும்போம் ஆகாயக் கக்கரிக்காய் தின்றவர்க்கு
வாந்தியும்போம் மாதே வழுத்து 712

*இக்காயால் தேகச்சூடு, கரப்பான், பித்தம், பித்த வாந்தி இவை நீங்கும். கபம் உண்டாகும். மருந்தின் வேகத்தைப் போக்கும். புணர்ச்சியில் இச்சை உண்டாகும்.*

## அவரைக்காய்

கொட்டைஅவ ரைக்காயால் கோர அரோசகநோய்
கிட்டாதென் பார்மருந்தின் கீர்த்திகெடுந் - துட்டமந்தம்
பையஉண்டாம் பேதிஉண்டாம் பாரிப் பனிலம்உண்டாம்
ஐயம்உண்டாஞ் சூலையும்உண் டாம் 713

*முதிர்ந்த அவரைக்காயினால் சுவையின்மை, மருந்தின் நன்மை இரண்டும் நீங்கும். அக்கினிமாந்தம், அதிசாரம், உடல்எடை அதிகமாதல், வாததோடம், சிலேட்டுமம், குத்தல், மந்தம் இவை உண்டாகும்.*

## வாள்அவரைக்காய்

அதிபித்தம் வாந்தி அரோசகமும் உண்டாங்
குதிவாதம் வாய்ச்சுரப்புங் கூடுந் - துதிசக்ர
வாளவரை யொத்த வனமுலைமா தேபெரிய
வாளவரைக் காயால் மதி 714

*இக்காய் பித்தம், வாந்தி, சுவையின்மை, குதி வாதம், வாய்நீரூறல் ஆகியவற்றை உண்டாக்கும்.*

### பீர்க்கங்காய்

*தின்றவுடன் பீர்க்கங்காய் சீதம்உறுங் காண்பித்தம்*
*ஒன்றுமூன் றாக உயருமே - மன்றலணிக்*
*காரளகக் கச்சுமுலைக் காரிகையே வாதகபம்*
*நேர்அளவைத் தாண்டும் நினை* 715

இது நீர்ப்பிடிப்பு, பித்தம் இவற்றை உண்டாக்கும். பித்தம் மூன்று பங்காகும். வாத, கபங்கள் தத்தம் நிலையினின்று மாறும்.

### புடலங்காய்

*போகம் விளையும் பொருந்தி வளரும்ஐயம்*
*ஆகம்அதிற் பித்தம் அணுகுங்காண் - மேக*
*படலங் கவியளகப் பாவாய்க்கேள் நாளும்*
*புடலங்காய்க் குள்ள புகழ்* 716

*இக்காய் சுக்கிலம், கபம், பித்தம் இவற்றை அதிகரிக்கும்.*

### பன்றிப்புடலங்காய்

*கரப்பான் சொறிசிரங்கு காணாச் சிலந்தி*
*உரப்பாம் விஷக்கடியும் உண்டாம் - உரைத்தவகை*
*அன்றிச் சயித்தியமும் ஆம்பன்றி தன்னையொத்த*
*பன்றிப் புடலுக்குப் பார்* 717

*கரப்பான், புடை, கிரந்தி, சொறி, சிரங்கு, நீர்ப்பிடிப்பு இவை-யுண்டாகும். இறங்கிய காணாக்கடி, சிலந்தி, பாம்பு இவற்றின் விடமேறும்.*

### கொம்புப்பாகல்

*மருந்துகளின் நற்குணத்தை மாற்றும் அஃதொன்றோ*
*திருந்தவலி வாதத்தைச் சேர்க்கும் - பொருந்துபித்தங்*
*கூட்டும்அவ பத்தியத்தைக் கொண்டிருக்கும் வன்கரப்பான்*
*காட்டுங் கொம்புப்பாகற் காய்* 718

*வாத, பித்தத்தை அதிகரித்து, மருந்தின் தன்மையை முறிக்கும் இயல்பு கொம்பு பாகற்காய்க்குண்டு.*

## மிதிபாகல்

பித்தமொடு வாதப்பெருக்கை மிகவுண் டாக்குந்
தத்துகரப் பானைத் தருவிக்கும் - பற்றிரத
தார பாஷாணந் தமைமுறிக்குந் தப்பாது
காரவல்லி யாம்பாகற் காய். 719

இது பித்தம், வாதம், கரப்பான் இவற்றை உண்டாக்கும். பாதரசம், அரிதாரம், பாடாணம் இவற்றை முறிக்கும். இது கேரள நாட்டின் பத்தியக் கறியாகும். இதற்குக் காரவல்லி என்று பெயர்.

## காட்டுப்பழுபாகல்

போஜனம் உட்செல்லும் பொருந்துபசி உண்டாகுங்
காசபித்த வாதமிகக் காணாவாம் - நேசமுற
வாட்டுப்படாக்கொங்கை மாதே குறிஞ்சிநிலக்
காட்டுப் பழுபாகற் காய்க்கு 720

இது அன்னத்தைச் செலுத்தி நல்ல பசியை உண்டாக்கும். இருமலால் ஏற்பட்ட பித்த வாதத்தை நீக்கும்.

## அதளக்காய்

அதளக்காய் வாய்க்குருசி யாய்இருக்குந் தின்றாற்
கதளவொட்டாப் பித்தங் கதிக்கும் - பதலத்தின்
மந்தம்உண்டாம் வாயுமிக வந்தடருந் தப்பாதே
கந்த மலர்க்குழலாய் காண் 721

சுவையாயிருக்கும் இதனையுண்டால் பித்தம், வயிற்று மந்தம், வாதம் இவை உண்டாகும்.

## தூதுளங்காய்

ஐயம்உடன் பித்தம் அகலும் அரோசகம்போந்
தையலே வாதந் தணியுங்காண் - வையமிசை
ஓதுங் குடல்வாதம் ஓடும் மலம்ஒழியுந்
தூதுளங் காய்உண்ணச் சொல் 722

தூதுளங்காய் கபம், பித்தம், சுவையின்மை, இரத்த வாயு, ஆந்திரபித்தம், குடல் வாதம், மல பந்தம் இவை நீங்கும்.

### கொடிவழுதுணைக்காய் (வழுதலங்காய்)

எல்லார்க்கும் நல்லிதமாஞ் சிலேஷ்மத்தைப் போக்கும்
புல்லார்க்கும் பத்தியம் புசிக்கலாம் - முல்லைக்
கடிகமழும் வார்குழலே காசினியிற் சொன்னோங்
கொடிவழு துணைக்காய்க் குணம்

*இது வாதம், பித்தம், ஐய உடலுடையோர்க்குப் பொருந்துவதாகும். கபத்தைக் கரைக்கும். பித்தத்திற்காகும்.*

### பயற்றங்காய்

ஐயம்அகலும் அரோசி கெடுந் தீபனமாம்
பையுதிர வாய்வும் பறக்கும்என்பார் - செய்யும்
நயத்த அவுஷதமும் நாசம் அடையும்
பயற்றங்காய் தன்னைஉண்டு பார் 723

*இது மருந்தை முறிக்கும். கபம், சுவையின்மை, இரத்த வாந்தி, குன்மம் இவை நீங்கும். பசியை உண்டாக்கும்.*

### கோவைக்காய்

வாயின் அரோசகம்போம் மாறா அழலைஅறும்
நோயிற் கபம்அகலும் நுண்ணிடையே - தூயஅதன்
வற்றற் கருசி மருவுகரப் பான்போகுஞ்
சுத்தக்கோ வைக்காயைச் சொல் 724

*கோவைக்காய், சுவையின்மை, வெப்பம், சுரம், கபம் இவற்றை நீக்கும். வற்றல், உணவில் வெறுப்பு, கரப்பான் இரண்டையும் நீக்கும்.*

### சுக்கான் காய்

மைக்குழலே நீகேளாய் வாதம்அறும் பித்தம்என்பார்
சுக்கான்காய் வற்றல்அது தொல்லுலகில் - கைக்கின்ற
வாயுவை நீக்கும் வரும்அருசி போக்கிவிடும்
நீயும் அறிவாய் நிசம் 725

*சுக்கான் காய், வாதத்தைப் போக்கும். இது பித்த குணமுடையது. வற்றலால் வாதம், உணவில் வெறுப்பு நீங்கும்.*

### மிளகுக்காய்

*அளவைஉறாக் காரம் அடைந்திருக்கும் வாத*
*விளைவைஎல் லாம்அறுக்கும் மெய்யே - மிளகின்காய்*
*கண்டவர்க்கும் இன்பமாங் காரிகையே சீழ்மூலங்*
*கொண்டவர்க்கு நன்மருந்தாங் கூறு* 726

*கார்ப்புச்சுவையுடைய மிளகுக்காய் வாதம், சீழ் மூலம் இவற்றை நீக்கும்.*

### ஆற்றுத்தும்மட்டிக்காய்

*கிடையெங்கே சோம்பலெங்கே கேடுறச்செய் வாதக்*
*கடையெங்கே யாற்றுக் கலிங்க - மடைதிறக்கின்*
*அண்டை யடைசலெங்கே யாயிழையார் சூதகத்தின்*
*உண்டை யுடைசலெங்கே யோது* 727

*இத்தும்மட்டிக்காயால் கீல் பிடிப்பால் நடையின்றியிருத்தல், சோர்தல், வாதநோய், கருப்பை, ஆமம், சத்த குன்மக்கட்டி இவை நீங்கும்.*

### சிகைக்காய் (சீயக்காய்)

*வாந்திதரும் பேதிதரும் வஸ்திரகா யஞ்செய்து*
*மோந்தால் நசியம்வெகு முக்கியமாம் - நேர்ந்த*
*வகைநெய்யைப் போக்கிவிடும் மாதரசே நாளுஞ்*
*சிகைக்காய் அதனைத் தெரி* 728

*இது மூக்கின் சிகிச்சைக்குப் பயன்படும். பேதியையும், வாந்தியையும் உண்டாக்கும். பலவித நெய் சிக்குகளைப் போக்கும்.*

## மரத்தின்பழத்தின் குணம்

### விளாம்பழம்

எப்போதும் மெய்க்கிதமாம் ஈளையிரு மல்கபமும்
வெப்பாருந் தாகமும்போம் மெய்ப்பசியாம் - இப்புவியில்
என்றாகி லுங்கனிமேல் இச்சைவைத்துத் தின்னவெண்ணித்
தின்றால் விளாங்கனியைத் தின் 729

*இப்பழம் சுவாசம், காசம், கபம், பித்தம், தாகம், இருமல் இவற்றை விலக்கும். உடலுக்கு சுகமும் நல்ல பசியும் உண்டாகும்.*

## இலந்தைப்பழம்

பித்தம் மயக்கருசி பேராப் பெரும்வாந்தி
மொத்தனிலம் எல்லாம் முடிந்திடுங்காண் - மெத்த
உலர்ந்த வெறும்வயிற்றில் உண்டால் எரிவாம்
இலந்தை நறுங்கனியை எண் *730*

*பித்தமூர்ச்சை, உணவில் வெறுப்பு, முத்தோடம், வாந்தி, வலிவாதம் இவை நீங்கும். இதைப் பசியெடுக்கும் போது சாப்பிட்டால் எரிச்சலுண்டாகும்.*

## வாழைப்பழம்

சுத்தஅ ருச்சுனஞ்செய் சோமநோ யென்பதுவும்
பித்தநோ யென்னப் பிறந்தவையு - முற்றி
வரம்பைக் கடந்த மதமூர்ச்சை யும்போம்
அரம்பைக் கனியுண் டறி *731*

*உடம்பை வெளுப்பாக்கும் சோமநோய், பித்தபிணி, மதப்பிணி, மூர்ச்சை ஆகியவற்றை வாழைப்பழம் நீக்கும்.*

## எண்வகைவாழைப்பழம்

செவ்வாழை வெள்வாழை சேர்ந்தரச தாளிமொந்தன்
ஒவ்வும்இவை நோயோர்க் குலகத்தில் - கவ்வடுக்கு
வாழைமலை வாழைபசும் வாழைகரு வாழைகளில்
ஊழிகரு வாழைநன்றாம் ஓது *732*

ஓதல்உற்ற வாழைஎட்டில் உற்ற கனிகள்எல்லாம்
வாதநோய்க் காகாது வையகத்தோர் - போதஉண்ண
எண்ணம்உண் டாயின் இதற்கியைந்த சத்துருவோ
டுண்ண இடர்இல்லை உரை *733*

*செவ்வாழை, வெள்வாழை, இரசதாளி, மொந்தன், அடுக்குவாழை, மலைவாழை, பச்சை வாழை, கருவாழை என்கிற எட்டு வகை வாழைப் பழங்களுள் முதலில் கூறிய நான்கும் நோயாளிக்கு நல்லது. பின் நான்கில் கருவாழை நன்மைதரும். இப்பழங்கள் வாதநோயாளிகளுக்குதவாது.*

### பேயன்வாழைப்பழம்

பேயன் பழம்அருந்தில் பித்தரோ கம்போகும்
வாயுஉண் டாகும் மலங்கழியுந் - தீயே
தகத்தில் அதிகுளிர்ச்சி ஆகும் அணங்கே
சகத்தில் இதைஅறியச் சாற்று 734

*இது பித்தம், உட்சூடு இவற்றை நீக்கும். வாதம், மிகுந்த குளிர்ச்சி, மலம் எளிதில் கழிதல் இவை உண்டாகும்.*

### மொந்தன்வாழைப்பழம்

மந்தமுட னோய்கனத்தல் வாதம் வலிசீதந்
தொந்தம்உறு தாகம்இவை தோன்றுங்காண் - புந்திவலி
ஒட்டுபித்தங் காமாலை உள்வறட்சி யுந்தொலையும்
நாட்டுமொந் தன்பழத்தி னால் 735

*இப்பழத்தை உண்டால் அக்கினிமந்தம், வாதவலி, பாரிப்பு, இசிவு, நீர்ப்பிடிப்பு, திரிதோடம் இவையுண்டாகும். பித்தம், காமாலை, தாதுவறட்சி இவை நீங்கும்.*

### நவரைவாழைப்பழம்

மாந்தமொடு நமைச்சல் வாதகப மும்பெருகும்
பாந்தல் உறுகரப்பான் பாவுங்காண் - பூந்தடக்கை
யாழைப் பழித்தமொழி யன்னமே கேள்நவரை
வாழைப் பழத்தால் மதி 736

*இப்பழத்தால் மந்தாக்கினி, தினவு, வாத, சிலேட்டும நோய்கள், கரப்பான் ஆகியன நீங்கும்.*

### பலாப்பழம்

தித்திக்கும் வாதசி லேஷ்மபித்தம் உண்டாக்கும்
மெத்தக் கரப்பான் விளைவிக்குஞ் - சத்தியமாய்ச்
சேராப் பிணியைஎல்லாஞ் சேர்க்கும் ஒருநொடியிற்
பாராய் பலாவின் பழம் 737

*வாத, கப பித்த நோய்கள், கரப்பான் போன்ற பல பிணிகளையும் பலாப்பழம் உண்டாக்கும்.*

### மாம்பழம்

தின்றாற் றினவெடுக்குந் தீபனம்போம் நெஞ்செரிவாம்
அன்றே விழிநோய் அடருங்காண் - துன்றிமிக
வாதக் கரப்பானும் வன்கிரந்தி யும்பெருகுஞ்
சூதக் கனியின் சுகம் *738*

*இதையுண்டால் நமைச்சல், மார்பெரிச்சல், கண்நோய், கருங் கரப்பான், கிரந்தி இவற்றை அதிகரிக்கும். பசி நீங்கும்.*

### மாம்பழம் - காய் - பிஞ்சுஇவைகள்

வேத சத்திய மாக விளம்புவோந்
தாது விர்த்திக்குந் தம்பன மாங்கனி
போதம் மர்த்தனம் புன்காயி னால்வடு
வாதபித்த கபங்களை மாற்றுமே *739*

*மாம்பழம் சுக்கிலப் பெருக்கத்தை உண்டாக்கும்; கட்டச்செய்யும், காயால் அறிவு கெடும். பிஞ்சு திரிதோடத்தை நீக்கும்.*

### தசையத்திப்பழம்

இரத்த முண்டாக்கு மிளைத்த மெய்யைத் தேற்றுஞ்
சுரத்தி லாமவெப்பைத் தொலைக்கும் - கரத்த
மலத்தைக் கடிதுள்ளும் வன்னிகபத் தொந்தம்
பலத்த தசையத்திப் பழம்

*இது இரத்த விருத்தியை உண்டாக்கும். உடல் பலத்தைப் பெருக்கும். சுரம், வெப்பு, சீரணபலம் இவற்றை நீக்கும்.*

### விதையத்திப் பழம்

தினமுமலக் கட்டொழிக்குத் தேக வெப்ப நீக்கும்
வனமுறு பித்தகோப மாற்று - மினமயிலுற்
றுன்னு விழியையுடைச் சொன்னமே வையகத்தோர்
பன்னு விதையத்திப் பழம்

*மலக்கட்டு, உடல்வெப்பம், பித்தம் இவற்றை விதையத்திப்பழம் போக்கும்.*

## புளியம்பழம்

புத்தியும் மந்தமாகும் பொருமியே உடலும்ஊதும்
பத்தியந் தவருஞ்சன்னி பாதமாஞ் சுரங்கள்வீறுஞ்
சர்த்தியும் பித்துந்தீருந் தனுவெலாம் வாதம்ஏறும்
மத்திபந் தாதுபுஷ்டி வருந்திரை நரைபுளிக்கே 740

*இப்பழம் மந்தபுத்தி, உடல் பருத்தல், சன்னிபாதசுரம் வாதம், வாந்தியும். பித்தமும் தீரும். சுக்கிலமத்திமம், திரைநரை இவற்றை-யுண்டாக்கும்.*

## பழம்புளி

தீதில் பழம்புளியைச் சேர்க்கத் திரிதோஷம்
வாதமொடு சூலைகபம் மாறுங்காண் - ஓதுசுரஞ்
சர்த்தியென்ற தோஷம்இவை சாந்தமாங் கண்ணோய்போம்
பித்தமென்ற பேர்ஒழியும் பேசு 741

*நல்ல பழம்புளியால் முத்தோடம், வாதநோய், சூலை, சிலேட்டுமம் கோபம், ரூட்சை, வாந்தி, விழிநோய், பித்தம்இவை நீங்கும்.*

## சரக்கொன்றைப்புளி

வன்பனில மேக மலக்கட் டொடுகுடரின்
றுன்ப மலினம்வெப்பு தோன்றுங்கா - லின்பந்
தருதமாலப் பரிமளத் தனத்தா யிந்தக்
கிருதமாலப் புளியைக் கேள்

*சரக்கொன்றைப்புளி வாதப்பிரமேகம், மலக்கட்டு, குடல்வலி, குடல் அழுக்கு, உட்டிணம் இவற்றைப் போக்கும்.*

## பனம்பழம்

நாளும் பனம்பழத்தை நல்அமுதாய் உண்ணுங்கால்
ஆளுங் கரப்பான் அழுகிரந்தி - நீளுமலஞ்
சிக்கும்பித் தத்தில்வளி சேருதலால் நோய்க்கணமு
திக்கும்ப லக்கும்எனச் செப்பு 742

*தினமும் பனம்பழத்தையே உணவாக உண்டால் கரப்பான், அழுகிய சிரங்கு, மலக்கட்டு, பித்தவாயுவால் ஏற்பட்ட நோய்கள் இவை உண்டாகும்.*

## தேற்றான்பழம்

தேற்றான் கனிதனக்குச் சேயிழையே வன்காசந்
தோற்றா தொழியுஞ்சு வாசமும்போஞ் - சாற்றின்மிக
வாந்தி பெருகும் மலம்போம்முத் தோஷத்தைச்
சேர்ந்த பிணிகளும்போஞ் செப்பு 743

*வாத இருமல், இரைப்பு, மலக்கட்டு, முத்தோட நோய்கள் இவை தேற்றான் பழத்தால் நீங்கும்.*

## நாவல்பழம் (நாகற்பழம்)

மாந்தம் விளையும் வலிகரப்பான் உண்டாகும்
சேர்ந்ததொரு நீரிழிவுஞ் சேருமோ - நாந்தலொடு
வாய்வுங் கடுப்பும் வருங்கொதிப்புந் தாகமும்போந்
தூயநா வற்பழத்தால் சொல். 744

*இப்பழத்தால் அக்கினிமந்தம், உடல்வலி, கடுவன், சீததாகம், கடுத்தல் இவை உண்டாகும். கொதிப்பு, தாகம் இவை நீங்கும்.*

## வெண்நாவல்பழம்

உதிரமொடு விந்துவையும் உண்டாக்கும் உள்ளே
அதிர் அழலைதன்னை அகற்றும் - பதியதனிற்
கண்ணாவ லியார்க்குங் கதிக்கநோக் குந்திருவே
வெண்ணாவ லின்கனியை விள். 745

*இது இரத்ததாது. சுக்கிலத்தாது இவற்றையுண்டாக்கும். உள் வெப்பத்தைப் போக்கும்.*

## சம்புநாவல்பழம்

அனில அழலும் அரும்பித்த வெப்புந்
தனியுலவு தாகமுந் தயங்கும் - தனிவேடன்
அம்புநா ணுங்கண் அணியிழையே கானில்உறுஞ்
சம்புநா வற்கனிக்குந் தான். 746

*இப்பழத்தால் வாத உட்டிணம், பித்த உட்டிணம், தோடத்தால் ஏற்பட்ட தாகம் இவை நீங்கும்.*

## பாலைப்பழம்

*வாத கரப்பன்அறும் வல்லசி லேஷ்மமும்போம்*
*வேதுகி ரந்தியுஞ்சாம் மென்பசியாம் - ஓதுமதன்*
*கோலைப் பழித்தவிழிக் கோதா யினிமையுள்ள*
*பாலைப் பழத்தைப் பருகு* 747

*பாலைப்பழம் கருங்கரப்பான், சிலேட்டுமம், கிரந்தி, இவற்றைப் போக்கி மிகுந்த பசியை உண்டாக்கும்.*

## பேரீச்சம்பழம்

*பேரீந் தெனுங்கனிக்குப் பித்தமத மூர்ச்சைசுரம்*
*நீராந்த ஐயம் நெடுந்தாகம் - பேரா*
*இரத்தபித்தம் நீரிழிவி ளைப்பறும் அரோசி*
*உரத்தமலக் கட்டுமறும் ஓது* 748

*இதனால் பித்தம், மதநோய், மூர்ச்சை சுரம், சிலேட்டுமம், நீர்க்கோவை, தாகம், இரத்தபித்தம், நீரிழிவு, இளைப்பு, சுவையின்மை, மலக்கட்டு ஆகியவை நீங்கும்.*

## கொட்டைமுந்திரிப்பழம்

*தாகந் தணியுஞ் சகிக்காக் கரப்பானாம்*
*ஆகத்திற் சேர்ந்த அழலும்அறும் - வேகின்ற*
*துட்டவன்சி ரங்கொடுபுண் தோற்றுங் கறகறப்பாங்*
*கொட்டைமுந்தி ரிப்பழத்தால் கூறு* 749

*கொட்டைமுந்திரிப்பழத்தால் தாகம், உடல்வெப்பம் இவற்றை நீக்கும். கரப்பான், புண், கிரந்தி, நெஞ்சிற்கரப்பு இவையுண்டாகும்.*

## தமரத்தம்பழம் (தந்தசடம்)

*வாதபித்தம் வாதகபம் வாந்திகுரற் கம்மல் கண்ணோய்*
*தாதுநஷ்டம் பித்தந் தலைநோயோ - டோதுசித்தத்*
*துற்ற பிரமையும்போம் ஒண்டொடியே மாபுளிப்பாம்*
*நற்றமரத் தம்பழத்தை நாடு* 750

*இப்பழத்தால் வாத, பித்த, வாதசிலேட்டும நோய்கள், வாந்தி, குரல் கம்மல், கண்ணோய், சுக்கிலநட்டம், பித்தம், தலைநோய் இவை நீங்கும்.*

## கொய்யாப்பழம்

திரிதோஷஞ் சென்னித் திருப்பம் அரோசி
பொருமாந்தம் வாந்தி பொருமல் - கரப்பானும்
மெய்யாய்ப் பரவும்மலம் மெத்தவிடும் போகம்உண்டாங்
கொய்யாப் பழத்தினாற் கூறு. 751

*இப்பழத்தால் முத்தோடம், மயக்கம், சுவையின்மை, மந்தம், வாந்தி, வயிற்றுப்பல், கரப்பான், வீரியம் இவையுண்டாகும்.*

## எலுமிச்சம்பழம்

தாகங் குநகநோய் தாழாச் சிலிபதநோய்
வேகங்கொள் உன்மாதம் வீறுபீத்தம் - மாகண்ணோய்
கன்னநோய் வாந்தியும்போங் கட்டுவாதித் தொழிலில்
மன்னெலுமிச் சங்கனியை வாழ்த்து. 752

*இதனால் தாகம், நகச்சுற்று, யானைக்கால், உள்மாந்தம் பித்தம், கண்ணோய், காதுவலி, வாந்தி நீங்கும்.*

## நாரத்தம்பழம்

பித்தவழிக் குன்மம்அறும் பேராத தீபனமாம்
வித்தான தாதுவும்வி ளைந்திடுங்காண் - முத்திணைத்த
ஆரத்தைத் தாங்குமுலை யாயிழையே எக்காலும்
நாரத்தை யின்கனியி னால் 753

*இதனால் பித்த குன்மநோய் நீங்கும். பசியெடுக்கும். சுக்கில விருத்தியுண்டாகும்.*

## சாதிநாரத்தை - கொளுஞ்சிநாரத்தை

சாதிநரந் தம்பழந்தான் தாகந் தனையகற்றும்
ஓதருசி வாய்க்கசப்பை ஓட்டுங்காண் - வேதால்
அளிஞ்சமே கத்தேகர்க் காம்வறட்சி போக்கும்
கொளுஞ்சிநரந் தம்பழந்தான் கூறு 754

*சாதி நாரத்தம்பழம், தாகம், அரோசகம், வாய்க்கசப்பு இவற்றை நீக்கும். கொளுஞ்சி நாரத்தம்பழம் நாவறட்சி போக்கும்.*

## சித்தாப்பழம்

பித்தகப மெத்தப் பெருகுமந்தம் மேலாடுஞ்
சித்த மதிற்றயக்கஞ் சேருங்காண் - நத்துலவும்
பூத்தானத் தாரும் புலன்கொடியே பூவுலகிற்
சித்தாக் கனிக்குணத்தைத் தேர் 755

*சித்தாப்பழத்தால் பித்த சிலேட்டும நோய்கள், அக்கினிமாந்தம், சித்தப்பிரமை இவை உண்டாகும்.*

## மாதுளம் பழம்

சங்கையறச் சொற்றவிர்க்குஞ் சந்நியா சஞ்சர்த்தி
யங்கை யதிதாக மமைச் சாருமோ - கங்கை
இருந்தாடி மக்கட் கிரத்தலைச்செய் நோய்போம்
இருந்தாடி மக்கனிகட் கெண் 756

வாய்நீர்ஊ றல்கசப்பு வாந்திவிக்கல் மந்தமிகக்
காய்வெப்பம் நெஞ்செரிவு காதடைப்பும் - ஓயா
மயக்கமுந் தீர்ந்துவிடும் மாதுளம் பழத்தால்
தயக்கம்அறத் தேமொழியே சாற்று 757

வெடித்துவீழ் பழத்தைவாங்கி மெல்லிய சீலைகட்டி
கடுக்கெனப் பிழிந்துகொண்டு கண்டுசர்க் கரையுங் கூட்டிக்
குடித்திட வெப்புமாறுங் குளிர்ந்திடும் அங்கமெல்லாம்
வடித்தநன் மொழியினாளே மாதுளம் பழத்தின் சாறே 758

*நினைப்பையும் பேச்சையும் ஒழிக்கின்ற சந்நியாசநோய், வாந்தி, கபம், பித்தம், மலடு இவை நீங்கும். வாய்நீருறல், வாந்தி, வாய்க்கசப்பு, விக்கல் , மாந்தம், அதிசுரம், நெஞ்செரிவு, காதடைப்பு, மயக்கம் இவை நீங்கும். வெடித்த பழத்தைப் பிழிந்து மெல்லிய துணியினால் வடிகட்டி தகுந்த கற்கண்டு சேர்த்து சாற்றை உண்டால் சூடு தணியும். உடல் குளிரும்.*

### கொமட்டிமாதுளம்பழம்

அருசிகெடும் பித்தம் அகலும் ஐயந்தீரும்
உரிசை யுறுங்கபமும் ஓடுஞ் - சரசமுறக்
காதளவும் பாயும்விழிக் காரிகையே நற்கொமட்டி
மாதுளையின் பொற்கனியை வாழ்த்து. 759

*சுவையின்மை, பித்தம், சிலேட்டுமம், சயரோகம் இவை கொமட்டி மாதுளம் பழத்தால் நீங்கும்.*

## செடியின் பழகுணம்

### சிற்றீச்சம்பழம்

*சிற்றீந் தெனுங்கனிக்குச் சீதம் உழலையொடு
உற்ற சிரங்குகளும் உண்டாகும் - சுற்றிச்
செறியும் பலபிணியுந் தேமொழியே நாளும்
அறிவும் மழுங்கும் அறி 760*

*சிற்றீச்சம் பழத்திற்குச் சீதபேதி, உழலைநோய், சிரங்கு முதலான பற்பல நோய்களும் நீங்கும்.*

### பூந்தாழம்பழம் (அன்னாசிப் பழம்)

மேகவெட்டை வாந்திபித்த மீறாவாம் மேனியிடுந்
தாகமு மட்டாகுந் தலைவலிபோம் - பாகமுறு
பூந்தாழை யின்பழத்தைப் பூரிப் புடன்புசிக்க
லாந்தாழ்வும் இல்லை யறி 761

*பிரமேக வெள்ளை, வாந்தி, பித்தநோய், தாகம், தலைநோய் இவை நீங்கும். அழகுண்டாகும்.*

### கத்தரிப்பழம்

பித்தங் கரப்பான் பெருங்கிரந்தி குஷ்டம்இவை
மெத்தவுமாம் மெய்யில்அழல் வீறுங்காண் - சத்தான
தாதுநஷ்ட மாங்கபங் கால்சார்ந்தசு வாசமும்போம்
ஓதுகத்த ரிப்பழத்தா லுன் 762

*பித்தநோய், கரப்பான், பெருவிரணம், குட்டம், தேகவெப்பம், சுக்கிலக் குறைவு ஆகியவற்றைக் கத்திரிப்பழம் உண்டாக்கும். கோழை, வாததோடம், இரைப்பு இவை நீங்கும்.*

### கண்டங்கத்தரிப்பழம்

காசஞ் சுவாசங் கயஞ்சீதம் பல்லரணை
வீசு சொறிதினவை விட்டோட்டும் - பேசுடலை
உத்தரிக்குந் தீபனத்தை யுண்டாக்கி டுங்கண்டங்
கத்தரிப் பழக்குணத்தைக் காண் 763

*இது இருமல், இரைப்பு, சயம், கபம், பல்லரணை, புடை, நமை இவற்றை நீக்கி, பசியையும் பலத்தையும் கொடுக்கும்.*

### களாப்பழம்

நல்ல பசியிலுண்டா னண்ணுமே சீதரத்தம்
வல்ல மந் தத்திலுண்டால் மாபசியா - மெல்லப்
புரையார்கள் நோய்போம் போற்றுகிற நீர்போந்
தரையார் களாப்பழத்தைத் தான்

*இதை மிகுந்த பசியின்போது உண்டால் சீதரத்தத்தையும் அதிகமந்தத்தில் தின்றால் பசியையும் உண்டாக்கும்.*

### காரைப்பழம்

சீதக் கடுப்புஞ் செறித்தஇரத் தக்கடுப்பும்
ஓதும்அதி சாரமும்போம் உண்மையே - மோதுகடல்
நீரைப் பருகுமுகி னேரளக மின்கொடியே
காரைப் பழத்திற்குக் காண் 764

*இப்பழம் சீத இரத்தக் கடுப்பு, அதிசாரம் இவற்றை நீக்கும்.*

### மரக்காரைப்பழம்

சுரமும் பொருமலும்போந் தொல்மயக்க மில்லு
தரஊதல் போம்அறிவுந் தங்கும் - பருக
அரக்காகு மெல்லிதழ்வாய் ஆரணங்கே கான
மரக்காரை யின்கனியை வாழ்த்து 765

*இதனால் சுரம், வயிற்றுப்பிசம், மூர்ச்சை, மகோதரம், இவை நீங்கும். புத்தித் தெளிவுண்டாக்கும்.*

### சூரைப்பழம்

மந்தம் அதிகரிக்கும் வன்சீதளஞ் சேரும்
உந்து குடல்வலியும் உண்டாங்காண் - முந்துநவில்
காரைப் பழத்தில் கதித்தஒரு பேதமுமாஞ்
சூரைப் பழத்திற்குச் சொல் 766

*இதனால் அதிமந்தம், கபதோடம், குடல்நோய் இவை உண்டாகும்.*

### மிளகாய்ப்பழம்

மூல விரத்த முளைகடுப்பும் உண்டாகுந்
தாலம்அதில் தாதுவுந் தழைக்கும்என்பார் - ஆலம்எனும்
மந்தம் அரோசிகுன்மம் வாய்வும் பொருமலும்போம்
உந்துமுள காய்ப்பழத்தால் ஓது 767

*இதனால் இரத்தமூலமுளை, ஆசனக்கடுப்பு, வீரியவிருந்தி இவை உண்டாகும். உணவில் வெறுப்பு, வயிற்றுவலி, விகுளை வாதம், வயிற்றுப்பிசம் இவை நீங்கும்.*

# கொடியின்பழகுணம்

## சிறிய கொடிமுந்திரிப்பழம்

வெப்பருசி தாகம் விரணஞ்சு வாசகயம்
எய்ப்புடைய பித்தம் இரத்தம்பித்தஞ் - செப்பும்
மடிமந்தம் மேகம் மதமூர்ச்சை யும்போங்
கொடிமுந்திரிக் கனிக்குக் கூறு 768

*இப்பழத்தால் சுரம், சுவையின்மை, வாந்தி, தாகம், இரணம், சுவாசம், கயம், பித்தம், இரத்தபித்தம், மேகம், மதநோய் இவை நீங்கும்.*

## பெருங்கொடிமுந்திரிப்பழம்

சோமநோய் தாவரத்தால் தோன்றுவிஷம் உன்மாதம்
நாமமுறு மூத்திரநோய் நாடுமோ - சாமசுரம்
விண்ஒழியும் மெய்குளிரும் வீறுகொடி முந்திரிக்குக்
கண்ணொளியுந் தாதுவுமாங் காண் 769

*இதனால் சோமநோய், தாவரவிடம், உன்மத்தம், சிறுநீர்த்தோடம் ஆகியன நீங்கும். உடல் குளிர்ச்சியும், கண்ணொளியும் சுக்கில விருத்தியும் உண்டாகும்.*

## தூதுளம்பழம்

கபக்கட்டு கோழை கதித்ததிரி தோஷங்
குபுக்கென் றெழும்புநீர்க் கோவை - கபுக்கென்
றழுத்துவிஷ மும்போம் அடர்தூது ளத்திற்
பழுத்துவிழுங் காயையுண்டு பார் 770

*தூதுளம்பழத்தால் மார்புச்சளி, கயம், வாதம் முதலான தோடங்கள், சலதோடம், சர்ப்பவிடம் இவை நீங்கும்.*

### பாகல்பழம்

சுரமேகங் காசஞ் சுவாசமொடு மூலந்
திரிதோஷங் குஷ்டம் இவை தீருங் - கிருமியறும்
மோகப் புணரியெனு மொய்குழலே வெம்பிவிழாப்
பாகற் பழத்தையுண்டு பார் 771

இப்பழத்தால், சுரம், பிரமேகம், இருமல், இரைப்பு, மூலம் மூத்தோடம், குட்டம், மலக்கிருமி இவை விலகும்.

### சவரிப்பழம்

தலைவலி குடைச்சல் சலப்பீந சங்கள்
குலைகுலைந்து காட்டிற் குடிபோம் - நிலைவா
னவரிப் படிமாதென் றையுறுமெய்ம் மாதே
சவரிப் பழத்தாற் சளைந்து 772

சவரிப்பழத்தால் தலைவலி, உடற்கடுப்பு, நீர்ப்பீநசம் இவை விலகும்.

## மரத்தின்வித்து குணம்

### மாங்கொட்டை

பேசுமே சீதப்பெருக்குஞ் சோரிக் கடுப்பும்
வீசுமோ மூலமுறு வெங்கொதிப்பு - மாசுடைய
பூங்கொட்டை யைத்தள்ளிப் போட்டுக் கனியில்வந்த
மாங்கொட்டையைக் காணில் வாது 773

மாங்கொட்டையால் சீதபேதி, இரத்தக் கடுப்பு, மூலச்சூடு இவை போகும்.

### பலாக்கொட்டை

அள்ளேறு நீள்குடரி னப்பான் மலங்கட்டுங்
கள்ளேறு நெஞ்சர்நெஞ்சாங் கல்லகட்டி - னுள்ளே
சலாக்கொட்டை யிட்டசுகந் தானாங் கருக்கும்
பலாக்கொட்டை யிட்ட பலன் 774

*கருக்கிய பலாக்கொட்டை அள்ளுமாந்தம், குடல்கபம், மலச் சிக்கல், புளியேப்பம், வயிறுகெட்டிப்படல், வயிற்றுவலி ஆகியவற்றை உண்டாக்கும்.*

### புளியங்கொட்டை

சுக்கில மேகம் அனற் றுன்னும்அதி சாரமொடு
மிக்கிரணம் நீர்க்கடுப்பு வெட்டையறுந் - தொக்குள்துவர்
உற்றபுளி வித்திற் குறுகுணத்தை மேன்மேலும்
நற்றரையுண் மாதே நவிற்று 775

புளியங்கொட்டை சுக்கிலமேகம், பித்தம், கழிச்சல், அதிபுண் மூத்திரக்கடுப்பு, வெள்ளை இவற்றை நீக்கும்.

### தேற்றான் கொட்டை

கூற்றென் றுரைக்கும்விழிக் கோமளமே எப்போதும்
ஊற்றாம் பிரமியமும் உட்புண்ணும் - ஆற்றல்இலா
வெட்டை அகக்கடுப்பும் வீறிவரிற் றேற்றாங்
கொட்டைதனை நீயெடுத்துக் கொள் 776

தேற்றாம் விதையதுதான் தீபனத்தைப் போக்கும்அனல்
ஆற்றும்இரு கண்ணுக் கருமருந்தாங் - கூற்றா
யிருத்துங் கிரீச்சரத்தை எங்குமிலா தோட்டுங்
குருத்துவம்உண் டாக்குங் குறி 777

*தேற்றான்கொட்டைக்கு பிரமேகம், வெட்டை, உட்சூடு, பசி, வயிற்றுக்கடுப்பு, மூத்திரக்கிரீட்டை, இரணம் ஆகியன நீங்கும். மந்தமுண்டாகும், கண்ணிற்கு மருந்தாகும்.*

## எட்டிக்கொட்டை

கைக்கறுப்பு சன்னிகடி விஷங்குஷ்ட் டூதைவலி
எய்க்கவரு தாதுநஷ்டம் என்பதும்போம் - மைக்கண்ணாய்
கட்டி கரப்பான் கனமயக்கு பித்தமுமில்
எட்டிமரக் கொட்டையினா லே 778

*சன்னி, விடக்கடி, குட்டம், வாதவலி, வீரிய நட்டம், கரப்பான், மூர்ச்சை, பித்தம் இவை எட்டிக்கொட்டையால் நீங்கும்.*

## புரசங்கொட்டை

வயிற்றுக் கிருமிகணம் வாதமொடு சீதம்
நியத்தபடர் தாமரையும் நீங்கும் - வயிற்று
வலியிரைச்சல் வன்கரப்பான் மாறும்பித் துண்டாம்
மலிபுரசங் கொட்டைதனை வாழ்த்து 779

*வயிற்றுக்கிருமி, கணம், வாதவலி, சீதம், படர்தாமரை, குன்மம், வயிற்றிரைச்சல், கரப்பான் இவை புரசங்கொட்டையால் நீங்கும்.*

## புன்னைக்கொட்டை

கன்ன விரணங் கடுஞ்சன்னி பாதமுடன்
இன்னல்உறு வாதை இவைஅகலும் - புன்னைக்கொட்
டைக்கம்மட் டோவென்னில் ஆர்சூதி காவாய்வும்
மெய்க்கம்மிட் டாழ்வாய்வும் இல் 780

*இது செவிப்புண், சன்னி, தனுர்வாதம், சூதகவாயு, சலத்தை யுண்டாக்கும் வாயு, சீதளவாயு இவற்றைப்போக்கும்.*

## இலுப்பை - அழிஞ்சில்

இலுப்பைவிதை அந்தரவாய் விற்கும்விஷத் திற்கும்
அலுப்பை யுண்டாக்கி அகற்றும் - நிலத்தில்
தொழுஞ்சக மோகக் கரப்பிற் சொல் அஞ்சனமாம்
அழிஞ்சில் விதையென் றறி 781

*இலுப்பைவித்து, அந்தரவாயுவையும் விடத்தையும் நீக்கும். அழிஞ்சில் வித்து உலக வசியம், மறைப்புமை இவற்றிற்குப் பயன்படும்.*

## புங்கு - காட்டுப்புங்கு

புங்கின்விதை காற்கிரந்தி புண்கரப்பான் காதெழுச்சி
அங்கசன்னி கண்ணோய்க்கும் ஆம்பேதி - யங்கட்டுங்
காட்டுப்புங் கின்விதைக்கும் கண்டதேமற் சொறிமெய்ப்
பூட்டுப்பங் கின்வாய்வும் போம் 782

*புங்கன்வித்து, புண், கரப்பான், காதெழுச்சி, சன்னி, கண்ணோய் இவற்றைப் போக்கும். மலத்தைக் கட்டும். காட்டுப்புங்கன் வித்து, தேமல், புடை, கீல்வாயு இவற்றை நீக்கும்.*

## மருதோன்றி - வேம்பு

மருதோன்றி யின்விதைக்கு மாபில்லி சூனியம்
விருதாண்ட பேய்பூதம் மேவுங் - கருதூன்றி
வேம்பின் விதைக்கு விஷஞ்சன்னி பாதமுதல்
தேம்பிவிழுந் தோடுமெனத் தேர் 783

*மருதோன்றிவித்துக்குப் பில்லிசூனியம், பேய்பூதம் இவற்றைப் போக்கும் குணமுண்டு. வேப்பம்வித்துக்கு தாவர சங்கமவிடங்களும் சன்னியும் நீங்கும்.*

## கடப்பம் வித்து

கடப்பம் விதைக்குக் கடிவிஷமும் உண்டோ
தொடுப்புமண்டை நீருந் தொலையும் - இடக்கான
வாத வகையொழியும் மந்தங்கள் ஏகிவிடுங்
கீதமொழி மாதே கிளத்து 784

*இதனால் விடக்கடி, தலைநோய், வாதநோய், அக்கினிமாந்தம் ஆகியவை நீங்கும்.*

## மகிழம் வித்து

தாதுவைநன் மெய்யழகைச் சத்தியையுண் டாக்கிவிடுஞ்
சீதளம்என் பார்கலிக்கஞ் செய்மருந்தாம் - வாதை
மலத்தைவிழித் தோஷத்தை வல்விஷத்தை வெப்பை
விலக்கும் மகிழம் விதை 785

*மகிழம்வித்து மலவிருதவாதம், கண்தோடம், பாம்பின்விடம் சுரம் இவற்றை நீக்கும். சீதளத்திற்கு இதன் கலிக்கம் பயன்தரும். சுக்கிலத்தையும் உடல்வனப்பையும் பலத்தையும் கொடுக்கும்.*

## தில்லம்வித்து

*தில்லம் விதைக்குச் சிறுவிஷம் மகாவிஷமுஞ்*
*செல்வஞ் செருக்குந் திமிர்வாய்வும் - வெல்லங்கொள்*
*வாரை வருத்துகின்ற வன்கபமுங் குஷ்டமும்இவ்*
*வூரைவிடுத் தேகும் உரை* 786

*இதற்குச் சிறுவிடம், பாம்பின்விடம், திமிர்வாதம், இனிப்பால் பிறந்த கபம், குட்டம் இவை நீக்கம்பெறும்.*

## ஆளிவித்து

*வீக்கம் அதிவாந்தி மேனி வலிவாய்வுந்*
*தூக்குநரம் பின்குத்தல் தொல்லழலை - ஒக்காளம்*
*மீளி யருசி விதை வாத மும் போகும்*
*ஆளிவிதை தன்னால் அறி* 787

*ஆளிவித்தால் சோபை, அதிகவாந்தி, உடற்கடுப்பு, வாதவலி, நரம்புச் சூலை, அத்திச்சூடு, ஒக்காளம், சுவையின்மை, வாயு இவை நீங்கும்.*

## உருத்திராட்சவித்து

*நீளும்அதி தாகத்தை நீங்காமுத் தோஷத்தை*
*ஆளும்விக்கல் பித்தத்தை யாற்றுங்காண் - நாளும்*
*மிருத்திரா மற்கபத்தை வீட்டுமே நல்ல*
*உருத்திராக் கத்தின்வலி ஓது* 788

*உருத்திராட்சவித்து அதிகதாகம், முத்தோடம், விக்கல், பித்தம், சிலேட்டுமம் இவற்றைப் போக்கும்.*

## முருங்கைவித்து

*நீரான் விந்துவ்மோ நீண்டபிசி னாய்த்தடிக்குஞ்*
*சீராக மேனி செழிக்குங்காண் - பாராய்*
*முருங்கை விதைஅதனால் மொய்த்தஇலை ஈர்க்கோ*
*ஒருங்கையுற நீர்இறக்கும் உன்* 789

*இதன் வித்தினால் கரைந்தவிந்து கெட்டிப்படும். உடல் பலம் பெறும். இதன் இலையும் ஈர்க்கும் நீரைப்பெருக்கும்.*

## மாதுளம்வித்து

சுக்கிலத்தைக் கட்டும்அந்தச் சுக்கிலதோ ஷம்போக்கும்
அக்கணமே கக்கடுப்பை ஆற்றுங்காண் - எக்காலுங்
கோதுளத்தெண் ணாதமலர்க் கொம்பனைய மாதேசெம்
மாதுளத்தின் பீச வலி 790

*மாதுளம்வித்து சுக்கிலத்தை இறுக்கும். அதிலுள்ள குற்றத்தையும் பிரமேகச் சுருக்கையும் நீக்கும்.*

## முந்திரிப்பருப்பு

மெத்தஇனிப் பாகும்அது மென்கொடியே தின்றக்கால்
பித்த அனிலம் பிறக்கும்என்பார் - எத்தலத்தும்
இந்திரியப் புஷ்டி யிளைக்காது மாந்தம்உண்டாம்
முந்திரியின் நற்பருப்பை யுன் 791

*முந்திரிப்பருப்பால் பித்தவாதம், தாதுவிருந்தி, அக்கினிமாந்தம் இவை உண்டாகும்.*

## வாதுமைப்பருப்பு

அடப்பம்விதை யாம்வாது மைப்பருப்பி னாலே
மடற்பெரிய கண்படலம் மாறுஞ் - சடக்கெனவே
புண்மேற் கொழுப்பகலும் போகமும்உண் டாகுமென
மண்மேற் புகல்வார் மகிழ்ந்து. 792

*இதனால் விழிப்படலம், இரணம் இவை நீங்கும். கலவியில் விருப்பமுண்டாகும்.*

## சாரப்பருப்பு - மிசரிப்பருப்பு

சாரப் பருப்பால் தனிமிசரி யின்பருப்பால்
நீரப் பருங்கடுப்பு நீர்ச்சீதந் - தீரத்
தொலையும் இர தங்கந்தி துய்த்தார்க்கு நன்றாங்
கலையும் விந் துவுக்கூக் கங் காண் 793

*இவற்றால் சிறு நீர்ச்சுருக்கு, கடுப்பு, சலப்பிரமேகம் இவை நீங்கும். சுக்கிலம் இறுகும். இரசகந்தங்களைத் தின்றவர்க்கு நலனைத்தரும்.*

## செடியின்வித்துகுணம்

### துத்திவித்து

*கையிற்கா லிற்படர்ந்த கார்மேகம் போய்ஒழியும்*
*மெய்யில்உறு குஷ்டம்போம் வெப்பகலுந் - துய்யதிரை*
*யத்திதனை யொத்தவிழி யாரணங்கே நாட்டிலுள்ள*
*துத்தி விதையைச் சுவை* **794**

*துத்திவிதையைத் தின்றால் கைகால்களில் உண்டான கருமேகமும் குட்டமும் வெப்பமும் நீங்கும்.*

### தகரைவித்து

*வண்டு கடியுடனே வன்கடுவ னும்பலவாம்*
*பண்டு நமைபுடையும் பண்டிதர்கள் - கண்டுரைக்காப்*
*பித்த அனலும் பெருத்த தகரைவிதைக்*
*கித்தரையுள் நில்லா திசை* **795**

*தகரைவிதைக்கு வண்டுகடி, அரைக்கடுவன், நீங்காத்தினவு, புடை, பித்தம் இவற்றை நீக்கும் பண்புண்டு.*

### நீர்முள்ளிவித்து

*விந்துவுமாந் தாதுவுமாம் மேகரோ கந்தொலையும்*
*உந்தும்அதி சாரம் ஒழியுங்காண் - வந்துடலில்*
*ஏறியநீர் வீக்கம் இறங்கும் இளைப்புமறுங்*
*கூறியநீர் முள்ளிவிதைக் கு* **796**

*நீர்முள்ளி வித்தானது பிரமேகம், கழிச்சல், கபம், இளைப்பு, இவற்றை நீக்கி சுக்கிலம், தாது இவற்றை விருத்தியடையச் செய்யும். இதனால் நீர் இறங்கும்.*

### ஊமத்தம்வித்து

சுரம்போம் விஷம்போந் தொலையாத சன்னி
உரம்போம் அதிசாரம் ஓடும் - நிரம்பவே
மாமத்தம் உண்டாம் வளரிளங்கொங் கைத்திருவே
ஊமத்தந் தன்விதையை யுன்

*ஊமத்தம்விதையால் சுரம், தாவரவிடம், சன்னி, கழிச்சல் ஆகியவை நீங்கும். மயக்கம் உண்டாகும்.*

### வெங்காயம் – துளசி – கரிசாலை – முள்ளங்கி – உருத்திரசாடை விதைகள்

வெங்காய வித்துக்குன்மம் வீட்டுள் துளசிவித்துக்
கெங்கெமயங் கரிப்பா னின்பழமாற் - றங்கவே
காமாலை முள்ளங்கிக் காழால் வித் தாஞ்சடைவுத்
தோமாலை யுள்ளடகுகுஞ் சொல்

*வெங்காயவிதை குன்மத்தையும், துளசிவிதை சீதத்தையும், கரிசால் விதை காமாலையையும், முள்ளங்கி விதை விந்து நட்டத்தையும், உருத்திரசடைவிதை கபத்தையும் போக்குமென்பர்.*

## கொடியின் வித்துகுணம்

### வித்துகளின் பொது குணம்

மிக்கனலி மிக்குநளிர் வித்துகள் விதைப் புரக்கத்
தக்கனவன் றாஞ்சமர சந்தகவா – மக்குறிகா
யாகாய மின்றிபடர்ந் துறை வித் தங்கி நெடு
மாகாய மென்றார் வித் தாம். 797

*அதிக வெப்பமும் அதிக சீதளமும் உள்ள வித்துகள் விந்துவிற்கு ஏற்றவை அல்ல. வெப்ப சீதளம் உள்ள வித்து இதற்குகந்தது. நெருக்கமாய் இருக்கிற தூதுவளை முதலிய விதைகள் எல்லாம் வெப்பமும் இடைவெளி விட்டு விதைகள் இருக்கிற பூசனி முதலிய வித்துகள் அதி சீதளமுமாம்.*

### பூசினிவித்து

*பித்தம்போம் மேகம்போம் பேரா அனலமும்போம்*
*மெத்தஉட லங் குளிரும் மேனியிடும் - இத்தலத்துள்*
*ஆசினியொன் றில்லா வலர்ந்தவன சத்திருவே*
*பூசினிவித் தைத் தின்னும் போது* *798*

*பூசனிவிதை, பித்தம், பிரமேகம், உடல்சூடு இவற்றை நீக்கும். உடல் குளிர்ச்சியையும், புஷ்டியையும் உண்டாக்கும்.*

### வெள்ளரிவித்து

*கடுப்பொடுநீர்க் கட்டுவெறுங் கல்லடைப்பு தாரை*
*வெடிப்பு சதையடைப்பு மேகம் - எடுத்துரைக்கா*
*உள்ளரிவி என்னும் உறைகிரீச்ச ரம்இவைகள்*
*வெள்ளரிவி தைக்கேகும் விள்* *799*

*இது, கடுக்கும் நீரடைப்பு, கல்லடைப்பு, நீர்த் துவார வெடிப்பு, சதையடைப்பு, பிரமேகம், கிரீச்சரம் இவற்றை நீக்கும்.*

### கழற்காய் - பேய்ப்பீர்க்குஇவ்வித்துக்கள்

*கழற்காய் விதைக்குக் கனஅண்ட வாதந்*
*தழற்பக்கச் சூலைகுன்மஞ் சாந்தி - கழற்காலிற்*
*காய்ப்பாக்குந் துஷ்டக் கடிவிஷம்எல் லாம்போக்கும்*
*பேய்ப்பீர்க்கி னுள்விதையைப் பேசு* *800*

*கழற்காய் வித்துக்கு அண்டவாதம், சூட்டினால் பிறந்த பக்க சூலை, வயிற்றுவலி இவை நீங்கும். பேய்ப் பீர்க்கம் வித்து துட்டவிடங்களை நீக்கும். கணுக்கால் காய்த்துப் போகும்.*

### பூனைக்காலி வித்து

*தழுதளைநாற் றத்தோடு சார்இரத்தப் போக்கும்*
*பழுதுபுரி கின்றகரப் பானும் - அழுதேகுந்*
*தாலமிசை விந்துவுமாஞ் சாற்றற் கரும்பூனைக்*
*காலி விதையைக் கழறு* *801*

*கருமைநிற பூனைக்காலி வித்து கற்றாழை நாற்றம், இரத்தகிராணி, கரப்பான் இவற்றை நீக்கும். தாது விருத்தி உண்டாகும்.*

### உகாவித்து

வாதமுதல் முப்பிணியால் வந்த பிணியையெலாங்
கோதிற் சமனமிகக் கொண்டொழிக்குஞ் - சீத
மகாவனசந் தன்னில் வளர்ந்திருக்கு மாதே
உகாவிதையை நன்றா யுரை 802

*திரிதோடங்களால் வந்த நோய்களை உகாவித்து குணப்படுத்தும்.*

### குன்றி வித்து (குன்றிமணி)

நேத்திரநோய் பித்தம் நிறமழுங்கல் காமாலை
வேர்த்திடுதா பஞ்சோப வெப்புடனே - கோத்திட்ட
ஐயமுதல் யாவும்போம் ஆயிழையே காட்டிலுறை
செய்யகுன்றி யின்விதையைச் சேர் 803

*குன்றி வித்தால் கண்நோய், பித்தம், நிறமழுங்கல், காமாலை, வியர்வை, மூர்ச்சை, சுரம், சிலேட்டுமம் இவை நீங்கும். சுக்கில விருத்தியடையும்.*

### நெருஞ்சில் வித்து

சொல்லவொண்ணா நீர்க்கட்டு துன்மா மிசம்அருகல்
கல்லடைப் பெ னும்பிணிகள் கண்டக்கால் - வல்லக்
கருஞ்சினவேற் கண்மாதே காசினிக்குள் நல்ல
நெருஞ்சில்நறும் வித்தை நினை 804

*நெருஞ்சி வித்தினால், மூத்திரக்கட்டு, சதையடைப்பு மூத்திரக் கிரீட்டை இவை நீங்கும்.*

### தாமரை வித்து

மந்தத்துவ மகற்றும் வல்லருசி நீக்கிவிடு
மந்தத் துறைதாது விற்கடலே - தந்திடும்பின்
னுன்னிலின்னுந் தோடகுண மியாவு மோட்டுஞ்சலந்
தன்னி லண்ணிக் கினுவஞ் சம்.

*மந்தம், உணவில் வெறுப்பு இவற்றை நீக்கும். கடைத்தாதுவாகிய சுக்கிலத்தை விருத்தி செய்யும்.*

### வெள்ளல்லி, செவ்வல்லி

மிதுனவல்லி வித்துக்க ளால்விந்துண் டென்றாலு
மதனமரைக்குச் செம்மைக் காரக்க - மதனமிந்தப்
பேதமின்றி யீரற் பீலிங்களுக்கு வன்மை
யேதமின்றிச் செய்யு மிரண்டும்.

*இருவித அல்லிவிதைகளுக்குச் சுக்கில விருத்தியுண்டாகும் என்பர். ஆனால் வெள்ளல்லிக்குச் சுக்கிலமும் செவ்வல்லிக்குச் சோணிதமும் அதிகமாகும். ஈரலுக்கும், பீலிக கண்டங்களுக்கும் இரண்டும் பயன்தரும்.*

## தானியவகை - குணம்

செந்நெல் வகைக்குஞ் சிறுதா னிய வகைக்கும்
இந்நிலத்தில் உண்டோ இலக்கென்ப - துன்னுங்கால்
கண்டமட்டி லேபெயராங் கண்ட அவரவர்கள்
உண்டமட்டி லேசுவையாம் ஓது 805

*இவ்வுலகில் விளையும் நன்செய், புன்செய், தானியங்களின் பெயர் சுவையை அளவிடற்கரிது. அவற்றைப் புசித்த வகையில் சுவையுடையதாகும்.*

### கார்அரிசி

காரரிசி மந்தங் கனப்புடலில் தூலிப்பும்
பாரறிய வாயுவையும் பண்ணுங்காண் - நேரே
கரப்பான்என் பார்பொருந்திற் காயம்அது மெத்த
உரப்பாகும் என்றே யுரை 806

*மந்த குணமுள்ள பருத்த காரருசி உடல் பருமன், வாதம், பலம் இவற்றை உண்டாக்கும். இதனைக் கரப்பான் பண்டம் என்பர்.*

### மணக்கத்தை - வாலான் - கருங்குறவை என்னும் இவ்வரிசிகள்

மணக்கத்தை வாலான் கருங்குறவை மூன்றும்
பிணக்குஷ்டைச் சில்விஷத்தைப் பேர்க்கும் - இணக்குமுற
ஆக்கியுண் டாற்கரப்பான் ஆரும்என் பார்கள்சிலர்
பார்க்குள் இதைஎண்ணிப் பார் 807

*இம்மூவகை அரிசிகளும் இரணகுட்டத்தையும் அற்பவிடத்தையும். நீக்கும். இதனால் கரப்பான் உண்டென்று சிலர் கூறுவர்.*

### ஈர்க்குச்சம்பாஅரிசி

*ஈர்க்குச்சம் பாஎன் றியம்பும் அரிசியது*
*நாக்குக் கதியுரிசை நல்குங்காண் - பார்க்குமிடத்*
*தெல்லார்க்குங் காதல் இயற்றும் அற்பப் பித்தம்என்பார்*
*வில்ஆரும் பூசைகட்காம் விள் 808*

*தெய்வ வழிபாட்டிற்கான இவ்வரிசி நாவிற்கு சுவையையும் உண்ணுவதற்கு விருப்பத்தையும் தரும். பித்தத்தை உண்டாக்கும்.*

### புழுகுசம்பா அரிசி

*புழுகுசம் பாஅரிசி பூதலத்தில் உண்பார்க்*
*கழகும்ஒளி யுஞ்சேர்வ தன்றி - அழலாம்*
*பசிதாகந் தீரும் பலமுமிக உண்டாம்*
*முசிவே துடற்சுகமா முன் 809*

*இதனை யுண்டால் அழகு, காந்தி, மிகுந்த பசி, பலம் இவற்றை உண்டாக்கும். தாகத்தைப்போக்கும்.*

### கைவரைச்சம்பா அரிசி

*கைவரைச்சம் பாஅரிசி கண்டால் அவரவர்தம்*
*மெய்வரையாம் என்றும் மிகுபலமாம் - மையல்*
*அடையா தென்பார்கள் அடர்சுக் கிலமும்*
*உடையா ததிசுகமாம் ஓது 810*

*இக்கைவரைச்சம்பா அரிசியினால் உடற்கு நல்ல வலிமை, சுக்கிலம் கட்டல் இவை உண்டாகும். பித்தம் இல்லை.*

### செஞ்சம்பா அரிசி

*செஞ்சம்பாத் தண்டுலத்தால் தீராச் சிறுசிரங்கும்*
*விஞ்சுபுண்ணும் வன்சொறியும் மெய்க்கணியாம் - விஞ்சும்*
*அதிகபசி தானே அணங்கரசே யிந்தப்*
*பதியதனில் நாளும் பகர் 811*

இதனால் சிறிய கிரந்தி, அதிகவிரணம், யானைச் சொறி, மிகுந்தபசி இவையுண்டாகும்.

### கல்லுண்டைச்சம்பா அரிசி

கல்லுண்டைச் சம்பாவைக் கண்டருந்தி நின்றவர்முன்
மல்லுண்ட பேர்எதிர்க்க வாய்க்குமோ - வில்உண்டை
போலுரையாம் நல்ல புசபலமாம் இன்சுவையாம்
பாலனைய மென்மொழியே பார் 812

*கல்லுண்டை சம்பாவரிசியை உண்பவர்க்கு மிகுந்த பலமுண்டாகும். இனிய சுவையுடைய இது தோள் பலத்தையும் உண்டாக்கும்.*

### குண்டச்சம்பா அரிசி

குண்டச்சம் பாஅரிசி கொண்டுண்ணும் பேர்களுக்குப்
பண்டையில்லா மந்தநோய் பாரிக்கும் - அண்டுபடாத்
தாகம்எல் லாம்ஒழியுந் தையலே வன்கரப்பான்
தேகம்எல் லாம்பரவுஞ் செப்பு 813

*இது அக்கினிமாந்தம், கரப்பான் இவற்றை ஏற்படுத்தும். தாகநோயை நீக்கும்.*

### மல்லிகைச் சம்பா அரிசி

மல்லிகைச்சம் பாஅரிசி வாய்க்குரிசை யா யிருக்கும்
நல்லது மெய்க்கு நலஞ்செய்யும் - பொல்லாக்
கரப்பானை மேகத்தைக் கண்அழலை நீக்கும்
உரப்பாம் பலங்கொடுக்கும் உன் 814

*இதனை உண்டால் உடற்சுகம், உறுதி இரண்டையும் தரும். கரப்பான், பிரமேகம், கண்சூடு இவற்றைப் போக்கும். சுவையைக் கூட்டும்.*

### இலுப்பைப்பூச்சம்பா அரிசி

பித்த மிகப்பெருக்கும் பேருலகில் யாவருக்கும்
உற்ற தலைவலிநோய் உண்டாக்குஞ் - சத்தியமாய்த்
தாகம்எடுப் பிக்குந் தழல்இலுப்பைப் பூச்சம்பா
ஆகம்அதில் நோய்வளர்க்கும் ஆய் 815

*இவ்வரிசி பித்தநோய்கள், தலைவலி, தாகம், உட்டிணம் இவற்றை உண்டாக்கும்.*

## மணிச்சம்பா அரிசி

நல்ல மணிச்சம்பா நாடுகின்ற நீரிழிவைக்
கொல்லும் மிகந்தசுகம் கொண்டளிக்கும் - மெல்லப்
பசியளிக்கும் மூத்தோரைப் பாலகர்களை நாளும்
முசியாம லேவளர்க்கும் முன் *816*

*இது அதிமூத்திரத்தை நீக்கும். நல்லசுகம், பசி இவற்றைக் கொடுக்கும். பாலகர், மூத்தோர் இவரின் உடல் வளர்ச்சிக்குப் பயன்படும்.*

## வளைதடிச்சம்பாஅரிசி

வளைதடிச்சம் பாவிற்கு வாதபித்தம் உண்டாம்
உளையும் மடிபொருமி யுப்புங் - கொளகொளெனத்
தானே கரப்பானாந் தாங்கொணா மந்தமுமாந்
தேனே யிதனைத் தெளி *817*

*வளைதடிச் சம்பரிசியால் வாத பித்த நோய்கள், வயிறுளைதல் உப்பிசம், கரப்பான் மந்தம் இவை உண்டாகும்.*

## கோரைச்சம்பா அரிசி

கோரைச் சம்பாநற் குளிர்ச்சியென்பார் பித்தத்தைப்
பேரா அழலைப் பிரித்தோட்டுந் - தீராத
மேக மொடுதினவை வீட்டுஞ் சுகங்கொடுக்கும்
மேக முறை குழலாய் விள் *818*

*இவ்வரிசி பித்தம், உட்சூடு, பிரமேகம், நமைச்சல் இவற்றை நீக்கும். இது குளிர்ச்சிடையது. சுகங்கொடுக்கும்.*

## குறுஞ்சம்பா அரிசி

குறுஞ்சம்பா பித்தங் குடியிருக்கச் செய்யும்
வெறுங்கரப்பான் உண்டாக்கும் மெய்யில் - நொறுங்கச்செய்
வாதம்அருள் வாயுவினை மாற்றும்போ கங்கொடுக்குஞ்
சீதவன சத்திருவே செப்பு *819*

*இவ்வரிசி பித்தம், கரப்பான், சுக்கிலத்தாது இவற்றை விருத்தி செய்யும். உடலில் குத்துகின்ற வாதநோயை நீக்கும்.*

### மிளகுச்சம்பா அரிசி

மிளகுச்சம் பாஅரிசி மென்சுகத்தைச் செய்யும்
அளவில்பல நோயை அகற்றுங் - களகளெனத்
தீபனத்தைத் தூண்டிவிடுந் தீரா வளிதொலைக்குஞ்
சோபனத்தைச் செய்நகையாய் சொல் 820

இவ்வரிசி உடற்கு நல்லது. பசியை வளர்க்கும். வாத நோயை நீக்கும். மேலும் பல நோய்களை நீக்கும்

### சீரகச்சம்பா அரிசி

சீரகச்சம் பாஅரிசி தின்னச் சுவையாகும்
பேரகத்து வாதம்எல்லாம் பேருங்காண் - வாருலகில்
உண்டவுட னேபசியும் உண்டாகும் பொய்யலவே
வண்டருறை பூங்குழலே வாழ்த்து 821

இனிமையான சீரகச் சம்பாவரிசியை உண்டால் சுவைபெருகும். உண்டவுடனே பசியெடுக்கும். சிலநோய்களும் குணமாகும்.

### காளான்சம்பாஅரிசி

காளான்சம் பாஅரிசி கல்லையொத்த மாபலத்தைக்
கேளாம லேகொடுக்குங் கேள்இன்னும் - நீளும்
அனிலத்தைப் போக்கிவிடும் ஆரோக் கியத்தை
நனிலத்திற் செய்துவிடும் நாடு 822

இது உடலுறுதி, நலம் இவற்றைத் தரும். சில வாதநோய்களை நீக்கும்.

### மைச்சம்பாஅரிசி

மைச்சம்பாத் தண்டுலத்தால் வாய்அருசி போய்ஒழியும்
வெச்சென்ற வாதபித்தம் மெய்யைவிடும் – நச்சுந்
தனிவாயு வுஞ்சுரக்குங் சர்த்தியும்போம் இன்பக்
கனிமொழியே நன்றாகக் காண் 823

இவ்வரிசிச் சோறு உணவில் விருப்பின்மை, வாதபித்த நோய்கள், வாதம், வாந்தி இவற்றைப் போக்கும்.

## கோடைச்சம்பாஅரிசி

கோடைச்சம் பாஅரிசி கொண்டாற் றிரிதோஷ
வாடைக் கதிக வலியும்உண்டோ - நீடும்
உறுப்பில்உள்ள நோய்எல்லாம் ஓதாமல் ஏகுங்
கறுப்பிலுயர் வார்குழலே காண் 824

இதனையுண்டால் முத்தோடங்களில் பிறந்த வாதவலியும் உடலிலுள்ள சிற்சில நோய்களும் நீங்கும்.

## காடைச்சம்பா அரிசி

*காடைச்சம் பாஅரிசி கண்டுதரி சித்தவர்க்கு
நீடுற்ற மேகஅனல் நிற்குமோ - காடைப்
பறவைபோல் நோயும் பறக்கும் பலத்தின்
உறவையெவர் சொல்வார் உரை 825*

*இது பிரமேகம், சுரம், சில சாதாரண நோய்கள் இவற்றை நீக்கும். சுக்கில தாதுவிருத்தியை உண்டாக்கும்.*

## குன்றிமணிச்சம்பா அரிசி

குன்றி மணிச்சம்பா கொண்டால் அனிலம்அறும்
வென்றி தரும்பலமி குக்குங்காண் - துன்றியநோய்
எல்லாம் பறக்கும்உறை யிந்திரியப் புஷ்டியுண்டாம்
நல்லா ரறிய நவில் 826

*இவ்வரிசியால் சாதராண வாதநோய்கள் நீங்கும். உடல்பலமும் சுக்கிலதாதுவும் உண்டாகும்.*

## அன்னமழகி அரிசி

அன்ன மழகியரி ஆரோக்கி யங்கொடுக்குந்
தின்ன வெகுருசியாஞ் செப்பக்கேள் - இந்நிலத்து
நோயனைத்துந் தூளாய் நொறுங்கத் தகர்த்துவிடுந்
தியனலைப் போக்குந் தெளி 827

*இது உண்பதற்குச் சுவையாயிருக்கும். பல்வகைச் சுரங்களைப் போக்கும். பித்த வெப்பம் போக்கி உடற்கு நன்மை தரும்.*

### பச்சரிசி

*சுத்த அனிலமந்தந் தோன்றும்எரி பித்தம்போம்*
*பத்தியத்தில் எண்ணார்கள் பண்டிதர்கள் - மெத்தவுமே*
*வைச்சசுமை தாங்க வலியுண்டாந் தேகத்திற்*
*பச்சரிசி யைப்புசித்துப் பார் 828*

*பச்சரிசியினால் தனிவாதம், எரிபித்தம், மிகுந்தபலம் இவை உண்டாகும். பித்த எரிவு நீங்கும். பத்தியத்திற்கு ஆகாது.*

### புழுங்கல் அரிசி

*புழுங்கல் அரிசியது புத்திரர்க்கும் ஆகும்*
*அழுங்குகின்ற வாயுவிற்கும் ஆகும் - ஒழுங்காய்*
*நிலைத்தபத்தி யத்திற்கும் நீட்டலாம் மெய்க்குப்*
*பலத்தைக் கொடுக்காது பார் 829*

*இவ்வரிசி குழந்தைகளுக்கும் வாத உடலினர்க்கும் பத்தியம் உள்ளவர்களுக்கும் உதவும். உடலுக்கு இதனால் உறுதி ஏதுமில்லை.*

### பழமை அரிசி

*பழஅரிசி மூத்தோர்க்கும் பாலர்கட்கும் ஆகும்*
*அழல்மிகவும் ஆகும் அருந்தில் - நிழலைப்போல்*
*ஆகும் உடல்குளிர்ச்சி ஐயம்அறும் நோயுற்றோர்க்*
*காகும்பன் னோய்போம் அறி 830*

*பழைய அரிசி இளைஞர், வயதினோர், நோயினர்க்கு நல்லது. சில நோய்களும் கபமும் நீங்கும். பித்தம் பெருகும் உடல் குளிர்ச்சி யடையும்.*

### சவ்வரிசி

மேகம்அத்தி மேகஞ்சீழ் மேகம்ரத்த மேகமும்போந்
தேககத்திற் றாதுவுஞ்சி லேஷ்மமும்உண் - டாகும்எழிற்
செவ்வரிப டர்ந்தவிழித் தேமொழிமா தேயுலகிற்
*சவ்வரிசி யின்குணத்தைச் சாற்று 831*

*சவ்வரிசி பிரமேகம், அத்திமேகம், சீழ்மேகம், இரத்தமேகம், இவற்றை நீக்கி சுக்கிலத்தையும் கபத்தையும் விளைவிக்கும்.*

## மூங்கில்அரிசி

உதிரபித் தந்தீர்க்கும் ஓங்குசுரத் திற்கும்
அதிரவரு கண்ணோய் அதற்கும் - புதிதாகக்
கஞ்சிசெய்ய லாகுங் கருதிற்சிற் றுண்டியுமாஞ்
செஞ் சிலம்பார் மூங்கில் அரிசி 832

*இவ்வரிசி ரத்த பித்தநோய், அதிகசுரம், கண்நோய் இவற்றை விலக்கும். இந்நோயுள்ளவர்க்கு கஞ்சி செய்ய இவ்வரிசி உதவும்.*

## திப்பிலி அரிசி

திப்பிலியின் தண்டுலஞ் திலேஷ்மத்தைப் போக்கிவிடும்
உப்பிசத்தை மேகத்தை ஓட்டுங்காண் - தப்பாமல்
வாதசுரந்தணிக்கும் மாகபரோ கந்தொலைக்குந்
தாதுவைவ ளர்ப்பிக்குஞ் சாற்று 833

*இது கபம், வயிறு உப்புதல், மேகம், வாதசுரம் சயநோய் இவற்றைப் போக்கி விந்துவை வளர்க்கும்.*

## கோதுமை அரிசி

கோதுமையின் நற்குணந்தான் கோதிற் பலங்கொடுக்குந்
தாதுவிர்த்தி யாக்குந் தனிவாய்வைச் – சேதிக்கும்
பித்தம் அளிக்கும் பிரமேகத் தைக்கெடுக்கும்
உத்தமமாம் என்றே உரை 834

*இது நல்ல பலம், சுக்கிலம், பித்தம் இவற்றை விரிவாக்கும். வாதம், பிரமேகம், இவற்றை நீக்கும்.*

## புன்செய்தானியகுணம்

### கேழ்வரகு

சுத்தஅனி லந்தன்னைத் தோன்றுவிக்கும் அல்லவெனில்
பித்தஅனி லத்தைப் பிறப்பிக்குஞ் - சித்திரமலர்த்
தாழ்குழலே நீடுபஞ்சந் தாங்கியெனச் சொல்லுகின்ற
கேழ்வரகின் செய்தியிது கேள் *835*

*பஞ்சந்தாங்கியெனும் கேழ்வரகு, வாதத்தைத் தோற்றுவிக்கும் அல்லது பித்த வாதத்தையாவது உண்டாகும்.*

### கம்புஅரிசி

கம்பு குளிர்ச்சியெனக் காசினியிற் சொல்லுவர்காண்
பம்பு சொறிசிரங்கைப் பாலிக்கும் - வெம்பும்
உடலின் கொதிப்பகற்றும் உட்பலம்உண் டாக்கும்
அடலயிற் கண் மாதே யறி *836*

*கம்பு அரிசி நெருங்கிய நமைச்சல், சிரங்கு, வீரியம், இவற்றை உண்டாக்கி உடல்வெப்பத்தையகற்றும்.*

### சாமைஅரிசி

உடலில்உறு தாகசுரம் ஓடும்மே கம்போம்
அடலின்உறு வாதம் அகலுங் - கடலிலுறை
ஆமை யனையபதத் தன்னமே மேனியிடுஞ்
சாமை யரிசிக்குத் தான் *837*

*இது தாகசுரம், பிரமேகம், கால்வீக்கம் இவை நீங்கும். உடல் பலம்பெறும்.*

### தினை அரிசி

சந்நிசுரம் ஐயந் தனிவாத மும்போகுந்
துன்னுபித் தத்தைமிகத் தூண்டிவிடுந் - தின்னப்
பினையும் பசியாம் பெருவீக்கம் நீக்குந்
தினையரிசி யின்குணத்தைத் தேர் *838*

*இது சன்னிபாதம், கபம், வாதம், சோகை நோய் இவற்றைப் போக்கி பித்தத்தையும் பசியையும் உண்டாக்கும்.*

### செஞ்சோளஅரிசி

செஞ்சோளந் தின்றால் சிறுசிரங்கு புண்ணுகளும்
விஞ்சும் எழிலான மேனிகெடும் - நெஞ்செரிந்து
மந்தமிகுந் தீபனம்போம் மாறாக் கரப்பானாங்
கந்தமலர்ப் பூங்குழலே காண் *839*

*இதனால் சாதாரண கிரந்திகள், புண்கள், மந்தம், கரப்பான் இவை அதிகரிக்கும். அழகும் பசியும் போகும்.*

### கருஞ்சோள அரிசி

சொறியைச் சிரங்கைத் தொலையாத புண்ணை
மறவிலா மெய்யில் வளர்க்குங் - குறியா
அழகு கொடுக்கும் அசதியை உண் டாக்கும்
பழகுகருஞ் சோளமது பார் *840*

*இது நமைச்சல், கிரந்தி, இரணம், அயர்வு இவற்றை உண்டாக்கும். அழகினைக் கொடுக்கும்.*

## காய்த்தானியவகை குணம்

### துவரை

பஞ்சமுட்டிக் காகுமரும் பத்தியவி யஞ்சனமாம்
விஞ்சுசுரஞ் சந்நிகட்கு மெத்தநன்றாம் - பஞ்சின்
விழுந்துவரை யாது மெலிந்தாரைத் தேற்றுங்
கொழுந்துவரை யாயினீ கொள் *841*

*துவரை விரத முடிவிற் சேர்க்கும் பஞ்சமுட்டியாகவும், உப்பில்லா பத்தியம், சுரம், சன்னி ஆகியவற்றிற்கும் உடல் மெலிந்தோர்க்கும் உதவும்.*

## உளுந்து

செய்யஉளுந் திற்குச் சிலேஷ்ம அனி லம்பிறக்கும்
வெய்யபித்தம் போம்மந்தம் வீறுங்காண் - மெய்அதனில்
என்புருக்கி தீரும் இடுப்புக் கதிபலமாம்
முன்பு விருத்திஉண்டாம் முன் 842

*ஊருந்து சிலேட்டுமத்தையும், வாதத்தையும் உண்டாக்கும். இடுப்புறுதி, மிகு வீரியம் இவற்றையுண்டாக்கும். பித்தமும் எலும் புருக்கி நோயும் நீங்கும்.*

## கடலை

கடலைவயி றூதல் கனல்தாகஞ் செய்யுங்
குடலைவலிப் பித்துமலங் கொட்டுந் - திடமருந்தைச்
சேதம்உறப் பண்ணுந் தியக்கமொடு வாயுவையும்
போத அழைக்கும் புகல் 843

*இது வயிற்றுப்பல், பித்தம், கிரகணி, மயக்கம், தாகம், மூலவாயு இவற்றை உண்டாக்கும். நல்ல மருந்தின் குணத்தை முறித்து விடும்.*

## மொச்சைக்கொட்டை

அனிலபித்த ஐயம் அனைத்தையும்உண் டாக்குந்
தொனியெடுக்க வாயுவினைத் தூண்டுந் - தனிவேள்
குனிக்குஞ் சிலைப்புருவக் கோதையே நாளும்
இனிக்குமொச் சைக்கொட்டை யே 844

*இனிப்புள்ள மொச்சைக்கொட்டையானது முத்தோடங்களையும், வாயுவையும் உண்டாக்கும்.*

## பெரும்பயறு (பெருங்காராமணி)

பெரும்பயற்றை மேன்மேலும் பேணிஉண்ணு வார்க்குப்
பெருஞ் சடராக்கினிபோம் பின்னும் - வரும்மந்தம்
பேதி அதிகரிக்கும் பேராக் கபங்கதிக்கும்
வாதகுடி லம்பெருகும் வாழ்த்து 845

*இதனை அதிகமாகத் தின்பவர்க்கும் பசியின் தன்மையைக் கெடுக்கும். செரியாமை, கழிச்சல், கபம், வாதப் பிடிப்பு இவற்றை உண்டாக்கும்.*

### சிறுபயறு

*ஐயைப்பித் தத்தை அரோசகத்தைப் போக்கிவிடும்*
*வெய்யவா தத்தை விளைவிக்கும் - மையாம்*
*மறுவொழிந்த தூய மதிவதன மாதே*
*சிறுபயறு செய்யுஞ் செயல்* *846*

*இது ஐயம், பித்தம் உணவில் வெறுப்பு, வாந்தி இவற்றைப் போக்கும். பித்த வாதத்தை உண்டாக்கும்.*

### பச்சைப்பயறு

*பச்சைப் பயறதுதான் பாரிற் பயித்தியத்தை*
*அச்சம்அற நாளும் அகற்றுங்காண் - கச்சுலவு*
*கொங்கைமட மாதே குளிர்ச்சியென்பார் எப்போதுந்*
*தங்குவா தத்தைத் தரும்* *847*

*குளிர்ச்சியுடைய பச்சைப் பயிறு பித்தம் போக்கும், வாயுவைத் தரும்.*

### தட்டைப்பயறு-வெண்பயறு-கரும்பயறு

*தட்டைப் பயறுமந்தஞ் சந்நிதரும் வெண்பயறு*
*முட்டியே மெய்யில் முதிர்வாதக் - கட்டறுக்கும்*
*காணாய் கரும்பயறு கம்முநீர் வாதம்உடன்*
*கோணுவா தத்தையும்போக் கும்* *848*

*தட்டைப்பயிறு மந்தம், சன்னி இவற்றைத் தரும். வெண்பயிறு வாதத்தைப் போக்கும். கரும்பயிறு சிலேட்டும வாதத்தையும் பக்க வாதத்தையும் நீக்கும்.*

### கொள்ளு

*குடல்வாதங் குன்மம்உண்டாங் கொள்மருந்தோ நாசம்*
*அடல்ஏறு பித்தமிக ஆகுங் - கடுகடுத்த*
*வாதநீ ரேற்றமொடு மன்னுகுளிர் காய்ச்சலும்போஞ்*
*சாதிநறுங் கொள்ளுக்குத் தான்* *849*

*கொள்ளு சாப்பிட்டால் குடல் வாதம், பித்த குன்மம், பித்தம் இவை உண்டாகும். வாதவலி, நீரேற்றம், குளிர்சுரம் போகும். மருந்தின் தன்மையை முறிக்கும்.*

### எள்

எள்ளுமருந் தைக்கெடுக்கும் ஏறனலாந் திண்மைதரும்
உள்ளில்ஐயைச் சேர்க்கும் உதிரத்தைத் - தள்ளும்இரு
கண்ணுக் கொளிகொடுக்குங் காசம்உண்டாம் பித்தமுமாம்
பண்ணுக் கிடர்புரியும் பார் *850*

*இது உட்டிணம், பலம், கபம், காசநோய், பித்தம் இவற்றை வருவிக்கும். குரல் ஒலியைக் கெடுக்கும். பெண் வயிற்று உதிரத்தை வெளிப்படுத்தும். விழிகட்கு ஒளியைத் தரும். மருந்தின் தன்மையை முறிக்கும்.*

## இறைச்சி வகை - குணம்

### வெள்ளாட்டு இறைச்சி

உள்ளாடும் நோய்எல்லாம் ஓடும் உடல்பருக்குந்
தள்ளாடு வாதபித்தஞ் சாந்தமாம் - வெள்ளாட்டின்
நற்கறியை உண்பார்க்கு நாடுகய ரோகமும்போம்
மற்குரிய வன்பலனாம் வாழ்த்து *851*

*வெள்ளாட்டிறைச்சி உட்சுரம், வாதம், பித்தம், சயம் போன்ற பல நோய்களைப் போக்கும். உடல் பெருக்கும். வீரியம் விருத்தியாகும்.*

### கொடியாட்டு இறைச்சி

கொடியாடு நற்கறியாங் கொள்ளும்வகை கேளாய்
தடியாமற் பூப்போற் சமைத்து - விடியாலே
கொண்டால் இடுப்புவலி குத்திருமல் வெட்டையும்போங்
கண்டாலும் வாதம்அறுங் காண் *852*

*இதனைப் பூபோல சமைத்து காலையில் உண்டால் இடுப்பு வலி, குத்திருமல், வெட்டை, வாதம் இவை நீங்கும்.*

## வரையாட்டு இறைச்சி

பத்தியித்திற் கொவ்வும்வளர் பாரநோ யைத்துரத்தும்
மெத்த மெலிந்தார் மெலிவகற்றுஞ் - சுத்தமணம்
ஊட்டுவரை ஒத்தமுலை ஒண்டொடியே பன்மூலிக்
காட்டுவரை யாட்டுக் கறி 853

*காட்டு மூலிகையை உண்கிற வரையாட்டு இறைச்சி கனத்த நோய்களையும், பலவீனத்தையும் போக்கும். பத்தியத்திற்குதவும்.*

## செம்புலியாட்டு இறைச்சி

அம்புவியிற் செங்கரப்பான் அண்டுவது மாத்திரமோ
செம்புலியாட் டுக்கறியைத் தின்றக்கால் - கொம்பில்
இருந்து குதித்தாற்போல் எப்பிணியும் உண்டாம்
அருந்துயரம் நீங்கா தறி 854

*செம்மறியாட்டிறைச்சியை உண்டால் செங்கரப்பானும் உடம்பில் முன்பில்லா பல நோய்களும் உண்டாகும்.*

## பள்ளையாட்டு இறைச்சி

மந்தமிகுந் தீபனம்போம் மாறா அரோசகமாந்
தொந்தநோய் எல்லாந் தொடருங்காண் - இந்துநுதன்
மானோ கபம்உயரும் வன்பள்ளை யாட்டுக்குத்
தானே மிகும்வாயு சாற்று 855

*இவ்வாட்டிறைச்சி உண்டால் மந்தம், மிகுந்த பசி, சுவையின்மை, திரிதோடநோய்கள் இவை உண்டாகும்.*

## குறும்பாட்டு இறைச்சி

குறும்பாட் டிறைச்சிதனைக் கொண்டார்கட் கெல்லாம்
எறும்பார் சொறிசிரங்கும் எய்தும் - இறங்கும்
குடல்வாதஞ் சூலை கொடும்அனிலக் கூட்டம்
உடனே அடரும்என ஓது 856

*இவ்விறைச்சியால் எலும்புநோய், சொறி, சிரங்கு, குடல்வாதம், சூலைபோன்றன உண்டாகும்.*

### மான்இறைச்சி

*மான்கறிஉண் டார்தமக்கு மாதொந்த நோய்கபநோய்*
*ஊன்பகந்த ரங்கழலின் ஊதையொடு - தான்பரவு*
*வாதநமை யாந்தினவும் வாங்குங்கண் ணிற்புகையாம்*
*மோதுபித்தம் வீறும் மொழி* **857**

*இவ்விறைச்சியால் தொந்த நோய், ஈளை, கபம், மாமிசபகந்தரம், கழல் வாயு, வாதப்புடை இவை போகும். கண்புகைச்சலும் பித்தமும் உண்டாகும்.*

### கலைமான் இறைச்சி

*மேகப் பிடிப்பகலும் வெட்டை அனலும்அறும்*
*போகம் உறும்பலனாம் பூவையரே - தேகத்தில்*
*பித்தவா தங்கள்அறும் பேரா அழலையும்போந்*
*தத்துகலை மான்கறிக்குத் தான்* **858**

*இவ்விறைச்சியை உண்டால் மேக வாதப்பிடிப்பு, வெள்ளை, சுரம், பித்தம், வாதங்கள், உள்ளழல் இவை நீங்கும். விந்து விருத்தியடையும், உடல் பலமுண்டாகும்.*

### கடமான் இறைச்சி

*உடலம் வலுவாகி ஓங்கிப் பருக்குங்*
*குடலில் அதி வாதங் குதிக்கும் - வடமார்*
*கடமா மெனுங்கொங்கைக் காரிகையே கானக்*
*கடமான் இறைச்சிஉண்ணுங் கால்* **859**

*இதனால் உடல் வளமுடன் பலம் பெறும். குடல் விருத்தி நோய் உண்டாகும்.*

### ஊர்ப்பன்றி இறைச்சி

*வாதபித் தங்கள்சேரும் மருவிய புண்ணும்உண்டாந்*
*தாதுவுங் கபமும்பொங்குந் தாங்கொணா அசதியாகும்*
*வாதுற அனந்தநோய்கள் வளர்ந்தெழுந் துன்பம்எய்தும்*
*ஓதியுண் மருந்துநாசம் ஊர்ப்பன்றிக் கறியுண்பார்க்கே* **860**

*வாதம், பித்தம், இரணம், கபம், இளைப்பு, சுக்கிலம், சிலேட்டுமம், மருந்துகேடு முதலான பல நோய்களை உண்டாக்கும்.*

## காட்டுப்பன்றி இறைச்சி

*ஏறிய வாதம்போகும் எழும்பிடுங் காசநோய்கள்*
*வீறிடும் விழிநோய்சீதம் விஷக்கடி கிரந்தியுண்டாங்*
*கூறிடு மூலங்கிலங் குதங்குடல் வாதம்நாசம்*
*மாறிடு காட்டுப்பன்றி மாங்கிசந் தனையுண்பார்க்கே* *861*

*இதனையுண்டால் வாயு, மூலம், தோல்கிலம், குடல் விருத்தி இவை நீங்கும். இருமல், கண்ணோய், கபம் விடக்கடி, இரணம் இவை உண்டாகும்.*

## முள்ளம்பன்றி இறைச்சி

*காட்டுப்பன் றிக்குணமுங் காயம்எல் லாமுள்ளை*
*நீட்டுப்பன் றிக்குணமும் நேர்ஒன்றாய்க் - காட்டுகினும்*
*இப்பன்றிக் கங்கம் இறுகுவதால் இப்பன்றிக்*
*கெப்பன் றியுநிகரோ எண்* *862*

*வலிமையுடைய முள்ளம் பன்றியின் கறியை உண்டால் நல்ல உடல் பலம் உண்டாகும்.*

## முசல் இறைச்சி

*கடுகிய நடைஉண்டாகுங் கனத்ததோர் பித்தம்ஏகும்*
*முடுகிய ஈளைகாசம் முதிர்ந்ததோர் சுவாசம்போகுஞ்*
*சடுதியில் வெருண்டேயோடுந் தனிமுயற் கறியினாலே*
*கொடுமயிற் கண்ணாய்வாதங் குறைந்திடும் மலம்இறங்கும்* *863*

*முயல்கறி கடுகிய நடை, பித்தம், சயம், இருமல், பெருஞ்சுவாசம், வாயு, மலச்சிக்கல் இவற்றை நீக்கும்.*

## உடும்பு இறைச்சி

*கிட்டும் உடும்பிறைச்சி கேள்விநோய் மூலமுளை*
*வெட்டைசிர நோய்சோபை மேகம்புண் - குஷ்டகபஞ்*
*சீதம்இரத் தக்கடுப்பு தீராக் குடல்வாதம்*
*பேதியிவை போக்கும்எனப் பேசு* *864*

சொலும்வாத பித்தமொடு தொல்வறட்சி யும்போம்
பலம்இலாத் துர்ப்பலர்க்கும் பாரில் - பலம்வந்
திடுந் துவர்ப்பினிப்பும் இயற்கையிலே உள்ள
உடும்பின் இறைச்சிதனை உண் 865

*இவ்விறைச்சி பலவீனம், வீக்கம், சொறி, கிரகணதோடம், தலை, காதுபிணிகள், தலைநோய், தோட்சூடு, இரணம், சீதம், இரத்தக்கடுப்பு, குட்டம், சயம், பிரமேகம், வெள்ளை, மூலம், குடல் வாதம், வாத பித்தம், பேதி இவைகளை நீக்கும்.*

## புலி-கரடி-சிறுபுலி-இவைகளின் இறைச்சி

வருபுலி மாங்கிசத்தால் மாறும்உன் மாதரோகங்
கரடிமாங் கிசத்தால்வாதங் கபங்கெடும் வலிப்பு நீங்குந்
திரிசிறு புலியிறைச்சி தீர்த்திடுஞ் சிலரோகத்தை
வரிவிழி மாதேயிந்த வகையறிந் தோதுவாயே 866

*பெரும்புலி இறைச்சி, உள்மாந்தம் போக்கும். கரடி இறைச்சி வாயு, சயம், பெருமூச்சு (வலிப்பு) இவற்றை நீக்கும். சிறுபுலி இறைச்சி சிற்சில நோய்களை தீர்க்கும்.*

## மாடு-முதலை-இவைகளின் இறைச்சி

கோமாங் கிசத்தைக் குறித்துண்ட பேர்உடம்பில்
ஆமாவி யாதிக் களவுண்டோ - வாம
மதலைக் குறுகக்கு வான்அனிலஞ் சீதம்
முதலைத் தசைக்கிருக்கு மோ 867

*மாட்டிறைச்சியை உண்டால் சகல நோய்களும் உண்டாகும். முதலை இறைச்சியால் குழந்தைகளின் கக்குவான், இருமல், வாதம், கபம் நீங்கும்.*

## பூனைஇறைச்சி

பூனைக் கறியைப் புசித்தால் எழிலணங்கே
மேனிக் கழகுண்டாம் மேல்விரணந் - தான்அகலுஞ்
சூடும் அதிகரிக்குஞ் சோரியது மேன்மேலும்
நீடும்என நாளும் நினை 868

*உடல் அழகு, வெப்பம், இரத்த விருத்தி இவற்றை உண்டாக்கி, தோல் தாதுவின் கிரந்தியை நீக்கும் குணம் பூனைக் கறிக்குண்டு.*

## புழுகுப்பூனைஇறைச்சி

இடுப்பில் உரத்தில் எழுநோய் அகற்றுங்
கடுப்புறுவா தத்தைக் கடுகுந் - தொடுப்பில்
அமிழ்தா துவும்நல் அரும்பசியும் நல்குங்
கமழ்புழுகுப் பூனைக் கறி 869

*மணமான புனுகுப்பூனை இறைச்சி இடுப்புவாதம், இருதீவாதம், மூலக்கடுப்பு இவற்றை நீக்கி தாதுவையும் பசியையும் உண்டாக்கும்.*

## கீரி இறைச்சி

கீரி இறைச்சிக்குக் கெம்பீரம் உண்டாகும்
நீரிழிவும் ஏகும்என்பார் நிச்சயமே - வீரியமாஞ்
சில்விஷம்விட் டேகுஞ் சிரங்கு சொறி அகலும்
பல்லரணை போகும் பறந்து 870

*இவ்விறைச்சி பலம், சுக்கிலவிருத்தி இவற்றை உண்டாக்கி வெகுமூத்திரம், சிறுவிடம், நமை, சிரங்கு, சொறி, பல்லரணை இவற்றைப் போக்கும்.*

## மரநாய் இறைச்சி

மரநாய் இறைச்சிக்கு வன்கிரந்தி மேகம்
உரம்அறவே ஓடி ஒளிக்கும் - விரைவாதஞ்
சூலைகன வாதந் தொலையுஞ் சுரம்போகும்
ஞாலமிசை இக்குணத்தை நாட்டு 871

*மரநாய் இறைச்சி சிரங்கு, பிரமேகம், குடல் வாயு, சூலைநோய், பெருவாதம், சுரம் இவற்றைப் போக்கும்.*

## எலிஇறைச்சி

எலிஇறைச்சி குன்மம்பி லீகம் உரநோய்
நலிவித் திரப்புண் நமைச்சல் - மெலிவோட்டும்
மீதுமட்டி டாப்புளகம் மேவச்செய் யும்புணரத்
தாதுவுக்கும் புஷ்டிதருந் தான் 872

*இது குன்மம், பீலிகம், மார்புவலி, பிளவை, தினவு இவற்றை நீக்கும். உடலைப் பருமனாக்கும். வீரிய விருத்தி செய்யும்.*

## வெள்ளெலி இறைச்சி

சீதம்ஜயங் குன்மஞ் செறிமூலம் வித்திரதி
பேதிதொந்த ரோகம் பிலீகமும்போந் - தாதுவுமாஞ்
சேரும் உதிரம்அது தேகம்எல் லாம்பரவுஞ்
சாருகின்ற வெள்எலிக்குத் தான் *873*

*சீதம், கபம், குன்மம், மூலம், வித்திரதி, தொந்தநோய், கழிச்சல், பிலீகம், இவற்றை வெள்ளெலி இறைச்சி நீக்கும். இரத்த விருத்தி, வீரிய விருத்தி இவைகளை உண்டாக்கும்.*

## பெருச்சாளி இறைச்சி

வாதபித்தந் தாள்பிடிப்பு வன்பீந சங்குஷ்டம்
ஓதுதிர நோயோ டுறைகீடம் - பேதிஇவை
பேர்ந்தகல ஓடும் பெருச்சாளி யின்கறியால்
தீர்ந்தவெழில் ஓவியமே செப்பு *874*

*இவ்விறைச்சி பித்த, சிலேட்டும நோய்கள், வாதம், பீநசம், பெருவியாதி, இரத்ததாதுவைப் பறிய நோய்க்கிருமி, கழிச்சல் ஆகியவற்றை விலக்கும்.*

# பறவை இறைச்சி வகை - குணம்

## கோழிக்கறி

கோழிக் கறிநெருப்பாங் கொள்ளில் மருந்துரம்வங்
கூழைக் கடுப்புமந்தங் கூறரசம் - மாழ்கிப்போம்
நீளுற்ற போகம் நிணக்கிரந்தி பித்தம்உண்டாந்
தூளித்த மெய்இளைக்குஞ் சொல் *875*

*சூடுள்ள கோழிக்கறிக்கு மருந்தின்வேகம், வாதம், சுவாசக்கோளாறு, தேகக்கடுப்பு, மந்தம் இவை நீங்கும். சுக்கிலம், கொழுப்புள்ள இரணம், பித்தம் இவையுண்டாகும். உடம்பு இளைக்கும்.*

### கருங்கோழிக்கறி

குட்டங் கடிகிருமி கோரவா தக்கூட்டம்
மட்டிடாச் சூலையறும் மாதரசே - துட்டக்
கிரந்தியொடு புண்வலிபோங் கேள்உடல் உரக்கும்
அருந்துகருங் கோழிக் கறி 876

*கருங்கோழிக்கறியால் குட்டம், காணாக்கடி, புழு, வாதம், சூலை, சிறுசிரங்கு, இரணம், வலிப்பு இவை நீங்கும். உடல் பலம் பெறும்.*

### கானாங்கோழிக்கறி

உத்தமமாம் நோயனைத்தும் ஓடும் இருமல்அறும்
பத்தியமாம் நோயோர்க்குப் பார்மீதில் - முத்தநகை
மானே கரப்பான்போம் மாசு மறுஅகலுங்
கானாங்கோ ழிக்கறியைக் காண் 877

*இது வாத, கபநோய்கள், காசம், கரப்பான், மறு இவற்றை நீக்கும், பத்தியத்திற்கு உதவும்.*

### வான்கோழிக்கறி

போகமிகும் மெய்யிற் புளகிதம்வான் கோழிக்கு
ஆகமதில் ஐயம் அதிகமுமாந் - தேகம்எல்லாந்
தானே கரப்பானாஞ் சாற்ற உரிசையுமாந்
தேனே யிதனைத் தெரி 878

*வான்கோழிக் கறியால் விந்து, மகிழ்வு, சிலேட்டுமம், கரப்பான் இவை பெருகும்.*

### சம்பங்கோழிக்கறி

வறட்சி சொறிசிரங்கு வன்கரப்பன் என்னுந்
திரட்சி யொடுபலநோய் தீரும் - பொருட்சிகரி
கும்பங் கடாக்களிற்றின் கோடெனச்சொல் பூண்முலையாய்
சம்பங்கோ ழிக்கறிக்குத் தான் 879

*சொறி, கிரந்தி, தோலில் வறட்சி, கரப்பான் முதலான பல நோய்களை சம்பங்கோழிக்கறி நீக்கும்.*

### வாத்துக்கறி

வாத்துக் கறிஅருந்த வற்றிஉலர் புண்சிரங்குங்
கோத்த கபமுங் குலாவுங்காண் - ராத்திரியிற்
போகம் உறுதியுமாம் பொல்லா அரோசகநோய்
ஆகமதில் ஊறும் அறி 880

*இதனை உண்டால் கசிவு வறண்டு விடும். சிவந்து ஆறிய இரணம், கிரந்தி, கோழை, சுவையின்மை இவை அதிகரிக்கும். சுக்கிலம் பெருகும்.*

### கோழிமுட்டை

வாதபித்தஞ் சேர்ப்பிக்கும் வன்றோஷம் புண்போக்குந்
தாதுவை மெத்தத் தழைப்பிக்கும் - ஓது
கபத்தை அடக்குங் கரப்பான்உண் டாக்கும்
இபத்தைஉறுங் கோழிமுட்டை எண். 881

*கோழிமுட்டை, வாததோடம், இரணம், கபம் இவற்றை நீக்கி வாதம், பித்தம், சுக்கிலத்தாது, கரப்பான் இவற்றை உண்டாக்கும்.*

### காடைக்கறி

கட்டிற் கிடப்பார்க்குக் காட்டிற் படுங்காடை
மட்டவிழுங் கோதாய் மருந்தன்றோ - இஷ்டம்உறச்
சோறுபுகுஞ் சோபைஅறுந் துன்னோய் எலாம்ஏகும்
வேறுமருந் தேற்றுவதேன் விள் 882

*காடைக்கறி உண்டால் நோயினால் படுக்கையில் கிடப்போர்க்கு நல்ல மருந்தாகும். விருப்பத்துடன் உணவைச் சாப்பிட வைக்கும். வீக்கம், மெலிவால் உண்டான நோய்கள் இவை நீங்கும்.*

### கவுதாரிக்கறி

சிவல் இறைச்சி பித்தஞ்சி லேஷ்மமந்தம் வாதக்
கவலைஅற ஓட்டிஉடல் காக்கும் - புவனமதில்
மெய்க்குப் பலஞ்செய்யும் வீரியமும் உண்டாக்குஞ்
சிக்கியம லங்கழிக்குஞ் செப்பு 883

*இது பித்தம், சிலேட்டுமம், வாதவலி, மந்தம், மலக்கட்டு இவற்றை நீக்கி, உடல் வன்மை, வீரியம் இவற்றை விருத்தி செய்யும்.*

### ஊர்க்குருவிக்கறி

மருவிய திரிதோஷம்போம் மறப்புறாப் புணர்ச்சியுண்டாம்
பெருகிய சுரமேகம்போம் பிறந்திடும் இளமைமெய்யில்
கருகிய வன்னம்நீங்கிக் கனகம்போல் ஒளிவுஞ்சேரும்
உருவமுந் திரமாம்நாளும் ஊர்க்குருவியின்ற சைக்கே 884

*இக்கறிக்கு வாதபித்தம், கப மாறுபாடுகள், சுரமேகம் இவை நீங்கும். கோபம், வாலிபத்தன்மை, கலவியில் விருப்பம், தேகபலம் இவை உண்டாகும். உடலில் கருமைபடிதல் நீங்கி பொன் போல் ஒளிரும்.*

### வானம்பாடிக்கறி

வெட்டை அனலமொடு வீறுபல நோய்அகலும்
மட்டிலாக் காமம் வளருங்காண் - மட்டணையிற்
கானம்பா டிக்களிக்குங் காமரசப் பைங்கிளியே
வானம்பா டிக்கறி வறு 885

*இக்கறி ஆண்குறியில் சீழ்விழுதல், வெப்பம் முதலான பல நோய்களைப் போக்கி வீரியவிருத்தியை உண்டாக்கும்.*

### விச்சுளிக்கறி

ஐயுடனே பித்த அரோசகத்தை மாற்றிவிடும்
சையோக போகந் தழைப்பிக்கும் - மெய்யாகப்
பத்தியமாம் யார்க்கும் பசும்விச்சு ளிக்குருவி
உத்தமத்தில் உத்தமமாம் ஓது 886

*பத்தியத்திற்குப் பயன்படும் இக்கறி கபம், பித்தத்தினால் விளைந்த உணவில் வெறுப்பு இவற்றை நீக்கி விந்துவைப் பெருக்கும்.*

### தூக்கணங்குருவிக்கறி

ஐயம் அருசி அகட்டின்மல மும்போக்குந்
துய்ய பசியைமெல்லத் தூண்டிவிடும் - மெய்யில்
மினுத்தஅழ குண்டாக்கும் மென்பத் தியமாந்
தனித்தூக்க ணங்குருவி தான் 887

*பத்தியத்திற்காகும் இக்கறி கபம், சுவையின்மை, வாந்தி, மலக்கட்டு இவற்றை நீக்கும். பசியையும், அழகையும் உண்டாக்கும்.*

### கருங்குருவிக் கறி

*வாதகா மாலையறும் மாதே கபமும்போம்*
*ஊதுகா மாலைவிழுந் தோடுங்காண் - வாதுசெய்*
*வந்தகரப் பான்உடனே மாறாச் சொறியும்போங்*
*குந்து கருங்குருவி கொள்* *888*

*இதனை உண்டால் வாதகாமாலை, விடம், சிலேட்டுமம், கபம் ஊதுகாமாலை, கரப்பான் இவற்றைப்போக்கும்.*

### சிட்டுக்குருவிக்கறி

*பூவிரணம் போக்கிவிடும் பொல்லாக் கிருமிகளைப்*
*பாவுமலத் தோடிறங்கப் பண்ணுங்காண் - பூவணையிற்*
*கட்டுற்ற மாதர்எலாங் கைகுவித்துக் கெஞ்சுவிக்கும்*
*சிட்டுக் குருவித் திறம்* *889*

*சிட்டுக் குருவிக்கறி ஆண்குறி மலர்ப்புண், மலக்கிருமி இவற்றை நீக்கிப் புணர்ச்சியில் நிர்வாகத்தை உருவாக்கும்.*

### உள்ளான்கறி

*உத்தமமாம் பத்தியத்திற் கொவ்வும்உள் ளான்கறிதான்*
*சத்தியமாய் வாதபித்த சாந்திசெய்யும் - முத்த*
*நகையீர்மே கம்போக்கும் நற்பசியுண் டாக்குந்*
*தகைமந்தந் தீர்த்துவிடுஞ் சாற்று* *890*

*பத்தியத்திற்குப்பயன்படும் இக்கறி வாதம், பித்தம், மேகம், செரியாமை இவற்றை நீக்கி பசியை ஏற்படுத்தும்.*

### கொசுஉள்ளான் கறி

*கொசுஉள்ளான் றன்கறியைக் கூட்டியுண் பார்க்குப்*
*பசியெழும்பும் மேகம் பறக்கும் - பசபசத்து*
*நின்ற தினவகலும் நீங்காத போகம்உறும்*
*மன்றலுறை வார்குழலே வாழ்த்து* *891*

*இதனையுண்டால் மிகுந்தபசி, போகம் இவை உண்டாகும். சீழ்ப்பிரமேகமும் நமைச்சலும் நீங்கும்.*

## கோரையுள்ளான்கறி

*நாட்டில்உள்ள பட்சிகளில் நன்கிதுவே பத்தியமாங்*
*கூட்டில்உள்ள தோஷங் குலையுங்காண் - தாட்டிகமாய்*
*ஆரென்ன சொன்னாலும் அம்புவியில் நோயோர்க்குக்*
*கோரையுள் ளான்கறியைக் கூட்டு* **892**

*பத்தியத்திற்குதவும் நற்கோரை உள்ளான் கறி வாதநோய், கபதோடம் இவற்றை விலக்கும். பிணியாளர்க்குதவும்.*

## மயில்கறி

*சூலைப் பிடிப்புகளைச் சோரிவளி யைப்பித்தை*
*வேலைச்சி லேட்டுமத்தை வீட்டுங்காண் - நூலொத்த*
*அற்பவிடை மாதே அனலாம் மயில்இறைச்சி*
*நற்பசிஉண் டாக்கும் நவில்* **893**

*சூடுள்ள இக்கறி கீல்களில் குத்தல், வாதசோணிதம், கபபித்தம், அதிகபம் இவற்றை நீக்கித் தீபனத்தைத்தரும்.*

## குயில்கறி

*நல்லதொரு பத்தியமாம் நாடாது வாதபித்தஞ்*
*சொல்லரிய மானே சொறிஏகும் - வல்ல*
*குயில்அருந்த மேகம்போங் குன்மவலி தீருந்*
*துயிலில்அதி போகம்உறுஞ் சொல்* **894**

*பத்தியத்திற்காகும் இக்கறியினை உண்டால் வாதம், பித்தம், புடை, பிரமேகம், வயிற்றுவலி இவை போகும். தூக்கத்தை உண்டாக்கும்.*

## கொக்குக்கறி

*கொக்கருந்த மேகம்உண்டாங் கூடும் அரோசகநோய்*
*மைக்குழலே புண்கரப்பான் வந்துறையும் - மெய்க்கு*
*நியத்தமருந் துண்ணில்இதன் நீள்கவிச்சா காது*
*வயிற்றுக் கிருமிபோம் மாறி* **895**

*இதனை உண்டால் சீழ்மேகம், சுவையின்மை, இரணம், கரப்பான் இவையுண்டாகும். இதன் கவிச்சு நாற்றம் மருந்துக்கு ஆகாது. வயிற்றுக் கிருமி நீங்கும்.*

## கருங்கொக்குக்கறி

கருங்கொக்கின் றன்கறிக்குக் காணாக் கரப்பான்
மருங்கொக்கும் புண்ணும் வளரும் - பெருங்கிரந்தி
உண்டாஞ் சிலேஷ்மம் உலவும் உடலம்எலாம்
வண்டார் குழலே வழுத்து 896

*இது கரப்பான், இரணம், பெருஞ்சிரங்கு, உடலின் நீரேற்றம் இவற்றை உண்டாக்கும்.*

## தாராக்கறி

தாராக் கறிஅருந்தத் தாதுமிக உண்டாகும்
பேராக் கபம்வளரும் பெண்மயிலே - தீராத
வாந்தி அரோசகமும் வன்கரப்பன் புண்ணுமிகச்
சேர்ந்துவரும் இப்பலனைச் செப்பு 897

*இக்கறியை உண்டால் தாதுவிருத்தி, கபம், வாந்தி, உணவில் வெறுப்பு, கடுவன், சிரங்கு ஆகியவை விருத்தியாகும்.*

## நாரைக்கறி

நாரைக் கறியருந்த நாறுகரப் பான்புண்ணும்
ஊரைத் தொடர்ந்து தொடர்ந் தொட்டுங்காண் - பாரித்த
மேகமொடு வாதம் விளையுமே நீரிழிவுக்
காகும்என் பார்கள் அறி 898

*இதனை உண்டால் சீழ் கரப்பான், சிலந்தி, கபம், வாதம் இவை உண்டாகும். அதிமூத்திரம் நீங்கும்.*

## ஆள்காட்டிப்பட்சிக் கறி

ஆட்காட்டிப் பட்சிக் கடல்மேகம் போய்ஒளிக்குந்
தோட்காட்டு வாதந் தொடராவே - வாட்கண்
அரிவையே பத்தியத்திற் காகும் புவியில்
தெரியமறைப் பில்லாமற் செப்பு 899

*இக்கறிக்கு வாதப்பிரயோகம், வாதம் இரண்டும் நீங்கும். பத்தியத்திற்காகும்.*

### கிருட்டிப்பட்சிக்கறி

மருட்டு விழியுடைய மாதே புவிக்குள்
கிருட்டிக் கறியருந்திற் கேளாய் - மருட்டுபித்தம்
வாதங் கடுப்பு வளருமிரத் தக்கழிச்சல்
காதம்போம் வாந்தியறுங் காண் 900

கிருட்டிப்பட்சிக்கறி பித்தம், வாயு, கசப்பு இவற்றை உண்டாக்கும். இரத்தபேதி, வாந்தி இவற்றை நீக்கும்.

### சூறைப்பட்சிக்கறி

குஷ்டங் கிருமிகுன்மங் கோரவா தஞ்சோபை
துஷ்டம் பகந்தரநோய் தோன்றுமோ - இஷ்டமுறப்
பத்தியத்திற் காகும் பருகில் உரிசையுமாங்
கைத்திடாச் சூறைக் கறி 901

சுவையான சூறைப்பட்சிகறி குட்டம், புழு, வயிற்றுவலி, கோர வாதம் வீக்கம், ஆறாதபுண், பகந்தரம் இவற்றை நீக்கும். பத்தியத்திற்காகும்.

### கிளுவைக் கறி

பாலிலா மாதர்கட்குப் பாலும்உண்டாம் போகமுமாந்
தாலமிசை பித்தந் தரிக்குமோ - சாலச்
சிரங்குபுண்க ளெல்லாமே சீழ்வற்றி யாறும்
அருங்கிளுவை யைத்தின் றறி 902

இதனை உண்டால் பெண்கட்கு தாய்ப்பால் விருத்தியாகும். வீரிய விருத்தி உண்டாகும், பித்தம், கிரந்தி, இரணம், நமைக்கிரந்தி, சிலேட்டுமம், வாதம் இவை உண்டாகும்.

### மடையான் கறி

அன்னநடை பின்னுசடை அங்கண்மட மாதேகேள்
வன்னமடை யான்கறியை மாந்தினர்க்குத் - துன்னு
கரப்பான் சொறிசிரங்குங் காணும்ஐய வாதம்
உரப்பாக நீடும் உரை 903

மடையான் கறியை உண்டால் கடுவன், நமைக்கிரந்தி, சிலேட்டுமம், வாதம் இவை உண்டாகும்.

### கூழைக்கடாக் கறி

நெடுநாளின் நீரிழிவை நேராகக் கட்டும்
அடலான சூலை அகற்றும் - மடுவாருங்
கூழைக் கடாக்கறிதான் கோரகரப் பான்புண்ணை
ஆழத்தே கத்திருத்தும் ஆய் **904**

*கூழைக்கடாக்கறி நெடுநாளைய நீரிழிவு, கபச்சூலை இவற்றை நீக்கி வாத கரப்பானையும் இரணத்தையும் தரும்.*

### நமிட்டுக்கறி

நமிடுகரப் பான்வாதம் நாட்சோபை மாற்றும்
அமிர்தகுணம் ஆம்உரிசை ஆகுஞ் - சமம்உரைக்கில்
எல்லாக் கறிக்கும் இஃதின்பாகும் இக்கறிக்குப்
பொல்லாக் கயநோய்போம் போம் **905**

*இக்கறி கரப்பான், வாயு, வீக்கம், உரிசை, சயம் இவற்றை நீக்கும்.*

### சிறவிப்பட்சிக்கறி

வாராய் மடமானே வாதகபம் உண்டாகுஞ்
சேராச் சிறவிதனைத் தின்றக்காற் - பேராத்
தினவுகரப் பான்கிரந்தி சேருமோ நாளுங்
கனஉறுதி யாம்போகங் காண் **906**

*இது வாத கபம், புணர்ச்சி இவற்றை உண்டாக்கி, தினவு, சிரங்கு, கரப்பான் இவற்றைப் போக்கும்.*

### பொன்னாந்தட்டான் கறி

மேக அழல்தணியும் மிக்கஅழ குண்டாகும்
போகம் மிகுங்கரப்பான் போகுங்காண் - பாகான
பொன்னாந்தட் டான்கறியைப் போற்றிஉண்ணில் நற்சுவையா
மின்னாந்தே கம்புவியில் விள் **907**

*இதனால் பிரமேக வெப்பு, கரப்பான் இவை நீங்கும். செழிப்பு, வீரியம், அழகு இவையுண்டாகும்.*

## கடல்இறஞ்சிக்கறி

பத்தியத்திற் கொவ்வும் இந்தப்பாரிற் கடல்இறஞ்சி
உத்தமமாம் நோயனைத்தும் ஓட்டுங்காண் - மெத்தச்
சொறிகரப்பான் வன்சிரங்கு தொல்மேகம் போக்குஞ்
செறிநரைநீக் குஞ்சுவையாம் செப்பு 908

*இது பத்தியக்கறியாகும். நமை, கரப்பான், கிரந்தி, மேகம், பலிதநோய் முதலியவற்றைப் போக்கும். சுவையுடைய இது நரையைப் போக்கும்.*

## வெண்புறாக்கறி

வெண்புறா வாதபித்தம் வீறுகபம் மேகம்இவை
திண்புவியை விட்டோடச் செய்யுங்காண் - புண்பரவு
வெண்குஷ்டம் நீள்கரப்பான் மெய்வறட்சி யும்போக்கும்
பண்புற்ற பத்தியமாம் பார் 909

*இது நீர்மேகம், வாதபித்தம், இரண வெண்குட்டம், கரப்பான், சொறி, உடல்வறட்சி, கபம் இவற்றை நீக்கும்.*

## பச்சப்புறாக்கறி

இச்சைதரும் புன்முறுவ லேந்திழையே மாந்தர்மிகப்
பச்சைப் புறாஊன் பருகினால் – கொச்சைதரும்
வாதபித்த ஐயம்போம் மாபலமுந் தாதுவுமாம்
ஓதுசீ தம்போம் உரை 910

*பச்சைப்புறாக்கறியை உண்ணில் திரிதோடமும் பேதியும் போகும். தேகபலமும் வீரியவிருத்தியும் உண்டாகும்.*

## மாடப்புறாக்கறி

உண்டாற் பசியாம் உறைதாது வும்பெருகுங்
கண்டாலும் வாதங் கலங்குங்காண் - வண்டாருங்
காரின்மிகு மைக்கூந்தற் காரிகையே பத்தியமாம்
பாரின்மா டப்புறாவைப் பார் 911

*இக்கறியுண்டால் பசியும் சுக்கிலமும் பெருகும். வாதப்பிரமேகம் நீங்கும். இது பத்தியக்கறியாகும்.*

### வரிப்புறாக்கறி

வரிப்புறா வின்றசையோ மாஉருசி தின்றால்
தரிப்புறா வாதபித்தந் தானும் - அரிப்பான
சோபாரோ கங்கள் தொடரா எவர்களுக்கும்
நீபார் கனிவாய் நினைத்து **912**

*மிகுந்த சுவையுடைய வரிப்புறாக்கறி வாயு, பித்தம், பல்வகை வீக்கங்கள் இவற்றைப் போக்கும்.*

### வண்ணப்புறாக்கறி

ஈளை இரைப்போ டிரத்தபித்தம் போக்கிவிடும்
வாளைவென்ற கண்ணாய் மலங்கழிக்கும் - நாளுமோ
அன்னம்ஊட் டும்பசிமூட் டும்அருசி ஓட்டும்நல்ல
வன்னப்பு றாவைநுகர் வாய் **913**

*இது கோழை, சுவாசம், இரத்த பித்தம், அருசி, சுவையின்மை இவற்றை நீக்கும். பசியைத்தரும். உணவைச்சாப்பிட வைக்கும். மலமிளக்கும்.*

### மணிப்புறாக்கறி

கணிப்புறா இன்பக் களஞ்சியமே கேளாய்
மணிப்புறாப் பத்தியமாம் வாதப் - பிணிப்பறும்உள்
கொண்டாற் கயந்தீருங் குன்மரோ கங்கள்அறுங்
கண்டாலும் ஐயம்போங் காண் **914**

*பத்தியத்திற்காகும் இக்கறியுண்டால் வாதப்பிடிப்பு, சயம், வயிற்று நோய், கபம் இவற்றைப்போக்கும்.*

### மனைப்புறாக்கறி

பத்தியத்திற் காகாது பல்மனைப்பு றாக்கறிதான்
ஒத்தகரப் பான்சொறியை உண்டாக்கும் - மெத்தவுமே
நாவுருசி யாயிருக்கும் நற்சுக்கி லம்பெருக்குந்
தாவு கயல்விழியாய் சாற்று **915**

*சுவையுள்ள இக்கறி மருந்தை முறிப்பதும் தவிர கரப்பான், தோல் சொறி, தாதுவிருத்தி ஆகியவற்றை உண்டாக்கும். பத்தியத்திற்கு ஆகாது.*

## தவிட்டுப்புறாக்கறி

ஓடுகரப் பான்சோபை உட்சொறிகா மாலைபித்தம்
ஆடு பெருமூச் சடைப்பும்போம் - நீடு
கவட்டுக் கலகவிழிக் காரிகையே நாளுந்
தவிட்டுப் புறாக்கறிக்குத் தான் 916

*இதனால் கரப்பான், வீக்கம், நமைச்சல், காமாலை, பித்தம், சுவாசத்தடை இவை நீங்கும்.*

## நீர்க்காக்கைக்கறி

பாண்டோடு சோபை பருவயிறும் போங்கரப்பன்
மீண்டுசொறி யும்விளையும் மெய்த்தவரை - நீண்டமதன்
ஊர்க்காக்கு மாதரசே ஓங்குபுலால் நாற்றம்உறும்
நீர்க்காக்கை தன்னை நினை 917

*புலால் நாற்றமுள்ள இக்கறி பாண்டு, வீக்கம், மகோதரம் இவற்றைப் போக்கும். கடுவனும் தினவும் உண்டாகும்.*

## அண்டங்காக்கைக் கறி

பித்தவெட்டை சோபைஅறும் பேதித் தெழுந்துடலில்
ஒத்தபெரும் பாண்டுவகை ஓடுங்காண் - நித்தியமோர்
கண்டஞ்செய் காமிலம்போங் காக்கைக்குள் ஓர்பிரிவாம்
அண்டங்காக் கைக்கறிஉண் டால் 918

*பித்தவெட்டை, பாண்டு, வீக்கம் நீங்கும். காக்கைக்குள் ஒரு பிரிவான இதன் கறியால் காமாலை போகும்.*

## கோட்டான்கறி

கோட்டான் கறிக்குக் கொடும்பசியாம் நோய்கள்தலை
காட்டா தடங்கும்இது கைவல்யங் - காட்டானை
மாமதம்போற் காமம்உறும் வன்மருந்தின் பத்தியமாம்
பூமயிலே யாவர்க்கும் போதி 919

*கோட்டான்கறிக்கு மிகுந்த பசியும் சுக்கிலமும் அதிகரிக்கும். சிற்சில நோய்கள் நீங்கும். இது மருந்திற்குப் பத்தியமாகும்.*

## மீன்கறிக் குணம்

### வரால்மீன்கறி

உடலை வளர்க்கும் உறுபிணியைத் தீர்க்குங்
குடலுக் கதிசுகங் கொடுக்குங் - கடலை
யுழக்கும் வராலைவிட்டிவ் வூர்க்குளத்துச் சேற்றை
யுழக்கும் வரால்அதனை யுண் *920*

*வரால் பிணியை நீக்கி உடலை வளர்த்துக் குடலுக்கு சுகந்தரும்.*

### குறவைக்கறி

முட்டு குடல்வலிபோம் மூடிருமல் ஏகுமலங்
கட்டுரக்கும் வாய்அருசி காணுங்காண் - முட்டத்
துறவைப்பெற் றோருந் துதிக்கும்எழில் மாதே
குறவைமீ னின்குணத்தைக் கூறு *921*

*குறவைமீனால் குடல்குத்தல் நீங்கும். காசம், மலக்கட்டு, சுவை-யின்மை இவைகளை உண்டாக்கும்.*

### அயிரைக்கறி

உயிரை வளர்க்கும் உடற்பிணியை நீக்கும்
மயிரை வளர்க்கும் அருசி மாற்றும் - வயிரச்
செயிரையுறாச் சற்குணநற் றெள்ளமிர்தே நாளும்
அயிரை எனுமீன் அது *922*

*அயிரைமீன் உடலையும், உயிரையும், உரோமத்தையும் வளர்க்கும். உடல் பருமம், உணவில் வெறுப்பு இவை நீங்கும்.*

### இறால்கறி

வாதமொடு மந்தம்உறும் மாறாப் பொருமல்மிகுஞ்
சீதம் விளையுந் தினவும்உண்டாம் - மாதே
உதிர மிகப்பெருகும் ஓங்கும்இறால் உண்டால்
எதிரில்அங்க மாங்கிசமாம் எண் *923*

*இது வாய்வு, அக்கினிமாந்தம், வயிற்றுப்பிசம், சீதளம், நமை, மாமிசத்தாது, இரத்தம் இவைகளை விருத்தியாக்கும்.*

### கெண்டைக்கறி

*அண்டையில்நிற் பார்களுக்கும் ஆரோசி கங்காணும்*
*பண்டையுள நோய்முதிர்ந்து பாரிக்குங் - கெண்டையுண்டால்*
*வாயுவும்உண் டாகும் வயிற்றுவலி யுஞ்சேரும்*
*நீயும் அறிவாய் நிசம்* **924**

*கெண்டைமீனைத்தின்றால் நல்லருசியைக் கொடுக்கும். அடங்கிய பழைய நோய்கள், வாதம், குன்மம் இவை அதிகரிக்கும்.*

### சன்னக்கெண்டை

*மின்னை நிகருமிடை மெல்லியலே மேனியது*
*சன்னமீன் உண்டால் தளராதாம் - முன்னைக்*
*கரப்பானும் புண்ணுங் கடியகப மும்போம்*
*உரப்பாக நாளும் உரை* **925**

*இம்மீன் தேகத்தளர்ச்சியை நீக்கி, கரப்பான், இரணம், சிலேட்டுமம் இவற்றை விலக்கும்.*

### பேராரால்கறி

*வாராய் மடமானே வந்தபிணி அத்தனையும்*
*பேராரால் மீனுக்குப் பின்னிடையும் - பேரா*
*திருந்த பழமலம்போம் எய்தும்ஆ ரோக்கியம்*
*மருந்தோடே ஒக்கும்என வை* **926**

*மருந்துக்குச் சமமானது இது. பலவித நோய்களும் பழமலமும் நீங்கி நல்ல பயனுண்டாகும்.*

### சிற்றாரால்கறி

*சிற்றாரால் மீன்அருந்தச் சிக்கு மலசலம்போம்*
*உற்ற கபங்கரப்பான் உண்டாகும் - சற்றேதான்*
*மந்தம்உறுந் தீபனம்போம் வாயிற் சலம்ஊறுங்*
*கந்தமலர்ப் பூங்குழலே காண்* **927**

*சிற்றாரால்மீன் உண்டால் மலக்கட்டும் பசியும் நீங்கும். சிலேட்டுமம், கரப்பான், அக்கினிமந்தம், வாய் நீரூறல் இவை உண்டாகும்.*

### கச்சற்கருவாட்டுக்கறி

வாதமறும் அப்பொழுதே வன்பித்தம் உண்டாகுஞ்
சீதமகலுந் தினவும்போங் - கோதாய்கேள்
கண்டால் பசிஎழும்புங் கச்சற் கருவாடு
கொண்டால் சுரமும்விடுங் கூறு 928

*இதன் கறியால் வாதம், கபம், நமைச்சல், சுரநோய் இவை நீங்கும். கபபித்தமும் தீபனமும் உண்டாகும்.*

### உழுவைக்கறி

முழுதும் புசிக்கலாம் முள்ளுமில்லை அந்த
உழுவைக் குடற்பிணிவிட் டோடும் - வழுவான
முன்மலமுஞ் சாறும் முதிர்கரப்பான் உண்டாகும்
வன்முலையாய் நீயறிந்து வை 929

*முள்ளில்லா உழுவைமீன் உடலிலுள்ள பலவித நோய்களைப் போக்கும். பழமலத்தைப் போக்கும். கரப்பானை உண்டாக்கும்.*

### வாளைக்கறி

ஆளை வளர்க்கும்அதி ஆண்மைதனை உண்டாக்கும்
வாளைவென்ற கண்மாதே வாயுவென்பார் - வேளை
அறியாமல் உண்டால் அணுகுமே வாதங்
குறியார்கள் வாளைக் குணம் 930

*வாளைமீன் தேகத்தைச் செழுமையாக்கி, தாதுவை விருத்தி செய்யும், காலமில்லாக் காலத்தில் உண்டால் வாயுவாகும்.*

### சேல்கெண்டைக்கறி

குடல்வாத சூலை கொடுக்குஞ்சேற் கெண்டை
அடல்வாத மேகமும் உண்டாக்குஞ் - சடமீது
புண்ணுஞ் சிரங்கும் பொருந்திநிற்கச் செய்துவிடும்
உண்ண மிகுசுவையாம் ஓது 931

*மிக்க சுவையுடைய இக்கறி, குடல்வாதம், வாதப்பிரமேகம், புண், கிரந்தி இவற்றையுண்டாக்கும்.*

## கடல்மீன் கறிகுணம்

### கெளிற்றுக்கறி

நெய்த்திருக்கும் நொய்த்திருக்கும் நீங்காத சுக்கிலமாம்
ஒத்திருக்கும் வன்கெளிற்றை யுண்டக்கால் - மெத்த
கரப்பானும் புண்ணுங் கபமும் பெருகுந்
தரைக்குள் எவருக்குஞ் சாற்று *932*

*கெளிற்றுமீன் வீரியம், அரைக்கடுவன், புண், சிலேட்டுமம் இவற்றைப் பெருக்கும்.*

### ஓலைவாளைக்கருவாட்டுக்கறி

ஆலைவாய்ப் பித்தம் அணுகாதாம் அம்புவியில்
ஓலைவா ளைக்கருவா டுண்டக்கால் - சாலப்
பசிதீ பனமாம் பறக்குமே வாதம்
புசியார்க் கிதனைப் புகல் *933*

*ஓலைவாளைக் கருவாடு உண்டால் பித்தமும் வாதப்பிணிகளும் நீங்கும். நல்ல பசியெடுக்கும்.*

### சுறாக்கறி

வாத கபம்அறுக்கும் மன்னுகீ டம்போக்கும்
ஊது குடல்வாதம் ஓடுங்காண் - ஆதரவாய்
எல்லாப் பிணிக்கும் இதமாகும் நல்லசுறா
நல்லா ரறிய நவில் *934*

*இது வாதம், கபம், பித்தம், கிருமிநோய், குடல் விருத்தி ஆகிய-வற்றை நீக்கிவிடும். பலபிணிகளைக்கட்டுப் படுத்தும்.*

### சுறாக்கருவாட்டுக்கறி

சூலை கிராணிகுன்மந் துஷ்டஅதி சாரமிவை
வேலை யுலகை விடுத்தோடுஞ் - சால
அறாப்பசியுண் டாகும் அபத்தியமல் லாத
சுறாக்கருவா டுண்பார்க்குச் சொல் *935*

*இது பத்தியக்கறியாகும். குத்தல், கிராணி, வயிற்று நோய், வாதக் கழிச்சல் இவற்றைப் போக்கும். பசியுண்டாக்கும்.*

## கொள்ளிக்கருவாட்டுக்கறி

கொள்ளிக் கருவாடு கொண்டால் உடம்பெல்லாங்
கொள்ளிகொண்டு சுட்ட குறிப்பாகும் - விள்ளக்
கரப்பானும் புண்ணுங் கனசிரங்கும் பைய
உரப்பாம் அழகுகெடும் ஓது 936

*இது தழும்பு, கரப்பான், இரணம், கிரந்தி இவற்றைப் பெருக்கும். அழகை நீக்கும்.*

## சன்னக்கூனிக்கறி

சன்னக்கூ னிக்கறியைத் தான்அருந்தில் அக்கணமே
தின்னப்படும் அன்னஞ் சீரணமாம் - பின்னும்
பசிக்கும் அதிநெருப்பாம் பாரில்நோ யெல்லாம்
நசிக்கும் மெனவு நவில் 937

*இது உண்ட உணவைச் செரிப்பித்து பசியெடுக்கச் செய்யும். வாத மந்தம் நீங்கும். பல நோய்களை நெருப்பைப் போல் நீக்கும்.*

## திருக்கைக்கறி

வாதமொடு தாது வளர்ந்துள்ளே சேருமென்றும்
ஓதுபித்தஞ் சோபம்இவை யோடுமென்றுங் - கீதச்
செருக்கையடை வாரைத் திருத்துமொழி மாதே
திருக்கைமீன் உண்பார்க்குச் செப்பு 938

*இம்மீனையுண்டால் வாததாது, சுக்கிலத்தாது இவை அதிகரிக்கும். பித்தமும் வீக்கமும் நீங்கும்.*

## மடவைக்கறி

மடவைமீன் வாதமொடு மந்தமுளை மூலங்
குடல்வாதஞ் சூலை கொடிய - அடல்கரப்பான்
உண்டாக்கும் மாங்கிஷங்கள் ஊறுமெ னப் புகல்வார்
வண்டார்க்கும் வார்குழலே வாழ்த்து 939

*மடவைமீன் வாதப்பிணி, அக்கினிமந்தம், மூலமுளை, குடல் வாதம், சூலை, ஆதிபித்தவாதம், கடுவன் இவற்றை உண்டாக்கி உடலைப் பெருக்கச் செய்யும்.*

## சுரும்புக்கறி

சுரும்புமீன் பத்தியமாய்ச் சொல்லுவார் உள்ளில்
அரும்பிணியை யெல்லாம் அகற்றும் - பெரும்போகந்
தீபனம்உண் டாக்கும்அது தின்னச் சுவைகொடுக்குஞ்
சோபனமின் னாரரசே சொல் 940

*பத்தியக்கறியான சுரும்புக்கறி வயிற்றுப்பிணிகளைப்போக்கும். சுவையான இக்கறி வீரியத்தையும் பசியையும் உருவாக்கும்.*

## உல்லமீன்கறி

உல்லமெல்லாஞ் சன்னஎலும் போவியமே யிக்கறிதான்
நல்லகறி யாம்அதனை நாளும்உண்டால் - மெல்லக்
கழிச்சல் பிளவையொடு காணாக் கடியும்
விழிச்சுக்கொண் டாடுமென விள் 941

*உல்லமீன்கறி, பேதி, பிளவை, புண், காணாக்கடிவிடம் இவற்றை அதிகமாக்கும்.*

## கற்றளைமீன்கறி

கற்றளைமீன் றன்னைக் கருதிநிதம் உண்பாருக்
குற்ற வயிறும் உறுமியெழுஞ் - சற்றொழியாப்
பேதி யெடுக்கும் பிறகுகரப் பான்ஒழியுஞ்
சாதி மடமயிலே சாற்று 942

*இதனைத் தொடர்ந்துண்டால் குடலிரைச்சல், கழிச்சல் இவை உண்டாகும். கரப்பான் விலகும்.*

## வெள்வவ்வால்கறி

வெள்ளைவவ்வால் தன்னை விரும்பிநிதம் உண்பார்க்குத்
தள்ளுகின்ற பித்தந் தரிக்குமோ - துள்ளி
வருங்கரப்பான் ஏகும் மயிலே புவியில்
அரும்பத் தியமாம் அறி 943

*தினமும் இதனை உண்டால் பித்தமயக்கமும் கரப்பானும் அகலும். இது பத்தியக்கறியாகும்.*

## கருவவ்வால்கறி

செங்கரப்பான் மேகஞ் சிறுசிரங்கும் உண்டாகும்
வெங்கொடிய நீரிழிவும் விர்த்தியாங் - கொங்கைதனிற்
பாலூறும் மெத்தப் பருகிற் கருவவ்வால்
மேலூறும் போகம் விதி *944*

*இதன்கறி கரப்பான், பிரமேகம், சிறுகிரந்தி, மிகுமூத்திரம், வீரிய விருத்தி இவற்றையுண்டாக்கும். தாய்ப்பாலைப்பெருக்கும்.*

## நெய்த்தோலிக்கறி

மந்தம்உறுந் தீபனம்போம் வாயிலைப்பும் உண்டாகுந்
தொந்தமுறு வாதபித்தந் தோன்றும்பின் - நொந்தே
வயிறும் பொருமும் வலியநெய்த்தோ லிக்குத்
துயர மிகும்இதனைச் சொல் *945*

*இது அக்கினிமந்தம், பசியடங்கல், வாதபித்தம், வயிற்றுப்பிசம் இவற்றை உண்டாக்கிப் பசியைக் கொடுக்கும்.*

## மயறிமீன்கறி

மயறி கரப்பன்ஐயம் வாதபித் தத்தோ
டுயருகின்ற சோபம் ஒழிக்கும் - நியமாய்
உதரத்தின் உள்ளும் உறைவாதம் போக்கும்
பதியில் இதனைப் பகர் *946*

*இது கரப்பான், ஐயம், வாதம், பித்தம், மூர்ச்சை, விருணவாதம் இவற்றைப் போக்கும்.*

## விலாங்குமீன்கறி

விலாங்குமீன் றன்னை விரும்பிமிக உண்டால்
குலாங்கிஷமாய் ஐயங் குலாவும் - இலங்கருசி
போக மொடுசொறியும் புண்கரப்ப னுங்கதிக்குங்
கோகனக மாதே குறி *947*

*இம்மீனை உண்டால் ஐயம், தாதுவிருத்தி, சுவையின்மை, தவளைச்சொறி, இரணம், கடுவன் இவை உண்டாகும்.*

### கிழங்கான்மீன்கறி

பத்தியத்திற் கேற்ற பருங்கிழங்கான் மீன்அருந்த
உற்ற பிணியனைத்தும் ஒடுங்காண் - மெத்தப்
பசியெழும்புஞ் சேர்ந்த பழமலமுஞ் சாறும்
முசியா துடல்வளரு முன் *948*

*பலவகைப் பிணிகளை நீக்கி, மலச்சிக்கலைப் போக்கி பசி, உடல் செழுமை இவற்றையுண்டாக்கும் இயல்பு கிழங்கான் மீன் கறிக்குண்டு.*

### ஆற்றுமீன் - கிணற்றுமீன்கறி

ஆற்றுமீன் தாதுவையுண் டாக்கும்ஐய வெப்பத்தை
ஊற்றும் அருசியைவிட் டோட்டுங்காண் - சாற்றுங்
கிணற்றுமீன் வாதகுன்மங் கிறுபித்தங் குஷ்டம்
பணைத்தபிலீ கங்கொடுக்கும் பார் *949*

*ஆற்றுமீன் சீதசுரம், சுவையின்மை இவற்றைத் தடுக்கும். கிணற்று மீன் வாயு, குன்மம், பித்தம், குறைநோய் (குட்டம்), பீலிகநோய் இவற்றைப் போக்கும்.*

### மடு-குளம்-ஏரி இவைகளிலுள்ள மீன்கறி

ஓதுமடு மீனால் உலவைபித் தங்கள்அறுந்
தாதுமே கங்கபமந் தங்கள்உண்டாங் - கோதில்குளம்
ஆருமீன் றன்னால் அழற்பிணிமந் தந்தீரும்
ஏரிமீன் மேகம்அடும் எண் 950

*மடுமீன் வாயுவையும் பித்தத்தையும் போக்கும். சுக்கிலம், பிரமேகம், சிலேட்டுமம், அக்கினிமாந்தம் இவற்றை உண்டாக்கும். குளத்துமீன் உண்டால், சுரம், அழற்பிணி, மந்தம் நீங்கும். ஏரிமீனால் பிரேமகம் நீங்கும்.*

### கடல்நண்டுக்கறி

குன்மவலி வாதங் கொடுங்கரப்பான் உண்டாக்குஞ்
சன்மச் சொறியைத் தருவிக்கும் - பின்னும்
உதிரக் கழிச்சல்தனை ஓங்குவிக்கு மாதே
அதிரக் கடல்நண் டது 951

*இது வயிற்றுநோய் வாதநோய், கடுவன், சொறி, இரத்தகிராணி இவற்றை உண்டாக்கும்.*

### வயல்நண்டுக்கறி

வயலில்உறு நண்டருந்த வாதக் குடைச்சல்
அயலினும்இ ருக்கா தணங்கே - துயிலவொட்டா
வன்சயித்தி யங்கரப்பன் மன்குடல்இ ரைச்சலும்போம்
முன் பயித்தியங் கதிக்கு முன் 952

*இக்கறி வாதக் குடைச்சல், கரப்பான், சயித்தியம் இவற்றை நீக்கி, குடல் இரைச்சல், பித்தத்தைப் பெருக்கும்.*

### நத்தைக்கறி

நத்தைக் கறிதனக்கு நாடாது மூலமுதல்
ஒத்தமல ரோகமெல்லாம் ஓடுங்காண் - நித்தநித்தம்
தின்றாற் செரியாது தேடரிய தாதுவிர்த்தி
நன்றாகு மாதே நவில் 953

*இது மூலம் முதலான மலநோய்களை நீக்கும். தினமும் உண்டால் சீரணமின்மையும் சுக்கிலப் பெருக்கமும் உண்டாகும்.*

### ஆமைக்கறி

ஆமைக் கறியருசி ஐயம்பித் துண்மூலஞ்
சேமக் கனல்சூதி காமேகம் - நாமரத்தப்
பேதி கிராணிமலப் பேதியகற் றும்பசியுந்
தாதுவும்ஏ ருங்கொடுக்குந் தான் 954

*சுவையின்மை, பித்தம், உள்மூலம், சூடு, கெற்பமேகம், இரத்த அதிசாரம், சீதக்கிராணி, மலபேதி இவற்றை நீக்கும். பசியையும் வீரியத்தையும் அழகையும் தரும்.*

## கடைச்சரக்கின்குணம்

### சுக்கு

சூலைமந்தம் நெஞ்செரிப்பு தோஷம்ஏப் பம்அழலை
மூலம் இரைப்பிருமல் மூக்குநீர் - வாலகப
கோஷம்அதி சாரந் தொடர்வாத குன்மம்நீர்த்
தோஷம்ஆ மம்போக்குஞ் சுக்கு 955

வாதப்பிணிவயி றூதற் செவிவாய்
வலிதலை வலிகுலை வலியிரு விழிநீர்
சீதத்தொடுவரு பேதிப்பலரோ
சிகமலி முகமக முகஇடி கபமார்
சீதச்சுரம்விரி பேதச்சுரநோய்
தெறிபடும் எனமொழி குவர்புவி தனிலே
ஈதுக்குதவுமி தீதுக்குதவா
தெனும் விதியிலைநவ சுறுகுண முனவே 956

*சுக்கு விலாக்குத்தல், அசீரணம், மார்பெரிச்சல், புளித்தேப்பம், வெப்பம், ஆசனநோய், சுவாசம், காசம், நீர்ப்பீநசம், நீரேற்றம், மேகவாதகுன்மம், சலதோடம், சீதகிரகணி, வாதநோய், வயிற்றுப்பிசம், செவிக்குத்தல், வாய்வலி, முகநோய், தலைநோய், குலைநோய், சீதபேதி, உணவில் வெறுப்பு, முகப்பாண்டு, வயிற்றுக்குத்தல் ஆகியவற்றை நீக்கும்.*

## மிளகு

சீதசுரம் பாண்டு சிலேஷ்மங் கிராணிகுன்மம்
வாதம் அருசிபித்தம் மாமூலம் - ஓதுசந்நி
பாகம் அபஸ்மாரம் அடன்மேகம் காசம்இவை
நாசங் கூறிமிளகி னால் 957

கோணுகின்ற பங்கவலி குய்யஉரோ கம்வாத
சோணிதங்க ழுத்திற்குள் தோன்றுநோய் - காணரிய
காதுநோய் மாதர்குன்மங் காமாலை மந்தம்என்றீர்
ஏதுநோய் காய்இருக்கில் ஈங்கு 958

*இது குளிர்சுரம், பாண்டு, கபம், கிரகணி, குன்மம், வாயு, சுவையின்மை, பித்தம், மூலம், பிரமேகம், சன்னி, இருமல், பக்கவாதம், குய்யநோய், வாத சோணிதவாதம், கழுத்துநோய், செவிவலி, இரத்த குன்மம், செரியாமை, காமாலை இவற்றை நீக்கும்.*

## வெள்ளை மிளகு

வெள்ளை மிளகருந்த வீறு கிரகணிபோந்
தள்ளு கபவாதந் தான்ஏகும் - உள்ள
சுரம்போகுந் தீபனம்ஆந் தொல்மேகம் போம்இத்
திரம்பார் எவர்களுக்கும் செப்பு 959

*வெள்ளைமிளகு கிரகணி, ஐயம், சுரம், சீழ்ப்பிரமேகம் இவற்றை நீக்கி பசியை உண்டாக்கும்.*

## வால்மிளகு

வாத பித்தஐயம் வயிற்று வலிதாகஞ்
சீதம் பலநோய் சிதையுங்காண் - போத
அதிதீ பனம்ஆம் அணங்கரசே நாளுந்
துதிவால் மிளகருந்தச் சொல் 960

*வால்மிளகு திரிதோடம், குன்மம், அதிகதாகம், வெட்டை முதலிய சிற்சில நோய்களை நீக்கும். அதிக பசியையுண்டாக்கும்.*

## திப்பிலி

இருமல் குன்மம் இரைப்பு கயப்பிணி
ஈளை பாண்டு சந்நியாசம் அரோசகம்
பொருமல் ஊதை சிரப்பிணி மூர்ச்சைநோய்
பூரிக் குஞ்சல தோஷம் பிலீகமும்
வருமலப் பெருக் கோடு மகோதரம்
வாதம் ஆதிமுத் தோஷஞ் சுரங்குளிர்
பெரும லைப்புரி மேகப் பிடகமும்
பேருந் திப்பிலிப் பேரங் குரைக்கவே 961

ஆசனநோய் தொண்டைநோய் ஆவரண பித்தமுதல்
நாசிவிழி காதிவைநோய் நாட்புழுநோய் - வீசிடுவி
யங்கலாஞ்ச னஞ்சிதையும் அம்பாய் அழிவிந்தும்
பொங்கலாஞ்ச நங்கையர்கோட் போல் *962*

*இது காசம், கப குன்மம், சுவாசம், சயம், கோழை, பாண்டு, சந்நியாசம், சுவையின்மை, வயிற்றுப்பிசம், வாயு, தலைவலி, மூர்ச்சை, நீரேற்றம், பிலீகநோய், அதிசாரம், பெருவயிறு, திரிதோடம், நடுக்கல், சுரம், மேகக்கட்டி, குதநோய், நெஞ்சுநோய், பித்தம், பீநசம், விழி நீர்க்கம்மல், கர்ணநாதம், (காதுநோய்), கிருமி, மச்சம் முதலியவற்றை நீக்கும்.*

## யானைத்திப்பிலி

வாதமறுந் தீபனம்ஆம் மாறாக் கபங்கரப்பான்
ஓதுகுரற் கம்மல்இவை ஓடுங்காண் - பூதலத்தில்
சோனையைநேர் நாசியில்நீர் தோலாச்சு வாசமும்போம்
யானையினல் திப்பிலய தால் *963*

*இது வாதம், சிலேட்டுமம், கரப்பான், சுரசாத நோய், நீர்ப்பீநசம், குரற்கம்மல், இரைப்பு இவற்றை நீக்கி பசியை உண்டாக்கும்.*

## திப்பிலிமூலம்

தாகபித்தஞ் சோகந் தணியாச் சுரம்இருமல்
மேகங் குரற்கம்மல் மெய்க்கடுப்பும் - ஏகுங்கான்
திப்பிலிமூ லங்கண்டத் திப்பிலிய தாம்நறுக்குத்
திப்பிலியென் றேயொருக்காற் செப்பு *964*

*கண்டதிப்பிலி, நறுக்குத்திப்பிலி, நறுக்குமூலம், தன் மூலம், திப்பிலி மூலம், பித்ததாகம், மூர்ச்சை, சுரம், இருமல், பிரமேகம், குரற் கம்மல், சுக்கில நோய், உடல்வலி இவற்றைப்போக்கும்.*

## திரிகடுகு

முக்கடுகால் ஆசியநோய் மூலங் கொடிறுபிணி
திக்கடுபாண் டோடு சிரத்துறுநோய் - அக்கடுக்குந்
தாவரநஞ் சென்றுலகிற் சாற்றுமிந் நோய்முழுதுந்
தீவரநஞ் சுண்டிறக்குந் தேர் 965

திரிகடுகால் சீதபித்தஞ் சிக்குவைநோய் கீடம்
ஏரிகடு தேள்ஈளை யிருமல் - முடுகுசந்நி
யாசம் அருசி யபஸ்மாரம் அற்புதப்புண்
வீசசர்க்க ராற்புதம்போம் விள் 966

*இம்முக்கடுகால் ஆசியநோய், மூலம், கொடிறுபிணி, பாண்டு, தலைநோய், தாவரநஞ்சு, பித்தம், சிக்குவை, கிருமிநோய், பாம்பின்விடம் போன்ற விடங்கள் கோழை, காசம், முடுகு, சன்னி, உணவில் வெறுப்பு, அபஸ்மாரம், விரணம், நாடிவிரணம் இவை விலகும்.*

## கடுக்காய்

கடுக்காயுந் தாயுங் கருதில்ஒன்றென் றாலுங்
கடுக்காய்அத் தாய்க்கதிகங் காண்நீ - கடுக்காய்நோய்
ஒட்டி யுடல்தேற்றும் உற்றஅன்னை யோசுவைகள்
ஊட்டியுடல் தேற்றும் உவந்து 967

*கடுக்காயும் தாயும் ஒப்பானதென்றாலும், கடுக்காய் அதனினும் மேலானதாகக் கருதப்படும். கடுக்காய் பிணியை நீக்கி உடலைத் தேற்றும். தாய் அறுசுவை உணவூட்டி உடலை வளர்ப்பாள். கடுக்காய் உடற் பிணிகளை நீக்கி உணவை உடலில் சேர்க்கும். எனவே கடுக்காய் தாயினும் மேலானதாம்.*

## வரிக்காய்

தாடைகழுத் தக்கி தாலு குறியிவிடப்
பீடைசி லிபதமுற் பேதிமுடம் - ஆடையெட்டாத்
தூலமிடி புண்வாத சோணிகா மாலைஇரண்
டாலமிடி போம்வரிக்கா யால் 968

*இது கன்னம், கழுத்து, அக்குள், நா, ஆண்குறி ஆகிய இடத்து நோய்கள், பாத அழற்சி, அதிசாரம், பங்குவாதம், உடல்பருமன், இடிப்புண், வாதசுரோணிதம், காமிலம், தாவரவிடம் இவற்றைப் போக்கும்.*

## கடுக்காய்ப்பிஞ்சு

வனதுர்க்கிச் சேய்க்கு மணித்தயிலம் பூசி
அனலிற் பொரித்தாங் கருந்தத் - தினமுமலச்
சிக்கலக்க டுப்பநின்ற சீதம்அறுங் காற்றுகைத்த
முக்கலக்க டுப்பிருக்கு மோ 969

*இதனை ஆமணக்கு நெய்தடவி தீயில்வறுத்துத்தூள் செய்து அப்போதே உண்டால் மலச்சிக்கலும், வெளுமையான சீதமும் நீங்கும். மூலவாயுவால் பிறந்த முக்கல், ஆசனக்கடுப்பு நீங்கும்.*

## கடுக்காயின்வகை

ஆதி விசயன் அரோகிணியோ டேபிருதிவி
தீதில் அமிர்தை சிவந்திமலை - மீதார்
திரிவிரு த்தீஅபயன் செப்பில்இவை ஏழாம்
அரிதகியின் பேதம் அறி 970

*கடுக்காய்யின் வகைகள் விசயன், அரோகிணி, பிருதிவி, அமிர்தை, சிவந்தி, திரவிருத்தி, அபயன் என ஏழு வகைப்படும்.*

## விசயன்என்னும் கடுக்காய்

விசயன் எனுங்கடுக்காய் வீரியத்தைச் சொல்வோம்
நிசம்அ துதான் வாதத்தைநீக்கும் - மிசையுரைக்கப்
பேய்ச்சுரைக்காய் போல்இருக்கும் பேர்அவந்தி யாதேசம்
வாய்ச்சிருக்கும் அக்காயை வாழ்த்து 971

*அவந்தி தேசத்தில் உற்பத்தியாகும் பேய்ச்சுரைக்காய் போலிருக்கும் இக்கடுக்காய் வாத நோயைப்போக்கும்.*

## அரோகிணிக்கடுக்காய்

ஓதும் அரோகிணிக்காய் ஒன்றுண்டா னாற்சந்நி
பாதமொடு சீதம் பறக்குங்காண் - மீதுகுறி
நான்குவரி யாய்த்தோற்றும் நங்காய் அதன்தேசம்
ஆங்குகன்னி யாகுமரி யாம் 972

*கன்னியாகுமரியில் கிடைக்கும் இக்கடுக்காயால் சன்னியும், சீதமும் நீங்கும்.*

### பிருதிவிக் கடுக்காய்

தோற்றும் பிருதிவிதான் தோலாப் பயித்தியத்தை
மாற்றும் வயதை வளர்க்கும்அதன் - மேற்றோலோ
மெல்லியதாம் அக்காய் விளைதேசம் ஏதென்னில்
வல்லசவு ராட்டிகமாம் வாழ்த்து **973**

*பித்தத்தை நீக்கி ஆயுளை விருத்தி செய்யும் இக்கடுக்காய் சௌராட்டிரத்தில் உற்பத்தியாகும்.*

### அமிர்தக் கடுக்காய்

அமிர்தம் எனுங்கடுக்காய் அம்புவியில் உள்ள
திமிர்தசி லேட்டுமத்தைத் தீர்க்கும் - விமிதச்
சதைப்பற்றுண் டாயிருக்குஞ் சாற்றில்அதன் றேசங்
கதிக்கொத்த காசிஎன்பார் காண் **974**

*காசியில் கிடைக்கும் அமிர்தக்கடுக்காய் சதைப்பற்றுள்ளது. இது கபத்தை நீக்கும்.*

### சிவந்திக்கடுக்காய்

சிவந்தி எனுங்கடுக்காய் செய்குணத்தைக் கேள்வா
யுவந்தமூ லத்தையெலாம் ஒட்டுஞ் - சிவந்ததிகப்
பொன்னிறம தாயிருக்கும் பூங்குழலே அந்தக்காய்
துன்னுவனந் தோறும்உண்டாஞ் சொல் **975**

*காடுகளில் கிடைக்கும் சிவந்திக் கடுக்காய் சிவப்பாயும் பொன்னிற மாயும் இருக்கும். வாதமூல நோய்களை விலக்கும்.*

### திரிவிருத்திக் கடுக்காய்

திரிவிருத்திக் கடுக்காய் தேகத்தில் நாளும்
வருவிரணம் போக்கும்அதன் வன்னம் - ஒருவிதமோ
பஞ்சவன்னம் மூவரம்புபற்றி யிருக்கும் அது
விஞ்சுமலை தோறும்உண்டாம் விள் **976**

*மலைகளில் கிடைக்கும் வரிகளையுடைய இக்கடுக்காய் பலவித இரணங்களையும் போக்கும்.*

### அபயன்என்னும் கடுக்காய்

அபயன் எனுங்கடுக்காய் அங்கநோய் எல்லாம்
அபயமிட் டோட அடிக்கும் - அபயற்
கதிக நிறங்கறுப்ப தாகும்விளை பூமி
பொதிய மலையாம் புகல் 977

*கருமைநிற அபயன் கடுக்காய் எலும்பைப் பற்றிய நோய்களை நீக்கும். இது பொதியமலையில் விளையும் என்பர்.*

### கருங்கடுக்காய்

பழமலத்தைப் போக்கும் பகரில் உடலுக்
கழகுதரும் புத்தி அளிக்கும் - பழகி
மருங்கடுத்த வாதபித்த வன்கபத்தைத் தீர்க்குங்
கருங்கடுக்காய் என்றுளத்திற் காண் 978

*கருங்கடுக்காய் மலக்கட்டையும் திரிதோடத்தையும் போக்கி அழகையும், அறிவையும் கொடுக்கும்.*

### செங்கடுக்காய்

சுத்தியொடு புத்தி சுகமும் புகழும்உண்டாம்
மெத்தஒளிர் பொன்னிறம்ஆம் மேனிஎல்லாம் - சுத்த
வங்கடுத்த ஈளைபல வன்காச மும்மலமுஞ்
செங்கடுக்காய்க் கில்லைஎனத் தேர் 979

*செங்கடுக்காய் சிலேட்டுமம், கோழை, இருமல், மலக்கட்டு இவற்றைப் போக்கி அறிவு, இன்பம், புகழ், உடற்கு நன்னிறம் இவற்றை அளிக்கும்.*

### வரிக்கடுக்காய்

மிடுக்காக்குந் தேகத்தை விந்துவையுண் டாக்குஞ்
சடக்கெனவே யுண்டியையுட் சாடுந் - துடுக்கான
வாதபித்த ஐயகற்றும் வன்னியொடு நவ்விதருஞ்
சாதி வரிக்கடுக்காய் தான் 980

*வரிக்கடுக்காய் வாதபித்த தோடங்களை அகற்றி தேகத்திற்கு மிடுக்கினைக் கொடுக்கும். தாதுப் பெருக்கத்தையும், அழகையும் தரும். அதிவிரைவில் உணவை உட்செலுத்தும்.*

## பால் கடுக்காய்

ஆமங் கெடுங்காண் அழகும் பொலிவுமிகுஞ்
சேமம் பெறுபலமுஞ் சேருமே - தாமநெடும்
வேற்கடைக்கண் கும்பமுலை மெல்லியலே எப்போதும்
பாற்கடுக்காய் உண்பவரைப் பார் *981*

*இக்கடுக்காய் சீதகிராணியை நீக்கி, அழகு, வன்மை இவற்றைத் தரும்.*

## நெல்லிமுள்ளி

ஆகவன லஞ்சசிஅ சுர்க்கென்பு ருக்கிகண்ணோய்
தாக முதிரபித்தந் தாதுந ஷ்டம் - மேகனத்தின்
இல்லிமுள்ளி போல்அருகல் எண்காமிய வியங்கம்
நெல்லிமுள்ளி யாற்போ நினை *982*

நல்லநெல்லி முள்ளியது நாக்குக் குருசிதரும்
அல்லல்விரி பித்தம் அகற்றும்அதை - மெல்லத்
தலைமுழுகக் கண்குளிருந் தாவுபித்த வாந்தி
இலையிழிமே கங்களும்போம் எண் *983*

*நெல்லிமுள்ளியால் உடலின் சூடு, எலும்புருக்கி, கண்நோய், பித்தம், தாதுநட்டம், வலிபித்தம், பித்தவாந்தி, மேகம், ஆண்குறி கொப்புளம் இவை நீங்கும். இதனை அரைத்துத் தலைமுழுகினால் கண்குளிர்ச்சி பெறும். பித்தம் நீங்கி நாவிற்குச் சுவை தரும்.*

## தான்றிக்காய்

சிலந்திவிடங் காமியப்புண் சீழான மேகங்
கலந்திவரும் வாதபித்தங் காலோ - டலர்ந்துடலில்
ஊன்றிக்காய் வெப்ப முதிரபித் துங்கரக்குந்
தான்றிக்காய் கையிலெடுத் தால் *984*

ஆணிப்பொன் மேனிக் கழகும் ஒளியுமிகுங்
கோணிக்கொள் வாதபித்தக் கொள்கைபோந் - தாணிக்காய்
கொண்டவர்க்கு மேகம்அறுங் கூறா அனல்தணியுங்
கண்டவர்க்கு வாதம்போங் காண் *985*

*இது சிலந்திவிடம், ஆண்குறிக்கிரந்தி, சீழ்ப்பிரமேகம், திரிதோடம், இரத்தபித்தம், வாதம், பித்தம், வாததோடம், உட்சூடு இவற்றைப் போக்கி அழகையும் ஒளியையும் உண்டாக்கும்.*

## திரிபலம்

**(கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்)**

*வித்திரதி நாசிநோய் வெண்குஷ்டம் ஆசனப்புண்*
*குத்திருமல் பாண்டுகுஷ்டங் குன்மம் இரைப் - பெற்றுமத*
*மூர்ச்சைபிலீ கம்பிரமி மோடுருபுண் சர்வவிட*
*மூர்ச்சையறு முப்பலத்தான் முன்* 986

*வித்திரதி, நாசிநோய், வெண்குட்டம், பகந்தரம், புகையிருமல், பாண்டு, குட்டம், குன்மம், சுவாசம், மதநோய், மூர்ச்சை, மூலக்கட்டி, பிரமேகம், வயிற்றுநோய், விரணம், பாம்பின் விடங்களால் வந்த மூர்ச்சை ஆகியவை திரிபலத்தால் நீங்கும்.*

## பேரீச்சங்காய் (கர்ச்சூரக்காய்)

*வாயிலுண்டா மூற்றலை மாற்றும் பசியில்லை*
*யாயிலுண்டா லுண்டா மதுமேக - நோயுள்*
*பெருநீர் மறுக்குமினுப் பெண்களைக் கூட்டுங்காற்*
*றருநீர்மை தருச்சூரக்காய் தான்.*

*இக்காய் உமிழ்நீர்ப் பெருக்கையும், மதுநீரையும் போக்கும். பசியையும் புணர்ச்சியில் நிர்வாகத்தையும் உண்டாக்கும்.*

## கண்டுபாரங்கி (சிறுதேக்கு)

*கண்டுபா ரங்கியெனுஞ் சிறுதேக் குண்டேல்*
*கால்எங்கே பித்தம்எங்கே கபந்தான் எங்கே*
*தொண்டுதொட்டுத் தொடர்சுவாச காசம் எங்கே*
*சுரம்எங்கே வெறியெங்கே தொணிநோ யெங்கே*
*மிண்டுபுரி பீநசநீர்க் கோவை யெங்கே*
*வெளிநீறாண் ணீரெங்கே விரற்கா லெங்கே*
*அண்டுபடாச் சீதசுரங் கடுப்பு மெங்கே*
*யழலையக நோயெங்கே யறைகுவீரே* 987

*இக்காய் திரிதோடம், பித்தம், கபம், சுவாசகாசம், சுரம், நாசிநோய், முன்னீர்கோவை, பின்னீர்க் கோவை, உண்ணீர், குளிர்சுரம், கடுப்பு, உடல்வலி, உட்காந்தல், மனச்சங்கடம் இவற்றைப் போக்கும்.*

### அரத்தை

தொண்டையிற்கட் டுங்கபத்தைத் தூரத் துரத்திவிடும்
பண்டைச்சீ தத்தைப் பறக்கடிக்குங் - கொண்டைவிழி
மின்னே கரப்பனைவே றாக்கும் பசிகொடுக்குஞ்
சொன்னோம் அரத்தைச் சுகம் *988*

மார்பை அடர்பீனிச வாசகா சம்மூலஞ்
சோபை தட்டச் சூர்வாத சோனிதநோய் - தீபச்
சுரத்தை யடுபடர்பல் தூருறுகண் நேரின்
அரத்தை யெடுதுகள தாம் *989*

*நெஞ்சுக்கோழை, சீதளம், கரப்பான், மார்படைப்பு, கணை, இருமல், மூலம், வீக்கம், பல்நோய், வாதசுரோணிதம், தீச்சுரத்தால் பிறந்த கபம், ஈறுப்பிணி போன்ற பலவற்றையும் அரத்தை நீக்கும். பசியைக் கொடுக்கும்.*

### பேரரத்தை (தும்ராட்டகம்)

அரத்தை கபத்தை யறுக்குங்கால் ஓட்டுஞ்
சிரத்தில்உறும் ஈளையைச்சி தைக்கும் - இரைத்துவரும்
பித்ததோ ஷத்தைப் பிறவலிப்பை மாற்றிவிடும்
உற்றசர்வ வல்விஷம்போக்கும் *990*

சந்நி யுபட்சிரணஞ் சார்ந்தசீ தச்சுரம்போம்
வன்ன மிகுந்து வளருங்காண் - கன்னியர்கள்
வாதவிடாய்க் காகும்வலி வாதக் கடுப்பகலும்
பேதமிலை பேர்அரத்தை பேணு *991*

*இது வாதநோய், பின்னிசிவு, வலிப்பு, பித்ததோடம், சன்னி, பித்தகபம், நடுக்கல்சுரம், புண், தலைநீரேற்றம், நீர்விடம், சீதசுரம், பெண்களின் ருதுதோடம், வாதக்கடுப்பு இவற்றை நீக்கி உடல் பொலிவை உண்டாக்கும்.*

## சிற்றரத்தை

வாந்திபித் தங்கரப்பான் வாதஞ்சி ரோரோகஞ்
சேர்ந்தகப முத்தோஷஞ் சீதமொடு - நேர்ந்தசுரம்
மற்றரத்தைக் காட்டி வரும்இரும லுந்தீருஞ்
சிற்றரத்தை வன்மருந்தால் தேர் 992

*இதனால் வாந்தி, பித்தம், கரப்பான், வாதம், தலைநோய், கபம், முத்தோடம், சீதம், சுரம், இருமல் இவை போகும்.*

## வசம்பு

பாம்பாகி நஞ்சற் புதப்புண் வலிவிட பாகங் குன்மஞ்
சூம்பாரித்த பித்தம் முகநாற்றம் வன்சூலைசந்நி
வீம்பாம் பைசாசம் பிலீகஞ்சிலிபதம் வீறிரு
றாம்பாக்கிருகிட யிவையேகு மாசி வசம் பினுக்கே

*வசம்பு தாமிரவிடம் முதலான விடங்கள், புண், வலி, விடபாக நோய், குன்மம், இரத்தபித்தம், வாய்நாற்றம், சூலை, சன்னிபாதம், பீலிகம், பீனசம், பாதஅழற்சி, காசம், வயிறுப்பல், நீண்டமலக்கிருமி இவை போகும்.*

## வட்டத்திருப்பி

ஐயநஞ் சூதைபித்தத் திக்கறைவ மாபிரமி
வெய்யசுரம் பேதி விரணமெலாம் - வையம்விடுத்
தெட்டத் திரும்பிவிடு மென்பை யூணாக்குமன்றி
வட்டத் திருப்பிவிடு மால்

*இது சிலேட்டுமகோபம், விடவாததோடம், பித்தநோய், அத்தசிராவம், பிரமியம், பித்தசுரம், கழிச்சல், சிரங்கு ஆகியவற்றை நீக்கி மாமிசதாதுவை விருத்தி செய்யும்.*

## கோஷ்டம்

நாட்டில்உறு வெட்டை நடுக்கம் எனுநோய்கள்
கோஷ்டம்எனச் சொன்னாற் குலையுங்காண் - கூட்டிற்
சுரதோஷந் தொண்டைநோய் தோலாத பித்தம்
பரதேசம் போமே பறந்து 993

திட்டி கவுள்அகடு களஞ்சென்னி நாவாய்
செறிபிணி வெப்பதைப் புதாவர்த்தம் ஊதை
முட்டியெழு முளைவிரணஞ் சுவாச காசம்
முடிகத்தோ டவுரமர விடங்கள் மேகன்
கட்டிஅஜ கல்லிவிட பாகம் பூத
கணம்பால கிரகமொடு தாது நட்டஞ்
சொட்டிவரு பிரமிபித்தம் இவையொ ருங்கே
தொலையும் விர ணாரிக்குச் சுகப்பேறாமே 994

*கோஷ்டத்தால் கண், தாடை, வயிறு, கழுத்து, சிரசு, நாவாய் இவற்றின் நோய்கள், தோடசுரம், வீக்கம், கபவாதம், முளைமூலம், இருமல், எலி, பாம்பு, நாவி இவற்றின் விடங்கள், மேகப்பிடகம், பூத காலம், 18 வகை விடபாகம், தோடம், வீரிய ஓட்டம், வெள்ளைவிழல், நடுக்கம், பித்தம் ஆகிய இவை விலகும். சுகப்பிரசவம் உண்டாகும்.*

## அதிமதுரம்

கத்தியரி முப்பிணியால் வருபுண் தாகங்
கண்ணோய்உன் மாதம்விக்கல் வலிவெண் குஷ்டம்
பித்தம் எலும்புருக்கி கிரிச்சரம் ஆவர்த்த
பித்த மதமூர்ச்சை விடபாகம் வெப்பந்
தத்திவரு வாதசோ ணிதங்கா மாலை
சருவவிடங் காமியநோய் தாது நட்டங்
குத்திருமல் ஆசியங்கம் இதழ்நோய் இந்து
குயப்புணும் போம்மதூகமெனக் கூறுங்காலே 995

*இது ஆயுதவிரணம், வாதத்தால் ஏற்பட்ட புண்கள், நாவறட்சி, கண்ணோய், உள்மாந்தம், ஐந்து வகை வலிகள், விக்கல், வெண்குட்டம், பித்தம், எலும்புருக்கி, மூத்திரக்கிரீட்டை, மதம், மூர்ச்சை, பித்த விடபாகம், சுரம், வாதசோணிதம், தாவரசங்கம், விடங்கள், குய்யநோய், சுக்கிலஒட்டம், புகையிருமல், முகபாகம், சிரநோய், ஒசிதநோய், சோமநோய் ஸ்தனவித்திரிக்கட்டி இவைகளை போக்கும்.*

## அதிவிடயம்

அதிவிடயஞ் சர்க்க ராற்புதநோய் வெப்பு
கொதி மருவு பேதியொடு கோழை - எதிர்வாந்தி
என்றுரைக்கும் நோய்க்கூட்டம் இல்லாத கற்றிவிடுங்
குன்றை நிகர்முலையாய் கூறு 996

*இது சர்க்கராற் புதநோய், சுரம், கழிச்சல், ஈளை, மேல் நோக்கிய வாந்தி முதலியவற்றை விலக்கும்.*

## அக்கரகாரம்

அக்கர காரம்அதன் பேர் உரைத்தக்கால்
உக்கிரகால் அத்தோஷம் ஓடுங்காண் - முக்கியமாய்க்
கொண்டால் சலம்ஊறும் கொம்பனையே தாகசுரங்
கண்டால் பயந்தோடுங் காண் 997

*இது காலதோடம், தாகசுரம்இவற்றை நீக்கும். இதை வாயில் அடக்கிக் கொண்டால் நீர் ஊறும்.*

## கடுரோகிணி

மாந்தஞ் சுரம்ஐயம் வாயுகரப் பான்ஆமஞ்
சேர்ந்தமலக் கட்டு திரிதோஷம் - பேர்ந்தபொட்டுப்
புண்வயிறு நோய்இவைபோம் பொற்கொடியே பேதியுண்டாம்
திண்கடு ரோகணிக்குத் தேர் 998

*மாந்தம், சுரம், ஐயம், வாயு, கரப்பான், மலக்கட்டு, திரிதோடம், சீதபேதி, கிருமி, புண், வயிற்றுவலி இவை விலகும். பேதியுண்டாகும்.*

## பீதரோகிணி

படர்நீல காசம் படலமொடு பில்லந்
தொடர்இமைக ளிற்றோன்றுந் தோஷம் - அடரும்
அருவியெனச் சொல்லுகின்ற அக்கிநோ யேகும்
ஒருபீத ரோகிணியை யுன் 999

*கருவிழி நீலகாசம், கிருஷ்ண மண்டலம், இமையில் வரும் நீர்ப்பில்லம், இமைகளில் தோன்றும்தோடம் இவை பீதரோகிணியால் நீங்கும் என்பர்.*

## கிரந்திதகரம்

சீறுபித்த நோயுந் திரைபெரிதல் போலுமெறிந்
தேறுஞ் சுவாசநோ யென்பதுவும் - வீறிப்
பரந்தசரக் காப்புதமும் பண்ணப் புகுங்காற்
கிரந்தி தகரத்தாற் கெடும்

*பித்தநோய், சுவாசநோய், சர்க்கராப்புதம் எனப்படும் இரணக் கிரந்தி இவை கிரந்தி தகரத்தால் ஒழியும்.*

## செவ்வள்ளிக்கொடி

செவ்வள்ளி யின்கொடிக்குச் சேடித்த குஷ்டமொடு
கவ்வு குறைநோய் கரப்பானும் - இவ்வுலகில்
மானே குடல்வாதம் வல்ல படுவனுடன்
ஆனபரு மூலமும்போம் ஆய் *1000*

*இதற்கு குட்டம், பெருவியாதி, கடுவன், குடலண்டம், நகம், குதிகால்களில் உண்டாகும் கொப்புளம் இவை நீங்கும்.*

## செவ்வியம்

சூலை யருசிசன்னி தொல்லிருமல் ஈளைபித்தம்
மேலைக் குரற்கம்மல் வெங்களநோய் - மூலசுரம்
கவ்வியங்கத் தேறு கனதா வரவிஷமுஞ்
செவ்வியங் கொள்ளவிடுந் தேர் *1001*

*செவ்வியத்தால் குத்தல், அரோசகம், சன்னி, சுரம், நீடித்த காசம், கோழை, பித்தம், சுரசாதம், தொண்டைநோய், பழஞ்சுரம், எலும்பைப் பற்றிய தாவரவிடம் ஆகியவை நீங்கும்.*

## சடாமாஞ்சில்

குட்டஞ் சிலந்திவிஷங் கோர புராணசுரம்
உட்டிணங் கால்பேதிகண்ணோய் ஒட்டிருமல் - சொட்டிரத்த
பித்தம்இரைப் பேகும் பெருங்கோரை யென்றுரைக்குஞ்
சுத்தசடா மாஞ்சில்தனைச் சொல் *1002*

*சடாமாஞ்சில் குட்டம், சிலந்திவிடம், பழஞ்சுரம், உட்சூடு, வாயு, பேதி, விழிநோய், காசம், இரத்தபித்தம், சுவாசம் இவற்றை நீக்கும்.*

### விலாமிச்சுவேர்

மேகம் விழியெரிச்சல் வீறிரத்த பித்தமொடு
தாகமத மூர்ச்சைபித்தந் தள்மயக்கஞ் - சோகஞ்
சிரநோய் இவையேகுஞ் செய்யவிலா மிச்சுக்
கெரிசுரமும் இல்லை யிசை 1003

*இதனால் மேகநீர், கண்ணெரிவு, உதரபித்தம், தாகம், மதம், மூர்ச்சை, பித்தம், மயக்கம், சோகை, தலைவலி, தீச்சுரம் இவை நீங்கும்.*

### பரங்கிப் பட்டை

தாகம் பலவதாந் தாதுநஷ்டம் புண்பிளவை
மேகங் கடிகிரந்தி வீழ்மூலந் - தேகமுடங்
குட்டை பகந்தரமேற் கொள்வமனம் போம்பறங்கிப்
பட்டையினை யுச்சரித்துப் பார் 1004

*தாகம், பலவகையான வாதநோய்கள், விந்துநட்டம், விரணம், பிள்ளை நீரிழிவு, கடிவிடம், சிரங்கு, மூலமுளை, முடவாதம், குறைநோய், கபம், வாந்தி இவற்றைப் பரங்கிப்பட்டை நீக்கும்.*

### பிசின்பட்டை

தசையிலுஞ் சோரி தனிலும் பரந்தே
வசிபோற்குத் திக்குடையும் வாய்வை - நிசமாகக்
கொல்லும் உடம்பின் கொதிப்பை ஒருநொடியில்
வெல்லும் பிசின்பட்டை விள் 1005

*தசை, மாமிசம் இவற்றால் குத்திக்குடைகின்ற வாயு, உடல்வெப்பம் இவற்றைப் பிசின்பட்டை போக்கும்.*

### வெள்ளிலோத்திரம்

தாவரநஞ் சென்புருக்கி தாழா மகோதரநோய்
கூவ வொட்டாத குரற்சாதம் - பூவுலகில்
வெல்லம் வரிதாய வியங்கு முதா வர்த்தமும்போம்
நல்லவெள்ளி லோரத்தினால்

*தாவரநஞ்சு, என்புருக்கி, பெருவயிறு, குரற்கம்மல், வியங்கநோய், உதாவர்த்த நோய் இவற்றை வெள்ளிலோத்திரம் நீக்கும்.*

## இலவங்கப்பட்டை

தாதுநஷ்டம் பேதி சருவவிஷம் ஆசியநோய்
பூதகிர கஞ்சலந்திப் பூச்சிவிஷஞ் - சாதிவிஷம்
ஆட்டும்இரைப் போடிருமல் ஆகியநோய்க் கூட்டம்அற
ஓட்டும் இலவங்கத் துறி 1006

*இலவங்கப்பட்டை தாது நட்டம், பேதி, பல்வகைவிடங்கள், ஆசிய நோய், பூதக்கிரகம், சிலந்தி, பாம்புவிடங்கள், சுவாசகாசம் முதலிய நோய்களைப் போக்கும்.*

## சன்னலவங்கப்பட்டை

சன்னலவங் கப்பட்டை தான்குளிர்ச்சி யுண்டாக்கும்
இன்னும்இரத் தக்கடுப்பை யீர்க்குங்காண் - முன்னம்உறும்
உந்திக் கடுப்பகற்றும் உண்மூலப் புண்போக்குங்
கந்தமிகு பூங்குழலே காண் 1007

*இது இரத்தக் கிராணி, வயிற்றுக்கடுப்பு, மூல விரணம் இவற்றை நீக்கிக் குளிர்ச்சியைத் தரும்.*

## இலவங்கப் பத்திரி

மேகசுரம் சீதசுரம் வெட்டைசுவா சங்காசம்
தாகபித்தம் வாந்திசர் வாசியநோய் - மேகத்தின்
கட்டியொடு தாதுநஷ்டங் கைப்பருசி போக்கிவிடும்
இட்டஇல வங்கத் திலை 1008

*இலவங்கப்பத்திரியால் பிரமேகசுரம், குளிர்சுரம், வெள்ளை, இரைப்பு, இருமல், பித்ததாகம், வாந்தி, மேகப்பிடகம், சுக்கில நட்டம், வாய்க்கசப்பு, சுவையின்மை இவை நீங்கும்.*

## இலவங்கப்பூ

பித்த மயக்கம்அறும் பேதியொடு வாந்தியும்போஞ்
சுத்தவிரத் தக்கடுப்புந் தோன்றுமோ - மெத்த
இலவங்கங் கொண்டவருக் கேற்றசுகம் ஆகும்
மலம்அங்கே கட்டுமென வாழ்த்து 1009

*சுக்கிலநட் டங்கர்ன்னச் சூர்வியங்க லாஞ்சனந்தாட்*
*சிக்கல்விடாச் சர்வா சியப்பிணியும் – அக்கிக்குள்*
*தங்கப்பூ வோடுதரி படருந் தோன்றில் இல*
*வங்கப்பூ வோடுரைத்து வா* *1010*

*இலவங்கப்பூவினால் பித்தம், பேதி, வாந்தி, இரத்தக்கடுப்பு, ஆசனப்பிடுங்கல், சுக்கில விரயம், செவிநோய், சிவந்தமச்சம், பூப்படை முதலான பல நோய்கள் நீங்கும். மலக்கட்டும் மகிழ்வும் உண்டாகும்.*

### சாதிக்காய்

*தாதுநஷ்டம் பேதி சருவாசி யஞ்சரநோய்*
*ஓதுசுவா சங்காசம் உட்கிரணி - வேதோ*
*டிலக்காய் வரும்பிணிபோம் ஏற்றமயல் பித்தங்*
*குலக்கா யருந்துவர்க்குக் கூறு* *1011*

*சாதிக்காய் விந்துநட்டம், கழிச்சல் ஆகிய வாதங்கள், தலைநோய், இரைப்பு, இருமல், உட்டிணகிராணி போன்றவற்றை நீக்கி, மயக்கம், பித்தம் இவற்றை அதிகரிக்கும்.*

### சாதிபத்திரி

*சாதிதரும் பத்திரிக்குத் தாபச் சுரந்தணியும்*
*ஓதுகின்ற பித்தம் உயருங்காண் - தாதுவிர்த்தி*
*யுண்டாங் கிரகணியோ டோதக் கழிச்சல்அறும்*
*பண்டாங் குரையே பகர்* *1012*

*இதனால் அழற்சுரம், கிரகணி, நீர்மந்தபேதி இவை நீங்கும். பித்தமும் சுக்கிலப் பெருக்கமும் உண்டாகும்.*

### தாளிசபத்திரி

*நாசி களப்பிணிகள் நாட்பட்ட காசஞ்சு*
*வாசம் அருசி வமனங்கால் - வீசிவரு*
*மேகமந்தம் அஸ்திசுரம் விட்டேகுந் தாளிசத்தால்*
*ஆகுஞ் சுகப்பிரச வம்* *1013*

*இதனால் நாசிப்பிணிகள், நாட்பட்ட இருமல், இரைப்பு, சுவையின்மை, வாந்தி, வாயு, சீழ்ப்பிரமேகம், செரியாமை, எலும்பு சுரம், ஆகியவை நீங்கும், சுகப்பிரசவ முண்டாகும்.*

## முப்பத்திரி

பத்திரிகள் மூன்றிற் பயிலுங் குணங்கேளாய்
நித்த மலக்கட்டு நீங்கிவிடுஞ் - சுத்தசுரம்
தாகமொடு வாந்திவிக்கல் தங்காளக் காலையிலுங்
கோகிலமே யிக்குணத்தைக் கூறு *1014*

*இலவங்கம், சாதி, தாளிசம் என்ற மூன்று பத்திரிகளால் மலபந்தம், தனிச்சுரம், மிகுதாகம், வாந்தி, விக்கல் இவை ஒழியும்.*

## கர்க்கடகசிங்கி

கர்க்கடக சிங்கி கபங்காசம் ஈளையொடு
முக்கல் கிராணி முதிர்இரைச்சல் - பொக்கெனவே
சாடுகின்ற பேதியையுஞ் சாடும் அரிவையரைக்
கூடு திறங் கொடுக்குங் கூறு *1015*

மூலவிரத் தங்கடுப்பு மோதிரத்த பித்தங்கால்
மேல்அடரும் மேக விரணவெப்போ - டாலத்
துடுக்காங் கொதிப்பும்அறுந் தோகைமட மாதே
கடுக்காயின் பூவைக் கருது *1016*

*இதனால் முக்கல், ஆமம், இருமல், சயம், கிரகணி, மூலமுளை, இரத்தபித்தம், இரத்தபேதி, குடலிரைச்சல், மேகப்புண், சுரம், விடசுரம், ஆகியவை நீங்கும், வீரியம் உண்டாகும்.*

## நாகப்பூ

மதமூர்ச்சை பிரமியஞ்சு வாசகா சம்புகைச்சல்
விதிர்குரற் கம்மல்கீட விஷஞ்சரு வாசியந் தேள்
அதிசாரங் கமலப்புண்ணோ டரத்தமூ லம் மேகஞ்சூ
டதிநீர்விந் துவினட்டம்போம் அறிநாக மலரினுக்கே *1017*

*இதனால் மதமூர்ச்சை, பிரமியம், இரைப்பு, இருமல், கண் புகைச்சல், நடுக்கல், குரற்கம்மல், சுரசாதம், எலிவிடம், வாதநோய்கள், தேள்விடம், குட்டம், உதிரமூலம், பிரமேகம், வெப்பு, வெகுமூத்திரம், சுக்கிலவிரயம் ஆகியவை நீங்கும்.*

## சிறுநாகப்பூ

சிறுநாகப் பூவினது செய்கைதனைச் சொல்வோங்
குறியாடும் மேகத்தைக் கொல்லும் - நெறியைவிட்டுத்
தீதாச்செல் வாயுவையுந் தீர்க்கும்இரு மற்போக்குங்
கோதா யிதையறிந்து கொள் *1018*

*சிறுநாகப்பூ ஆண்குறியில் வெள்ளைவீழ்தல், வாயு, காசநோய் இவற்றை நீக்கும்.*

## கண்டில்வெண்ணெய்

கண்டில்வெண்ணெய் மாதேகேள் காந்திப்பிர தாபமுமாந்
தொண்டையினுள் நீர்க்கட்டு தூரிருமல் - மிண்டிவரு
நீர்க்கடுப்பு மூலத்துள் நீர்க்குத்த லும்போக்கும்
பார்க்குள் அறியப் பகர் *1019*

*கண்டில் வெண்ணெயால் காந்தி, பிரதாபம் இவையுண்டாகும். தொண்டையின் நீர்க்கட்டு, நீர்க்கடுப்பு இவை நீங்கும்.*

## கூகை நீறு

கூகைநீற் றால்மாதர் குய்யநோய் வித்திரதி
ஆகமெனும் மார்புநோய் அண்டுமோ - போகம்அதில்
வீரியமும் உண்டாகும் வீழ்கிருமி நோயோடு
தூரிருமல் ஈளையும்போஞ் சொல் *1020*

*கூகை நீற்றால் யோனிநோய், வித்திரதிக்கட்டி, மார்புநோய், கிருமிநோய், கோழை இவை போகும். விந்து விருத்தியாகும்.*

## நாகணம்

தலைவலிநீர் ஏற்றந் தலையிடிப்பு குத்தல்
தொலையா மலட்டுநோய் சோபை - நிலைவிழிநோய்
பாகணச்சொன் மின்னே பரும்உதர ரோகமும்போம்
நாகணத்தி னாலே நவில் *1021*

*இது தலைவலி, நீரேற்றம், தலையிடிப்பு இவற்றில் குத்தல், மலடு, வீக்கம், கண்ணோய், பெருவயிறு, உதரரோகம் இவற்றை நீக்கும்.*

## மாசிக்காய்

அக்கரங்கள் போக்கிவிடும் ஆறாத வெப்பாற்றும்
மெய்க்குறுதி மாசிக்காய் மேன்மேலும் - தக்கதொரு
பாலர்கண நோய்போக்கும் பன்மேக முந்தொலைக்கும்
வேலனைய கண்ணாய் விளம்பு 1022

*மாசிக்காய், அக்கரம், வெப்பம், குழந்தைகளின் கணநோய், பல மேகங்கள் இவற்றை நீக்கி உடற்குப் பலந்தரும்.*

## வலம்புரிக்காய்

பூதபை சாசம் பொறுக்கொணா நேத்திரநோய்
கீத மிகு செவிநோய் கேவல்விக்கல் - ஓதுகுளிர்
தோடமொடு மேகங்கள் சொன்னவையெ லாம்நடுங்கி
ஓட வலம் புரியை யுன் 1023

*இக்காய் விழிநோய், செவிநோய், கேவல், விக்கல், சீதசுரம், ஆயாசம், மேகம் கூன் விழுதல் முதலியவற்றை நீக்கும்.*

## வாய்விடங்கம்

பாண்டுகுஷ்டம் குன்மம் பருந்தூல நோய்வாதந்
தீண்டு திரிவிடஞ்சி ரந்துண்டம் - பூண்டமடி
நோய்விளங்கக் காட்டாத நுண்கிருமி யாசனப்புண்
வாய்விளங்கங் காட்டவிடு மால் 1024

*வாய்விடங்கம் பாண்டு, குட்டம், குன்மம், உடற்பருமன், வாயு, பாம்பு, தாவரவிடங்கள் போன்றவற்றை நீக்கும். குழந்தைகட்கு நாசி, வயிறு இவற்றிலுண்டாகும் பிணியறிதற்கான சன்னகிருமியை அறிய உதவும்.*

## தக்கோலம் (தக்கோலப்பொட்டு)

பாண்டுசுரம் போகும் பகரிற் பலஞ்சேருந்
தீண்டும்உப யாசியமுந் தீருங்காண் - நீண்டதொரு
தாதுவிர்த்தி யாகுந் தளர்ந்தமல முங்கட்டுங்
கோதகலுந் தக்கோலங் கொள் 1025

*இதனால் பாண்டு, சுரம், இருவித வாதங்கள் இவை நீங்கும். பலம், வீரிய விருத்தி, மலக்கட்டு இவையுண்டாகும்.*

## விழல் அரிசி

விழலரிசி யென்றால் மிகுபித்தம் ஏகும்
அழல்குடலின் வாதம் அகலுந் - துழவு
திரிதோஷம் மேகம்இவை சேராவாம் நீயுங்
குறியா யிதையறிந்து கொள் *1026*

*விழலரிசியால் பித்தம், சுரம், ஆந்திர பித்த வாதம், வாத பித்த கபதோடங்கள், சீழ்பிரமேகம் ஆகியவை அடங்கும்.*

## கார்போக அரிசி

கார்போக மாம்அரிசி கண்டால் கரப்பான்புண்
பீர்சருவ நஞ்சிவைபோம் பித்தமுண்டாம் - பார்மீதில்
வாத கபம்நமைச்சல் வன்சொறிசி ரங்கும்அறுஞ்
சீத மலர்க்குழலாய் செப்பு *1027*

*இதனால் கடுவன், இரணம், பாம்புவிடம், தாவர விடங்கள், வாத சிலேட்டும நோய்கள், தினவு, யானைச்சொறி, கிரந்தி ஆகியவை விலகும். பித்தம் அதிகரிக்கும்.*

## வாலுழுவை அரிசி

வயிற்றுக் கடுப்புவலி மாறாக் கிராணி
பயித்தியங் காசம்மல பந்தஞ் - சயிக்கவொணாச்
சூதிகா வாதமும்போந் தொல்வா லுழுவை விதைக்
காதிநவ சித்தர்மொழி யாம் *1028*

*இவ்வரிசியை உண்டால் வயிற்றுக்கடுப்பு, கிராணி, பித்தம், இருமல், மலக்கட்டு, சூதிகாவாதம் இவை நீங்கும்.*

## வெட்பாலை அரிசி

வெட்பாலை தன்அரிசி வீறுபித்த வாதமொடு
கொட்பார் கரப்பான் குடல்வாத - உப்பிசத்தைக்
காணாம லேநாளுங் கண்டிக்குங் காசினியிற்
பூணார் முலையாய் புகல் *1029*

*இது பித்தம், வாதம், கரப்பான், குடல்வாதம், உப்பிசம் இவற்றைப் போக்கும்.*

### காசினிவிதை - துளசிவிதை

காசினிவி தைக்குக் கதித்தஅருசி சர்த்தி
காசினியை விட்டேகுங் காணனமே - பேசும்
அளவில் கபம்போம் அருசி நடுங்குந்
துளவின் நறுவிதைக்குச் சொல் *1030*

*காசினிவிதையால் சுவையின்மையும் வாந்தியும் நீங்கும். சிலேட்டுமத்தையும் உணவில் விருப்பமின்மையையும் துளசிவிதை நீக்கும்.*

### புத்திரசீவிவிதை

ஆகியதோர் மூலம் அனலம்வெட்டை மேகமும்போம்
போகம் விளையும் பொருமல்அறுந் - தாகம்போம்
புத்திர சீவியெனப் போற்றும் விதையதனால்
இத்தரையுண் மாதே யியம்பு *1031*

*புத்திரசீவி விதையினால் மூலசுரம், வெள்ளை, நீர்ப்பிரமேகம், வயிற்றுப்பிசம், நாவறட்சி இவை நீங்கி, சுக்கிலம் பெருகும்.*

### சமுத்திரசோகிவிதை

ஐயம் அகற்றும் அரோசகத்தை மாற்றிவிடும்
பையுதிர வாயுவையும் பற்றறுக்கும் - மெய்யை
அமிழ்த்துகின்ற நீரை அனிலத்தைப் போக்கும்
சமுத்திரநற் சோகிவிதை தான் *1032*

*இது ஐயம், உணவில் வெறுப்பு, வாயு, அதிமூத்திரம், வாதம் இவற்றை ஒழிக்கும்.*

### கசகசா

கிருமி நமைச்சல் கிராணிஅதி சாரஞ்
சிறுநீர் அநித்திரைபோஞ் செப்பில் - உருஅழகுங்
காந்தியும்உண் டாகுங் கசகசா வின்குணத்தைத்
தேர்ந்தவர்க்கு விந்துவுமாந் தேர் *1033*

*கசகசாவால் கிருமி, நமைச்சல், கிராணி, கழிச்சல், சலதோடம், தூக்கமின்மை இவை நீங்கும். உடல் நல்ல பலமும் ஒளியும் பெறும். விந்து பெருகும்.*

## பெரிய ஏலம்

*தொண்டை வாய்கவுள் தாலுகு தங்களில்*
*தோன்றும் நோய்அதி சாரம்பன் மேகத்தால்*
*உண்டைபோல் எழுங் கட்டி கிரிச்சரம்*
*உழலைவாந்தி சிலந்தி விஷஞ் சுரம்*
*பண்டை வெக்கை விதாகநோய் காசமும்*
*பாழுஞ்சோமப் பிணிவிந்து நட்டம் உள்*
*அண்டை யீளைவன் பித்தம் இவைக்கெலாம்*
*ஆலமாங்கமழ் ஏல மருந்ததே* *1034*

*பெரிய ஏலம் சுரக்கினம், பித்தமுகபாகம், தரகுபாகம், வாய்ப்புண், தோல்வறட்சி, பேதி, அரையாப்புக்கட்டி, கிரீச்சரம், வாயுழலை, வாந்தி, சிலந்திவிடம், சுரம், அதிதாகம், இருமல், சோமநோய், உட்டிணபேதி, கபம், நெஞ்சிற் கோழை, இரத்தபித்தம், விந்து நட்டம் ஆகியவற்றை விலக்கும்.*

## சிறுஏலம்

*மலவாத மோடு வயிற்றுக் கொதிப்பு*
*சலம்ஊறல் வாய்இனிப்பு தாகஞ் - சலபேதி*
*வேர்க்குந் தலைநோய் மிகுரூட்சை ஐயமிவை*
*போக்குஞ்சிற் றேலம் புகல்* *1035*

*இதனால் மலவாதம், நுரைத்தமலம், உமிழ்நீர் சுரத்தல், வாயினிப்பு, தாகம், நீர்ப்பேதி, வியர்வை, தலைவலி, மிகுசுரம், கபம் ஆகியவை தீரும்.*

## மலைஏலம்

*நாவறட்சி தாகசுரம் நாடாத கற்றிவிடுந்*
*தீவறட்சி நீர்க்கடுப்பைத் தீர்க்குங்காண் - மூவறட்சி*
*கூடும் அரோசகத்தைக் கூடாமல் ஓட்டிவிடும்*
*நாடுமலை யேலம் நவில்* *1036*

*மலையேலம் நாவறட்சி, வறட்சுரம், பித்தசொறி, நீர்ச்சுருக்கு, திரிதோட வறட்சியில் வாந்தி, சுவையின்மை இவற்றை நீக்கும்.*

### காட்டுஏலம்

*தீராத வாந்தி சிலேஷ்மம் அதிசாரம்*
*பேரா அருசிபித்தம் பேருங்காண் - சோராமால்*
*காட்டேல வார்குழலே காரம் பரிமளஞ்சேர்*
*காட்டேலம் என்றுரைக்குங் கால்* *1037*

*உரைப்பும் மணமும் உள்ள காட்டு ஏலம் வாந்தி, கபம், பேதி, உணவில் வெறுப்பு, பித்தம் இவற்றை நீக்கும்.*

### சீரகம்

*வாந்தி யருசிகுன்மம் வாய்நோய்பி லீகம்இரைப்*
*பேந்திருமல் கல்லடைப்பி லாஞ்சனம்உட் - சேர்ந்தகம்மல்*
*ஆசனகு டாரியெனும் அந்தக் கிரகணியும்*
*போஜனகு டாரியுண்ணப் போம்* *1038*

*வாயுவொடு நாசிநோய் வன்பித்தஞ் சேராது*
*காயம் நெகிழாது கண்குளிருந் - தூயமலர்க்*
*காரளகப் பெண்மயிலே கைகண்ட தித்தனையுஞ்*
*சீரகத்தை நீதினமுந் தின்* *1039*

*சீரகம் வாந்தி, சுவையின்மை, குன்மம், வாய்நோய், பீலிகம், இருமல், கல்லடைப்பு, ஆஞ்சனம், ஆசனகுடோரி, வாதம், நாசிநோய், பித்தம் இவற்றை நீக்கி உடலிற்கு உறுதியும் கண்ணிற்குக் குளிர்ச்சியையும் உண்டாக்கும்.*

### பெருஞ்சீரகம்

*யோனிநோய் குன்மம் உரூட்சைமந் தம்பொருமல்*
*பேனம்உறு காசம்பிலீகம் இரைப் - பீனஉரை*
*சேர்க்கின்ற வாதமும்போஞ் சீர்பெரிய சீரகத்தால்*
*மூக்குநோ யில்லை மொழி* *1040*

*இதனையுண்டால் யோனிநோய், வயிற்றுவலி, சுரம், செரியாமை, வயிற்றுப்பிசம், கபம், பீலிகம், சுவாசம், வாதம், தும்மல், நாசிநோய் இவை நீங்கும்.*

## கருஞ்சீரகம்

கருஞ்சீ ரகந்தான் கரப்பனொடு புண்ணும்
வருஞ்சிராய்ப் பீநசமும் மாற்றும் - அருந்தினால்
காய்ச்சல் தலைவலியுங் கண்வலியும் போம்உலகில்
வாய்ச்ச மருந்தெனவே வை *1041*

*இச்சீரகம் மண்டைக்கரப்பான், இரணம், பீநசம், உட்சூடு, காய்ச்சல், தலைநோய், கண்ணோய் இவற்றை நீக்கும்.*

## காட்டுச் சீரகம்

கைகறுப்பு மாறுங் கடியமே கம்போகும்
மெய்குளிரும் பித்தம் விளையுமோ - வெய்யகரிக்
கோட்டுப் பணைமுலையாய் குன்மவா தந்தொலையுங்
காட்டுநற் சீரகத்தைக் காண் *1042*

*காட்டுச்சீரகம் உள்ளங்கைக் கரும்புள்ளி, பிரமேகம், பித்தம், வாத குன்மம் இவற்றைப் போக்கி குளிர்ச்சியையுண்டாக்கும்.*

## பிளப்புச்சீரகம்

உடலுக் கழகாம் உறைபித்தம் ஏகும்
அடலுறு வாதம் அதமாம் - கடிசேர்
தளவுநகைக் கோட்டுமுலைத் தையலே நாளும்
பிளவுநறுஞ் சீரகத்தைப் பேண் *1043*

*இச்சீரகத்தால் நீங்காப்பித்தம், வாதம் இவை நீங்கும். உடல் நல்ல அழகு பெறும்.*

## கொத்துமல்லி

கொத்துமல்லி வெப்பங் குளிர்காய்ச்சல் பித்தம்மந்தஞ்
சர்த்திவிக்கல் தாகமொடு தாதுநஷ்டம் - கத்தியெழும்
வாத விகாரம்அடர் வன்கர்த் தபிவிரணம்
பூதலத்தில் லாதகற்றும் போற்று *1044*

*கொத்துமல்லியானது உட்சூடு, குளிர்சுரம், பித்தம், பித்தவேகம், செரியாமை, வாந்தி, விக்கல், நாவறட்சி, சுக்கிலம், வாதவிகாரம், பெரும் ஏப்பம், கர்த்த விரணம் ஆகியவற்றைப்போக்கும்.*

## கடுகு

இடிகாசம் நாசிச்சூர் ஈளைகபம் பித்தங்
கடிவாத சீதங் கடுப்போ - டுடலிற்
படுகோட்டு நோயென்னும் பங்கிவைக ளைப்புன்
கடுகோட்டும் ஏன்மருந்து காண் 1045

மந்தமயக் கம்வாதம் வாய்நீர்ச் சுழற்றல்அறும்
உந்து சுகப்பிரச வங்கள்உண்டாம் - இந்துநுதன்
மானேகி ராணிகுன்மம் மாறும்முத் தோஷமும்போம்
தானே கடுகிற்குத் தான் 1046

*கடுகானது தலைப்பிடிப்பு, இருமல், பித்தம், வாதம், சீதம், காணா விடக்கடி, குடைச்சல், முடம், அக்கினிமந்தம், வாததோடம், உமிழ்நீர், கிரகணி, வயிற்றுவலி, திரிதோடம் இவற்றைப்போக்கி சுகப்பிரசவத்தைக் கொடுக்கும்.*

## வெண்கடுகு

பாலகிர கம்பூத பைசாசம் ஓட்டிவிடும்
ஆல விஷங்கடிகள் ஆற்றுங்காண் - கோலமிகு
வள்ளைச் செவிமாதே மாபங்க நோய்விலக்கும்
வெள்ளைக் கடுகின் விதி 1047

*கந்தகிரகம் முதலான பன்னிரு வாலகிரகங்கள், தேவபூதம் முதலிய 18 வகை பூதங்கள், பாம்பின்விடங்கள், வண்டுகடி, பக்கவாதம் போன்ற பலவற்றையும் வெண்கடுகு நீக்கும்.*

## சிறுகடுகு

தோலிரத நெய்யூன்மே தோதாது வின்வளிக்கு
மேலிரணப் பூச்சு விடங்கபநோய் - காலிங்
கெறியகடு விருமலும்போ மேந்தொழிலார் மாதே
சிறிய கடுகின் குணத்தைத் தேர்.

*இச்சிறுகடுகு விடம், சிலேட்டுமநோய், வயிற்றுவிம்மல், இவற்றை நீக்கி, சருமம், இரசம், இரத்தம், மாமிசம், மேதை ஆகிய தாதுக்களில் வாயுவால் பிறக்கின்ற பிணிக்கு இரணம் உண்டாகின்ற பூசுகிற லேபன சிகிச்சைகளும் ஆகும்.*

## நாய்க்கடுகு

*சூதக வாயுவொடு சோணிதத்தின் வாதமும்போம்*
*வாதவலி குன்மம் மடியுங்காண் - மாதுநல்லாய்*
*பேய்க்குப் புகைபோடப் பேசா தொழிந்துவிடும்*
*நாய்க்கடுகை நீவிரும்பி னால்* *1048*

*இது சூதகவாயு, சோணிதம், வாதம், வாதவலி, குன்மம் இவற்றை நீக்கும்.*

## வெந்தயம்

*பிள்ளை கணக்காய்ச்சல் பேதிசீ தக்கழிச்சல்*
*தொல்லைசெய்யும் மேகம் தொலையுங்காண் - உள்ளபடி*
*வெச்சென்ற மேனி மிகவுங் குளர்ச்சியதாம்*
*அச்சம்இலை வெந்தயத்திற் காய்* *1049*

*பித்தஉதி ரம்போகும் பேராக் கணங்களும்போம்*
*அஸ்திசுரந் தாகம் அகலுங்காண் - தத்தும்அதி*
*வேக இருமலொடு வீறு கயம்தணியும்*
*போகமுறும் வெந்தயத்தைப் போற்று* *1050*

*வெந்தயமானது கணம், அத்திசுரம், பிரமேகம், சயம், கழிச்சல், சீதக்கழிச்சல், பேதி, இரத்தப்பித்தம், காசம், உட்சூடு முதலியவற்றை நீக்கி சுக்கிலத்தைப் பெருக்கும். உடலைக் குளிரவைக்கும்.*

## ஓமம்

*சீதசுரங் காசஞ் செரியாமந் தம்பொருமல்*
*பேதியிரைச் சல்கடுப்பு பேர்ஆமம் - ஓதிருமல்*
*பல்லொடுபல் மூலம்பகம் இவைநோ யென்செயுமோர்*
*சொல்லொடுபோம் ஓமமெனச் சொல்* *1051*

*இது குளிர்சுரம், இருமல், செரியாமை, வயிற்றுப்பிசம், பேதி, இரைச்சல், கடுப்பு, சீதபேதி, சுவாசகாசம், பல்நோய், மூலநோய், குய்யநோய் ஆகியவற்றை விலக்கும்.*

## குரோசாணிஓமம்

வெகுமூத் திரம்வாதம் வீரியநஷ் டம்புண்
உகுபேதி யுட்கடுப்பி னோடே - மிகுகரப்பான்
தீராக் கபம்இவைபோம் செய்யகுரோ சாணியென்றால்
வாரா மயக்கஉறு மால் 1052

*இது அதிமூத்திரம், வாதம், விந்து விரையம், வாதக்கழிச்சல், உடற் கடுப்பு, கரப்பான், கபம் இவற்றைப் போக்கும். மயக்கத்தை உண்டாக்கும்.*

## சதகுப்பை

வாதமொடு சூதிகா வாதம் சிரசுநோய்
மோதுசெவி நோய்கபநோய் மூடுசுரம் - ஓதுகின்ற
மூலக் கடுப்பு முதிர்பீந சம்போக்கும்
ஞாலச் சதகுப்பை நாடு 1053

*இது வாதம் சூசிகாவதம், தலைவலி, செவிநோய், கபம், ஆசனக் கடுப்பு, சலபீநசம் இவற்றை நீக்கும்.*

## பெருங்காயம்

தந்த வேதந்த மூலத்தெழும்பிணி
சருவகாளம் விருச்சிகங்கீடம் மா
மந்தம்வாதம் உதாவர்த்தம் அல்குல்நோய்
மார்பணங் கட்டகுன்மம் மகோதரம்
உந்துகெர்ப்பத்தின் வித்திரஞ் சூலைச்சூர்
உதிரப்பூச்சி சிலேஷ்மத் துறும்வலி
வந்தமெய்க்கடுப் போடிவை முற்றுமே
மாயுநாறுநற் காயங் கிடைக்கினே 1054

*இதனால் பல்நோய், பல்மூலம், பாம்பின் விடங்கள், தேள்-விடம், கிருமி, செரியாமை, வாதம், யோனிநோய், வாயு, எண்வகை குன்மங்கள், கர்ப்ப வித்திரதி, சூலை, இரத்தக்கிருமி, கபநோய், குடைச்சல் இவை தீரும்.*

## வெள்ளைப்பூண்டு

சன்னியொடு வாதந் தலைநோவு தாளின்வலி
மன்னிவரு நீர்க்கோவை வன்சீதம் - அன்னமே
உள்ளுள்ளிக் காண்பாய் உளைமூல ரோகமும்போம்
வெள்ளுள்ளி தன்னால் வெருண்டு *1055*

*இதனால் சன்னிவாதம், தலைநோய், கால்வலி, நீர்க்கோவை, சீதம், மூலம் இவை நீங்கும்.*

## அபினி

நல்லஅபி னிக்குணத்தை நாடறியும் நாம்புகல்வ
தல்லகுன்மம் வாதம் அருஞ்செவநோய் - பல்லின்வலி
பேதிமந்தம் அஸ்திநோய் பீநசம்போம் வன்மைஉண்டாம்
சாதியுதி ரச்சுத்தி தான் *1056*

*அபினியால், வயிற்றுவலி, காதுவலி, பல்நோய், பேதி, அசீரணம், எலும்பில் குடைச்சல் இவை நீங்கும். இரத்தம் சுத்தியடையும்.*

## கஞ்சா

மூலக் கிராணிஅறும் முன்புள்ள பேதிகட்டும்
சாலமயக் கும்பசியுஞ் சாருங்காண் - தூலஞ்செய்
வாதமொடு ஐயமும்போம் வன்கரப்ப னுந்தொலையும்
கோதறுகஞ் சாச்சடைக் கு *1057*

*இது மூலவாய்வு, கிரகணி, கழிச்சல், உடல்பருமன், கபம், கரப்பான் இவற்றை நீக்கி, மயக்கம், அதிகபசி இவற்றை உண்டாக்கும்.*

## கரியபோளம்

மார்புவலி வீக்கம் வயிற்றுவலி பங்கநோய்
வார்மேகக் கட்டியொடு மாவாதம் - பாருலகில்
நீளங்கை காலில் நிலைசூலை யுங்கறுத்த
போளந் தனைக்காணிற் போம் *1058*

*இதனால் மார்புவலி, வீக்கம், வயிற்றுவலி, பக்கநோய், மேகக் கட்டி, வாதம், கைகால் குத்தல் இவை நீங்கும்.*

### இரத்தபோளம்

விழுந்திறந் தங்கிமிக வீங்கு முறுவிக்க
மெழுந்து நிற்கவொட்டா விசுவோ - டழுந்தி
யுரைத்த தமரும்வலி யோடு மெதிர்நிற்கா
திரத்த போளத்தை யெடு

*இரத்தபோளத்தினால் விழுந்து இரத்தங்கட்டி அதன்மேல் அதிகரித்த வலியோடு வீங்கும் வீக்கம், எழுந்து நிமிர்ந்து நிற்கமுடியாத பக்கநோய், மார்புநோய் இவை நீங்கும்.*

### வாலேந்திரபோளம்

சூலைகய ரோகம் சொறிகரப்பான் குன்மம்இவை
ஆலைவா யின்கோல்போல் ஆகுங்காண் - நீலசக்கர
வாளமெனத் தோற்றுமுலை மாதரசே வாலேந்திர
போளந் தனையெடுக்கும் போது *1059*

*இதனால் சூலை, கீல்பிடிப்பு, சயம், நமைச்சல், கரப்பான், வயிற்றுநோய் ஆகியவை விலகும்.*

### வெளிச்சிப்பிசின்

முகசந்நி பாதமொடு முட்டிவரு நீரும்
அகவாத சன்னிகளும் அண்டா – மகிழுங்
களிற்றை நிகருமுலைக் காரிகையே நாளும்
வெளிச்சம் பிசினை விளம்பு *1060*

*இது முகச்சன்னி, அதிநீர், கண், பிரலாபம், அந்தகம், ஆகிய சன்னிநோய்களைப் போக்கும்.*

### நாவி

வாதவலி மந்தம்அறல் மாறாக் கபப்பிணிகள்
ஓதுகுஷ்ட குன்மந்தேள் ஓடுங்காண் - காதலர்தம்
புத்தியோ டாருயிரும் பூவும் வனைகுழலே
சுத்திசெய்த நாவியின்பேர் சொல் *1061*

*இது வாதக்கடுப்பு, செரியாமை, சலதோடம், குட்டம், வயிற்றுவலி, தேள்விடம் இவற்றை நீக்கும்.*

## வெள்ளைநாவி

குஷ்டங் கடிசூலை கூடுபுரி வன்கிருமி
துஷ்டகுன்ம வாதந் தொலையுங்காண் - வட்டமுலைப்
பெண்ணே சுரந்தணியும் பேருலகத் தார்பகைக்கும்
வெண்ணாவி தன்னை விரும்பு *1062*

*வெள்ளைநாவிக்குக் குட்டம், காணாக்கடி, குத்தல், காய்ச்சல், மார்பை வீங்கச்செய்யும் கிருமிநோய், வாதகுன்மம், ரூட்சை ஆகியவை ஒழியும்.*

## கருநாவி

எண்ணாச் சுரம்போம் இறங்கும்பி லீகம்அறும்
புண்ஆறும் ஊரும் புழுக்கள்விழும் - தண்ணாரும்
வல்லை கவிகையென வையகத்தோர் சொல்லிடுநோய்
இல்லையொரு கார்நாவிக் கே *1063*

*இதனால் நாவொட்டிக் காய்ச்சல், நழுகிய பீலிகம், விரணம், கிருமிகள், வல்லைக்கட்டி, மகோதரம், வாதசுரம் இவை தீரும்.*

## பச்சைநாவி

கடியதொரு குஷ்டங் கனத்தவிஷ சன்னி
கொடியதொரு குன்மங் குலையும் - படியில்
தளிர்அஸ்தி வெப்புடனே தாகசுரம் தீரும்
வளர்பச்சை நாவிதனை வாழ்த்து *1064*

*இதனால் குட்டம் எனும் குறைநோய், விஷசந்நிபாதம், வயிற்று நோய், அத்திச்சூடு, தாகசுரம் ஆகியவை கெடும்.*

## சூத்திர நாவி

காய்ச்சல் தலைநோய் கனத்த சந்நி பாதம்ளரி
பூச்சி விஷக்கடிஉட் புண்குஷ்டங் - கூச்சல்தரு
காத்திரத்தே ளுங்குடிப்போம் காரளகப் பைங்கொடியே
சூத்திரநா விக்குத் துவண்டு *1065*

*இது சுரம், தலைநோய், சன்னி, எரிக்கிருமி, பாம்பின் விடம், உள்புண், குறைநோய், தேள்விடம் இவற்றை நீக்கும்.*

## நிலஆவாரை

நிலாவாரை யின்குணந்தான் நீகேள் மயிலே
பலமூல வாயுவெப்பு பாவைச் - சிலகிரந்தி
பொல்லாத குன்மம் பொருமுமலக் கட்டுமுதல்
எல்லாம் அகற்றுமென எண் *1066*

*இந்நிலாவாரை பற்பல மூலவாயுக்கள், சுரம், சீழ்சிரங்குகள், வயிற்று வலி, வயிற்றுப்பிசம், மலக்கட்டு இவற்றைப் போக்கும்.*

## சிவதைவேர்

உள்ள மலமும் உதாவர்த்த மும்வயிற்றைக்
கொள்ளுபித்த வாதமும்போங் கூறுங்கால் - பிள்ளைகட்குச்
செப்பு கிரகமும்போந் தேனே யுலகத்துள்
தப்பில் சிவதைக்குத் தான் *1067*

*இது பழைய மலம், உதாவர்த்தம், பித்தம், வாதம், கபம், பாலகிரகதோடங்கள் இவற்றைப் போக்கும்.*

## வெண்சிவதைவேர்

கைப்புந் துவர்ப்புங் கலந்திருக்கும் பித்தத்தை
இப்புவியில் நாடொட்டா திவ்வளவோ - செப்புதரத்
தொள்ளைக் கிருமி தொலைக்குமிகு பேதிதரும்
வெள்ளைச் சிவதைதனை விள் *1068*

*இது பித்தத்தையும் மலக்கிருமிகளையும் போக்கி, பேதியை உண்டாக்கும்.*

## கருஞ்சிவதை

காரமுடன் கைப்பும்உண்டாங் காணா எலிவிஷத்தைப்
பாரஅனற் குன்மத்தைப் பற்றறுக்கும் - பாரில்
தெரிஞ்சுரைத்தோம் பேதிதருந் தேமொழியே காட்டுக்
கருஞ்சிவதைக் கந்தம்அது காண் *1069*

*கருஞ்சிவதையின் வேரானது எலிவிடத்தையும் பித்த குன்மத்தையும் நீக்கி பேதியை உண்டாக்கும்.*

## நேர்வாளக்கொட்டை

ஓதில் உதரத்துறுமலம் பன்நோய்விலகும்
பேதி மருந்தில் பெரிதாகும் - வாதம்அறுங்
கூர்வாளை யொத்தவிழிக் கொம்பனையே பண்டிதர்சொல்
நேர்வாளக் கொட்டைதனை நீ *1070*

உரைத்திடு வாதநோய்க்கும் உரைகெடு விஷசன்னிக்கும்
நிரைத்திடு சூலைகுன்மம் நீண்டிடு மலக்கட்டிற்குங்
கரைத்திடு வாளந்தன்னைக் கட்டிய மேகத்திற்கும்
அரைத்திடு பித்தத்தோர்க்கும் அகற்றிடு அதனைத்தானே *1071*

*தங்கியமலமும், அதனால் ஏற்படும் பிணிகளும் வாதநோயும் நேர்வாளத்தால் நீங்கும். இது பேதிமருந்திற்காகும். இவ்வாளப்பருப்பை வாதம், விடசன்னி, உடல் குடைச்சல், வயிற்றுநோய், மலக்கட்டு ஆகிய நோய்களுக்குக் கொடுக்கலாம். அதிமேகநீர், பித்தநோய் உடையோர்க்குத் தரலாகாது.*

## நீரடிமுத்து

நீரடி முத்திற்கு நீங்காக் கிரந்திகுஷ்டம்
போரிடு வாதமுமே போகுங்காண் - காரடுக்கும்
மென்குழலாய் பித்தம் மிகும்அனலம் உண்டாகும்
முன்கிளர்ந் மைச்சல்அறு முன் *1072*

*சிரங்கு, பெருநோய், வாதம், தினவு, இவற்றை நீக்கி பித்தம், சூடு இவற்றை நீரடிமுத்து உண்டாக்கும்.*

## சேங்கொட்டை

குஷ்டங் கயரோகங் கொல்லும் விஷபாகந்
துட்டந் தருகிருமி சூலையும்போம் - மட்டலருங்
கூந்தன்மயி லேகிரந்திக் கூட்டம்போஞ் செங்கையில்
ஏந்துசேங் கொட்டைதனை யே *1073*

சேங்கொட்டை மெய்த்திமிரைத் தீராக் கடிவிஷத்தைப்
பாங்கொட்டு மூலத்தைப் பற்றறுக்கும் - ஆங்கெட்டிக்
கொல்லும்வா தத்தினொடு குன்மத்தை யும்மதனை
வெல்லும் அயிற்கண்ணாய் விள் *1074*

*இது புழு, குட்டம், சயம், கீல்பிடிப்பு, சிரங்கு, திமிர் வாதம், வாதகுன்மம், உள்மூலம், இரணக்கருங்குட்டம், காணாக்கடி, விடபாகம் இவற்றைவிலக்கி வீரிய விருத்தியை உண்டாக்கும்.*

### தேங்காய்ப் பிண்ணாக்கு

சொறிசிரங்கு புண்ணுமாந் தோலாக் கரப்பான்
மறுவாக்கும் மேனியெலாம் மாதே - சிறுக
வயிற்றிற் புழுவினங்கள் மாறா துதிக்குஞ்
சுயத்தேங்காய்ப் பிண்ணாக்காற் சொல் *1075*

*இதனையுண்டால் நமைச்சல், சிரங்கு, இரணம், கரப்பான், மலக்கிருமிகள் இவை யுண்டாகும்.*

### எள்ளுப்பிண்ணாக்கு

உள்ளிற்புண் ணுங்கிரந்தி யூரலுமி கக்கிளைத்தே
எள்ளின் பிண்ணாக்குக் கெழும்புங்காண் - விள்ளுங்
கரப்பான் விரணங் கதித்தநீர் மேகம்
உரப்பாகும் நாளும் உரை *1076*

*இது தாதுவால் வந்தவிரணம், சிரங்கு, நமைச்சல், கரப்பான், புண், சலமேகம் இவற்றை விளைவிக்கும்.*

### வேப்பம்பிண்ணாக்கு

சன்னியுடன் வாதந் தலைநோய்போம் வாதம்அறும்
முன்னிநின்ற தோஷம் முறியுங்காண் - பன்னுதமிழ்
வல்லவரே வேம்பின்வழி வந்தபிண்ணாக் கென்றொருக்காற்
சொல்லஐயம் போமே தொலைந்து *1077*

*இதனால் சந்நிபாதம், வாதம் தலைநோய், வாதநோய், திரிதோடம், நீர்ப்பிடிப்பு ஆகியவை நீங்கும்.*

## இலுப்பைப்பிண்ணாக்கு

பொத்திக் கடுவனொடு புண்ணுங் கரப்பனும்போம்
வித்ததைப்பு தோஷம்இவை வீறாவாம் - மெத்தெனவே
யெண்ணெய்க் கசிவுகளும் ஏகும் இலுப்பைவிதைப்
பிண்ணாக்குக் கென்றறியப் பேசு *1078*

*கடுவன், இரணம், கரப்பன், விதைவீக்கம், திரிதோடம், எண்ணெய்ச்சிக்கு இவை இலுப்பைப்பிண்ணாக்கை உண்டால் நீங்கும்.*

## சாம்பிராணி

வாதசி தங்கண்ணோய் மாறாத் தலைவலியும்
ஓதம்உறு பீநசமும் ஓட்டுங்காண் - பூதலத்தில்
வேம்பிதுதான் என்ன மிகுகசப்பை வாய்க்களிக்கும்
சாம்பிராணி யென்னுஞ் சரக்கு *1079*

*கசப்புடைய சாம்பிராணி வாதகபம், கண்ணோய், நீங்காத் தலைவலி, நீர்ப்பீநசம் இவற்றை நீக்கும்.*

## கற்பூரம்

கிருமிசல தோஷங் கிளைவலிப்பு சந்நி
பொருமுமந்தம் அங்கிபட்ட புண்ணோ - டெரிசுரங்கள்
வாந்திபித்தஞ் சீதமுறு வாதஞ் செவிமுகநோய்
சாந்திகருப்பூரம் ஒன்றாற் சாற்று *1080*

*இதனால் கிருமி, நீரேற்றம், இசிவு, சன்னி, தீப்புண், செரியாமை, சுரம், வாந்தி, பித்தம், சிலேட்டும வாதம், கர்ணசூலை ஆகியவை நீங்கும்.*

## பச்சைக்கற்பூரம்

அஷ்டகுன்மஞ் சூலை யணுகாது வாதமொடு
துஷ்டமே கப்பிணியுந் தோற்றாதே - மட்டலருங்
கூந்தன்முடி மாதே கொடிய கூபம்போகுஞ்
சார்ந்த பச்சைக் கற்பூரத் தால் *1081*

பச்சைக்கற்பூரம் பகருவதில் பேதம்உண்டிங்
கிச்சையொடப் பேதம் இசைக்கருங்கால் - இச்சகத்துள்
ஈச னொடு வீமன் ஏற்றபூ தாச்சிறையன்
காசறுமூன் றாகுமென்பர் காண் *1082*

*எண்வகைக் குன்மம், கீல்களில் குத்தல், வாதநோய், சீழ் பிரமேகம், சிலேட்டுமம் இவை பச்சைக்கற்பூரத்தால் நீங்கும். ஈசன், பீமன், பூதாச்சிறையன் என பச்சைக்கற்பூரம் மூவகைப்படும்.*

### ஈசன்என்னும் பச்சைக்கற்பூரம்

ஈசன்என்னும் பூரம்வெண்மை என்பர்அது காரமுமாம்
பேசரிய சீதம்உஷ்ணம் பித்தம்மயல் - வீசுகின்ற
பீநசம்உள் தாகம்இவை போர்த்துவிடுங் காந்தியுண்
டான ததுவசியம் ஆம் *1083*

*ஈசன் எனப்படும் பச்சைக்கற்பூரம் வெண்மையானது. காரமும் பளபளப்பு முள்ளது. இது வசியம், சிலேட்டுமம், சுரம், பித்தம், மயக்கம், நாசிநோய். உள்தாகம் ஆகியவற்றைப்போக்கும்.*

### வீமன்என்னும் பச்சைக்கற்பூரம்

வீமன் என்னுங் கற்பூரம்மேக அழுக்குவெண்மை
சேமம் உறுங்குளிர்ச்சி தின்றக்கால் - நாமருவு
நோயகலுந் தாகம்அறும் நுண்பே தியும்ஆகுந்
தூய மதிமுகத்தாய் சொல் *1084*

*அழுக்கு வெண்மைகலந்த மேகநிறம் உள்ள வீமன், கந்ததாளி நோய், தாகநோய் இவற்றை நீக்கி உடல் நலன், குளிர்ச்சி, சிறுபேதி இவற்றையுண்டாக்கும்.*

## பூதாச்சிறையன் என்னும் பச்சைக்கற்பூரம்

பூதாச் சிறையன்எனும் பூரமஞ்சள் கைப்பாகுங்
கோதையர்க்காங் காசங் கொடுமேகம் - வாதாதி
என்னுந் தனித்தோஷம் ஏறும்முத்தோ ஷஞ்சொறியுங்
குன்ன விரணமும்போக் கும் *1085*

*மஞ்சள் நிறமும், கசப்புச் சுவையுமுள்ள இக்கற்பூரம் காசம், மேகம், வாத, பித்த, கபதோடங்கள், நமை, புண் இவற்றை நீக்கும். பெண்களுக் கான மருந்திற்குப் பயன்படும்.*

## புழுகுச்சட்டம்

ஆசுறாக் காந்தியுண்டாம் அசீரண வாதம்போகுந்
தேசுதான் வளரும்பித்த சிலேஷ்மவல் விஷமும்ஏகும்
மாசறு ஆயுள்உண்டாம் வனசமா தருளுஞ்சேரும்
வாசமார் புழுகுச்சட்ட மகிமையை யுரைக்குங்காலே *1086*

*புழுகுச்சட்டத்தால் மந்தவாதம், பித்தகபம், விஷம் இவை நீங்கி உடல் நல்ல ஒளியுடன் திகழும், மகிழ்ச்சியுண்டாகும்.*

## கத்தூரி

சொல்லரும் வசியங்காந்தி சுகமுதல் அணுகும்பின்னும்
மெல்லியார் தமக்குநாத விர்த்தியாந் தலைநோயேகும்
பல்லுறு கபமுந்தீரும் பகரொணாப் பலமும்உண்டாம்
மல்லடர் சந்நிரூட்சை மாறுங்கத் தூரிக்கென்னே *1087*

*இது தலைநோய், கபம், சன்னி சுரங்கள் இவற்றை நீக்கி வசியம், உடல் நலம், பெண்களுக்கு நாதவிருத்தி, வன்மை இவற்றை உண்டாக்கும்.*

## கத்தூரிபேதம்

கத்தூரியைந்தாங் கரிகைதிலகை குளுந்தை
கைத்தபிண்ட கைநாய கைமுறையே - மொய்த்தசிவப்
பெள்ளுகொள்ளு கட்டி சிறிதுபரு மங்களென
விள்ளும்இவைக் கேகும் வினை *1088*

*கத்தூரி, கரிகை, திலகை, குளுந்தை, பிண்டகை, நாயகை என ஐந்து வகைப்படும். கரிகை சிவப்பு நிறமும் திலகை எள்ளின் உருவமும் குளுந்தை கொள்ளின் வடிவமும், பிண்டகை கட்டி கட்டியாகவும் நாயகை சிறிய பெரிய உருண்டைகளாகவும் இருக்கும். இவை அசீரணப் பிரசவ மலினம் முதலிய நோய்களை விளக்கும்.*

## சவ்வாது

சுரமுந் தலைவலியுந் துண்டத்த டைப்பும்
உரமுந்து நோயோ டுடற்குள் - பரவிமிகக்
குத்துகின்ற வாயுவும்போங் கோதில்சவ் வாதினுக்கு
மெத்த வசியமுமாம் விள் *1089*

*சுரம், தலைவலி, வாயு, வாதகபரூட்சை இவற்றை சவ்வாது நீக்கும்.*

## குங்குமப்பூ

விந்துநஷ்டந் தாகம்அண்டம் மேகசலஞ் சூலைகபம்
உந்துசுரம் பித்தங்கால் உச்சிவலி - முந்துகண்ணில்
தங்குமப்பூ வோடுறுநோய் சர்த்தியிவை நீங்கவென்றாற்
குங்குமப்பூ ஓர்இதழைக் கொள் *1090*

குங்குமப்பூ வைக்கண்டால் கூறுகொண்ட பீநசநோய்
தங்குசெவித் தோஷஞ் சலதோஷம் - பொங்கு
மதுரதோ ஷந்தொலையும் மாதர் கருப்ப
உதிரதோ ஷங்கள்அறும் ஓது *1091*

*குங்குமப்பூவால் விந்து நட்டம், நாவறட்சி, குடல்விருத்தி, மேகநீர், கீல்பிடிப்பு, கபம், அதிரூட்சை, பித்தம், விகுணவாதம், மண்டைவலி, கண்ணில் பூ விழுதல், கண்நோய், வாந்தி, நீர்ப்பீநசம், மந்தம், வாயினிப்பு, பெண்களுக்கு வரும் தோஷமாகிய பிரசவமலினம் இவை தீரும்.*

### கோரோசனை

நீரிழிவு, மேகசுரம் நீங்காக் கனல்வேகம்
கூரியஉன் மாதம் குழந்தைகள்நோய் - பாரகபம்
வீறும் மசூரியும்போம் வேதந் தனில் இரண்டாய்க்
கூறுங்கோ ரோசனைகட்கு 1092

*இதனால் நீரிழிவு, மேகசுரம், உடல்அனல், உள்மாந்தம், கணமாந்தம், சிலேட்டுமம், மசூரிப்புண்கள் இவை நீங்கும். இது மான் வயிற்றிலும், பசுவின்வயிற்றிலும் பிறப்பதாம்.*

### சந்தனம்

கோதில்சந்தஞ் சீதோஷணங் கொண்டிருக்கும் அச்சந்தம்
வாதபித்தம் ஐயம் மனப்பிரமை - ஓதுசுரம்
மேகந் தனித்தாகம் வெப்புசொறி யும்போக்கும்
ஆகந் தனக்குறுதி யாம் 1093

*இது திரிதோடம், சித்தப்பிரமை, சுரம், பிரமேகம், நாவறட்சி, உட்சூடு, நமைச்சல், இவற்றைப் போக்கும். உடற்கு நல்ல பலம் தரும்.*

### சந்தன பேதம்

மும்மைஎனச் சொல்வார் முருகுசந்தப் பேதம்அவை
செம்மைமஞ்சள் வெண்மைஎனத் தேர்முறையே - நன்மை
உத்தமமும் மத்திபமும் ஓதம மும்ஆகும்
தத்தை மொழியணங்கே சாற்று 1094

*சிவப்புச் சந்தனம் மருந்துக்குதவும். மஞ்சள் சந்தனம் மத்திமம், வெள்ளைச் சந்தனம் அதமம் என்பர்.*

### பச்சிலை - கிச்சலிக்கிழங்கு

பச்சிலைக்குக் கந்தம் பரிமளிக்கும் அவ்விலையோ
வெச்சைக் கிரந்திதனை மெய்ப்புழுவைச் - சொச்சமற
ஓட்டும்நற் கிச்சலியின் ஒண்கிழங்குக் குக்கபமும்
பூட்டுவிஷ மும்புண்ணும் போம் 1095

*பச்சிலைக்கிழங்கு பித்த கபவிரணம், இரத்தகபம், மலக்கிருமி இவற்றைப் போக்கும். கிச்சலிக்கிழங்கிற்கு சிலேட்டுமநோய், கீல்பிடிப்பு இரணம் இவை நீங்கும்.*

## உப்பு

அளத்தில்உறை நல்உப் பனல்வாதம் மாற்றுங்
களத்துநோய் தன்னைக் களையுங் - கிளைத்தகப
ஆசுடைய வல்லைநோய் அஷ்டகுன்ம மும்போக்குங்
காசினியுண் மாதே கழறு *1096*

*நல்ல உப்பு உட்டிணவாதம், களத்து நோய், வல்லைக்கட்டி எண்வகைக் குன்மம் ஆகியவற்றைப் போக்கும்.*

## கறிஉப்பு

மந்தம் பொருமல்அறும் வாயுவும்போம் தீபனம்ஆம்
தொந்தித்த ஐயந் தொடருமோ - சந்ததமும்
அக்கினியின் புஷ்டி அடருங் கறியுப்பால்
சிக்குகின்ற நீர்இறங்குஞ் செப்பு *1097*

*இது வயிற்றுப்பிசம், வாதம், கபம், நீரடைப்பு, இவற்றை நீக்கி பசியையும், காமாக்கினியையும் விருத்தியாக்கும்.*

## கல்லுப்பு

ஐயம்அறுஞ் சூலை அரோசிபித்தம் சர்த்தியொடு
வெய்யபிணி அஷ்டகுன்மம் விட்டேகும் - பெய்வளையே
வாதம்அதி தாகம் மலக்கட்டும் போம்உலகில்
கோதறுகல் உப்பைக் கொடு *1098*

*கல்லுப்பு கபம், குத்தல், சுவையின்மை, பித்தம், வாந்தி, உட்டிண வாயு, எண்வகைக்குன்மம், வாதநோய், நாவறட்சி, மலக்கட்டு இவற்றை நீக்கும்.*

## வெடியுப்பு (கம்பியுப்பு)

மல்லலாரும் அஷ்டகுன்மம் மாதர்உத ரக்கட்டி
கல்லாம் அதைப்புநீர்க் கட்டருகல் - எல்லாம்
கம்பிகம்பி யென்றும் கருவுண்டாம் அங்கிநின்ற
கம்பிகம்பி யென்றுரைக்குங் கால் *1099*

சூதகவாயு வொடு சோணிதத்தின் வாதமும்போம்
வாதவலி குன்மம்இவை மாறுங்காண் - மீதாங்
கொடிய வயிறிழியுங் கோழைகபம் ஏகும்
வெடியுப்புத் தன்னை விளம்பு 1100

*கம்பியுப்பு என்றழைக்கப்படும் வெடியுப்பு, எண்வகைக்குன்மம், மாதரின் இரத்தக்கட்டி, கல்லடைப்பு, நீர்க்கட்டு, சூதகவாயு, சோணிதத்தின் வாதம், வாதவலி, வயிற்றுவலி, கோழை, கபம் இவற்றைப் போக்கி வயிற்றைக் கழியச் செய்யும்.*

## அட்டுப்பு

பித்தங் குடிவிலகும் பேராத சூலைஅறுஞ்
சர்த்தி அருசியிவை சாராவாம் - ஒத்தகச்சிற்
கட்டுப் படாக்கொங்கைக் காரிகையே சங்கையற
அட்டுப்பின் பேரை யறை 1101

*அட்டுப்பு, பித்தம், சூலை, வாந்தி, சுவையின்மை இவற்றை நீக்கும்.*

## வளையலுப்பு

துளையார் குடல்வாதந் தொந்தவா தத்தோ
டிளையாச் சுவாசம்அறும் இன்னும் - வளையல்உப்பால்
குன்மவலி சூலைவெப்பங் கூறாப்பி லீகம்இவை
சென்மம்விடுத் தோடுமெனத் தேர் 1102

*குடல்வாதம், வாதபித்தம், இரைப்பு, வயிற்றுநோய், கீல்பிடிப்பு, சுரம், பிலீகம் இவற்றை வளையலுப்பு போக்கும்.*

## இந்துப்பு

அஷ்டகுன்மம் மந்தம் அசுர்க்கரச்சூர் சீதபித்தந்
துட்டஐயம் நாடிப்புண் தோஷங்கள் - கெட்டமலக்
கட்டுவிட விந்துப்பைக் காமியநோய் வன்கரப்பான்
விட்டுவிட விந்துப்பை விள் 1103

சென்னிகண் நாபல்தூர் செவிகவுள்கண் டம்பகநோய்
சந்நியா சங்காசந் தாகம்இரைப் - புன்னிரத்த
மூலஞ் சிலந்திநளி மூடிகநஞ் சூதைவலி
சூலஞ் சிதையும் இந்தாற் சொல் **1104**

*இந்துப்பால் எண்வகை குன்மம், மந்தம், அசிர்ச்சரபித்தம், கபம், நரம்புச் சிலந்தி, திரிதோடம், மலபந்தம், விடம், சுக்கிலம், சிலேட்டுமம், கடுவன், தலை, கண், நா, பல், காது, கழுத்து, யோனி நோய்கள், கண்காசம், வறட்சி, சுவாசம், இரத்தமூலம், சிலந்தி, தேள், எலிவிடங்கள், வாதக் கடுப்பு, குத்தல் இவை கெடும்.*

## பஞ்சஉப்பு

நீராமை அற்புதப்புண் நெஞ்சுவலி மாகுன்மம்
பேராக் கிரகணிபி லீகமந்தம் - தீராக்கால்
விஞ்சஉப்பைக் குக்கிநோய் மெய்ச்சூலை யும்பறக்கும்
பஞ்சஉப்பைத் தின்னையெனிற் பார் **1105**

பஞ்ச லவணம் பயித்தியகுன் மம்போக்கும்
விஞ்சியசி லேஷ்மத்தை வீழ்க்குங்காண் - கிஞ்சுகமே
தீபனம்உண் டாக்குந் திரிதோஷம் போக்கிவிடுஞ்
சோபனமாம் இம்மொழியைச் சொல் **1106**

*பஞ்சஉப்பினால் ஆமைக்கட்டி, சிறுபுண், நெஞ்சுவலி, குன்மம், வாதகிரகணி, பிலீகம், மந்தம், வாதம், சிலேட்டுமம், குத்தல், பித்த குன்மம், கபம், முத்தோடம் இவை நீங்கும். பசியெடுக்கும்.*

## கந்திஉப்பு

உடல்கரையச் செய்துவிடும் உட்டிணமாம் பொல்லாக்
குடல்வாதந் தன்னைவெட்டிக் கொல்லும் - அடலாருந்
தந்திமத்த கத்தையடத் தாவுகொங்கை மாதரசே
கந்தியுப்பை நன்றாய்க் கழறு **1107**

*இது உடற்பருமன், குடல்வாதம் இவற்றைப்போக்கி, வெப்பத்தை உண்டாக்கும்.*

### சவ்வர்ச்ச லவணம்

சவ்வர்ச்சம் என்னுந் தனிலவணத் தால்உலகில்
வெவ்வச் சுரஞ்சூலை வெப்பும்அறுங் - கவ்வுகின்ற
நாடி விரணமுடன் நாட்பட்ட குன்மமும்போம்
தேடியன மேயிதனைச் செப்பு *1108*

*இது சுரம், கீல்பிடிப்பால் ஏற்பட்ட வெப்பம், நரம்புக்கிரந்தி, வயிற்றுநோய் இவற்றை நீக்கும்.*

### பிடாலவணம்

பிடாலவணம் என்றொருக்காற் பேசின் உலகில்
விடாநீர் இழிவகலும் மெய்யே - விடல்அரிய
மந்தம் அகலும் வளரும் அதிகபசி
கந்த மலர்க்குழலே காண் *1109*

*இதனால் அதிநீரும் மந்தமும் நீங்கி பசியுண்டாகும்.*

### வெங்காரம்

வெங்காரஞ் சர்ப்ப விஷம்ஐயம் நீர்அடைப்பு
மங்காக் கிராணிரத்த மாம்மூலம் - பங்கஞ்செய்
வாயுவுடன் கல்அடைப்பு வன்கிருமி அஷ்டகுன்மம்
ஓயும் படிபுரியும் ஓது *1110*

அரியவெங் காரந்தான் ஐயறுக்குங் குய்யம்
மருவு கிரீச்சரத்தை மாற்றுந் - திருவனையாய்
சன்னிக்காஞ் சொல்லுஞ் சகல பிணிக்கும் அதாம்
பொன்னுக்கும் ஆகும் புகல் *1111*

*வெங்காரம், சொறி, படை, எண்வகைக்குன்மம், தினவு, நீரடைப்பு, வாயு, கல்லடைப்பு, கிருமி, இரத்தமூலம், ஒழுக்குக்கிரகணி, பக்கவாதம், பல்நோய், மூத்திரக்கிரீச்சரம், கபம், பாம்பு போன்றவற்றின் விடங்கள், சன்னி ஆகிய நோய்களை விலக்கும்.*

### சீனக்காரம்

சீனமெனுங் காரம்அது சீறிவரு பல்அரணை
ஆனைக்கால் கண்ணோய் அனிலமொடு - மாநிலத்தில்
துன்மாங் கிசம்வாயு தோலாத உள்அழலை
குன்மம்இவை போக்கும்எனக் கூறு *1112*

*இது பல்லரணை, யானைக்கால், கண்ணோய், அனிலம் துன்மாங்கிஷம், வாயு, அழலை, குன்மம் இவற்றைப் போக்கும்.*

### சவுக்காரம்

கரப்பானைச் சீதத்தைக் கண்டிக்கும் பேதி
உரப்பாக்கும் வாயுவைவிட் டோட்டும் - தரைக்குள்
வழலை எனப்பேர் வசித்தசவுக் காரம்
அழலைகுன்மம் போக்கு அறி *1113*

*இது கரப்பான், சீதளம், வாதம், உட்சூடு, கழிச்சல், குன்மம் இவற்றை நீக்கி பேதியை உண்டாக்கும்.*

### அப்பளக்காரம்

குடல்வாதஞ் சூலை கொடிதான வாதம்
அடல்புரியும் ஐயம் அறுக்கும் - நெடுவயிற்றின்
உப்பிசத்தி னோடே உயர்குன்ம நோய்அகற்றும்
அப்பிளக் காரம் அது *1114*

*இது குடல்வாதம், சூலை, வாதம், ஐயம், வயிற்றுப்பிசம், வாதகுன்மம் இவற்றை நீக்கும்.*

### நவச்சாரம்

குன்மங் குடற்சூலை கொல்லும் மகோதரத்தை
வன்மையுறு கல்அடைப்பை மாற்றுங்காண் - சன்மக்
கவிச்சுமுத் தோஷம் கனவாதம் நீக்கும்
நவச்சாரம் மாதே நவில் *1115*

*இது வயிற்றுவலி, குடல்குத்தல், பெருவயிறு, கல்லடைப்பு, புலால்வாசம், முத்தோடம், வாதம் இவற்றை நீக்கும்.*

### யவாச்சாரம்

குய்யம் களம்நா கொடிறுவாய் இவ்விடநோய்
ஐயம் இரைப்பிருமல் ஆசனப்புண் - பையவுறு
கீடவிடஞ் சோபைகி ராணியையும் பம்பரம்போல்
ஆடவிடும் மெய்யவாச்சா ரம் *1116*

அஷ்டகுன்மஞ் சூலை அதிதூலம் உட்டிணத்தால்
ஒட்டிவரு வாதம் உதரநோய் - துஷ்டமந்தம்
நீடுகபம் நீர்அடைப்பு நீங்காப்பி லீகம்இவை
ஓடும்யவாச் சாரத்தால் உன் *1117*

*இது இரணப் பிரமேகம், களாகம், கொடிறுவாய், ஐயம், இரைப் பிருமல், ஆசனப்புண், கீடவிடம், சோபை, கிராணி, எண்வகை வயிற்று வலி, குத்தல், உடற்பருமன், வாதம், சுலோதரம், துட்டமந்தம், கபம், நீரடைப்பு, வாதபிலீகம் இவற்றை ஒழிக்கும்.*

### சத்திச்சாரம்

மந்தமொடு தங்கும் மலசலம்பி லீகம்மடி
உந்திவரு கின்ற ஒலியிருமல் - குந்தவைக்கும்
வாதவலி குன்மம் மகோதரங்கி ராணியும்போம்
ஓதுசத்தி சாரத்தை உன் *1118*

*சத்திச்சாரத்தால் மந்தம், மலக்கட்டு, பிலீகம், இருமல், வாதவலி, குன்மம், பெருவயிறு, கிரகணி இவை நீங்கும்.*

### தும்பச்சாரம்

ஈளை யுடனே இரைப்பு வலிவாதம்
ஆளைவிடாக் குன்மநோய் ஆயதும்போம் - வேளைஇமைப்
போதில்வெல்லும் வேழப் புருவச் சிலைமயிலே
கோதில்தும்ப சாரத்தைக் கூறு *1119*

*இதனால் ஈளை, (கோழை) இரைப்பு, வாயுவலி, திரிதோட குன்மம் இவை நீங்கும்.*

### உமிலிச்சாரம்

குடல்வாதஞ் சூலை கொடுங்குன்மம் ஓடும்
விடலரும்நீர்க் கட்டும் விலகும் - மடலார்
கமல வதனக் கனங்குழலே நாளும்
உமிலிச்சா ரத்தை உரை *1120*

*இது குடல்வாதம், சூலை, வாதகுன்மம், வாதமூத்திரக்கிரீச்சரம் ஆகியவற்றைப் போக்கும்.*

### துத்தம் (மடல்துத்தம்)

முற்றியகு றிப்புண் முளைவிரணஞ் சென்னிதனைப்
பற்றிநின்ற வாதம் படர்கரப்பான் - சுத்தவிழிக்
காசங் கணம்பில்லங் கண்ணோய்குந் தம்தொலையும்
வாசமிகு துத்தத்தால் வாழ்த்து *1121*

*இதனால் குறிப்புண், முளைப்புண், தலைவாதம், கரப்பான், விழிக்-காசம், இமைப்பில்லநோய், கண்ணோய், குந்தநோய் ஆகியவை விலகும்.*

### துரிசு

புண்ணாற்றுங் காமியத்தின் புண்ணாற்றுங் கண்ணோயை
விண்ணேற்றும் முத்தோச வீறடக்கும் - சண்ணுகின்ற
வாந்தியொடு பேதிதரும் வாய்நோய் சுரந்தணிக்குங்
காந்தி தருந்துரிசி காண் *1122*

*துரிசு வாதப்புண், கும்மியப்புண், கண்ணோய், முத்தோடம், சிலேட்டுமம், வாய்நோய், வாதசுரம் இவற்றை நீக்கும். வாந்தியையும், பேதியையும் உண்டாக்கும்.*

### அன்னபேதி

முளைவிரணஞ் சூலைமந்த முட்டாமைக் கட்டி
விளைஅறல்ம கோதரநோய் வீட்டும் - வளைமலைபோற்
காட்டும்அன்னந் தன்னைக் கணத்திற் சலமாக்கிக்
காட்டும்அன்ன பேதியது காண் *1123*

*முளைப்புண், சூலை, மந்தம், செரியாமை, ஆமைக்கட்டி, பெருவயிறு இவற்றை அன்னபேதி நீக்கும்.*

### மாங்கிசபேதி

துன்மாங்கி சங்கரைக்குஞ் சோபை அழலையொடு
வன்மைமிகு சூலைகபம் மாற்றுங்காண் - நன்மயிலே
ஒப்பறுபி லீகமென ஓதுகட்டி யைக்கெடுக்கும்
செப்பரிய மாங்கிசபே தி 1124

*துன்மாங்கிசம், சோபை, அழலை, சூலை, கீல்பிடிப்பு, கபதோடம், பிலீகக்கட்டி இவற்றை மாங்கிசபேதி நீக்கும்.*

### அம்பர்

*அளகமுள ஆரமிர்தே ஆண்மையையுண் டாக்கும்*
*பளபளென மெய்யையுரப் பாக்குங் - குளகுளத்த*
*புண்ணாற்றும் அம்பர் பொரிகரப்ப னைப்போக்கும்*
*விண்ணார்க்கும் வாசனையாம் விள்* 1125

*அம்பரானது சுக்கிலவிருத்தி, உடலழகு, பலம் இவற்றைத்தரும், அளி விரணத்தையும் கரப்பானையும் போக்கும்.*

### குந்திரிக்கம்

*காசசு வாசங் கனத்தமே கக்கட்டி*
*வீசு விஷக்கடி விறுச்சுகுஷ்டம் - பேசு*
*படர்தா மரைசிரங்கு பண்டைவிர ணங்கள்*
*இடர்செய்யிற் குந்திரிக்கம் ஏந்து* 1126

*இதனால் இருமல், இரைப்பு, மேகம், பல்வகைவிடம், கிருட்டிண குட்டம், படர்தாமரைக்கிரந்தி, சிரங்குகள், புண்கள் இவை நீங்கும்.*

### குங்கிலியம்

பெரும்பாடு மேகம்போம் பேரா துடலில்
*அரும்பியபுண் ஆறும்இவை யல்லால் - துரும்பாம்*
*எலும்புருக்கி புண்சீழும் ஏகும் உலகில்*
*சலம்பருகுங் குங்கிலியத் தால்* 1127

*இது பெரும்பாடு, மேகம், புண், என்புருக்கி, சீழ்ப்புண் இவற்றை விலக்கும்.*

## வெள்ளைக்குங்கிலியம்

வெள்ளை யளித்த விரணநா பிக்கமலத்
தொள்ளைவிர ணம்மேகந் தோற்றுகினும் - உள்ளே
வருவரச மேற்புண் வரினுஞ் சுவேதச்
சருவரச மேற்பழியைச் சாற்று *1128*

*இது மேகத்தால் பிறந்த நாளப்புண், உந்திக் கமலப்புண், சீழ்மேகம், உள்மூலவிரணம் இவற்றை நீக்கும்.*

## குக்கில்

காததர நாசிநோய் கட்டிகடி மேகப்புண்
வாதவித்தி ரஞ்சூலை வன்குநகம் - ஓதிவையித்
திக்கிலி ருக்கத் திடமுமுள வோஉபயக்
குக்கிலி ருக்கநமக் குள் *1129*

*நாசிநோய் கட்டி, மேகப்புண், வாதவித்திரம், சூலை, பிடகம், காணாவிடம், கீல்பிடிப்பு இவற்றைக் குக்கில் போக்கும்.*

## அரக்கு

குஷ்டம் அசிர்க்குபித்தம் குன்மம்இரைப் பென்புருக்கி
பட்டிடுபுண் ஆகச்சூர் பங்கநோய் - தொட்டோர்
அரக்கரக்குஞ் சன்னிசுரம் ஐயமிவைக் கெல்லாம்
அரக்கரக்கு நூலை யறி *1130*

*குட்டம், அசிர்க்கரம், பித்தம், குன்மம், இரைப்பு, என்புருக்கி, புண், பங்கநோய், சன்னிசுரம், ஐயம் இவற்றையெல்லாம் அரக்கு நீக்கும்.*

## மெழுகு

*அறைபக்க வாதம் அதைப்பையம் ஊதை
குறைவிந் திகழ்நோய்தேள் கூளி – கறையைப்
புழுகெடுக்க அங்கம்உறு புண்இடிப்புண் தீப்புண்
மெழுகெடுக்க அங்ககலு மெய்* *1131*

*இதனால் பாரிசவாயு, வீக்கம், கபம், வாதம், சுக்கிலநட்டம், சிலேட்-டுமம், தேள்விடம், கபகாசம், குட்டம், ஆகந்துகவிரணம் இவை நீங்கும்.*

## பலவகை மெழுகு

பொன் மெழுகு மாறல் சுரங்கண்ணோய் போக்கிவிடும்
நன்மெழுகு புண்ணோய்க்கு நஞ்சாகும் - உன்னுங்
கொசுமெழுகு நாளுங் குளித்தவசி யத்திற்
கிசையும் எந்தி ரத்திற்கும் எண் *1132*

*பொன்மெழுகு மாறல் சுரத்தையும், கண்ணோயையும் போக்கும். நல்லமெழுகு இரணத்தால் உண்டாகின்ற நோயைப் போக்கும். கொசு மெழுகு வசியத்திற்கும், யந்திரத்திற்கும் உதவும்.*

## அப்பிரகம்

*அப்பிரக மென்றறைந்தால் அண்டம்ம கோதரமும்*
*எப்பிரமி யங்களுமுன் னீரிழிவும் - வெப்பூரற்*
*பேதமும்போ காமேகப் பித்தமுங்கண் ணோய்களும்பல்*
*வாதமும்போந் தாதுவுமா மால்* *1133*

*இது குடலண்டம், பெருவயிறு, பிரமியம், அதிமூத்திரம், சுரம், நமைச்சல், மேகபித்தம், கண்ணோய், பாதாஷேபிகம் முதலிய வாத நோய்கள் இவற்றை ஒழிக்கும். வீரியவிருத்தி உண்டாகும்.*

## கல்நார்

*காசபித்தம் வாதங் கடுப்பீறு நோயெரிவு*
*வீசுசர்த்தி நீரடைப்பு விந்துநஷ்டம் - பேசும்அசை*
*தின்னாரைக் கூவுமந்தந் தீக்குடர்கால் தாகமிவை*
*கன்னாரைக் கூவவிடுங் காண்* *1134*

*பித்தகாசம், வாதம், பற்கடுப்பு, பல்லரணை, நீர்க்குறி எரிப்பு, பித்த வாந்தி, நீரடைப்பு, விந்திழப்பு, செரியாமை, பித்தக்குடல் வாதம், பித்ததாகம் இவை கல்நாரால் நீங்கும்.*

## சாத்திரபேதி

*அஸ்திசுரந் தாகசுரம் ஆசனவி ரத்தமொடு*
*குத்திவரு வாந்திகபம் கூறுசன்னி - மெத்த*
*நிகழ்த்துகண்ணோய் தாதுநஷ்டம் நீங்காமே கம்போம்*
*சகஸ்திரவே திக்குத் தளர்ந்து* *1135*

*இதனால் அத்திசுரம், தாகசுரம், இரத்தபேதி, வாந்தி, கபம், சன்னி, கண்ணோய், வீரியக்குறைவு, பிரமேகம் இவை நீங்கும்.*

### கல்மதம்

கண்டப் பிணிமேகங் கல்லொடுநீர் ஊனடைப்பு
வண்டற் கிரீச்சரநோய் மாபிரமி - யுண்டலினாற்
பன்மதஞ்சேர் தாதுநஷ்டம் பன்னுமிந்நோய்க் கூட்டத்துட்
கன்மதஞ்சே ரக்கரக்குங் காண் *1136*

*கல்மதத்தினால் அரைபுகநோய், தந்துமேகம், கல்லடைப்பு, நீரடைப்பு, சதையடைப்பு, மாபிரமி, வாதப்பிரமியம், கொழுப்பாற்பிறந்த தாதுநட்டம் இவை தீரும்.*

### சிலாசத்து

கல்லடைப்பு மேகங் கனதூலம் வித்திரதி
சொல்லடைக்கு நீர்அருகல் சோணிதக்கால் - மெல்லிடையார்க்
கில்லகச்சத் தில்லையெனு மிந்திரிய நட்டமுமாங்
கல்லகச்சத் தில்லையெனுங் கால் *1137*

*சிலாசத்து கல்லடைப்பு, சீழ்மேகம், உடற்பருமன், வித்திரதி, கிரீச்சரம், சோணிதவாதம், விந்து நட்டம் இவற்றைப் போக்கும்.*

### கோமூத்திர சிலாசத்து

கோமூத் திரசிலா சத்தாற் குறுகிப்
போமூத்திர மெரிவுட் புண்மேகம் - நாமேவு
வெப்புதிர வெப்புமறும் வீழிமுன விம்பத்
துப்புமஞ்சு மெல்லிதழாய்ச் சொல்.

*இதனால் மூத்திரக்கிரீச்சரம், நாளத்தெரிவு, உள்விரணம், பிரமேகம், நாவிற்சூடு, இரத்தக்கொதிப்பு இவை நீங்கும்.*

### சிலாரசம்

தலைவலி நீரேற்றந் துனுர்வாதஞ் சன்னி
சூலை குலையுந்தும்மற் குடிபோஞ் - சிலைநுதலே
மாசுடைபி வஞ்சுநிறம் வாய்ந்திருப்ப தன்றிமணம்
வீசு சிலாரசத்தால் விள்.

*சிலாரசத்தினால் தலைவலி, நீரேற்றம், தனுர்வாதம், சன்னி, சூலை, தும்மல், பீநசம் இவை நீங்கும்.*

### நண்டுக்கல்

நீரருகல் நீர்அடைப்பு நீங்காப் பெருவயிறு
நீரொழுகு மேகம்வெட்டை நீக்குங்காண் - ஆரமிர்தே
ஐயம் அறுக்கும் அரியதொரு நண்டுக்கல்
செய்யுங் குணமிதுவாந் தேர் *1138*

*இது நீரருகல், நீரடைப்பு, பெருவயிறு, நீர்ப்பிரமேகம், வெள்ளை விழல், கபம் ஆகியவற்றை விலக்கும்.*

### காவிக்கல் - கடல்நுரை

அடலுறுநற் காவிக்கல் அட்சிநோய் மேகம்
வெடிஅக்கி வாந்திபித்தம் வீழ்க்குங் - கடல்நுரையோ
நேத்திர நோய்விரணம் நீடுகபங் குன்மம்இவை
தீர்த்திடுந்தப் பாமலெனச் செப்பு *1139*

*காவிக்கல் கண்ணோய், மேகநீர், வாந்தி, பித்தம், அக்கி இவற்றை நீக்கும். கடல்நுரை கண்ணோய், புண், கபம், குன்மம் இவற்றை நீக்கும்.*

### நான்குவகை நிமிளை

தாதுவைவ ளர்க்குந் தனிப்பித்தத் தைப்போக்கும்
ஓதுசந்நி பாதத்தை ஓட்டுங்காண் - ஓத
ஒருநா வுறாதே யுயர்பொன் முதலாம்
ஒருநால் வகைநிமிளை யும் *1140*

*பொன், வெள்ளி, வெண்கலம், செம்பு, என்கிற நான்குவித நிமிளை களும் விந்துவை வளர்க்கும். அதிபித்தத்தையும் சன்னியையும் நீக்கும்.*

### ஊதுசங்கு

கசிவாம் இரத்தபித்தங் கண்ணோய்கள் ஏகும்
பசியாரும் வாதம் பறக்கும் - இசிவுடனே
தங்கு முளைவிரணந் தான்அகலும் ஊதுவெள்ளைச்
சங்கமது உண்டாகிற் றான் *1141*

*வெண்சங்கு இரத்தபித்தம், கண்ணோய்கள், வாததோடம், இசிவு, முளைக்கட்டி இவற்றை நீக்கி பசியை உண்டாக்கும்.*

### முத்துச்சிப்பி

ஈளை விலகும் இருமல் குடியோடுங்
கோழை விழுகயநோய்க் கூட்டம்அறும் - நீள்உடலில்
கப்பி வருமேகக் கட்டிஐயம் போம்முத்தின்
சிப்பிதனைக் கண்டவிடத் தே *1142*

*இதனால் கபக்கோழை, இருமல், சயம், மேகக்கட்டி, சிலேட்டுமம் இவை நீங்கும்.*

### பலகறை

மந்தந்தா கங்கிரணி மாவிடச் சுரங் கண்ணோய்
தொந்தம் பரிநாமச் சூலைகயம் - இந்த
உலகறையைக் காலொடிவை யோடு நரைத்த
பலகறையைக் காணியம் பார் *1143*

*மாந்தம், கிரகணி, விடசுரம், விடநோய், வாதநோய், உடற்குத்தல், சயம், கபம் இவற்றை பலகறை நீக்கும்.*

### சுக்கான்கல்

விரணந் தனைஆற்றும் வீறுசன்னி நீக்கும்
மரணஞ்செய் வாயுவையும் வாட்டுங் - கரணத்தில்
மிக்கான இன்பம்அருள் மெல்லியலே தூயவெள்ளைச்
சுக்கான் எனுங்கலது சொல் *1144*

*வெள்ளைச்சுக்கான் புண்ணினை ஆற்றி, சன்னி, வாயுவைப் போக்கும்.*

### கலைமான்கொம்பு

அவயவத்தின் வெப்பம் அதிஅஸ்தி மேகம்
கவிழ்திரிதோ ஷம்பெருந்தா கங்கள் - இவைதான்
நிலைக்குமோ மார்புநோய் நேத்திரநோய் நீங்கும்
கலைக்கொம்பால் பேயும்இலை காண் *1145*

*உடலுறுப்புகளின் வெப்பம், அத்திமேகம், திரிதோடம், அதிதாகம், மார்புநோய், கண்ணோய், பேய் முதலியன நீங்குமென்பர்.*

## சோகி - பீங்கான் - மிருகக்கொம்பு - பல்எலும்பு

சோகிபீங் கான்அறுக்குந் துன்மாங்கி சம்தன்னைக்
கோகுதிரை ஒட்டை குரங்கும்உவா - வேகப்
பலமிருகப் பல்எலும்பும் பல்விழிநோய் தீர்க்கும்
நலமிலகு மாதே நவில் *1146*

*சோகிப்பீங்கான் (பலகறை) துன்மாங்கிசத்தை நீக்கும். குதிரை, ஒட்டகம், குரங்கு, யானை, பன்றி, முதலானவற்றின் நகம், எலும்பு இவை பல்வகை விழிப்பிணிகளை நீக்கும்.*

## பஞ்சலோகம் - ஐந்தெண்ணெய் - குதிரைக்குளம்பு - கழுதைக்குளம்பு - எருமைக்கொம்பு

பஞ்சலோ கச்சார்வு பற்றறுக்குங் கண்ணோயை
அஞ்செண்ணெய் வாதசன்னி யைப்போக்கும் - விஞ்சு
குதிரை கழுதைக் குளம்பெருமைக் கொம்பும்
குதிரைவலி நீக்கும் குறி *1147*

*பொன், காரீயம், செம்பு, இரும்பு, துத்தநாகம், இவை விழிப்பிணியைப் போக்கும். வேம்பு, புங்கு, புன்னை, ஆமணக்கு எனும் ஐவிதநோய்கள், வாதசன்னியைப் போக்கும். குதிரை, கழுதை இவற்றின் குளம்புகள், எருமைக் கொம்பு இவை குதிரை வலியை நீக்கும்.*

## சீலை - கம்பளம் - மயிலிறகு இவற்றின் சாம்பல்

அஸ்திபிர மேகம்போம் ஆடைசுட்ட சாம்பலுக்குத்
தத்திவரு ரத்தந் தடைபடுங்காண் - சத்தியமாய்க்
கம்பளச் சாம்பல்சன்னி காதும்மஞ்ஞைத் தோகைபஸ்பம்
கும்புவிக்கல் வாந்திகெடுக் கும் *1148*

*சீலைச் சாம்பலுக்கு என்புருக்கியும் கீறி இரத்தமும் போகும். கம்பளச் சாம்பல் சன்னியையும் மயிலிறகுச் சாம்பல், விக்கல் வாந்தியையும் நீக்கும்.*

### ஒட்டறை

குட்டங் களநோய் குருதிமூ லம்பேதி
உட்டங்க சீரணம்உள் ளூருகுன்மங் -கெட்டசிரா
அற்புதம்புண் சீதசுரம் அற்பஅகி நஞ்சிவைகள்
புற்புதம்போல் ஒட்டறையாற் போம் *1149*

*இதனால் குட்டங்கள், சிலேட்டுமம், கண்ட ரோகம், இரத்தமூலம், கழிச்சல், மந்தம், சிலேட்டுமகுன்மம், நரம்புக்கிரந்தி, நடுக்கற்சுரம், சிறுபாம்பின்விடம் ஆகியவை போகும்.*

### இந்திர கோபப் பூச்சி

கருமேகந் தாதுநட்டங் கக்கும் கபம்போக்குந்
தருமே நற்காய சித்தி தன்னை - வருமேக
காலமுறை வாளரகத் தையலே நன்மாரிக்
காலமுறை யீயலது காண்.

*இப்பூச்சி கருமேகம், சுக்கில நட்டம், சிலேட்டும நோய் இவற்றை நீக்கி காயசித்தியை உண்டாக்கும்.*

### முசுறு முட்டை

துள்ளு மடல்வாதத் துன்பமந்தம் வல்லிசிவு
தள்ளு வலிக்குழி சதக்கபநோ - யுள்ளில்
விகிறு சந்நிபாதம் விலகும் தூகத்தார்
முசுறு முட்டைக்குணத்தை முன்.

*இலுப்பமரத்து முட்டையினால் பெருவாதம், மந்தம், இசிவு, ஐவிதவலி, கபநோய், சன்னி இவை நீங்கும்.*

### பூநாகம்

மாதனறு செய்வறட்சி மாறுமடங் காஞ்சன்னி
பாதவறுநோ யோடென்றும் பாறுமடல் - வாதமறு
குண்டபத மீளு மோக்காள மையமும் போம்
கண்டபத மென்னுங்கால்

*வறட்சி, ஏழுவகை சன்னி சுரங்கள், மகாவாதம், ஒக்காளம், சிலேட்டுமம் இவை பூநாகத்தால் நீங்கும்.*

### கற்பாசி

பண்டை மேகத்தைப் பறக்கடிக்கும் பேதிகட்டு
மண்டையெறி வாசனையி லாருங்காண் - தொண்டைக்
கனிக்குமொழி யூட்டுமிதழ்க் காரிகையே காரநற்
கனிக்குமொரு கற்பாசி தான்.

*மழையில் பிறந்த கற்பாசி, நீடித்தமேகம், கழிச்சல் இவற்றை நீக்கும். இது வாசனைப் பொருட்களில் ஒன்றாகக் கருதப்படும்.*

## பாஷாணகுணம்

### பாதரசம்

விழிநோய் கிரந்திகுன்மம் மெய்ச்சூலை புண்குட்
டழிகால்இல் விந்துவினால் அத்தை - வழியாப்
புரியும்விதி யாதும் புரியினோ யெல்லாம்
இரியும்விதி யாது மிலை *1150*

*பாதரசத்தை முறைப்படி சுத்திசெய்து பயன்படுத்தினால் கண்ணோய், கிரந்தி, குன்மம், கீல்பிடிப்பு, புண், குட்டம், விந்துநட்டம் முதலான நோய்கள் விலக்கும்.*

### பாதரச தோஷம்

கலையைக்கிழிக்கும் அவிழ்த்தெறியுங்
கல்லைத்தேடி யெடுத்தெறியும்
மலையிற்குதிக்கும் புனல்மூழ்கும்
மருள்சேர்பித்தந் தனைக்கொடுக்கும்
உலையின் அனல்போல் உடல்வெதுப்பும்
ஓயாஉழலை வியர்வாக்கும்
பலகாலமுமே வாய்பிதற்றும்
பாதரசதோ ஷமும்இஃதே *1151*

*இதனைச் சுத்திசெய்யாமல் பயன்படுத்தினால் துணியைக் கிழித்தல், அவற்றை அவிழ்த்தெறிதல், கல்லாலடித்தல், மேலிருந்து குதித்தல், தண்ணீரில் மூழ்கிமூழ்கிக் கிளம்பல், மயங்கி பித்துகொள்ளல், உடல் வெதும்பல், வாய்நீருறல், வேர்வை விடுதல், வாய்பிதற்றல் ஆகிய குணங்கள் உண்டாகும்.*

## எண்வகைத்தோஷம் நீங்காத பாதரசம்

சர்ப்பம்வங்கங் கந்திவன்னி சஞ்சலம்ம லங்காளம்
ஒப்பின்மந்தம் எண்தோஷம் ஒட்டிரதத் தைப்புசியார்
கொப்புளங்குட் டங்கியெரி கோதுவிந்தி ளைப்பிறத்தல்
அப்புளமூர்ச் சைக்கும்உரி யார் *1152*

*சர்ப்பம், வங்கம், சன்னி, வன்னி, சஞ்சலம், மலம், காளம், மந்தம் ஆகிய எண்வகை தோடங்களையும் நீக்காமல் பாதரசத்தை உண்டால் முறையே இரணம், பெருநோய், தீச்சுவாலை, தவிப்பு, இரத்தசோகை, வீரிய நட்டம், மரணம், சோபம் என்ற எட்டுவகைநோய்களையும் பெறுவார்கள்.*

## இரசாஞ்சனம்

அரியர சாஞ்சனத்தால் அம்புவியில் உள்ள
வரிவிழிநோய் எல்லாம் மறையும் - மருவி
வருகா மியவிரணம் மாறும்புண் ஆறும்
ஒருமா மயிலே உரை *1153*

*இதனால் பூபடலம், விழிப்புண், குய்யநோய், ஆறாக்கிரந்தி இவை விலகுமென்பர்.*

## இரசகற்பூரம்

இடைவாத சூலை எரிசூலை குன்மம்
தொடைவாழை வாதமாஞ் சோணி - இடையாதோ
ஒக்கும்ரச கர்ப்பூரம் ஒன்றே அளவொடுநல்
இக்குவெல் லத்தே ழுநாள் *1154*

*இதனை பிணிகளில் வன்மைக்கேற்ப நல்ல வெல்லத்தினுள் வைத்து பத்தியத்தோடு ஏழுநாள் கொடுக்க வாதப்பிடிப்பு, பித்த சூலை, வயிற்று நோய், சிலேட்டும ஊறல், தம்பவாதம், வாதம், சோணுவாதம் இவை நீங்கும்.*

## சாதிலிங்கம்

பேதிசுரஞ் சன்னி பெருவிரணம் நீரொடு
தகாதகடி காசங் கரப்பான்புண் - ஓத
உருவிலிங்க சங்கதமா யூறுகட்டி யும்போம்
குருவிலிங்க சங்கமதைக் கொள் *1155*

ஆதி யிரதஉருக் காதலாற் சாதிலிங்கம்
ஓதில் இரதகுணம் உற்றுடலில் - தீதுபுரி
குஷ்டங் கிரந்தி கொடுஞ்சூலை வாதமுதல்
உட்டங்கு நோய்களையோட் டும் *1156*

*பேதி, சுரம், சன்னி, புண், அதிமூத்திரம், காணாவிடம், இருமல், கரப்பான், சிரங்கு, நுணாக்காய்கிரந்தி, மண்டலகுட்டம், பிரமை, உடல்குத்தல், வாதம், முகநோய்கள் ஆகியவற்றைச் சாதிலிங்கம் போக்கும்.*

## சவ்வீரம்

குன்மமொடு குஷ்டம் கொடியஅனி லத்திரட்சி
துன்மாங் கிசப்பெருக்கஞ் சூலைநோய் - வன்மையுறு
காமியப்புண் ஆதியநோய் கண்டாற்சவ் வீரனெனுஞ்
சாமியின்நா மத்தையுச்ச ரி *1157*

*குன்மம், குட்டம், வாதம், துர்மாமிசம், கீல்பிடிப்பு, காமியப் புண் ஆகியவற்றைச் சவ்வீரம் நீக்கும்.*

## நெல்லிக்காய்க்கந்தகம்

நெல்லிக்காய்க் கந்திக்கு நீள்பதினெண் குஷ்டுமந்தம்
வல்லை கவிகைகுன்ம வாயுகண்ணோய் - பொல்லா
விடக்கடிவன் மேகநோய் வீறுசுரம் பேதி
திடக்கிரக ணீகபம்போந் தேர் *1158*

*நெல்லிக்காய் கந்தகம் பதினெண்வகை குட்டங்கள், மந்தம், கவிகை மகோதரம், குன்மம், வாயு, கண்ணோய், மகாவிடம், மேகம், வாதசுரம், வாதக்கழிச்சல், கபம் இவற்றை நீக்கும்.*

### வாணக்கந்தகம்

வாணக்கு ழாக்கந்தி வாசனையைக் கண்டவுடன்
காணக் கிருமிசொறி காணாவாம் - தோணும்
பெருவியா திக்கூட்டம் பேருமதன் நூலில்
மருவியா ழுங்கொடியே வாழ்த்து 1159

*வாணமருந்தில் பயன்படும் இரசகந்தகத்தால் ரசத் தாதுக்களின் பிறந்த சிறுகிருமி, நமை, குட்டங்கள் இவை நீங்கும்.*

### தாளகம்

தாளகத்தின் பேருரைக்கத் தாலுகவுள் நோய்குஷ்டம்
நீளக் குளிர்காய்ச்சல் நீடுகபம் - நாளகங்கொள்
துஷ்டப் பறங்கிப்புண் சூழ்அழுகண் மண்டைநோய்
கிட்டப் படுமோ கிளத்து 1160

*இதனால் குட்டம், குளிர்க்காய்ச்சல், சயம், துட்ட இரணம், தலைநோய் இவை விலகும்.*

### சிவந்தஅரிதாரம்

சிவந்தஅரி தாரம்அது செஞ்சிலைபோற் காட்டும்
உவந்ததனை யுண்முறையோ டுண்டால் - இவர்ந்தாழ்
சுரங்குளிர்மா வாதம்உடற் சூலைநமை குட்டம்
இரங்குமென நாளும் இசை 1161

*சிவந்த கல்லைப் போலிருக்கின்ற அரிதாரத்தைச் சுத்தி செய்து முறையாக உண்டால் குளிர்சுரம், மகாவாதம், உடல்குத்தல், தினவு, குட்டரோகம் ஆகியவை நீங்கும்.*

### மடல்அரிதாரக்கரடு - மனோசிலை

மடலரிதா ரத்தில்வருங் கரடி ரண்டும்
உடல்விஷங்க ளைக்களையும் உண்மை -கொடியகுட்டம்
காய்ச்சல் நடுக்கல்அஜ கல்லிஇரைப் புச்சிலந்திப்
பேச்சறும னோசிலைக்குப் பேசு 1162

*கரடு எனப்படும் இருவகைக் கட்டிகளினால் விடமும், மனோ சிலையினால் சருமகுட்டம், குளிர்சுரம், கள்ளியிரைப்பு, சிலந்திவிடமும் நீங்கும்.*

## மடலரிதாரம்

ஈளை யுடனே யிருமல் குடிவிலகுங்
கோழை மலம்அகலும் கொம்பனையாய் - நாளும்
அடலுறுக யங்கரப்பான் ஆறாப்புண் ணும்போம்
மடலரிதா ரத்தை மதி 1163

*மடலரிதாரத்தினால், ஈளை, இருமல், கோழை இவை நீங்கும். மலம் இளகும். கயம், கரப்பான், ஆறாப்புண் இவை விலகும்.*

## அரிதாரம்

காச முடனே கயநோய் கபவாதம்
பேசரிய குன்மம்எட்டும் பேருங்காண் - மாசகன்ற
கீற்று மதிநுதலே கேள்ஆயுள் வேதம்அது
சாற்றும் அரிதாரத் தால் 1164

*இதனால் காசம், கயம், கபம், எட்டுவகை குன்மம் இவை நீங்கும்.*

## பொன்அரிதாரம்

மந்தாரத் தாலே வளருஞ் சுவாசநோய்
உந்திவரு தீச்சுரநோய் ஓடுங்காண் - முந்து
தொனிக்கயஞ்செய் யான்கடியுந் தோற்குட்டம் ஏகுந்
தனிப்பொன் அரிதாரத் தால் 1165

*இது மந்தாரசுவாசம், வாதசுரம், சயம், செய்யான் விடம், தோற்குட்டம் ஆகியவற்றை நீக்கும்.*

## மிருதாரசிங்கி

மிருதார சிங்கெனவே மெல்லவுரைத் தாலும்
உருவார் புடைகரப்பான் ஓடும் - ஒருவிதமோ
சாலச் சிரங்குபுண்ணுந் தப்பாமல் ஆறிவிடும்
வேலொத்த கண்மயிலே விள் 1166

*இதனால் பித்தவிரணம், புடைகரப்பான், கிரந்தி, பெருவிரணம் ஆகியவை போகும்.*

### வெள்ளைப்பாஷாணம்

வெள்ளைப்பா ஷாணம் விஷங்கடிதீ ரும்பூசக்
கொள்ளைச் சுரந்தோஷங் கோரசன்னி - தொல்லையுறு
நாசிப்புண் வாய்ப்புண் நனைகிரந்தி போம்உண்ண
ஆசிக்குங் கும்பமுலை ஆய் *1167*

*இதனைப் பச்சையாக அரைத்து பாம்பின் கடிவாயில் பூசினால் அவ்விடந்தீரும். முறைப்படி உண்டால் கபசுரம், திரிதோடசன்னி, துட்டபீநசம், வாய்ப்புண், முகபாகம், சீழ்ப்புண் ஆகியவை நீங்கும்.*

### கௌரிபாஷாணம்

அவுரியொடு பாகல்இவை யாற்சுத்தி செய்த
கவுரிபா ஷாணத்தைக் கண்டால் - சவுரியஞ்செய்
வாதநோய் மந்தமொடு வந்தசுரங் கள்எல்லாம்
காதிவிழுந் தோடும்எனக் காண் *1168*

*அவுரி, பாகல் இவற்றின் சாற்றால் சுத்திசெய்யப்பட்ட கௌரி பாடாணத்தால் வாதம், மந்தம், சுரம் இவை நீங்கும்.*

### நீலாஞ்சன பாஷாணம்

சன்னிரசுரம் மேகம் கயந்தாகம் நேத்திரநோய்
வன்னிரச வேகம் மறைவதன்றி - மன்னுடலம்
விஞ்சு குளிர்ச்சியொடு வீறழகு காந்தியுமாம்
அஞ்சனக் கல்லுக் கறி *1169*

வாரிறுக்கும் பூண்முலையாய் வாய்த்தநீ லாஞ்சனத்தால்
நீருறுத்துங் கண்ணோய் நிலைகெடுங்காண் - பாரினிலே
எல்லாச் சுரமும் இரத்தபித்த தோஷமுதற்
பொல்லா அறுபுண்ணும் போம் *1170*

*இதனால் இரசவன்னிதோடம், வெட்டுப்புண், பிரமேகம், விழிப்புண், சன்னி, புழுவெட்டு, வறட்சி, உட்சூடு, இரத்த பித்தம் இவை நீங்கி, உடல் அழகு, குளிர்ச்சி, பலம் இவை உண்டாகும்.*

## தொட்டிப்பாஷாணம்

தொட்டிப்பா ஷாணமெனச் சொன்னால் சுரங்கிரந்தி
எட்டிப்பார்க் காவாம் இடருறுத்தக் - கிட்டிவரு
வாயுவின் றன்பெருக்கும் மந்தம்முளைக் கட்டியும்போம்
ஆயினது வாதவித்தைக் காம் *1171*

*இது சுரம், கிரந்தி, சிரங்கு, வாதம், செரியாமை, முளைவிரணம் இவற்றை நீக்கும். (வாத வேலைக்காகும்)*

## பஞ்ச பாஷாணம்

பஞ்சபா ஷாணமெனப் பாரில்உரைத் திட்டாலும்
வெஞ்சதை ஆணிபுற்றும் வீழுங்காண் - விஞ்சிவளர்
கண்புற்றுத் தீரும்அதி காய்ச்சல்குளிர் மேகம்போம்
பண்புற்ற மாதே பகர் *1172*

*இதனால் துர்மாமிசம்,, ஆணிப்புற்று, சதைப்புற்று, கண்சதைப் புற்று, மிகுசுரம், குளிர்மேகம் இவை நீங்கும்.*

## நவபா ஷாணம்

நவபாஷா ணந்தன்னை நற்சுத்தி செய்தங்
குவகையாய்ச் சிந்தூரித் துண்டால் - நவமாகக்
காயம் இறுகுங் கனத்தநோ யும்போகும்
மாயும்நோய் எல்லாம் மதி *1173*

*சுத்தம் செய்த நவபாடாணத்தைச் செந்தூரம் செய்து உண்டால் உடல் பலம் பெறும். மகாவாதமும், பல்வகைச் சுரங்களும் நீங்கும்.*

## உலோககுணம்

### பொன்

அடற்றா வரவிடங்கள் அங்கஒளி மங்கல்
கடத்தாமுத் தோடகயங் காசம் - உடற்றாபஞ்
சேகையிருந் தாதுநஷ்டந் திட்டிநோய் ஈளையிவை
ஈகையிருந் தால்ஏகும் எண் *1174*

*தாவரவிடங்கள், உடல்பொலிவிழத்தல், முத்தோடம், சன்னி, கயம், இளைப்புநோய், உடல்வெப்பம், சுக்கிலநட்டம், விழிநோய், கோழைக் கட்டு இவை விலகும்.*

### வெள்ளி

பாய்க்கூட்டங் காட்டாப் பழையசுரந் தாருவிடம்
வாய்க்கூட்டச் செய்மேக வாதமுதல் - நோய்க்கூட்டம்
அண்டாது காணிகொளும் அத்திமே கக்கசிவும்
வெண்டாது காணிமெய்யை மேல் *1175*

இரத்தம் கயம்பித்தம் ஈளைகண்ணோய் காசம்
உரத்தையம் அஷ்டகுன்மம் ஊதை - வருத்தும்
விரணஞ் சிலேஷ்மநோய் மெய்ப்புளிபுண் ஊரல்
மரணம்உறும் வெள்ளியினால் வாழ்த்து *1176*

*பழையசுரம், மரவிடம், மேக வாதப்பிடிப்பு முதலான நோய்கள், ஒழுக்குவெள்ளை, இரத்தபேதி, சயம், பித்தம், கோழை, விழிநோய், இருமல், மார்புச்சளி, அட்டகுன்மம், வாதம், கிரந்தி, நீர்க்கோவை, சிரங்கு, சொறி இவை வெள்ளியினால் நீங்கும்.*

### தாம்பிரம்

தாம்பரத்தாற் சோரிபித்தம் சன்னி மகுவைகபம்
வீம்பார்பி லீகமந்தம் வெண்மேகந் - தேம்பழலை
சூதகநோய் புண்கிரந்தி தோஷசுவா சங்கிருமி
தாதுநஷ்டங் கண்ணோய்போம் சாற்று *1177*

*இது பித்தம், சன்னி, வழுவை, மகோதரம், கபம், கபாதிக்கம், பீலிகம், அசீரணம், வெண்குட்டம், பித்தகபம், இரத்தகுன்மம், சூதகநோய், இரணம், திரிதோடம், கிருமி, தாதுநட்டம், விழிநோய் ஆகியவற்றைப் போக்கும்.*

## பித்தளை

தாதுவிர்த்தி யுண்டாகுந் தாபச் சுரம்போகும்
சீதளம்ஆம் வாதம் சிதையுங்காண் - பூதலத்துள்
மாட்டியதோர் பித்தகுன்மம் மாறும் மலர்த்திருவே
நாட்டியதோர் பித்தளையி னால் 1178

*இது தீச்சுரம், வாதகபம், பித்தகுன்மம் இவற்றை நீக்கும். தாதுவைப் பெருக்கி சீதளத்தை உண்டாக்கும்.*

## வெண்கலம்

நேத்திரநோய் சோமவினை நீர்ப்பெருக்கி ரத்தபித்தம்
வீழ்த்துசுவா சம்மந்தம் மேகங்கால் - ஆழத்துகபம்
வாதவலி சூலை மகோதரம்போம் பித்தமொடு
தாதுவும்ஆம் வெண்கலத்தாற் சாற்று 1179

*வெண்கலம் கண்ணோய், சோமநோய், பெருமூத்திரம், இரத்த பித்தம், இரைப்பு, செரியாமை, கபவாத பிரமேகம், குத்தல், பெருவயிறு இவற்றை நீக்கும். சுக்கிலம், பித்தம் இவற்றை விரிவாக்கும்.*

## தாரா

சூலையொடு மேகம்இவை தோன்றாமல் ஓட்டிவிடும்
மேலைவரு காலை விலக்குங்காண் - ஆல
அராமே வியவல்குல் ஆரணங்கே வெட்டைத்
தராவெனும்உ லோகம்அது தான் 1180

*தாராவானது சூலை, வெள்ளைவீழல், கபம் ஆகியவற்றைப் போக்கும்.*

## வெள்ளீயம்

தாகங் கரப்பான் சலமேகம் பித்தகபம்
மேகம் ஒளிமங்கல் வெப்பபலம் - மாகிரந்தி
துள்ளியமந் தார சுவாசமும்மந் தாக்கினியும்
வெள்ளீயம் போக்கும் விதி 1181

*இது தாகம், கரப்பான், நீர்மேகம், பித்த கபநோய்கள், மேகம், உடலொளி குன்றல், சுரம், கிரந்தி, கெட்டநாற்றம், விரணம், மந்தார சுவாசம், மந்தாக்கினி இவற்றை நீக்கும்.*

### காரீயம்

பன்மரநஞ் சக்கிநோய் பாகர்த் தபிவிரணங்
குன்மங்கால் சூலங் குதவிரணஞ் - சன்மப்
பெருநாக மேகப் பிணிசுரம்இ வற்றைக்
கருநாக மேநீக்குங் காண் *1182*

*பற்பல தாவரவிடங்கள், கண்ணோய், விரணம், வாதகுன்மம், குத்தல், பகந்தரப்புண், தோல்குட்டம், சுரம் இவற்றைக் காரீயம் போக்கும்.*

### துத்தநாகம்

மேகங் கிளர்பேதி வெட்டைஅழ லைத்தணிக்கும்
வேகங்கி ராணி விலக்குங்காண் - போகாப்
பரியமுளைப் புண்ணும் பயித்தியமும் போக்கும்
அரியதுத்தி நாகம் அது *1183*

*இது பிரமேகம், பேதி, வெட்டை, உட்சூடு, சீதரத்தக்கழிச்சல் முளைவிரணம், பித்தம் இவற்றை நீக்கும்.*

### இரும்பு

பாண்டுவெண் குஷ்டம் பருந்தூல நோய்சோபை
மாண்டிடச்செய் மந்தங்கா மாலைகுன்மம் - பூண்ட
பெருந்தாது நட்டமும்போம் பேதிபசி யுண்டாங்
கருந்தாது நட்டமிடுங் கால் *1184*

*இதனால் பித்தபாண்டு, வெண்குட்டம், உடல்பருமன், சோகை, மந்தம், காமாலை, வயிற்றுநோய், தாதுநட்டம் இவை விலகும். மலவிருத்தியும் பசியும் உண்டாகும்.*

### எஃகு

தந்தமந்த மூலவுரு தாதுநட்டஞ் சோபைகண்ணோய்
வந்தமந்தம் பாண்டுவினை வன்மைகுன்றல் - முந்தப்
பெருக்கிடையாய் நீட்டுகப பேதம்இவைகட்
குருக்கிடையா தோட்டும் உரை *1185*

*இது பல்நோய், பல்மூலநோய், சுக்கில நட்டம், சோகை கண்ணோய், மந்தம், பாண்டு, பலம் குன்றல், கபநோய் ஆகியவற்றைப் போக்கும்.*

### காந்தம்

காந்தத்தாற் சோபைகுன்மம் காமிலம்மே கம்பாண்டு
சேர்ந்ததிரி தோஷம்வெட்டை சீதம்கால் - ஒய்ந்தபசி
பேருதரங் கண்ணோய் பிரமியம்நீர் ஆமையும்போம்
ஓரினிறை ஆயுள்உறும் உன் *1186*

*காந்தமானது, சோகை, குன்மம், காமாலை, பிரமேகம், பாண்டு, முத்தோடம், வெட்டை, சீதளம், வாதம், மந்தம், பெருவயிறு, கண்ணோய், நீர்மேகம், நீராமைக்கட்டி இவற்றைப் போக்கி நீண்ட ஆயுளை உண்டாக்கும்.*

### மண்டூரம்

கிட்டம்ஒன்றாற் சோபை கிளைவீக்கம் அஸ்திசுரந்
துஷ்டவிஷ பாகஞ்சு வாசம்ஐயங் - கெட்டகொடும்
பாண்டிருமல் நீர்ஆமை பாழும் பிரமியமுந்
தாண்டிவிடும் உண்டிரத்த தாது *1187*

*வாதசோகை முதலான வீக்கங்கள், அத்திசுரம், கொடிய விடபாகம், இரைப்பு, கபம், தேகம் வெளிறல், காசம், நீராமைக்கட்டி இவற்றை நீக்கி இரத்தத்தைப் பெருக்கும் பண்பு மண்டூரத்திற்குண்டு.*

## நவரத்தினகுணம்

### மாணிக்கம்

சுரரோகம் சன்னிகளின் தோஷம்அதி தாகம்
உரமான மேகம் ஒழியும் - திரமாக
ஊணிக்கொள் நேத்திரநோய் ஓடும்அர வீன்றவொளி
மாணிக்கத் தால்வசியம் ஆம் *1188*

*சுரம், சன்னிதோடங்கள், திரிதோடம், தாகநோய், வாதப்பிரமேகம், கண்ணோய் இவற்றை ஒழித்து உடற்கு நல்ல அழகைத்தரும் பண்பு மாணிக்கத்திற்குண்டு.*

### வச்சிரம்

ஆறுவித மாம்வயிரம் அவ்வவற்றுள் மாரசங்கள்
வீறி நிலைத்திருக்கும் மேன்மையினால் - கூறும்அவைக்
கெப்பிணியும் நீங்கும் இணையில் வனப்பும்உண்டாம்
செப்பணியு மாமுலையாய் செப்பு *1189*

*ஆறுவகை (தேவ, பிரம, சத்திரிய, வைசிய, சூத்திர, சங்கர) வயிரங்களும் கண்ணோய் முதலான பலநோய்களைப் போக்கி உடற்கு நல்ல அழகைக் கொடுக்கும்.*

### வயிடூரியம்

சீதவா தத்தொடுசி லேஷ்மம் புளிஏப்பம்
காதுசூ லைப்பிணிக னத்தகுன்மம் - ஓதுபித்தம்
என்றுரைக்கும் நோய்கள்அறும் எப்போதும் தோஷம்இலை
நன்றுவயி டூரியத்தி னால் *1190*

*சிலேட்டும வாதம், சிலேத்துமம், புளியேப்பம், காது சூலை, குன்மம், பித்தம் ஆகியவை வயிடூரியத்தால் நீங்கும்.*

### கோமேதகம்

வாதபித்த கோபத்தை மாற்றுமலக் கட்டறுக்கும்
ஓதுமந் தாக்கினியை ஓட்டுங்காண் - மீதில்
அழறருவி காரம் அகற்றும்ஒளி செய்யும்
கழறுகின்ற கோமேத கம் *1191*

*இதனால் வாதபித்தம், மலக்கட்டு, மந்தாக்கினி, சுரத்தால் ஏற்பட்ட கெட்ட குணம் இவை நீங்கி உடலழகு பெறும்.*

### புட்பராகம்

வீரிய விர்த்தியது மேன்மேலும் உண்டாகுங்
கூரியநற் புத்தியுண்டாங் கூறுங்கால் - பாரில்
பிணிவருக்கம் ஏகும் பெரும்புட்ப ராக
மணியாற் புகழும்உண்டாம் வாழ்த்து *1192*

*இதனால் சுக்கில விருத்தி, நல்ல அறிவு, இவையுண்டாகும். மேகம் முதலான நோய்களும் அகலும்.*

### பவளம்

சுரதோஷம் ஐயமுத் தோஷசுரங் காசம்
அருசிகீ டத்தால்ஆம் ஆலம் - பெருவிந்து
நட்டம் அதிதாகம் நாவறட்சி போம்ஒளிவுங்
கிட்டும் பவளத்தாற் கேள் *1193*

*பவளமானது சுரம், ஐயம், சன்னிசுரம், இருமல், அருசி, சுக்கில நட்டம், மிகுதாகம், நாவறட்சி இவற்றை ஒழிக்கும்.*

### முத்து

அஸ்திசுரம் சோபை அருசிதுர்ப்ப லம்கண்ணோய்
பித்துவிஷஞ் சீதளநோய் பேசுகபம் - சுத்தத்
தயிரியநஷ் டத்தோடு தாதநஷ்ட மும்போம்
உயிருறுநன் முத்திருந்தால் ஓது *1194*

*அத்திசுரம், சோபை, அருசி, துர்ப்பலம், கண்ணோய், பித்து, விடம், சீதளம், கபம், தாதுநட்டம் இவற்றை முத்து போக்கும்.*

### மரகதம்

தாதுதரும் பூதபை சாசந் தமை ஒட்டும்
மீதுவரு புண்ணை விலக்குங்காண் - தீதுபுரி
நச்சை யகற்றும் நலிமதுமே கம்போக்கும்
-பச்சை யதுமதுரம் பார் *1195*

இது விந்துவை விளைக்கும். பதிணெண்வகை பூத கபகாசங்கள், விரணம், பலவகைவிடங்கள், மதுமேகம் இவற்றை நீக்கும்.

### நீலம்

குதிவலிமே கம்பித்தங் கூறரிய பாண்டு
மதிமயக்கம் எல்லாம் மருளும் - மதிநுதலே
புத்தியொடு மேன்மேலும் போகசுகம் உண்டாகும்
சுத்தநறும் நீலத்தாற் சொல் *1196*

*நீலக்கல் குதிகால்வலி, மேகநீர், பித்தம், பாண்டு, அயர்ச்சி இவற்றைப் போக்கி நல்லறிவையும் சுக்கிலப் பெருக்கத்தையும் உண்டாக்கும்.*

## மருத்துவன் குணம்

தெய்வவுபா சனைபலநூ லெல்லை காண்டல்
திரிகரண சுத்தி பன்னோய் தீர்த்தனாளு
நைவகன்ற தீரமதி நுட்பஞ் சான்றோர்
நட்பொழுக்க மேன்மைகுண மன்புள் ளானாய்
மெய்வசுதை விகலையணங் குறைப தார்த்த
விதியுடற்கா தாரமட லங்கிமாந்தல்
கைவருமெண் பேதமெலா முணர்ந்துற் றானாய்க்
காணிலந்த மருந்துவன்கைக் கரணி யுண்ணே *1197*

*பல நூல்களை ஆழ்ந்து கற்றல், மனம், வாக்கு, காயம் இவற்றால் பலநோய்களைத் தீர்த்தல், தீரம், புத்திகூர்மை, சான்றோர் நட்பு, மேன்மை, நற்குணம், அன்பு, இக்குணங்களுடையோனாய், உடல், நாடு, காலம், நோய், மருந்து, பொருட்களின் பண்பு, உடலாதாரம், மடலம், உடற்பலம், பணிவு, எண்வகை பேதங்கள், இவற்றையுணர்ந்தோன் மருத்துவன் எனலாம்.*

### கைபார்த்தமருத்துவன் நடத்தை

கன்மவுரு நோயதைமுக் கண்கொடறி வுற்றறிந்தார்
தன்ம நீராடற் சதத்துடனெட் - டின்மையெனி
லங்கைபதந் தூய்மையின்றே லங்குலிபூ வெற்றலின்றேற்
கங்கை பதம்புனிறு காண் *1198*

*மருத்துவன் மூன்று விரலால் நாடி பார்த்தறிதல் வேண்டும். மேலும் எட்டு வித தேர்வுகளால் நோயறிந்த மருத்துவர்கள் 108 நீராடல், அல்லது கை கால்களைச் சுத்தஞ்செய்தல், அவ்விரலைப் பூமியில் தட்டுதலாம். இவ்வாறு செய்யவில்லையெனில் மருத்துவன் செயலும் மருந்தும் பலன்தராது.*

### பிணியாளன்

அருப்பமுறி னரசெனினுந் தீர்ப்பானைக்கண்
டழைத்தலனை யாதியரு மவனென் றோர்தல்
விருக்கமுறத் தவிசிருத்தன் மெய்யன் பாடல்
வேண்டுடலீந் திடலுறையேற் றுண்ட லத்தைத்
திருப்பவருந் துயராற்றற் சரதங் கூறற்
செப்புளொடுங் கற்பன்மருந் தொழித்த லூழா
மிருப்பகற்று முறைகுயிற்ற லிவையுள் ளானே
லிவனாமம் புகலுநர்க்கு மின்று நோயே 1199

*பிணியாளன் அரசனேயானாலும் மருத்துவரை அழைத்தல், எல்லாரும் மருத்துவனே என எண்ணுதல், அமர ஆசனந்தருதல், அன்பு செய்தல், மருத்துவர்க்கு வேண்டிய பொருட்கள்தருதல், அவர் தரும் மருந்தை இருகைளாலும் பெற்று உண்ணல், மருந்துண்டபின் அதன் குணம் கூறல், அவர் சொல்படி நடத்தல், போன்ற குணங்களைக் கொள்ள வேண்டும்.*

### பாகஞ்செய்வான்

பிணியர்க் குரியர் பிடக்குளத்தை யொப்ப
ரணியிற் சிறந்தநட்ப ராம்பற் - பணியர்க்குட்
டுப்புறையை யுண்மைமிகு தூய்மையிவை யார்ந்தாரை
யொப்புறையை யாடற் குவந்து 1200

*மருந்துப் பகுப்பாளர் பிணியாளர்க்கு உரிமையுள்ளவர்களாகவும் நல்ல நண்பராகவும், மருத்துவரோடு மன மொத்தவராகவும் இருத்தல் வேண்டும். இவ்வாறில்லையெனில் நல்ல உடற்பலம், பிணியாளர் நலமாக இருக்க விரும்புதல், அறிவு கூர்மை, உண்மை, சுத்தம் உடையோர் ஒருவரை மருந்தாளுநராக நியமித்துக் கொள்ள வேண்டும்.*

### கலுவங்கள்

கருங்கற்கல் வத்தவுழ்தங் காணில்உடற் கின்பாம்
நெருங்கிரத்தக் கல்தோஷம் நீக்கும் - ஒருங்குவெள்ளைக்
கன்மருந்தோ வீரமொடு காரமும்இல் மஞ்சள்அம்மி
யின்மருந்தோ நோய்விலக்கா எண் 1201

*கரியநிற கலுவத்திலுறைத்த மருந்து உடற்கு நன்மை செய்யும். சிவப்பம்மி மருந்து பல தோடங்களை நீக்கும். வெண்மை நிறகலுவ மருந்து வீரம், சுவை இரண்டையும் நீக்கும். மஞ்சள் நிறக்கல்லம்மி மருந்து நோய் நீக்காதாம்.*

### மருந்தினதுபக்குவாபக்குவ குணம்

பக்குவபா கத்தையுறு பஞ்சின்மருந் தும்பிறழ
பக்குவபா கத்துப் பருமருந்து - மெய்க்குறுங்கா
லக்கால மும்பருணு மாழிமருந் துஞ்சேடன்
கக்கால மும்பொருந்துங் காண் **1202**

*தகுமுறையில் பக்குவமாகச் செய்யப்பட்ட மருந்து அமிர்தம் போன்றது. முறை தவறி செய்யப்பட்ட மருந்து விடம் போன்றது.*

### மறுபாகம்

பாகமொடட் டிக்குளிர்ந்த பாணியிர சாயனநல்
வேகவிலே கங்குடிநீர் மெய்ச்சுரசம் - ஏகுமிரா
மீந்தவெஞ்ச னாதிகளை மீளவொருக் காலட்டி
மாந்தநஞ்சம் வேறிருக்கு மா **1203**

*பக்குவமாகக் காய்ச்சி ஆறிய வெந்நீர், இரசாயனம், வீரியமுள்ள இலேகியம், கஷாயம், தனியே இடித்துப் பிழிந்த சுரசம், முன் இரவில் மீந்த பதார்த்தம் இவற்றை மறுபடி சுட வைத்து உண்பது விடத்தை உண்பதற்கு ஒப்பாகும்.*

### மருந்துவைக்கும்பாத்திரம்

தெங்கின் குடுக்கை திகிரிதந்தப் பாத்திரத்தார்
நன்கிராப் புன்மருந்தும் நன்மருந்தாம் - வெண்கலத்தால்
மையிரும்பால் கட்டைகளால் மாக்கொம்பால் பாத்திரங்கள்
செய்யினிரண் டாம்பக்ஷம் செப்பு **1204**

*தேங்காய்க் குடுக்கை, மூங்கில், பரணை, தந்தசிமிழ் இவற்றில் வைக்கும் நலமில்லா மருந்தும் நல் மருந்தாகும். வெண்கலம், இரும்பு, மரம், மிருகங்களின் கொம்பு இவற்றாலான பாத்திரங்களில் மருந்துகளை வைத்தெடுப்பது சுமாராகும்.*

## மருந்தூட்டும் பாத்திரம்

வாதமுதன் முப்பிணியோர் வைத்துறையுண் பாத்திரத்தின்
பேதமுறை யேகேள் பெருங்கஞ்சம் - சாதகும்பந்
தாம்பரமா மின்றென்னிற் சக்கிரிகைப் பாத்திரம்நன்
றாம்பரமாயுட் கொடுக்குமாங்கு 1205

*வாதநோயாளி - வெண்கலப்பாத்திரம், பித்தநோயாளி – தங்கக்கலன், சிலேட்டுமநோயாளி – தாம்பரக்கலன் முறையில் உண்ணக் கொடுக்க வேண்டும். இல்லையேல் மண்பாத்திரமே யாவர்க்கும் சிறந்ததாம்.*

## மருந்தூட்டுங்காலம்

அனிலநோ யர்க்கசன மாகாமுன் பித்தத்
துனியர்க் கசனநடு தூயை - யெனுநோயர்க்
காகாரப் பின்னு மருத்திலுறை யப்பிணியாற்
சாகாரப் பின்னுலகிற் றான் 1206

*வாதநோயாளிகளுக்கு, உணவுக்கு முன்னும், பித்த நோயாளிகளுக்குப் பாதி உணவு உண்ட பிறகும் ஐயநோயாளிகளுக்கு உண்ட பின்பும் மருத்துண்ணக் கொடுத்தல் சிறப்பு.*

## மருந்தருந்திய பின்பு வாயிலிடும்வஸ்துக்கள்

சீவற் கனமதுதி ராட்டைதும்பை மூக்குகிராம்
பூவற் சரநெற் பொரிசசித்தூட் - பூவி
னிருந்துண்ட நீர்மைகுன்றா தேற்றுமேன் மக்கண்
மருந்துண்ட வாய்க்கிவையா மால் 1207

*கொட்டைப்பாக்குச் சீவல், நாகப்பூ, தேன், திராட்சைப் பழம், வெற்றிலைக்காம்பு, கிராம்பு, ஒருவருடங்கடந்த நெற்பொறி, பச்சைக் கற்பூரத்தூள் இவை உண்ட மருந்தின் தன்மையைக் கெடுக்காத பொருட் களாதலால் இவற்றில் ஒன்றை மருத்துண்டபின் வாய்க்குக் கொடுக்கலாம்.*

### உறக்கம்நீக்கி மருந்தூட்டும்உபாயம்

வேசையர்கூத் தொன்றொழித்த வேறுவே றாங்கூத்தால்
ஆசியத்தால் கீதத்தால் அற்புதத்தால் - வீசுபகல்
தூக்கமருள் நீக்கியுறை துய்ப்பித்த ணங்கையுள்ளார்க்
கூக்கமருள் வார்மருத்து வர் *1208*

*பலவகை கூத்து, இசை போன்றவற்றில் ஈடுபடுத்தி பகல் தூக்கத்தை விலக்கி நோயாளிக்கு மருத்துவர் மருந்தூட்டுவர்.*

### சிகிச்சை

சூதகந்தி தாதுபஸ்பஞ் சொர்ன்னநாட் டார்சிகிச்சை
ஓதரிய மூலியிம்மண் ணூர்ச்சிகிச்சை - வேதடரும்
சத்திர க்ஷா ராக்கினிநி சாசரச்சி கிச்சையொன்றே
முத்தரத் தாகும் மொழி *1209*

*சிகிச்சை மூவகைப்படும், இரசம், கந்தம், பற்பம், முதலியவை களைக் கொண்டு செய்வது தேவகண சிகிச்சை. மரம் முதலான மூலிகை களைக் கொண்டு செய்யப்படுவது மானுடசிகிச்சை. அறுத்தல், காரம் வைத்தல், சுடல் முதலான செய்யப்படும் மருத்துவம் இராட்சச சிகிச்சை என்பன அவ்வகையாம்.*

### காலபேதவிரேசனம்

குடிநீர்கற் கந்தயிலங் கோடைக்காம் பேதி
கடுமாரி மூடுபனிக் காலங் - கெடுமவைகள்
சோபிக்கு மெக்களிக்குஞ் சூதமுப்பிற் கும்பேதி
சோபிக்கு மெக்காலுஞ் சொல் *1210*

*குடிநீர், கற்கம், ஆமணக்கு நெய் இவை கோடைக்கால பேதி மருந்துகளாகும். மழை, பனிக் காலங்களில் கொடுத்தல் அவற்றின் குணங்கள் மாறுபடும். மேற்கூறிய மூன்று காலங்களிலும் நேர்வாளம் பலவித கள்ளிப்பால், இரசம், உப்பு இவை சேர்ந்த மருந்துகளைக் கொடுத்தால் முறையாகப் பேதியாகும்.*

## மருந்துகுணம்

### அயச்சிந்தூரம்

அயத்தில்வரு சிந்தூரம் ஐயமொடு சோபை
வயிற்றில்உறு காமாலை மாற்றும் - புயத்திற்குச்
செய்யபலம் உண்டாக்குந் தீபனத்தைத் தான்எழுப்பும்
வெய்யபாண் டோட்டும்இது மெய் 1211

*இச்செந்தூரம், கபநோய், வீக்கம், காமாலை, பித்த பாண்டு இவற்றை நீக்கும். உடல்பலம், பசி இவற்றையுண்டாக்கும்.*

### காந்தச்சிந்தூரம்

காந்தச்சிந் தூரத்தைக் கண்டவுடன் உந்திவலி
போந்தஅதி சாரசுரம் போவதன்றி - வாந்திகப
காசசு வாசவினை காமாலை பாண்டுவொடு
பூசலிடு நோயனைத்தும் போம் 1212

*இது உந்தி வலி, சுரம், வாந்தி, சயம், இருமல், இரைப்பு, காமிலம், பாண்டு, வேறு பல நோய்கள் இவற்றைக் குணமாக்கும்.*

### தாமிரபற்பம்

உருவங்குறு பசியும்பெறு முரமும்பெறு முரமா
மிருகண்டரு டநயன்பெறு மிகையும்பெறு குவரே
வருசெம்புறு மலினந்தெறி வகையும்பொடி வகையும்
பருகும்பெரு விதமுந்தெரி பவரம்புவி மிசையே 1213

தாமிர பஸ்பஞ் சகலகுன் மங் குறைநோய்
சோம்புகுஷ்டம் எல்லாந் துரத்தும்என்பார் - தேம்பி
இருக்கின்ற பித்தமுடன் ஈளைசுரஞ் சன்னி
குருக்கின்ற வாயுவும்போக் கும் 1214

*இப்பற்பம், செய்யும் முறையுடன் செய்து சரியான வகையில் உண்டால் பசி, பலம், ஆயுள்விருத்தி இவற்றையுண்டாக்கும். மேலும் இது குன்மம், பெருநோய், மூர்ச்சை, பித்தம், சுவாசம், சுரம், வாயு இவற்றையும் நீக்கும்.*

### வங்கசிந்தூரம்

வங்கசிந் தூரம் மதுமேகம் நீர்இழிவோ
டங்கமுறு தாகம் அகற்றுங்காண் - பொங்கிவரும்
ஓதஉதி ரத்தால் உறுவிரண நோய்போக்கும்
தாதுவையுண் டாக்கும்அது தான் *1215*

*இது மதுநீர், அதிமூத்திரம், சுரம், இரத்தப்பெருக்கத்தால் விளைந்த புண்கள் இவற்றை ஒழித்து தாதுவைப் பெருக்கும்.*

### ஆனந்தபைரவம் - சுத்தபைரவம் - சொர்னானந்தபைரவம் - பிரமானந்தபைரவம் - ஆனந்தரசம் - வினோதபைரவம்

ஆனந்த பைரவம்பின் அடர்சுத்த பைரவஞ் சொன்
னானந்த பைரவம்பிர் மானந்த பைரவம்மா
ஆனந்த ரசம்வினோத மாம்பை ரவம்இவற்றால்
வானந்த மேவுரூட்சை வருதிரி தோஷம்போமே *1216*

*ஆனந்த பைரவம், சுத்த பைரவம், சொர்னானந்த பைரவம், பிரமானந்த பைரவம், ஆனந்த ரசம், வினோத பைரவம் இவை முதன்மையான சுரங்கள், திரிதோட நோய்கள் இவற்றைப் போக்கும்.*

### சுத்தமண்டூரம் - மகாமண்டூரம் - சித்தமண்டூரம் - திரிகடுகாதிமண்டூரம் - நாராயணமண்டூரம்

சுத்தமண் டூரம் துதிமகா மண்டூரம்
சித்தமண் டூரம் திரிகடுகம் - ஒத்திடுமண்
டூரநா ராயணமண் டூரம் இவைக்குவெகு
தூரமாம் பாண்டொடுசோ பை *1217*

*சுத்த மண்டூரம், மகாமண்டூரம், சித்த மண்டூரம், திரிகடுகாதி மண்டூரம், நாராயண மண்டூரம், இவற்றிற்கு ஐவகைப் பாண்டு நோய்களும் ஆறுவித சோபைகளும் நீங்கும்.*

### வாதராட்சசமாத்திரை - தசவிதஅக்கினிகுமாரம்

இகல்வாத ராக்ஷசனுக் கெண்பது வாய்வும்
புகலாமல் ஓடும் புறத்தே - இகலார்
தசவித அக்கினிகு மாரர்க்குச் சன்னி
நசிசுரங்க ளும்போம் நடுங்கி 1218

*வாத ராட்ச சமாத்திரைக்கு எண்பது வகை வாதநோய்களும், தசவித அக்கினி குமாரத்தினால் சன்னியும் சிலவகைச் சுரங்களும் நீங்கும்.*

### கோரோசனாதிகுளிகை - தாககோபசமன மாத்திரை

கோரோச னாதி குளிகைக்குப் பித்தசுரம்
தீராத தாகம் சிறுவர்சுரம் - நேராது
தாககோ பச்சமனந் தன்னாற் சுரஞ்சன்னி
தாகபித்தம் போமே தணிந்து 1219

கோரோசனை மாத்திரையால் பித்தம், நாவறட்சி, குழந்தைகள் சுரம், இவை விலகும். தாககோபசமன மாத்திரையால் சுரநோயும். சன்னியும் பித்த தாகமும் தீரும்.

### குன்மகுடோரம் - சுயம்அக்கினி - பாஷாண பின்னவச்சிர ரசம்

குன்ம குடோரமெனக் கூறில்அஷ்ட குன்மமும்போம்
வன்னசுய மக்கினிக்கு வாயுமந்தம் - பின்னமுறும்
பாடாண பின்னவச்சிர மாரசத்தைப் பார்த்தவுடன்
கேடாகும் கல்அடைப்பிற் கே 1220

*குன்மக்குடோர மாத்திரைக்கு எண்வகைக் குன்மங்களும், சுயமாக்கினி மாத்திரைக்கு தனிவாத சீரணமும், பாஷான பின்னைவச்சிர ரசத்தினால் நான்கு வகைக் கல்லடைப்பு நோய்களும் நீங்கும்.*

### மேககுலாந்தகன் - சர்வசித்திரசம்

மேக குலாந்தகனால் மேககுலம் போம்அரிய
யோகசர்வ சித்திரசம் ஒன்றுக்கே - போகும்
பெருமூத் திரமென்ற பேரும்பே தித்து
வருமூத் திரமும்அறி வாய் 1221

*மேக குலாந்தக மாத்திரைக்கு 20 வித மேகங்கள், சித்திரசத்திற்கு வெகு மூத்திரம், சொட்டு மூத்திரங்களும் நீங்கும்.*

## கோடாசலக்குளிகை - மகாவன்னிரசம்

கோடா சலத்தால் கொடும்பாண்டு சோபைமுதல்
ஓடாக் கிராணியும்போம் உண்மையே - நீடுமகா
வன்னிரசம் என்னுரைக்கில் வாடாச் சலோதரமும்
பின்னிடையும் தப்பாது பேசு 1222

*கோடாசலக்குளிகையால் பாண்டு நோயும், வீக்கம், நீங்கா கிரகணி இவை நீங்கும். மகா வன்னி ரசத்திற்குச் சலோதரம் நீங்கும்.*

## உலகோத்தமரசம் - வங்கேஸ்வரம் - நாரசிங்கரசம்

உனாத உலகோத் தமரசத்தால் உன்னும்
வினோதம்எனும் பேதி விளையும் - கனமான
வங்கேஸ் வரத்திற்கு வல்லைகுன்மம் போம்நார
சிங்கம்மூ லச்சுரந்தீர்க் கும் 1223

*உலோகத்தமரசத்தால் பற்பல வியாதிகள் நீங்கும், பேதி யுண்டாகும். வங்கேஸ்வரத்திற்கு வல்லைக்கட்டியும் குன்மக்கட்டியும் நீங்கும். நாரசிங்கரசத்திற்குப் பழஞ்சுரம் விலகும்.*

## சிந்தாமணிக்குளிகை - திரிலோகசிந்தாமணிக்குளிகை

சிந்தா மணிக்குளிகை சேர்ந்தமலக் கட்டறுக்கும்
உந்துசுர வாயுவையும் ஓட்டுங்காண் - நந்தாத்
திரிலோக சிந்தா மணியென்னிற் சன்னி
திரிலோகத் தப்புறம்போம் சென்று 1224

*சிந்தாமணிக்குளிகை பழைய மலச்சிக்கலையும், உட்டிண வாயுவையும் நீக்கும். திரிலோக சிந்தாமணி மாத்திரை சன்னியைப் போக்கும்.*

## திரிலோகசூடாமணி - திரிலோகரட்சாமணி

திரிலோக சூடா மணிக்குந் திறல்சேர்
திரிலோக ரக்ஷா மணிக்கும் - உரநோவு
காசம்விக் கல்சன்னி கபம்தலைநோய் மந்தம்சு
வாசம்பாண் டும்போம் மதி 1225

*இவ்விரண்டிற்கும் மார்புவலி, இருமல், காசம், சன்னி, கபம், தலைவலி, மந்தம், இரைப்பு, சரீர வெளிறல் ஆகியவை நீங்கும்.*

### ராஜமிருகாங்கம் - மகாராஜமிருகாங்கம்

ராஜமிரு காங்கம்அது ராஜநோய் போக்குமகா
ராஜமிரு காங்கம்அது ராஜநோய் - காசகபம்
பாண்டுகா மாலை பலபீந சம்சோபை
தாண்டுபித்த நோயகற்றுஞ் சாற்று *1225*

*ராஜமிருகாங்க மாத்திரை சயத்தை நீக்கும். மகாராஜமிருகாங்க மாத்திரை சயகாசம், சுவாசம், பாண்டு, காமிலம், பீநசம், வீக்கம், பித்தம் இவற்றைப் போக்கும்.*

### ராஜகண்டேச்சுரம் - ராஜராஜேச்சுரம் - ராஜகேசரிவடகம்

ராஜகண் டேச்சுரமும் ராஜரா ஜேச்சுரமும்
வீசுசுரம் எல்லாம் விலக்குங்காண் - ராஜநற்
கேசரிய தாம்வடகம் கேதஞ்செய் தோஷசுரம்
நாசமுறக் காட்டுமதை நாடு *1226*

*இம் மாத்திரைகள் வாதசுரம் முதலான சுரங்களையும், வடகம் 13 வகையான சன்னி சுரங்களையும் போக்கும்.*

### சந்திரோதயம் - சந்திரகாசரசம் - சந்திரபிரபாவ வடகம் - பூரணசந்திரோதயம்

சந்திரோ தயத்தால்வெப்பந் தணியுஞ் சந்திரகா சத்தாற்
பிந்துமுத் தோஷஞ்சந்திர பிரபாவ வடகமோநான்
கைந்துநீர் போக்கும்பூர்ண மாஞ்சந்தி ரோதயத்தால்
விந்துவு மதிகரிக்கும் வீறுநோய்க் குழுவும்போமே *1227*

*சந்திரோதய மாத்திரை வெப்பத்தைத் தணிக்கும். சந்திரகாச மாத்திரை திரிதோடம் போக்கும். சந்திரபிரபாவ வடகம் 20 வகை மேகங்களை நீக்கும். பூரணசந்திரோதயம் வீரிய விருத்தியை உண்டாக்கும்.*

### வசந்தகுசுமாகரம்

வசந்தகுசு மாகரத்தால் வல்லகயம் காசம்
உசந்தவிஷ பாண்டுகுன்மம் ஊற்றாய்க் - கசிந்தநீர்க்
கட்டுபுளி யேப்பமொடு கல்அடைப்பு தாகமிவை
விட்டு விடுங்காண் விரைந்து *1228*

*இது சயம், இருமல், விடபாண்டு, குன்மம், சொட்டு மூத்திரம், புளியேப்பம், கல்லடைப்பு ஆகியவற்றை நீக்கும்.*

## மகாவசந்தகுசுமாகரம்

மகாவசந்த குசுமாக ரத்தால் வந்த
வாயுகபம் பித்தமந்தம் வயிற்று நோய்கள்
விகாரவுன் மாதங்கா மாலை பாண்டு
விடுசிநீர்க் கட்டுசன்னி குன்மஞ் சோபை
யகாதக்ஷய காசசுவா சம்பிர மேக
மதிசார மெலும்புருக்கி விக்கல் மூலஞ்
சிகாவாதஞ் சுருங்குகுட்டம் மார்பு நோயுந்
தீருமதற் கனுபானந் தெரியுங் காலே *1229*

*இதனை அனுபானமறிந்து கொடுத்தால் முத்தோடம், மந்தம், வயிற்றுநோய்கள், உன்மத்தம், காமாலை, பாண்டு, விடபேதி, மூத்திர விந்து, சோபை, காசம், சுவாசம், பிரமேகம், கழிச்சல், என்புருக்கி, விக்கல், மூலம், சிகாவாதம், குட்டம், மார்புநோய் இவை தீரும்.*

## இலங்கேச்சுரம் - பிதாபலங்கேச்சுரம்

இலங்கேச் சுரத்திற் கெழுசூதி கைக்கால்
இலங்கா கிராணியுமோ இல்லை - நலங்கொள்பிர
தாபலங் கேச்சுரத்திற் சாந்தமாஞ் சீதசுரம்
சோபமுறு நோயினமுஞ் சொல் *1230*

*இலங்கேச்சுரத்திற்குச் சூதிகாவாதமும், கிரகணியும், பிரதாபலங்கேச் சுரத்தினால் சீதசுரம், மூர்ச்சை முதலிய பிணிகளும் நீங்கும்.*

## ஏகாதசருத்திருகுளிகை - சிந்தூரபூஷணம்

ஏகா தசருத் திரம்என்னும் மாத்திரைக்குப்
போகாத சன்னிசுரம் போகுங்காண் - வாகான
சிந்தூர பூஷணத்தால் சீர்கருப்ப மாதருக்கு
வந்தசுரம் போம்உணரு வாய் *1231*

*இவற்றின் முன்னது சன்னி சுரத்தையும், பின்னது கர்ப்ப மாதர்க்குரிய சுரத்யையும் போக்கும்.*

### பூபதிமாத்திரை

நாவிலிட அன்னமுறும் நாளும் விஷம்போகும்
மேவுசுரம் சன்னிகளும் விட்டுப்போம் - காவிவிழி
மானார் வசியம்வரும்லே பனம்ஆகும்
தானேகேள் பூபதிக்குத் தான் *1232*

*இம்மாத்திரைக்கு விடம், சுரம், சந்நிபாதங்கள், இவை நீங்கி பசி, பெண்வசியம், ஆண்குறி எழுச்சி இவை உண்டாகும்.*

### நவலோகபூபதி - சூலைப்பூபதி

நவலோக பூபதிக்கு நண்ணுசுரம் சன்னி
புவலோக வாழ்க்கைவிட்டுப் போங்காண் - ஓவுசூலைப்
பூபதிக்குச் சூலைசன்னி பொங்கனலம் தென்றிசைவாழ்
பூபதிக்கா ளாகும் புகல் *1233*

*நவலோக மாத்திரை சந்தசுரம், சன்னி விலகும். சூலைப்பூபதிக்குக் கீல்பிடிப்பு, சன்னி, தாபச்சுரம் இவை கெடும்.*

### பூபதிரசம் - இரசபூபதி

பூபதிர சத்திற்குப் போஞ்சந்நி மந்தம்ரச
பூபதிக்குச் சன்னி பொருபாண்டும் - கோபமிகு
காசம்சு வாசம் கடுஞ்சூலை பாண்டுமுதல்
நாசம் கபவாய்வும் நாடு *1234*

*பூபதி ரசத்திற்கு சன்னி, மந்தம், இவை நீங்கும். இரசபூபதிக்கு சன்னி, சோமநோய், இருமல், இரைப்பு, கீல்பிடிப்பு, பாண்டு, சிலேட்டும நோய், வாத தொந்தம் இவை நீங்கும்.*

### பிணிக்குமருந்தளவுகூறல்

தாதுநஷ்டம பஸ்மாரஞ் சுவாச காசந்
　　தனியுன் மாதம்மிவைக் காண்டுறையா மென்பர்
மோதுகிரிச்சரம் விரணங் கல்லடைப்பு
　　முதிர்மேக நீர்க்குமருந் தீரைந் திங்க
ளோதுமுதா வர்த்தமர்த் தாங்கமேழென்
　　றுரைவித் தி ரதிக்குமருந் தரையாண் டன்றி
மீதுவேண் டாவுரைத்த விம்மட் டுண்ணின்
　　விலகுமவை சேடமற விரும்பிக் காணே *1235*

சோகபகந் தரமூல முதிரச் சூலை
சூலைகுரு திக்குன்ம மசுர்க்கு நோயா
நாகமுப யாஷ்டிலநோய் திமிரங் குன்ம
நாறுகய மிவைக்குறைகே ணான்காந் திங்க
ளாகமடி மூர்ச்சைதவுல் லியகி ரந்தி
யாம்மிலபித் தஞ்சீத பித்த முட்டீ
யேகவரு மதிமந்தஞ் சோம ரோக
மிவைக்குறைமும் மதியுண்ணி னினீமீ ளாவே *1236*

வாந்திவிக்கல் கணம்மாந்தம் பேதி கட்கு
மண்டலமொன் றுறைவாதங் காமி லங்கட்
கேந்திருமண் டலமுறைபற் பாண்டு சோபை
யெண்மகோ தரம்பிரிதி துனிகட் கூக்க
மேய்ந்திடமும் மண்டலநல் லுறைநாட்சென்ற
மொழிவில்சுரங் கட்குறைமண் டலநான்குன்னி
மாந்திடுபோ மித்திரனே சகல நோய்க்கு
மருந்தூட்டின் மீட்டுமலை வாட்ட வாறே *1237*

சுக்கிலநட்டம், அபஸ்மாரம், சுவாசகாசம், உன்மத்தம் ஆகிய பிணிகளுக்கு ஒரு வருட காலமும், கிரீச்சரம், துட்ட விரணம், கல்லடைப்பு, மதுமேகம் இவற்றிற்குப் பத்து மாதமும், உதரவர்த்தத்திற்கு ஏழு திங்களும், வித்திரதிக் கட்டிக்கு ஆறுமாதமும், பகந்தரமூலம், இரத்தசூலை, வாதசூலை, இரத்தகுன்மம், அசிர்க்கரம், அட்டிலம், பிரத்தி அட்டிலம், திமிரம், குன்மம், சயம், இவற்றிற்கு நான்கு மாதமும் விருதரவாதமும், மூர்ச்சைதவுல்லிய விரணம், ஆமிலபித்தம், சீதபித்தம் பசியைக்கொடுக்கும் அசலம், சோமநோய் இவற்றிற்கு மூன்று மாதமும் வாந்தி, விக்கல், கணம், மாந்தம், அதிசாரம் ஆகியவற்றிற்கு ஒரு மண்டலமும் வாதம், காமாலை ஆகிய நோய்களுக்கு இரு மண்டலமும் பாண்டு, சோபை, மகோதரம் ஆகிய பிணிகளுக்கு மூன்று மண்டலமும், பழஞ்சுரத்துக்கு நான்கு மண்டலமும் மருந்து கொடுக்க வேண்டும். இவ்வாறு எண் முறை அறிந்து மருந்தூட்டினால் அப்பிணிகள் மீண்டும் அணுகாதாம்.

## பத்திய வகை

### பிணியாளர்க்கு - குடிநீர் - சுரசம் - சலம் இவைகளின் உஷ்ணநிதானவிதி

*சத்தநற் குடிநீர் காண்டஞ் சுரசமுண் டிடி லூதைக்கு*
*மெத்தவுஞ் சூடாம்பித்தம் வெப்பிரத்தஞ் சன்னிக்கு*
*முத்தமங் குளிர்ச்சியாகு மோங்கைக்குச் சிறியசூடாங்*
*கொத்தடர் தொந்தநோய்க்குக் குளிர்சமோட் டினமாங்கூறே* *1238*

*நல்ல குடிநீர், வெந்நீர், சுரசம், முதலியவைகளை அருந்தும் போது வாதநோய்க்கு மிகுந்த உட்டிணமும், பித்தம், சுரம், சத்தியோவிரண ரத்தம், சந்நிபாதம் இவற்றிற்குக் குளிர்ச்சியும், சிலேட்டும நோய்க்கு குறைந்த சூடும், தொந்த நோய்க்குச் சமவெப்பமும் நல்லது.*

### பிணியாளர்க்குத் தயிர் தோய்க்கும்விதி

*காற்றொழிக்க வென்னிலுப்புங் காலொடுசே ரையென்னுங்*
*கூற்றொழிக்கச் சுக்குங் குறுமிளகு - மூற்றடுபித்*
*தம்மொழிக்கக் கட்டியும்பா றன்னிவிட்டுத் தோய்ப்பர்ததி*
*யம்மொழிக்க மாட்டா தவர்* *1239*

*தயிரை, மோரை நீக்காத பிணியாளர்கள் வாயுவை நீக்க இஞ்சியும், வாதகபத்தை ஒழிக்க சுக்கும், சிறுமிளகும், பித்தத்தை விலக்க வெல்லமும் பாலிலிட்டுக் காய்ச்சி தயிர்தோய்ப்பார்கள்.*

### பிணியாளர்க்குமோர் சேர்க்கும்விதி

*கிரிச்சந் தனக்குவெல்லங் கேள்பாண்டு நோய்க்கும்*
*அரிப்பேதி கட்குஞ்சுக் காகும் - எரிப்பான*
*மேகந் தனக்குத்தேன் மிக்குபிணிகட் களையுள்*
*ஊகங் கொடிவேலி யூட்டு* *1240*

*கிரிச்சரத்துக்கு வெல்லம், பாண்டு, வாதக்கழிச்சல் இவற்றிற்குச் சுக்கும், மேகத்திற்குத் தேனும், மந்தாக்கினியால் ஏற்பட்ட நோய்கட்கு சித்திரமூலப்பட்டையும் தயிரில் ஊறவைத்துக் கடைந்த மோரையும் கூட்ட வேண்டும்.*

### மருந்துண்பார்க்கு ஊறுகாய்

சுண்டை நெல்லி தேருகளா தூதுவளை பாவட்டையா
தொண்டை நாரத்தங்கச் சறிஞ்சி - பண்டைநாட்
சென்ற வருணக்காயுஞ் சேருரு காயென்னிற்
தின்ற மருந் தீனமுரா தே

*சுண்டை, நெல்லி, தேற்றான், களா, தூதுவளை, பாவட்டை ஆதொண்டை, எலுமிச்சைக் காய்களும் நாரத்தம் பிஞ்சும், இஞ்சியும் நல்ல உப்பில் ஊறவைத்துப் புசித்தால் தின்ற மருந்தின் குணங்கெடாது.*

### அயச்சிந்தூரத்தின்பத்தியம்

பத்தியந் திலங்கூசுமாண்டம் பறங்கிகொள் கடுகுதோரை
கத்தரி பிரமபத்திரி கள்கஞ்சா வபினிமாதர்
சுத்த மாகாதுபானெய் துய்த்திட லாம்புளிப்புப்
புத்தம மகற்றலானா லுத்தமம் பழுதுமின்றே **1241**

*அயச்செந்தூரத்திற்குப் பூசனி, கொள்ளு, கடுகு, மூங்கிலரிசி, கத்தரி, புகையிலை, கஞ்சா, அபினி இவை ஆகா. புணர்ச்சியும் கூடாது. பசுவின்பால் ஆகாது. அதில் உப்பும் புளிப்பும் நீக்கி உண்ணல் நலம்.*

### காந்தசிந்தூரம்

பத்தியம் புளியுப்பின்றேற் பலிதமாம் வாரத்துள்ளே
நத்திடி லிரண்டுவார நவிலுமிச் சாபத்தியங்கொள்
கத்தரிக் காயகத்தி கடுகுகூசு மாண்டமெள்ளு
கொத்தவ ரைக்காய்மாங்காய் கூலக்கா யிவையாகாதே **1242**

*புளியும் உப்பும் நீக்கினால் ஒரு வாரத்திற்குள் பயனைத்தரும். அவற்றை இச்சா பத்தியமாக உண்டால் நோய் குணமடைய இரு வாரங்களாகும். ( இச்சா பத்தியமென்பது கத்தரி, அகத்தி, கடுகு, பூசனி, எள், கொத்தவரை, மாங்காய், பலாக்காய் இவற்றை நீக்கவேண்டும். )*

## தாம்பிரபற்பம்

புளியொன்று தவிரவெல்லாம் புசிக்கினு நவையுறாதை
யிளைபெரு நெருப்புக்கீர மில்லையென் பதுபோலாகு
மளைமுசல் லிகுசங்காடி யாமில மடாதுபாகற்
சுளையரமகட் பழம்நெய்சுதை சருக்கரைமா நன்றே 1243

*புளிதவிர்த்து மற்றன புசித்தாலும் தவறில்லை. புளித்ததயிர், முயல்கறி, எலுமிச்சம்பழம், காடி, நெல்லிக்காய் இவை கூடாது, பலாச் சுளை, வாழைப்பழம், நெய், சுண்ணாம்பு, சருக்கரை இவை ஆகும் என்பர்.*

## பாதரசம்

மற்சமுப்பு சீதோட்டின மந்தாதி வத்தெண்ணெய்
துற்சமத்தி யங்கைப்பு தூவுபுளி - யைச்சற்றுங்
கூட்டாமற் சூதங் கொடுப்பருண்டா ரைச்சமன்பாற்
காட்டாமற் றாமிருத்தக் காண் 1244

*மீன், உப்பு, சீதள வெப்பமுள்ள பண்டங்கள், மந்தப்படுத்தும் பொருட்கள், எண்ணெய், கசப்பு, புளிப்பு இவற்றை நீக்கவேண்டும்.*

## பரங்கிப்பட்டை

மஞ்சளோ டெண்ணெய்பாக்கு மாங்கிசம் அலுவாகாரம்
இஞ்சிகார் கடுகுகைத்தல் இழிவுறு புளிமண்உப்பு
மஞ்சுறு வாளைகோலா மடவைமீன் சன்னை வெளவால்
கிஞ்சிதம் அருந்தின்மாதே கெடும்பரங் கித்தோலென்னே 1245

*பரங்கிப்பட்டை உண்ணும்போது கறிமஞ்சள், நல்லெண்ணெய், களிப்பாக்கு, மாங்கிசம், காரம், இஞ்சி, கடுகு, கசப்பு, புளிப்பு, உப்பு, மீன்களில் வாளை, கோலா, மடவை, சன்னை, வெளால் முதலானவற்றை நீக்கவேண்டும்.*

### தைலங்கள்

புலர்த்திய பின்பருந்து போஜனந் தனிற்புளிப்பு
சலத்துறு ததிபால்பாகல் சாகம்மீ னிறைச்சியச்ச
நிலத்தெழு பிரமபத்திரி நித்திரை மடவாரின்னு
நலத்துறா வகைநீக்குப்பின் னாளும்பத் தியத்துணில்லே *1246*

*தயிலம் தேய்த்து முழுகிய பின்னர் புளி, தயிர், பால், பாகற்காய், இலைக்கறி, மச்சவகை மாமிசங்கள், அகத்தி, புகையிலை, பகல்நித்திரை, புணர்ச்சி போன்றவற்றைத் தவிர்த்தல் வேண்டும்.*

### முக்கியமாக மருந்துகளுக்கு தகாதவஸ்துக்கள்

சிந்தக் கனிமிகுந்த ஜீவனந்தாம் பூலம்வெல்லம்
பந்தப் பயற்றுப் பருப்புமோர் - சிந்து
கடலையிவை யற்றுறைக நித்திடார் தங்க
ளுடலையிவை யத்திருத்தா ருன் *1247*

*புளி, நீர்ப்பொருட்கள், அடைக்காய், கரும்புவெல்லம், காராமணி, மோர், கடலைப்பருப்பு, ஆகியவற்றை நீக்கவேண்டும்.*

### பத்தியபதார்த்தங்கள்

பொன்னாங்காணி சிறுகீரை புதியநறுநெய் வரால்குறவை
சொன்னேங் கோவைக்காய் வற்றல் சுண்டையவரைப்பிஞ்சுட
பன்னாஅப்பை வெள்ளுள்ளி பரியமுருங்கை யிளம்பிஞ்சும்
நன்னீர்விளைந்த சிறுபயிறு நன்மாங்காய்க்குட் பிஞ்சுநன்றே *1248*

அத்திப்பிஞ்சு கருவாழை யதன்றன்பிஞ்சு பூவாகும்
கத்தித்திரியும் ஊர்க்குருவி காடையுடனே சிவல்ஆமை
சுத்தமாங்காய் நறும்பருப்பும் சுறாமீன் திருக்கைக் கருவாடாம்
பத்தியத்தில் இவைதவிரப் பச்சைமீன்கள் பகையாமே *1249*

வேண்டிய மருந்துண்பார்கள் விராலொடு குறவைதேளி
ஆண்டிடும் அயிரைஊடான் ஆனசன்னையுஞ் சுதும்பும்
ஈண்டிடும் இருநெய்த்தோலி யிவைகளை அருந்துங்காலை
மீண்டிவை உலர்ந்ததாகும் விரைமலர்க் குழலினாளே *1250*

காடைஉடும்பு கவுதாரி காட்டின்எலியும் ஊர்க்குருவி
ஆடுவிரும்பில் வெள்ளாடாம் அதுவும்உலர்த்திக் கறிகொள்ளு
நாடுதனில் வாழ்வரால்குறவை நலமாமிவையும் உலர்த்திக்கொள்
கூடுங்கூடா தென்னாதே கூட்டில் மருந்துங் குணந்தருமே 1251

*பொன்னாங்காணி, சிறுகீரை, புதிதாக உருக்கிய பசுநெய், கோவை, சுண்டவற்றல்கள், அவரைப்பிஞ்சு, கோவைக்காய், வெள்ளைப்பூண்டு, முருங்கைப்பிஞ்சு, பனிப்பயறு, மாவடு, அத்திப்பிஞ்சு, வாழைக்கச்சல், வாழைப்பூ, மாம்பருப்பு, ஆகியவைகளும் எரிவரால், குறவை, சிட்டுக்குருவி, காடை, கவுதாரி, ஆமை, விலாங்கு, கடல்குறவை, தேளி, அயிரை, ஊடான், சன்னை, சுதும்பு, நெய்த்தோலி, உடும்பு, காட்டெலி, இவற்றின் கறிகளும் சுறா, திருக்கை, காடை, கவுதாரி, ஊர்க்குருவி, வெள்ளாடு, இறா, குறவை ஆகியவற்றின் கருவாடுகளும் ஆகும் என்பர்.*

## பேதியைக்கட்டுகிற பதார்த்தங்கள்

மானேவயிறு கழிவார்க்கு வாழைக்கச்சல் அத்திக்காய்
கானே திரியும்ஊர்க்குருவி காடைஉடும்பு கவுதாரி
தானே யாகும் முயல்உலரில் தக்ககுளத்துக் கருவாடாம்
மீனே விரும்பித் தின்பீரேல் வீணேஉயிரை யிழந்தீரே 1252

*பேதியுடையோர்க்கு வாழைப்பிஞ்சு, அத்திப்பிஞ்சு, சிட்டுக்குருவி, காடை, உடும்பு, கவுதாரி, முயல், குளத்துக்கருவாடு இவைகளாகும். சரியாக வேகாத மீனை அருத்தினால் உயிருக்கே அபாயமாகும்.*

## பேதியாகிற பதார்த்தங்கள்

காரா மணிக்கீரை காட்டுப் பரங்கியிலை
பேராம் பெரும்பயற்றின் பேர்இலைகள் - சீரார்
அகத்திபருங் கத்திரிக்காய் ஆயிழையே மீன்கள்
பகைத்ததிக பேதிதரும் பார் 1253

*காராமணி, பரங்கி, பருங்காராமணி, அகத்தி இவற்றின் கீரைகள், கத்திரிக்காய், பச்சை மீன்களும் பேதியை உண்டாக்கும்.*

### பத்தியாபத்திய பதார்த்தங்கள்

*மயறி குறவை வரால்தேளி மற்றுங் குறவை நாய்க்கெளிறு*
*அயிரை சன்னை பத்தியமாம் ஆகா மீன்கள் இனிக்கேளும்*
*உயரும் வாளை இறால்கூனி ஓங்குங்கெளிறு விலாங்குகெண்டை*
*கயலோ டிவைகள் ஆகாவாங் காரார் குழலே கண்டுரையே* **1254**

*மயறி, குறவை, வரால், தேளி, ஆற்றுக்குறவை, நாய்க்கெளிறு, அயிரை, சன்னை ஆகிய மீன்கள் பத்தியப் பொருட்களாகும், வாளை, இறால், சன்னக்கூனி, பருங்கெளிறு, பரும் விலாங்கு, பருங்கெண்டை, சேற்கெண்டை என்னும் இவை பத்தியத்திற்காகாதவை.*

### அபத்தியபதார்த்தங்கள்

*கொள்ளு காடி குமட்டிக்காய் கோழி பன்றி கொக்குடனே*
*முள்ளிற் பெரிய பாகற்காய் முதிரும் அவரை பயற்றங்காய்*
*பள்ளத் தெழுந்த மடற்சேம்பு படரும் வள்ளி பாலையிவை*
*எள்ளத் தனைதான் தின்பீரேல் எல்லா மருந்தும் இழந்தீரே* **1255**

*மாங்கா யிளநீர் மாதுளங்காய் மாவின்பண்டம் புளிகடுகு*
*தேங்காய் நெய்பால் கிழங்குபழம் தின்னுங்காயம் வெங்காயம்*
*ஈங்கா தரிக்குஞ் சுராபானம் ஈச்சங்கள்ளு பனங்கள்ளும்*
*ஆங்கேயிவற்றுள் ஒன்றேனும் அருந்தா திருந்தால் மருந்தாமே* **1256**

*கொள்ளு, காடி, குமட்டிக்காய், கோழி, பன்றி, கொக்கு, கொம்பு பாகல், பாலைக்கீரை, மாங்காய், அவரை, பயற்றங்காய், சேம்பு, வள்ளி, பால், இளநீர், மாதுளங்காய், மாப்பண்டம், புளி, கடுகு, தேங்காய், எருமைநெய், கிழங்குகள், முப்பழங்கள், பெருங்காயம், வெங்காயம், கள்ளு, ஈச்சன்கள்ளு, பனங்கள் இவை அனைத்தும் பத்தியத்திற்காகாத பொருட்களாம்.*

## வாதம் நீக்கும் பொருட்கள்

செங்கழு நீர்கோஷ்டந் தேன்மிளகு நல்லெண்ணெய்
தங்குபெருங் காயந் தழுதாழை - எங்கெங்கும்
கூட்டுசிறு முத்துநெய் கோதில் உளுந்திவைகள்
வாட்டும்அனி லத்தை மதி 1257

*செங்கழுநீர்க்கிழங்கு, கோட்டம், குறிஞ்சித்தேன், மிளகு, எள்ளெண்ணெய், பெருங்காயம், தழுதாழை இலை, சிற்றாமணக்கெண்ணெய், உளுந்து ஆகியவை வாதநோயினைப் போக்கும்.*

## பித்தம் நீக்கும் பொருட்கள்

கொம்மட்டி வாழைப் பன்னங் கொளுத்திய கரியினோடே
விம்மிய தண்ணீர்விட்டான் வேரெனுங்கிழங்கு சாந்தஞ்
செம்மைசேர் நெல்லிமுள்ளி சேரும்இம் மருந்தெல்லாமே
கம்மிய பித்தத்திற்குக் காலனென் றோதுவாரே 1258

சம்புநா வல்பீத்தாருச் சருமமும் முத்தாக்காசுஞ்
செம்பருத் தியுஞ்செழித்த தெங்கிளம் பூவும்கன்னல்
அம்புயத் தாதினோடே அதினுறு வளையம்நெய்தல்
வெம்பிய சீலைச்சாம்பல் வெள்ளைப்பூ சிணிக்காயென்னே 1259

*கொம்மட்டி, வாழைச்சருகு, சுட்டகரி, தண்ணீர்விட்டான் கிழங்கு, சந்தனம், நெல்லிமுள்ளி, சம்புநாவல், பெருமரப்பட்டை, கோரைக் கிழங்கு, செம்பருத்தி, தென்னம்பூ, கருப்புத் தாமரை, காந்தம், செங்கு வளை, கேசரம், துணிசுட்ட சாம்பல், கல்யாணபூசனிக்காய் இவை பித்தத்தை நீக்கும்.*

## சிலேஷ்மம் நீக்கும் பொருட்கள்

ஆவி னதுபால் அரத்தைமுள் ளங்கிமயில்
தூவி நறுஞ்சாம்பல் தூதுளம்தேன் - மாவோமம்
துய்ய சருக்கரை துழாய்விதைவி ளாம்பழமும்
ஐயமதை யோட்டும் அறி 1260

*ஆவின்பால், அரத்தை, முள்ளங்கி, மயிலிறகுச்சாம்பல், தூதுளைச் மூலம், மலைத்தேன், ஓமம், வெள்ளைச்சர்க்கரை, துளசிவிதை, விளாம் பழம், ஆகியவை சிலேட்டும நோயைப் போக்கும்.*

## மூலம் நீக்கும் பொருட்கள்

*மருள்சா ரடைகருணை வச்சிவல்லி காட்டுக்*
*கருணை புளிநரளை காறாக் - கருணை*
*மெருகோடு வெள்அறுகு வெண்சித்திர மூலம்*
*வருமூலம் போக்கும் மருந்து* **1261**

*மருட்கிழங்கு, வெண்சாரட்டைசமூலம், கருணைக்கிழங்கு, பிரண்டை, காட்டுக்கருணை, புளிநரளை, காராக்கருணை, மெருகின் கிழங்கு, வெள்ளறுகு, வெண் சித்திரமூலம் முதலியன மூலநோயைப் போக்கும்.*

## விஷத்தைப் போக்கும் மருந்துகள்

*பேய்ச்சுரை பேய்க்கொமட்டி பேய்ப்பீர்க் கொடுதுமட்டி*
*பேய்ப்புடலை புங்கழிஞ்சில் பேர்அவுரி - வாய்த்தமலை*
*வேம்புசிவ னார்வேம்பு வெள்ளருக்கு வெள்அறுகு*
*சோம்புவிஷம் போக்குமெனச் சொல்* **1262**

*பேய்ச்சுரை, பேய்க்கும்மட்டி, பேய்ப்பீர்க்கு, தும்மட்டி, பேய்ப் புடல், புங்கு, அழிஞ்சில், காட்டவுரி, மலைவேம்பு, சிவனார் வேம்பு, வெள்ளெருக்கு, வெள்ளறுகு இவை விடத்தின் வேகத்தைப் போக்கும்.*

## பித்தசமதிரவியம்

*மொச்சை கடலைபெரு முற்கம்உளுந் தேலம்வெந்தி*
*மெச்சு மிளகுசுண்டை வெண்ணெய்இஞ்சி - பச்சைநிறங்*
*காட்டுமப்பைக் கோவை கருநிம்பம் சீரகங்கள்*
*கூட்டுகறி பித்தசமம்கூறு* **1263**

*வெள்ளை மொச்சைக் கொட்டை, கடலை, பெருங்காராமணி, உளுந்து, ஏலம், வெந்தயம், மிளகு, சுண்டைக்காய், வெண்ணெய், இஞ்சி, அப்பைக் கோவைக்காய், கருவேப்பிலை, சீரகம் முதலியன சேர்ந்த காய்கள் பித்தத்தை நீக்கும்.*

### திரிதோஷ சமதிரவியம்

ஒன்றிய வாதபித்த கபம்இவை யுயராவண்ணம்
நன்றுறு கறிகள்எல்லாம் நாளுமே சமைப்பர்ஆய்ந்தோர்
தின்றிடு மிளகுமஞ்சள் சீரகம் உயர்ந்தகாயம்
வென்றிகொள் சுக்கோடேலம் வெந்தயம் உள்ளிசேர்த்தே 1264

*மிளகு, மஞ்சள், சீரகம், பெருங்காயம், சுக்கு, ஏலம், வெந்தயம், வெள்ளைப்பூண்டு, இவற்றை முறைப்படி சேர்த்து தினமும் உண்டால் முத்தோடங்களும் தன்னிலையில் மாறாவாம்.*

### அறுசுவைகள்

புளிதுவர்விஞ் சுங்கறியாற் பூரிக்கும் வாதந்
தெளியுவர்கைப் பேறில்பித்துச் சீறுங் - கிளிமொழியே
கார்ப்பினிப்பு விஞ்சிற் கபம்விஞ்சுஞ் சட்டிரதச்
சேர்ப்புணரி னோயணுகா தே 1265

*புளிப்பும், துவர்ப்பும் அதிகரித்தால் வாதம் அதிகரிக்கும். உப்பும், கசப்பும் அதிகரித்தால் பித்தம் அதிகரிக்கும். காரமும் இனிப்பும் அதிகரித் தால் சிலேட்டுமம் அதிகரிக்குமாதலால் அறுசுவைகளையும் முறைப்படி உணவுப்பொருட்களில் சேர்த்துண்டால் பிணிகள் நம்மை நாடா.*

### காலைக்கறிக்கான பயறுகள்

காலைக் கறிக்காகுங் காரா மணிஉளுந்து
தோலற் றிடுகடலை தோரைஎள்ளு - கோலமொச்சை
தட்டை சிறுபயறு தாழ்வில் கடுகுகறி
இட்டசுக்கு காயம் இவை 1266

*காராமணி, உளுந்து, கடலை, துவரை, எள், மொச்சைக்கொட்டை, தட்டைப்பயிறு, கடுகு, மிளகு, சுக்கு, பெருங்காயம் இவை காலைக் கறிக்கான பயிறுவகைகளாம்.*

## பகல்கறிவகை

*கந்த வருக்கங் கனிவருக்கும் வாதமெழு*
*மந்த வருக்கமந்த மாம்வருக்கங் - கந்தமுறு*
*தண்ணடைவ ருக்கந் ததிமோ ரிவைஎன்னா*
*ளுண்ணடையாற் றோடமறு மோர்* **1266**

*மதிய உணவில் கிழங்குகள், பழங்கள், வாதப் பொருட்கள், மந்தப் பொருட்கள், மணமும் நீர்த்தன்மையுமுள்ள காய்கள், எருமைத்தயிர், மோர் முதலியவற்றை உண்டால் சூரியவெப்பம், உடல் உழைப்பு இவற்றால் அப்பொருட்களின் தோடம் நீங்கும்.*

## இராக்கறி

*அவரைப்பிஞ் சத்திக்கா யாப்பால் முருங்கை*
*துவரைப் பருப்பாற்றுத் தோணி - யெவரையுமோ*
*கண்டா லிழுக்குங் கறித்தூ துணமிவையல்*
*லுண்டா லிழுக்குமிலையுண்* **1267**

*அவரைப்பிஞ்சு, அத்திக்காய், பசுவின் பால், முருங்கைப்பிஞ்சு, துவரம்பருப்பு, ஆற்றுமுள்ளிக்காய், காட்டுத்தூதுளங்காய் முதலியவற்றை மாலைக்காலக் கறிகளாக உண்டால் துன்பமில்லை.*

## காலை - மாலைப்போஜனத்தின் - நெய் - மோர் - பேதம்

*காலைக் கெருமைநெய்மோர் காரத்தோ டுண்ணலாம்*
*மாலைக்கா வின்னெய்மோர் வார்த்துணலா - மேலையண்ட*
*வெப்பப்புக் காலம் விரவிவர லாற்றுகளி*
*லொப்பப் பகற்கனற்கண் டுண்* **1268**

*காலையில் எருமை நெய், மோர், காரத்தோடு உண்ணலாம். மாலையில் பசுவின் நெய், மோர் இவற்றை உண்ணலாம்.*

## வாதமுதலியமூன்று தேகிகட்கும் - உப்புவகை

வாதபித்தை யென்றே வருதேகர்க் குக்கல்லுப்
போதவுப்பிந் துப்பாம் உணர்முறையே - ஓதவெள்ளம்
வற்றியஇந் துப்பதனை வாதமுத லோர்அருந்தக்
குற்றமிலை குற்றமிலை கூறு *1269*

*வாத உடலோர்க்குக் கல்லுப்பும், பித்த உடலோர்க்குக் கடலுப்பும், சிலேட்டும உடலோர்க்கு இந்துப்பும் ஆகும். மூவுடலோரும் இந்துப்பைச் சேர்த்துண்டாலும் தோடமில்லை.*

## வாததேகிகட்குக்கறி

மாட்டுப் பரங்கிவங்கம் மாமுருங்கை வெள்ளவரை
நாட்டுக் கூரப்பிஞ்சு நற்கருணை - காட்டுளுறை
மாகருணையுங் கருவில் வாதத்தெ ழுந்துவந்த
தேகருணை நற்கறியாந் தேர் *1270*

*வாதவுடலோர் கல்யாணப்பூசனி, கத்தரிக்காய், வழுதுளங்காய், முருங்கைப்பிஞ்சு, வெள்ளையவரைக்காய், மிதிபாகல், காராக்கருணை, காட்டுக்கருணை ஆகியவற்றை உண்ணலாம்.*

## வாததேகிகட்குக்கீரை

மேனிமுன்னை யாரைநறும் வேளைமணத் தக்காளி
யானைநெருஞ் சில்முசுக்கை யப்பைநெடுங் - கானிலுறை
மூக்குரட்டை நல்வசலை முன்பிவைக ளிற்கீரை
பாக்குவர்வா யுத்தேகர்க் காய்ந்து *1271*

*இத்தேகியர் குப்பைமேனி, முன்னை, ஆரை, நல்வேளை, மணித் தக்காளி, யானை நெருஞ்சில், முசுமுசுக்கை, அப்பைக் கோவை, காட்டு மூக்குரட்டை, நல்வசலை ஆகிய கீரைகளை உண்ணலாம்.*

## வாததேகிகட்குரசம்

சக்கர வர்த்திவெள்ளைச் சாரடைபா கல்முருங்கை
தொக்கில்இளந் தண்டுநறுந் தூதுணம்வார் - மைக்குழலே
சீதமுறு காணியிவை செந்தளிர்க ளிற்றினமும்
வாததே கர்க்கிரசம் வை *1272*

*சக்கரவர்த்திக்கீரை, வெள்ளைச்சாரடை, பாகல், முருங்கை, முளைக்கீரை, நல்லதூகளம், பொன்னாங்காணி இவ்விலைகளைத் தினமும் ரசம் செய்து வாத உடலினர்க்குக் கொடுக்கலாம்.*

## வாததேகிகட்கு வற்றல்

சுண்டைக்காய் பேய்ப்புடற்காய் தூதுளங்காய் நெல்லிக்காய்
தொண்டைமணத் தக்காளி தூஅவரை - பண்டைமுள்ளிக்
காயிவையின் வற்றல்களுங் காண்புரண்டை வற்றலுமாம்
வாயுதே கர்க்கறிந்து வை *1273*

*சுண்டை, பேய்ப்புடல், தூதுகளம், நெல்லி, ஆதொண்டை, மணித்தக்காளி, வெள்ளவரை, முள்ளி, காட்டுப்பிரண்டை இவற்றின் வற்றல் வாத உடலினர்க்குச் சிறந்தது.*

## வாததேகிகட்கு ஊறுகாய்

நாரத்தை தான்றிகடு நற்றேற்றான் நீடுகளா
ஏரொத்த புன்களா இவ்வகைக்காய் - காருப்பப்
பூறியகாய் ஆகும்உயர் இஞ்சி யும் அமையுங்
கூறனில தேகிக ளுக்கு *1274*

*வாத உடலினர்க்கு நாரத்தை, தான்றி, தேற்றான், பருங்களா, சிறுகளா, இஞ்சி இவற்றின் உப்பூறுகாய் நல்லது.*

## பித்ததேகிகட்குக்கறி

வெள்ளரி இரண்டுபாகல் விரிபுடல் பீர்க்குசிம்பை
முள்ளிபூ சனிகத்தரி முருங்கைமா களவரம்பை
எள்ளிலிக் காய்கள்வள்ளி ஈருளி கதலிப்பூதண்
டள்ளியுண் ஆணஞ்செய்வர் அரும்பித்த தேகர்க்கென்றே *1275*

*வெள்ளரி, கொம்புப்பாகல், மிதிபாகல், நீளப்புடல், பீர்க்கு, அவரை, ஆற்றுமுள்ளி, கல்யாண பூசனி, கத்தரி, முருங்கை, பருங்களா, வாழைக்காய், வள்ளிக்கிழங்கு, வெங்காயம், வாழைப்பூ, வாழைத்தண்டு இவற்றை பித்த உடலினர் சாப்பிடலாம்.*

## பித்ததேகிகட்குக்கீரை

புளியாரை கோவைமுருங்கை வசலைநற் பொன்முசுட்டை
மிளகப்பை யோரிதழ்த் தாமரை பாலைவெளிமுசுக்கை
வளர்தூ துணஞ்சுரை வல்லாரைசில்லி மணத்தக்களித்
தளிரிளங் கீரைகள் பித்ததேகிகள் தாமுண்பரே *1276*

*புளியாரை, கோவை, முருங்கை, வசலை, பொன்முசுட்டை, மிளகு, அப்பைக்கோவை, ஓரிதழ்த்தாமரை, பாலை, காட்டு முசுக்கை, தூதுவளை, சுரை, வல்லாரை, சிறுகீரை, மணித்தக்காளி இக்கீரைகளை பித்த உடலினர் உணவில் சேர்த்துக் கொள்ளலாம்.*

## பித்ததேகிகட்குரசம்

கொத்து வசலை கொடிவசலை நல்அகத்தி
தத்துபுனல் வழுக்கை தைவேளை - நெய்த்ததராச்
சாகங் களையவித்துச் சாறுவைத்துண் பார்பித்த
தேகங் களையுடையார் தேர் *1277*

*பித்த உடலினர் கொத்துவசலை, கொடிவசலை, வெள்ளையகத்தி, பிரிமிய வழுக்கை, தைவேளை, தரா ஆகிய இலைகளை வேக வைத்து இறுத்த நீரில் இரசத்தை உணவுடன் சேர்த்தருந்துவர்.*

## பித்ததேகிகட்குவற்றல்

சுத்தமுள்ளி பேய்ப்புடோல் தூதுணங்கான் சுண்டைகண்டங்
கத்தரிப யற்றைமணத் தக்காளி - நித்தமுறு
கஞ்சம்வல் லாரையிவை காய்த்தநறுங் காய்வற்றல்
விஞ்சுபித்த தேகிகட்காம் விள் *1278*

*வெண்முள்ளி, பேய்ப்புடல், தூதுவளை, காட்டுச்சுண்டை, கண்டங் கத்தரி, பயற்றங்காய், மணித்தக்காளி, தாமரை, வல்லாரை ஆகிய இவ்வகைக் காய்களின் வற்றல்கள் பித்தவுடலோர்க்காகும்.*

## பித்ததேகிகட்கு ஊறுகாய்

பச்சை மிளகிஞ்சி தூதுளங்காய்முப் பலநார்த்தங்
கச்சை தமரத்தம்புன்னை வடங்கபித் தம்மில்லமா
கொச்சையி ளம்பிஞ்சு மாகாளிக்கந்தங் கொளுஞ்சியெலு
மிச்சையுப் பூறிய காய்பித்ததேகர்க்கு மிக்குநன்றே *1279*

*இவ்வுடலோர்க்கு பச்சைமிளகு, இஞ்சி, தூதுணம், கடு நெல்லி, தான்றி, நாரத்தை, தமரத்தை, புன்னை, ஆள், விலா, தேற்றான், மா ஆகியவற்றின் இளம்பிஞ்சுகளும் பருநன்னாரிக்கிழங்கு, கொழுஞ்சி நாரத்தங்காய், எலுமிச்சங்காய் ஆகியவற்றின் ஊறுகாய் நல்லது.*

## சிலேட்டுமதேகிகட்குக்கறி

கத்தரிபேய்ப் புடல்அவரை யிருபாகல்
பகுங்களா கண்டங்காரி
அத்திக்காய் களும்வருக்கை மாபயற்றை
சுரையால் பீர்க் கரும்பிஞ்சும்வேர்
மொய்த்தகூ ரணங்கதலித் தண்டுகளப்
பூமுளங்கி முருக்கரும்பும்
அஸ்திபூச னிக்காயீ ருள்ளிவள்ளி
யுங் கபத்தோர்க் காணமாமே *1280*

*கத்தரி, பேய்ப்புடல், அவரை, கொம்புப் பாகல், மிதபாகல், பெரியகளா, கண்டங்கத்திரி, அத்தி ஆகிய இந்நான்கும் பலா, பயிற்றம் பிஞ்சு, சுரை, ஆல், பீர்க்கு, இவற்றின் பிஞ்சு, கருணைக்கிழங்கு, வாழைத் தண்டு, வாழைப்பூ, முள்ளங்கி, முள்முருக்கின் அரும்பு, பூசனிக்காய், வெங்காயம், வள்ளிக்கிழங்கு ஆகியன சிலேட்டும உடலினோர்க்காகும்.*

## சிலேட்டுமதேகிகட்குக்கீரை

*காரையிரு கோவைமுன்னை செம்பை புடோல்*
*துயிலிவழுக் கைநெருஞ்சில்*
*ஆரைபுளி யாரைமுல்லை மருதநெய்தல்*
*மேனிநல்வல் லாரைபொன்னா*
*வாரைமுசுக் கைமுருங்கை யிருபிண்ணாக்*
*கோடுபண்ணை மணலி பிள்ளைக்*
*கீரைமுசுட்டை யுங்காரா மணிமாடங்*
*கடலைபுளிக் கிரிக்களாவே* *1281*

*வேளைமணித் தக்காளி மென்சீதை சக்கரவர்த்தி*
*பீளை வசலைசுக்கு பெண்சுணங்கன் - வேளையிவைச்*
*செந்தளிர்க ளைக்கீரை செய்வர்கப தேகர்நிதம்*
*வந்தளியுணத்தான் மகிழ்ந்து* *1282*

*காரை, அப்பக்கோவை, வரிக்கோவை, பசுமுன்னை, கருஞ்செம்பை, பேய்ப்புடோல், துயிலி, பிரமி, வழுக்கை, நெருஞ்சில், நீராரை, புளியாரை, முல்லை, மருதம், நெய்தல், குப்பைமேனி, வல்லாரை, பொன்னாவாரை, முசுமுசுக்கை, பெரும்பிண்ணாக்கு, சிறுபிண்ணாக்கு, பண்ணை, மணலி, முளைக்கீரை, முசுட்டை, காராமணி, உளுந்து, கடலை, புளிப்புள்ள மலைக்களா, வேளை, மணித்தக்காளி, பொன்னாங்காணி, சக்கரவர்த்தி, பீளை, வசலை, சுக்கு, கற்றாழை, நாய்வேளை, வேளை இக்கீரைகளைச் சிலேட்டும உடலினர் சமைத்து உண்ணல் நலம்.*

## சிலேட்டுமதேசிகட்குரசம்

*கந்தஓ மஞ்செங் கடுகுசத குப்பைதரா*
*வெந்தயங் கொத்துமலி வேளைசுக்கு - முந்தகத்தி*
*தூறுகுறிஞ் சாபாகல் தும்பையிச்சா கங்கள்வெந்த*
*சாறுகப தேகர்க்காஞ் சாற்று* *1283*

*சிலேட்டும உடலோர் ஓமம், செங்கடுகு, சதகுப்பை, வெந்தயம், கொத்துமல்லி, வேளை, சுக்கு, அகத்தி, குறிஞ்சா, பாகல், தும்பை இவற்றின் இலைகளை அவித்து இறுத்த நீரில் ரசம் வைத்துண்பது சிலேட்டும உடம்பினர்க்கு நல்லது.*

## சிலேட்டுமதேகிகட்குவற்றல்

சுண்டைமணித் தக்காளி தூதுணம்பு ரண்டையா
தொண்டைமுள்ளி பேய்ப்புடலை தொண்டைசிம்மை - கண்டை
கத்தரிநெல் லிப்பிஞ்சு காநரந்தம் பிஞ்சிவைகள்
ஒத்தவற்றல் ஐத்தேகர்க் குண் *1284*

*சுண்டை, மணித்தக்காளி, தூதுணம், பிரண்டை, கோவை, முள்ளி, பேய்ப்புடல், ஆதொண்டை, அவரை, கண்டங்கத்தரி, இவற்றின் காய்களையும் நெல்லி, காட்டு நாரத்தைப் பிஞ்சுகளையும் வற்றல்களாக உண்பது சிலேட்டும உடலோர்க்குச் சிறந்தது.*

## சிலேட்டுமதேகிகட்குஊறுகாய்

மஞ்சள் மிளகுசுண்டை வாழைத்தண் டோடுமாம்
பிஞ்சாலம் பிஞ்சத்திப் பிஞ்சுகளும் - விஞ்சுகபம்
நூறுநறுந் தூதுணமு நொய்யபா கற்பிஞ்சும்
ஊறுகாயைத் தேகர்க் கோது *1285*

*இவ்வுடலோர் பசுமஞ்சள், மிளகு, சுண்டை, வாழை இளந்தண்டு, மாம்பிஞ்சு, அத்திப்பிஞ்சு, தூதுணம், மிதிபாகற்பிஞ்சு ஆகியவற்றின் ஊறுகாய்களை உணவில் சேர்ப்பது சிறந்தது.*

## கால - தேக - திரவிய - அவிரோதபதார்த்தம்

எல்லாக் கறிகளுமே யெல்லுக்கா மல்லுக்கா
மெல்லாக் கறிகளுமெல் லார்க்குமாம் - பொல்லாக்
கறிகளுக்குச் சத்துருக லந்தமைத்து நன்றாங்
கறிகளுக்குள் வைத்தருந்துங் கால் *1286*

*மேற்சொன்ன தோடமுள்ள கறிகாய்களை நல்ல பொருட்களுடன் சேர்த்துண்டால் இரவு, பகல் இருகாலத்தும் எல்லோரும் உண்ணலாம்.*

## இவ்விதநோய்க்குத் தாம்பூலங்கூடாதெனல்

மதமூர்ச்சர ரோக மகாசந்தி பாத
மதிரூட்சை சுட்கநோ யாறா - முதிர்விடங்கள்
பித்தங் கயஞ்சிரநோய் பேசுமிவைக் காகாது
சுத்தந்தாம் பூலமெனச் சொல் *1287*

*மகோதரம், மூர்ச்சை, சன்னி, தாபச்சுரம், தேகத்திலூறிய விடம், பித்தம், சயம், தலைநோய், ஆகிய நோய்களுள்ளோர் தாம்பூலம் அருந்தலாகாது.*

## இவ்விதநோய்க்கு நெய்கூடாதெனல்

தருணசுரஞ் சந்நி சலதோடந் தோட
மரணம கோதரமா நாகம் - வருணவதி
சாரங்க வீனவுரை தாவரிக்குன் மங்களுக்கா
தாரங்க வீனவுரை தள் *1288*

*தருணசுரம், சன்னி, நீர்க்கோவை, சப்ததோடம், பெருவயிறு, ஆநாகம், பேதி உடன்தோன்றும் வாதம், குன்மம் இவை அதிகமாவதற்கு நெய்யே காரணமாதலால் அதனைத் தள்ளுவாயாக.*

## இவ்விதநோய்க்குத் தயிர்கூடாதெனல்

குட்டமதைப் பக்கிநோய் குன்மங்கா மாலைமந்தந்
துட்டவிடு சிக்களச்சூர் சோபைகபங் - கெட்டசுர
மீரமிவை பீநசம்பி லீகம்புண் பாண்டோடதி
சாரமிவைக் கில்லை ததி *1289*

*குறைநோய், வீக்கம், கண்ணோய், வாதகுன்மம், காமாலை, மந்தம், துட்டவிடுசி, களப்பிணி, சோபை, கபம், விடசுரம், பீநசம், பீலிகம், கிரந்தி, பாண்டு, பேதி இவைகளுக்குத் தயிர் கூடாது.*

## தற்காலபலாபலபதார்த்தம்

திரிபதார்த் தம்பலமே செய்யு முடனே
திரிபதார்த் தம்மபலஞ் செய்யுந் - தெரிமுறையே
சீதவம்பு ணர்ச்சியூன் றேனு சொரிநறும்பா
லாதவம்பு ணர்ச்சிதை லம் *1290*

## தினக்கிரமாலங்கார குணம்

### சொர்னவீடு

மேனிதனிற் காந்திஎழில் வீறும்உத ராக்கினியும்
ஞானமுமே தோதாது நண்ணுங்காண் - மானே
மிகைசேர் சகலகுண விர்த்திகளும் விர்த்தி
தகைசேர் சொர்ன்னத்தின் இல்லத் தால் *1291*

*இவ்வீட்டில் வசிப்பவர்களுக்கு உடற்பொலிவு, அழகு, சடராக்கினி, அறிவு போன்ற பல சிறப்புகளை உண்டாக்கும்.*

### கருங்கல்வீடு

அலங்கா ரமுமதமு மக்கினியு நீங்குந்
துலங்கா தவமுந் துலங்கா - திலங்க
வருங்கலகப் பித்து மனத்துயரை நோயுங்
கருங்கலகப் பித்தர்க்குக் காண் *1292*

*கருங்கல் வீட்டில் வசித்தால் உலகில் விளங்கும் சூரிய, சந்திர கிரணங்கள் இல்லை. இதனால் அழகும், வீரியமும், உதராக்கினியும் நீங்கும். பித்தம், சிலேட்டுமம் இவற்றால் துன்பலம் உண்டாகும்.*

### மேல்வீடு - ஓட்டுவீடு - புல்வீடு

நீட்டையுறு மேல்வீடு நீணிலவெப் போடுபல
வேட்டை யொழிக்குங்காண் மிக்கெழிலா - லோட்டையுறு
கல்வீ டுயர்வெனினுங் காலிமஞ்சா ராநலத்தாற்
புல்வீ டுயர்வாம் புகல் *1293*

*உயர்ந்த மெத்தை வீடானது விடவுயிர், மிருகம் இவற்றால் உண்டாகிற பலவித துன்பங்களை நீக்கும். ஓட்டுத் தடுக்குள்ள கல்வீடானது அழகால் உயர்ந்தாலும் காற்று, பனிசாராமையால் விழல் தடுக்கு வீடே உயர்வானதாகும்.*

### காலைவிழிப்பு

புத்தி யதற்குப் பொருந்து தெளிவளிக்குஞ்
சுத்த நரம்பினற றூய்மையுறும் - பித்தொழியுந்
தாலவழி வாதபித்தந் தத்தநிலை மன்னுமதி
காலவிழிப் பின்குணத்தைக் காண் *1294*

*அதிகாலையில் விழிப்பதால் புத்தி தெளிவாகும். நரம்புகள் தூய்மை பெறும், பித்தம் நீங்கும். வாத, பித்த, சிலேட்டுமங்கள் தத்தம்நிலை பிறழாது நீங்கும்.*

### விழித்தவுடன் - சுத்தோதகம் - அருந்தல்

தூங்கி விழித்தவுடன் சுத்தோதக மருந்தி
லோங்கிநின்ற பித்த மொழிவதன்றித் - தேங்கு
மலமூத் திரந்தங்கா வாதாதி யுந்தந்
தலமாத் திரமுலவுந் தான் *1295*

*விழித்தவுடன் நீராகாரம், அல்லது தூய்மையான நீரை அருந்தினால் பித்தம் விலகும். மலக்கட்டு நீங்கும். வாதமுதல் மூன்றும் தன்னிலை பிறழாது.*

### விழித்தவுடன்பார்க்கத் தக்கவஸ்துக்கள்

கஞ்சந்தங் கந்தீபங் கண்ணாடி யெல்லங்கி
செஞ்சந்த நீர்மண் சிவலிங்க - மஞ்சங்கல்
கற்றா தமதுவலக் கைமனைத டாரியிவை
யுற்றால் விழிப்பிலுத்த மம் *1296*

*விழித்தவுடன் தாமரைப்பூ, தங்கம், விளக்கு, கண்ணாடி, சூரியன், புகையில்லா நெருப்பு, செஞ்சந்தனம், கடல், வயல், சிவலிங்கம், மேகம் சூழ்ந்த மலை, பசுவுங்கன்றும், தமதுவலக்கை, மனைவி, மிருதங்கம் இவற்றுள் ஏதேனும் ஒன்றைப் பார்த்தல் நலம் பயக்கும்.*

### விழித்தவுடன் பார்க்கத்தகாதவஸ்துக்கள்

ஊனமவத் திரம்பவங்கல் லாடைசங்கை
யூமைதட்டை செவிடிரங்கல் சடைநிராசை
கூனழுக்கு மேனிவிரி மூர்த்தந் தூக்கங்
குட்டமற நெய்த்தலையா குலமுன்மாதந்
தீனமறற் கயமிவையுள் ளார்முகத்துந்
தீட்டமுகை விதவைவஞ் சியர்முகத்துங்
கானவர விந்திபலி மூரிமாறு
கயிறுலக்கை முறத்திடத்தும் விழித்தறீதே 1297

*அங்க ஈனமுள்ளவர், காவி உடை அணிந்தவர், ஊமை, மொட்டைத் தலை, செவிடு, அழுகை, சடை மனிதரிடத்தில் விருப்பமில்லாதோர், கூன் விழுந்தோர், அழுக்கான உடலையுடையவர், தலைமயிரை விரித்திருப் பவர்கள், எப்போதும் தூங்கிக் கொண்டே இருப்பவர்கள், குட்டத்தால் பாதிக்கப்பட்டவர், கொலை செய்தவர், எண்ணெய் பூசிய தலையுள்ளவர்கள், மனநோயுள்ளவர்கள், மயக்க நிலையிலுள்ளவர், வறுமை நோயுள்ளவர், காச நோயுள்ளவர் இவர்கள் முகத்தைப் பார்த்தாலும் தீட்டு, அழுகையுள்ள மாதர் முகத்தைக் கண்டாலும் விதவையைப் பார்த்தாலும், பாம்பு, பூனை, சாம்பல், எருமை, விளக்குமாறு, கயிறு, உலக்கை, முறம் ஆகிய பொருட் களைப் பார்த்தாலும் கெடுதியுண்டாகும்.*

### விழித்தவுடன் கண்ணாடிபார்த்தல்

தாதுங் களிப்புஞ் சகலவ சீகரமும்
போத அறிவும்உண்டாம் பூதலத்துள் - நாதமுறும்
பண்ணாடிப் பார்க்கும் பனிமொழியே நீவிழிப்பிற்
கண்ணாடி பார்த்திதனைக் காண் 1298

*விழித்தவுடன் கண்ணாடி பார்த்தால் வீரியவிருத்தி, மகிழ்ச்சி, வசியம், ஞானம் இவை அதிகரிக்கும்.*

### காலையில் - சிலம்பம் - மல்யுத்தம்செய்தல் - குதிரையேற்றம் - பாதநடை - இவைகள்

சிலம்பமுதல் மல்யுத்தந் தேசிநடை கொள்ளிற்
பலம்பரவு மெய்யிறுகும் பன்னத் - துலங்குபசி
யுண்டாங் கபவாத மோடுவலி சூலையும்போம்
பண்டா மலம்இறங்கும் பார் *1299*

*காலையில் சிலம்பம், மல்யுத்தம், குதிரையேற்றம், நடை இவற்றைச் செய்வதால் பலமுண்டாகும். உடல் வன்மையுறும். பசியுண்டாகும்.*

### மிதாமிதவார்த்தை

மிதவார்த்தைக் குள்ளறிவு மெய்ச்சுகமுங் குன்றா
ததிவார்த்தைக் கவ்வுரைகெட் டப்போ - டுதிரமிவை
சுண்டும்பொங் கும்பித்தஞ் சூழுதலாலையவினை
யண்டும்பொங் கும்புனனோ யாய் *1300*

*அளவான வார்த்தை பேசினால் உள் அறிவும் உடல்நலனும் பெருகும். அதிகமாகப் பேசினால் மேற்சொன்ன இரண்டும் கெடும். அதுமட்டுமன்றி இரசதாதுவும் இரத்ததாதுவும் குறையும். அதனால் பித்தம் அதிகமாகும். சிலேத்துமமும் சலநோயும் தோன்றும்.*

### வெயில்

வாதமொடு காந்திகெடு மாதுயரம் வேர்வைபலம்
ஓதுபசி பித்தம்இவை யுண்டாங்காண் - கீதக்
குயிலி னிசைபழிக்குங் கோதின்மொழி மாதே
வெயிலின் உறுகுணத்தை விள் *1301*

வாதம், உடலின் அழகு இவை கெடும். துன்பம், வேர்வை, பசி, பித்தம் இவையுண்டாகும்.

## காலை-மாலை-வெயில்

காலைவெயிற் காய்ந்தார்க்குக் காணாப் பிணியனைத்தும்
பாலைவெயிற் போலப் பரவுங்காண் - மாலைவெயிற்
காய்ந்தார்க் குறுபிணிமுற் காசறுமி லக்கணநூ
லாய்ந்தார்க் குறுவழுச்சொ லாம் *1302*

*காலை வெயிலில் செல்பவருக்கு முன்பு இல்லாத நோயனைத்தும் பாலை நிலத்து வெயிலைப் போல வன்மையுடன் பரவும். மாலை வெயிலில் செல்பவருக்கு இலக்கண நூலை ஆராய்ச்சி செய்தவரிடம் வழுச்சொற்கள் நீங்குதல் போல் நீங்கி விடும்.*

## நிழல்

மேனி தடிக்கும் விவர்ன்னஅழ குண்டாகும்
போனவலி வாதமந்தம் பூரிக்குந் - தானே
வளர்ந்தேறுஞ் சோம்பல் மதிவதன மாதே
குளிர்ந்த நிழலின் குணம் *1303*

*உடல் பருமனாகும். அழகு பெறும். வாத, மந்தம், சோம்பல் இவை கூடும்.*

## மழைமந்தாரம்

நித்திரைகாந்தி நெடியபசி தாகம்போம்
ஒத்த மகிழ்ச்சிகுளிர் ஊதையொடு - மெத்த
அழைவந்தி டச்செய்யிரைப் பாதியநோ யுண்டாம்
மழைமந்தா ரத்தால் வழுத்து *1304*

*தூக்கம், உடலழகு, பசி, தாகம், இவை நீங்கி, குளிர், ஊதை, இரைப்பு ஆகிய நோயுண்டாகும்.*

## தீக்காய்தல்

தீக்காயில் வாதமொடு சீத நிவாரணமாம்
ஊக்கமிகு தாகம்அதி யுட்டிணமும் - நீக்கா
இரத்தபித்த நோயும் இரத்தக் கொதிப்பும்
உரத்தெழும்பு மென்றே யுரை *1305*

*வாதம், சீதம் இவை குறையும். தாகம், அதிக வெப்பம், இரத்த பித்தம், இரத்தக் கொதிப்பு இவை தீக்காய்தலால் அதிகமாகும்.*

### வேள்விப்புகை - சுடுகாட்டுப்புகை - தைலப்புகை

மகத்தூம மியாயுள் வளர்க்குஞ் சவஞ்சா
ரகத்தூம மத்தை யழிக்கு - மகத்தா
மருந்தயிலத் தூம மடர்வாத வன்னோய்
விருந்தயிலும் மென்றே விதி *1306*

*வேள்விப்புகையானது ஆயுளைப் பெருக்கும். காட்டுப்புகையானது ஆயுளைக் கெடுக்கும். தைலப் புகையானது வாதத்தைப் போக்கும்.*

### மலசலம்விடுத்தல்

இருமலங்க டங்கா விறங்குங்கான் மூன்றா
மிருமலங் கடங்கணிலை யெய்து - மிருமச்
சமனாக் கினிசாருஞ் சாராநோ யீட்டஞ்
சமனாக் கிணைசாரா தாம் *1307*

*மலசலம் இரண்டையும் சிக்கலின்றி இருநேரமும் கழிப்பவருக்கு வாத, பித்த, கபம் ஆகிய மூன்றும் தத்தம் நிலையில் இருக்கும். சடராக்கினி அதிகரிக்கும். நோய்கள் சேராது.*

### பல்விளக்கல்

துகளிலை காட்டமினை தொட்டுத் துலக்கிற்
றுகளிலை காட்டாது தோடந் - துகளிலைகண்
மெய்த்துவரை யொத்திருக்கின் மேனாள் வரைமூரன்
மெய்த்துவரை யொத்திருக்கு மே *1308*

*தூள், துவர்ப்பான இலை, கொம்பு இவற்றால் பல் விளக்கினால் வாத, பித்த, சிலேத்துமம் இவற்றால் பல்லிடத்தும் அதன் வேரிடத்தும் உண்டாகின்ற இருபத்துமூன்று நோய்களும் ஏற்படாது. பற்களும் இறுதி வரைக்கும் மலையைப் போல் உறுதியாயிருக்கும்.*

### பல்விளக்கத்தக்க கொம்புகள்

வேலுக்குப் பல்இறுகும் வேம்புக்குப் பல்துலங்கும்
பூலுக்குப் போகம் பொழியுங்காண் - ஆலுக்குத்
தண்டா மரையாளுஞ் சாருவளே நாயுருவி
கண்டால் வசீகரமாங் காண் *1309*

*கருவேலினால் பல்லுக்கு உறுதியும் வேம்பினால் ஒளியும் நீர்ப்பூலாவினால் வீரிய விருத்தியும் ஆலினால் லட்சுமி கடாட்சமும் நாயுருவியால் முகவசியமும் உண்டாகும்.*

## பல்விளக்கத்தகாத வஸ்துக்கள்

கல்லு மணலுங்கரியுடனே பாளைகளும்
வல்லதொரு வைக்கோலும் வைத்துநிதம் - பல்லதனைத்
தேய்த்திடுவா ராமாகில் சேராளே சீதேவி
வாய்த்திடுவள் மூதேவி வந்து *1310*

*செங்கல்மா, மணல்கரி, தென்னம் பாளை, வைக்கோல் இவைகளால் தினமும் பல் துலக்குபவரிடத்தில் லெட்சுமி நீங்கி மூதேவி சேருவாள்.*

## சுத்தநீராடல்

சுத்தப் புனலாடத் தொல்நமைச்சல் ஆயாசந்
தொத்தெரிச்சற் பாரிப்புந் தோன்றாவா - மெத்தனவுங்
காத்தி பலம்பசியுங் கட்டழகும் உண்டாகும்
ஏந்துமுலை மாதே யியம்பு *1311*

*ஆறு, மடுக்களில் அதிகாலையில் தினசரி முழுகுவோர்க்குத் தினவு, சோர்வு, வெப்பம், உடல்கனம் இவை நீங்கி உடலழகும் வலிமையும் பசியும் உண்டாகும்.*

## காலை - மாலை - குளியல்

காலைக் குளிக்குக் கடும்பசியுண் டாநோய்போ
மாலைக் குளிக்கவைகண் மத்திபமே - சோலையடை
வாசநீர் சுத்தசலம் வன்னிநீ ராங்கால
தேசமுடற் பேதமுன்னிச் செப்பு *1311*

*மாவிலை, நெல்லியிலை ஊறவைத்த நீர், சுண்ணப்பொடி தூவியநீர், இவை கலவா நீர், வெந்நீர் இவற்றை வீட்டில் வைத்து கால மாறுபாடுகளை உணர்ந்து அதிகாலை குளித்தால் உடல்பலமும், சடராக்கினியும் உண்டாகும். பல்வகை நோய்களும் நீங்கும். மாலையில் குளித்தால் இக்குணங்கள் மத்திபமாகும்.*

## மஞ்சற்குளியல்

மஞ்சட் குளிதனக்கு மாறாத்துர்க் கந்தமொடு
விஞ்சுமுக சாட்டியமும் விட்டகலுந் - தொஞ்சல்உறும்
ஐயம் ஒழியும் அடர்வியர்வுங் காணாது
வைய மதனில் வழுத்து *1312*

*மஞ்சள் குளிப்பதால் கற்றாழை நாற்றம் நீங்கும். முகநோய், சிரண சிலேட்டுமம், வியர்வை இவை நீங்கும்.*

## எண்ணெய் முழுக்குக் குணம்

### பஞ்சகற்பம்

மிருகமதம் பித்தமணி வேம்புகடு நெல்லி
கருகுநறும் பாலரைத்துக் காய்ச்சி - யொருகமிட
விங்கற்ப நோய்க்கு மிடமில்லை யெஞ்ஞான்றும்
மைங்கற்ப மீதே யறி *1313*

*கத்தூரி மஞ்சள், மிளகு, வேப்பம்வித்து, கடுக்காய்த்தோல் நெல்லிப் பருப்பு இவற்றைக் காராம் பசுவின் பால்விட்டரைத்துக் கொதிக்க வைத்து தலையில் தேய்த்து முழுகினால் எந்நாளும் பிணிகள் அவரை நாடாது.*

### அப்பியங்கனம்

தலைமுழுக்காற் சென்னிமுழந் தாள்இவைக்கு நீங்காப்
பலமுண்டாங் கேசம் படரும் - தலைநோய்போம்
பஞ்சோந் திரியம் பலத்துத் தெளிவையுறும்
எஞ்சாத் தொனியுமெழும் எண். *1314*

*அப்பியங்கனத்தால் மெய், வாய், கண், மூக்கு, செவி இவை பலம் பெற்றுத் தெளிவுறும். தலை, முழங்கால்கட்குப் பலம், உரோம வளர்ச்சி, குரல்வளம் இவை உண்டாகும். தலைவலி நீங்கும்.*

### நித்திய அப்பியங்கனம்

தினம்அப்பி யங்கனமே செய்யிற் சருமம்
மினுமினுக்குஞ் சோம்பல் விலகுந் - தனியான
ஐயமுத் தோஷம் அருசிதந்த நோயொழியும்
மெய்யுமிகப் புஷ்டியிடு மே *1315*

*தினமும் எண்ணெய் முழுக்கு மேற்கொண்டால் தோல் பளபளப்பும் தேகபலமும் உண்டாகும். சோர்வு, தனிக்கபநோய், திரிதோடம், சுவையின்மை, பல்நோய் ஆகியவை நீங்கும்.*

## பசு நெய் முழுக்கு

மைந்தர்முதன் முப்பருவ மாந்தர்க்கு மாமுடலின்
முந்தெரிச்ச லுன்மாத மூர்ச்சைகப - முந்திரத்த
பித்தமமா தாகமொடு பேசுவிகா ரங்களுக்கு
முத்தமமா மானெய்முழுக் குன் *1316*

*பசுநெய் தலைமுழுக்கு குழந்தைகள், இளைஞர், முதியோர் யாவர்க்கும் சிறந்தது. இரசதாதுவால் பிறந்த எரிச்சல், உன்மாதம், மூர்ச்சை, கபம், இரத்த பித்தம், அதிதாகம் இவற்றை நீக்கி பல நன்மைகளைத் தரும்.*

## தைலாதிகள்

எள்ளினெய்யு முக்கூட் டெனுநெய்யு மானெய்யும்
விள்ளுதயி லாதியென வீறுநெய்யு - முள்ளபடி
வாரந் தனக்கிருநாள் வைத்தாடி னோய்களதி
காரந் தனக்கிடமிற் காண் *1317*

*எண்ணெய், முக்கூட்டு நெய், பசுநெய், உணர்ந்த தயிலம் முதலியவைகளை எட்டு தினத்திற்கு இரண்டு முறை குளித்தால் பலவித நோய்களும் நீங்கும்.*

## தைலம்தேய்க்கும் விதி

எடுத்தநற் றயிலநாசிக் கீரிரண் டாறுகாதுக்
கடுத்திடத் துளிவிட்டுச்சி யங்கந்தா ளடிகளிற்கு
டெடுத்திடாத் தேய்த்தூறச்செய் திப்புறஞ் சிகைக்காய்வெந்நீர்
விடுத்துட னாடிநீரும் வியர்ப்புமற் றிடப்புலர்த்தே *1318*

*சுத்தமான தைலங்களை மூக்கில் 4 துளி, காதில் 6 துளிவிட்டு தலை, உடம்பு, பாதம் இவற்றில் தேய்த்து ஊறவைத்து பின்பு சிகைக்காய் தேய்த்து வெந்நீரில் குளித்து நீரும் வியர்வையும் நீங்க உலர்த்த வேண்டும்.*

## பாதாதிகளில் - தைலமிடல்

பாதத் திடிற்கண்ணோய் பாறுமக் கட்கிடினோ
காதுற் றெழுநோய்போங் காதுளிடி - னோதுந்
தலைநோ யகலுந் தலைக்கிடினோ யெல்லா
நிலையா வறலாடி னெய் *1319*

*எண்ணெய் முதலியவற்றை உள்ளங்காலில் தேய்த்தால் கண்ணைப் பற்றிய நோய்களும், கண்ணிற்குக் கட்டினால் செவிபற்றிய நோய்களும், செவியில் ஊற்றினால் தலை நோய்களும், தலையில் தேய்த்து முழுகினால் உடலிலுள்ள பல நோய்களும் நீங்கும்.*

## அரைப்பு வகை

சீக்கிராந் தூள்விரண தேகர்க் கரைப்பாகும்
ஆக்கிலுப்பைக் கட்டிசொறி யாளர்க்காந் - தூக்குமணிப்
புங்கரைப்புஞ் சீய்க்காயும் போக்கடிக்கும் எண்ணெய்களைக்
கங்குலுறை கூந்தன்மின்னே காண் *1320*

பருப்பரைப்புக் கோடிடுநெய் பன்னுமெண்ணெய் யாதிக்
கரைப்புச் சிகைக்காயு மாகுந் - தெருப்பன்றி
நெய்யாதி யாநெய்க்கு நீள்காரைப் பூண்டாதி
மெய்யா ரரைப்பாகும் விள் *1321*

*இரண உடலோர்க்கு உசிலத்தூள், சொறிதினவுடையோர்க்கு இலுப்பைப் பிண்ணாக்கு, எண்ணெய் முதலான தயிலங்கட்கு பொன்னாங் காய், சிகைக்காய், பசு நெய்க்குப் பச்சைப்பயிறு, பன்றி, காக்கை முதலிய நெய்கட்குக் காரைச்செடித் தூள் ஆகியவை அரைப்பாகும்.*

## ஸ்நானகாலவிதி

அயமா னிவைக்கைம் பதத்துளி யாழ்குளிர்க் கட்டமத்துள்
வயமா கனிக்குங்கோல் தேட்குநந் நான்குவின் மானிரண்டே
பயமார் கடமர்ச்சத் திற்குந் திரிக்குட் பகர்திங்களி
னயமாந் தயிலங்க ளாடவரோகமெய் நண்ணுவரே *1322*

*சித்திரை, வைகாசி மாதங்களில் சூரியன்தோன்றிய 5 நாழிகைக் குள்ளும், ஆனி, ஆடி மாதங்களில் எட்டு நாழிகைக்குள்ளும், ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை மாதங்களில் நான்கு நாழிகைக்குள்ளும் மார்கழி, தை மாதங்களில் இரண்டு நாழிகைக்குள்ளும் மாசி, பங்குனி மாதங்களில் மூன்று நாழிகைக் குள்ளும், தலை முழுக்கு கொள்வது சிறந்தது.*

## சவரம்

துக்கம் விரணந் தொடைவலி சூலங்காசந்
தற்கால சாந்தஞ் சவரத்தால் - மிக்குடற்குக்
காந்திமனப் பூரிப்பு கண்ஒளிவு காமம்உண்டாஞ்
சேர்ந்ததிங்கட் கொன்றிரண்டாந் தேர் *1323*

*மாதத்திற்கு இரண்டு முறை செய்து கொள்ளுகிற சவரத்தினால் மனத்துயரம், புண், தொடைநோய், குத்தல், இருமல் ஆகியவைகள் சற்றுக் குறையும். ஒளியும், மனக்கிளர்ச்சியும், விழிக்கு ஒளியும், தாக விருத்தியும் உண்டாகும்.*

# துணிவகை குணம்

## சாலுவை

*சலதோஷம் போகுந் தலைவலியும், ஏகும்*
*உலவிவரு நோய்வதாம் ஓடும் - வலிய*
*வயிற்றுவலி போங்குளிரை மாறாப் பனியைச்*
*சயித்ததொரு சாலுவைக்குத் தான்* **1324**

*நல்ல சால்வைக்கு நீரேற்றம், தலைநோய், வாதநோய், வாதகுன்மம், குளிர், மூடுபனி இவை ஒழியும்.*

## பட்டுத்துணி

*பித்த கபம்அகலும் பேரா மகிழ்ச்சியொடு*
*புத்தி மிகும்வியர்வை பூணுங்காண் - நித்தியமுங்*
*காந்தியது உண்டாங் கனஞ்சேர்பட் டுத்துகிலுக்*
*கேந்துமுலை மாதே யியம்பு* **1325**

*உயர்ந்த பட்டுத்துணி அணிந்தால் பித்த சிலேட்டுமம் நீங்கும். மனக்களிப்பு, அறிவு, வியர்வு, உடற்பொலிவு இவையுண்டாகும்.*

## வெண்பட்டுத்துணி

*வெண்பட் டுடையால் விரிசுரமுஞ் சீதமும்போம்*
*பண்பட்ட வதாம் பறக்குங்காண் - பெண்கிட்டுங்*
*காந்தியும்உண் டாகுங் கதித்த அழகும்உண்டாங்*
*காந்தி மதிமுகத்தாய் காண்* **1326**

*வெள்ளைப்பட்டிற்கு சுரம், குளிர், வாதநோய் இவைநீங்கும். பெண்வசியம், ஒளி, அழகு இவையுண்டாகும்.*

## நாருமடி

*சளியோடு நீர்ஏற்றந் தங்கா தகலும்*
*வளியோடு சந்நியும்பின் வாங்கும் - அனியினங்கள்*
*சேருமடிக் கூந்தன்மின்னே தேகமிகச் சுத்தியதாம்*
*நாருமடிக் கென்றே நவில்* **1327**

*நாருமடி உடுத்துவதால் கபம், நீரேற்றம், குடல்விருத்தி, வாதம், சன்னி சுரம் ஆகியவை நீங்கும். உடல் சுத்தி பெறும்.*

## வெள்ளைத் துணி

ஓடுந் திரிதோஷம் ஓங்காயுசும் பெருகுங்
கூடுந் திருஅழகுங் கூர்களிப்பும் - நீடுமதி
போதம்உறும் வெற்றிவரும் பூரிக்கு மெய்வியர்வின்
ஏதம்அறும் வெண்துகிலுக் கே *1328*

வெண் துகில் வாததோடம், வியர்வை நீக்கி, ஆயுள் விருத்தி, செல்வப் பெருக்கு, வனப்பு, மகிழ்ச்சி, அறிவு, பலம் இவற்றை உண்டாக்கும்.

## சிவப்புத் துணி

ஏந்துபித்தம் உஷ்ணம் எதிர்ந்த தருணசுரம்
வாந்தி யருசிகப மந்தமிவை - சேர்ந்திடுங்கால்
செய்ய கடுஞ்சிவப்புச் சீலையுடுத் தால் அவைகள்
பைய அதிகரிக்கும் பார் *1329*

*உட்சூடு, முறைச்சுரம், வாந்தி, அரோசகம், சிலேட்டுமம், கல்லடைப்பு இவற்றில் ஏதேனும் ஒன்று உருவாகுங்காலத்தில் மிகவும் சிவந்த ஆடை அணிந்தால் மேற்சொன்ன நோய்கள் பெருகும்.*

## மஞ்சள் துணி

நீர்க்கடுப்பு காசமொடு நீடு விஷசுரமுந்
தீர்க்கநமைச் சல்வெப்புஞ் சேர்மலமும் - பார்க்குண்மிக
அஞ்சியே யேகுமஞ்ச ளாம்வத்தி ரம்புனைந்தால்
வஞ்சியே நன்றாய் வழுத்து *1330*

*இதனால் வாத நீர்ச் சுருக்கு, இருமல், விடசுரம், தினவு, சுரம், மலக்கட்டு இவை நீங்கும்.*

## பச்சை துணி

மெய்யழலை ஏகும் விழிக்குக் குளிர்ச்சியுண்டாம்
பொய்யில் உடலமெலாம் பூரிக்கும் - ஐயம்அறும்
நச்சை நிகரு நளினவிழிப் பெண்ணமிர்தே
பச்சையுடை யின்குணத்தைப் பார் *1331*

*இது உட்சூடு, சிலேட்டுமம் நீக்கி கண்குளிர்ச்சி, உடல் பருமன் இவற்றை உண்டாக்கும்.*

### கறுப்புத் துணி

காசமொடு வெப்புங் கறுத்த கொடுவிஷமும்
பேசுமந் தாக்கினியும் பித்தமும்போம் - நேச
வெறுப்புறா வின்பநய மெல்லியலே நீலக்
கறுப்புநிற மாந்துகிற்குக் காண் *1332*

*கறுப்புத்துணிக்கு இருமல், சுரம், பாம்பின் நஞ்சு, அக்கினி மந்தம், பித்தம் இவை நீங்கும்.*

### அழுக்குத் துணி

நோயடருங் காந்திகெடும் நுண்ணறிவும் போயொளிக்குந்
தீயகுளிர் துக்கந் தினவுசங்கை - வாய்பேசக்
கூசுதலு முண்டாகுங் கோதாரு மாசுடைக்குப்
பேசுதலு மியாதிதற்குப் பின்பு *1333*

*அழுக்காடை அணிபவர்க்குப் பல துன்பம், மிகுந்த குளிர், நமைச்சல், சங்கை, பேசக்கூசுதல் போன்றவை உண்டாகும். உடல் ஒளியும், நுண்ணிய அறிவும் விலகும்.*

### கம்பளம்

பெரும்பா டசீரணங்கள் பேராக் கிராணி
அருஞ்சூலை பேதி யகற்றுங் - கருஞ்சீழைப்
போக்குங் குளிர்வாடை பொல்லாப் பனிநீக்கிக்
காக்கும் பருங்கம் பளம் *1334*

*குளிர்காக்கும் கம்பளம் பெரும்பாடு, அசீரணம், திரிதோடம், கிரகணி, கீல்பிடிப்பு, சூலை, வாடை, கொடியபனி, கழிச்சல், சீழ் இவற்றை நீக்கும்.*

### முண்டாசு - கவசம் - நடுக்கட்டு

முண்டாசு வாதபித்த முன்பொழிக்கு மெய்க்கவசம்
உண்டாயிற் காந்திபுஷ்டி யுண்டாகுந் - திண்டாடு
பித்தமறுந் தீயாம் பிணைத்தநடுக் கட்டுக்குக்
கொற்றமுறு வீரியமாங் கூறு *1335*

*தலையில் முண்டாசு கட்டினால் வாதம் பித்தம் போக்கும். கவசத்தால் தேகஒளி, புஷ்டி, உதராக்கினி உண்டாக்கி பித்தம் போக்கும். நடுக்கட்டு என்கிற அரைக்கச்சைக்கு பலம் பொருந்திய ஆண்மை உண்டாகும்.*

### ஆபரணம்

ஆபரணஞ் சூடி லரியலீ லாலயமா
மாபரண மெய்க்குமதி மங்கலங்காண் - சோபமனத்
துக்கத் தொடுநோய்போஞ் சொல்லா வசியமுறும்
மிக்குக் களிப்படரு மெய் *1336*

*ஆபரணம் உடலுக்கு அழகைக் கொடுக்கும். இதனால் மங்களம், மகிழ்ச்சி, வசீகரம் இவை தோன்றும். சோர்வு, மனத்துயரம், வியர்த்தி, உன்மத்தம் முதலியவை நீங்கும்.*

## புசிப்புகுணம்

### பசி

பசியா லழகாண்மை பாழியின்பு மோகஞ்
சுசியாவி வார்த்தையிவை சோரும் - பிசியாலாந்
தாதினத்தின் சீரணமுந் தள்ளு கிழத்தனமு
மோதினத்தின் பேதமுமா மோர் *1337*

*பசியால் அழகு, பலம், மகிழ்ச்சி, ஆசை, உயிர், பேச்சு இவை நீங்கும். தாதுக்களின் மாறுபாடு, மூப்புத்தன்மை, விரோதம் இவை உண்டாகும்.*

### போசனகாலம்

தன்மமி ரண்டேயூண் டப்பிமுக்காற் கொள்ளினினன்
சின்மதலை காளைகடல் சேர்பருவ - நன்முகுர்த்த
மொன்றுக்கு நான்குக்கு ளோதுமிரண் டுக்குளுண்பர்
நன்றுக்குத் தீயோர் நயந்து *1338*

*தருமநூற்கள் கூறிய முறைப்படி இரண்டு கால உணவுண்ணலே சிறந்ததாம். மூன்று காலம் உண்ணவேண்டுமெனில் சூரிய உதயம்முதல் மூன்றே முக்கால் நாழிகைக்குள்ளும் இடையில் 15 நாழிகைக்குள்ளும் இரவில் $7^1/_4$ நாழிகைக்குள்ளும் உண்ணல் நலம்*

## காலாகாலபோசனம்

மூன்றுநான் காறெண்மு கூர்த்தங்க ளின்முறையே
ஞான்றுளுண்ணு மந்த நறுமுணவே - தோன்றுடலுக்
கொக்குமித நோயரமு ரோகமுயிர்க் கந்தரஞ்செய்
விக்குமித மாராய்ந்து விள் *1339*

*சூரிய உதயத்தில் 11 ¼ நாழிகைக்குள் உண்ணும் நல்ல உணவு உடலுக்கு பலமாம். 15 நாழிகைக்குள் உண்பது மிதமாகும். 22 ½ நாழிகைக்குள் உண்பது நோய்க்கு வழிவகுக்கும். 30 நாழிகைக்குள் உண்பது உயிரை மாய்க்கும்.*

## போசனஞ்செய்தல்

ஆதி யினிப்புநடு வாம்பிரநீ ருப்பொடுசா
காதி யுறைப்பப்பா லந்தத்திற் - கோதிருவர்ப்
பாந்ததியுப் பூறியகா யாதிவகை சேருணவை
மாந்ததிசு கத்தையுறு வாய் *1340*

*உணவு உண்ணும்போது முதலில் இனிப்பும், நடுவில் புளிப்பும், உப்பு, உரைப்பு, இலைக்கறிகளும் முடிவில் துவர்ப்பு, புளித்த தயிர், ஊறுகாய் இவ்வாறு உண்பது நலமாம்.*

## போசன அளவைகூறல்

முக்கா லுணவன்றி யெத்தேகிகட்கு முழுவுணவி
லக்கா ரணமன்னசாகாதி கூடி யரையதிற்பால்
சிக்கா வமுதம்புதக்கிரங் காலுண்டிச் சேடம்வெளி
வைக்கா விடிலுண்டி வேகாதனலும் வளியுமின்றே *1341*

*சகல உடம்பினோரும் முக்கால் வயிற்றுணவே கொள்ளவேண்டும். இது உணவும் கறிகளும் சேர்ந்து ½ பங்கு, பால், மோர், நீர் கூடி ¼ பங்கு ஆக முக்கால் வயிற்றுணவாம். இன்னும் ¼ பங்கு இடைவெளி வாயு, அனல், பித்தம் இவை இருந்து உணவைச் செரிக்க செய்வதற்கேயாம்.*

## புசித்தபுசிப்பின் பிரிவுகூறல்

பிலத்தமரு முண்டிப் பிரிவை யுரைக்கிற்
பலத்த கிருமிகட்கோர் பங்கு - மலத்திற்கோர்
பங்குமாய் வில்லனற்கோர் பங்கு முடலினுக்கோர்
பங்குமாய்த் தங்குமுன்னிப் பார் **1342**

*துவாரத்தையுடைய தீனிப்பையில் தங்கிய உணவு நான்கு பிரிவாகும். ஒரு பங்கு கிருமிகளுக்கும். ஒரு பங்கு மலத்திற்கும், ஒரு பங்கு அனலுக்கும், ஒரு பங்கு உடலிற்குமாம்.*

## புசித்த அன்னசாரச் செய்கை கூறல்

ஒருநாளுண் ணனவிரத மிரததா துவைநனைத்தங் கூறிநிற்கு
மிருநாளுண் டிடினஃதங் கிரத்ததா துவிலேறு மிவ்வாறேபின்
வருநாளுண்டெழுநாளு மாயினஃதெழு தாதுவையும் வளர்த்தே
தருநாளுஞ் சோராத வலியதனை யெட்டாநாட் சடத்தினுக்கே **1343**

*ஒரு நாள் உண்ட உணவு இரசதாதுவை நனைத்துத் தங்கும். இரண்டாம் நாள் உண்ட உணவின் ரசம் அந்த ரச தாதுவில் ஏற, முன்ஏறி நின்ற ரசம் இரத்த தாதுவில் பாயும். மூன்றாம் நாள் மாமிச தாதுவிலும் நான்காம் நாள் ஏதோ தாதுவிலும், ஏழாம் நாள் சுக்கில தாதுவிலும் சென்று அத்தாதுக்களை விருத்தியடையச் செய்து எட்டாம்நாள் உடலிற்குக் குன்றாத வன்மையைக் கொடுக்கும்.*

# உண்கலகுணம்

## தங்கக்கலம்

தங்கக் கலத்திலுண்ணத் தாதுவிர்த்தி யும்பசியும்
பொங்க மிகுதிடமும் பூரிப்பும் - அங்குறையும்
பித்தசோ பப்பிணியிப் பேருலகை விட்டகலுஞ்
சுத்தரசத் தீங்கனியே சொல் **1344**

*தங்கக்கலத்திலுண்டால் தாது விருத்தி, பசி, பலம், மகிழ்வு இவையுண்டாம். பித்தசோகை நீங்கும்.*

### வெள்ளிக்கலம்

வெள்ளிக் கலத்திலுண்ண வீறி வருகபமுந்
துள்ளியெழு பித்தமும்போஞ் சொல்லவோ - விள்ளரிய
காந்தியுண்டா நாளுங் களிப்புண்டாந் தேகத்திற்
சேர்ந்திவரும் வாதமுண்டாஞ் செப்பு *1345*

*இதிலுண்டால் சிலேட்டுமமும் பித்தமும் நீங்கி, அழகு, மகிழ்வு, வாதம் இவை உண்டாகும்.*

### செம்புக்கலம்

செம்புக் கலத்துண்ணத் தேகஆ ரோக்கியமாம்
பம்பிரத்த தோஷம் பறக்குங்காண் - அம்புவியில்
அண்ணியிடுங் காந்தி யணங்கே விழியொளியாம்
புண்ணியமு நண்ணும் புகல் *1346*

*இதிலுண்டால் உடல் நலம், அழகு, கண்ணொளி இவற்றை உண்டாக்கி இரத்தப் பித்தத்தைப் போக்கும்.*

### வெண்கலக்கலம்

தாம்பிரத்தில் வெள்ளீயந் தான்கலக்க வெண்கலம்என்
றாம்பெயர்பெ றுங்கலத்துள் அன்னம்உண்ணில் - தேம்புகின்ற
சோபமொடி ரத்தபித்தந் தோன்றஅறி யாதனங்கன்
சாபமெனச் சொன்னுதலே சாற்று *1347*

*வெண்கலத்தில் உண்டால் சோர்வும் உதிர பித்தமும் போகும்.*

### தாம்பிரம் - வெள்ளி - கலப்பு - வெண்கலம் - இவைகளாற் செய்த - உண்கலம்

தக்கதாம் பிரத்தின்வட்டிற் றான்அதி ரத்தபித்தம்
மெய்க்குறா தகற்றும்வெள்ளி விலக்கிடும் ஐயந்தன்னை
யொக்கவே கலப்புவட்டில் உறுதிரி தோஷம்போக்குங்
கக்கியஉதிரமேறுங் கனத்தவெண் கலத்திற் கென்னே *1348*

*செம்பு இரத்த பித்தம் போக்கும். வெள்ளி கபம் விலக்கும். கலப்பு உலோகம் திரிதோடங்களை மாற்றும். வெண்கலம் குறைவான இரத்த தாதுவை விருத்தி செய்யும்.*

## உண்கலத்தில் - இவைகள் முக்கியமெனல்

வாழைவெள்ளைப் பன்னநன்றா மற்றிலைக்கண் மத்திபமா
மாழைவெள்ளி வெண்கலமு மாநன்றாங் - கோழை
கயப்பாண்ட நோய்போங் கருதினிவைக் கெல்லாங்
குயப்பாண்ட மேலசனங் கொள் *1349*

*உணவுண்ண வெள்வாழை இலை நன்று. மற்ற இலைகள் மத்திமமாம். தங்கம், வெள்ளி, வெண்கலம் இவற்றினால் உண்கலங்கள் மிகவும் நலமாம். எல்லாவற்றினும் மட்கலமே நன்று. இதில் உண்டால் சயம், பாண்டுவால் வந்த நீர்ச்சுரப்பு இவை விலகும்.*

## வாழையிலை

தொக்கினுறு மின்னுஞ் சுகபோ கமுமன்னு
மக்கினி மந்தம்பலமொடு - திக்கிடுகால்
பாழை யிலைப்புமறும் பன்னுபித்த முஞ்சமனாம்
வாழை யிலைக்குணரு வாய் *1350*

*வாழையிலையில் உண்டால் தோல் பளபளப்பையும், சுகபோகங் களையும் அளிக்க வல்லது. மந்தம், பலக்குறைவு, வாதம், சுவையின்மை நீங்கி பித்தம் குறையும்.*

## பலாஇலை

பலாவிலையி லுண்ணப் பதுங்கிநின்ற பித்தங்
குலாவி யெழும்பிக் குதிக்கு - முலாவிவரு
கன்ம மகோதரநோய் காணா தகலாத
குன்ம மகலுங் குறி *1351*

*பலாஇலையில் உண்டால் அடங்கியபித்தம் அதிகரிக்கும். பெரு வயிறு, குன்மம் இவை நீங்கும்.*

### பாலுள்ளமரத்திலைகள்

*பாலிருக் கின்றமரப் பன்னங் களிலுண்டால்*
*கோலிருக்கச் செய்வாதங் கோழைகபங் - கால*
*வசுர்க்குபித்தந் தாகமிவை யண்டா தகலு*
*முசுக்குமதி சீதளமா மோது* **1352**

*பாலுள்ள மரத்திலைகளில் உண்டால் பக்கவாதம், கோழை, கபம், வாந்தி, பித்தம், தாகம் இவை நீங்கும். குளிர்ச்சியுண்டாகும்.*

### தாமரையிலை

*தாமரைப்பன் னத்திலுண்டால் தாங்கரிய உட்டிணமாம்*
*நாமவா தஞ்சினந்து நண்ணுங்காண் - தூரமுறா*
*அக்கினிமந் தங்களுண்டாம் அன்றே மலர்த்திருவத்*
*திக்கினிலி ராளெனவே தேர்* **1353**

*தாமரையிலையில் உண்டால் வெப்பம், வாதம், அக்கினி மந்தம் இவை உண்டாகும்.*

### கரபாத்திரம்

*கைப்பாத் திரத்திற் கலந்தன்னங் கொள்ளுங்கால்*
*வைப்பா மனச்சேட்டை மாறுங்காண் - இப்பாற்*
*சருவகி லேசமும்போஞ் சாற்றவென்றா லின்னும்*
*பெருவருசி நோயும்போம் பேசு* **1354**

*பலகறிகள் கலந்த உணவை கைப்பாத்திரத்தில் உண்ண மனச் சேட்டை, துக்கம், அருசி இவை நீங்கும்.*

## சோற்றின்குணம்

### அதிசுடுகையன்னம்

*அதிசுடுகை யன்னம் அரத்தபித்தம் தாகம்*
*பிதிரேறு சித்தப் பிரமை - மதரோகம்*
*என்றுரைக்கு நோய்கட் கிடங்கொடுக்குந் தப்பாது*
*குன்றுரைக்கும் பூண்முலையே கூறு* **1355**

*அதிக சூடுள்ள உணவை தினமும் உண்டால் உதிரபித்தம், தாகம், பிரமை, மதரோகம் இவற்றை உண்டாக்கும்.*

### அற்பச்சுடுகையன்னம்

*அற்பச்சூட் டன்னம்வா தாதிகளாற் பீநசத்தால்*
*உற்பவித்த நோயை யொழித்துடற்கு - நற்பலத்தைச்*
*செய்யும் அருசிதனைத் தீர்க்குஞ்சர் வோத்தமமாம்*
*பெய்யும்வளைக் கைமாதே பேசு* **1356**

*மித சூடுள்ள உணவு நல்லதாம். அது வாத, பித்த, கபங்களிலும் பீநசத்திலும் விளைகின்ற நோய், அரோசகம் இவற்றை நீக்கி உடற்கு வன்மை தரும்.*

### புழுங்கலரிசியன்னம்

*தென்புவியி னாளுஞ்செ ழித்துவள ருஞ்சாலி*
*வன்பு புழுங்கல் வடிசாதம் - முன்புணவே*
*வாயுவிலை யத்தால் வலியும்வன் னோயுமிலை*
*நோயுடையார்க் காகு நுவல்* **1357**

*வாதம், வலி நோய் இவற்றை நீக்கும். புழுங்கலரிசி நோயாளர்க்கு உதவும்.*

### பச்சரிசியன்னம்

*பச்சரிசிச் சோறு பலங்கொடுக்கும் வாயுவென்பார்*
*நிச்சயமா கப்பித்தை நீக்குங்காண் - அச்சமற*
*மூத்திரக்கி ரீச்சரத்தை முன்பொழிக்குஞ் சேய்க்குமந்த*
*மாத்திரமுண் டாக்கும் வழுத்து* **1358**

*இது பலத்தையும், குழந்தைக்கு மாந்தத்தையும் உண்டாக்கும். பித்தத்தையும் கிரீச்சரத்தையும் நீக்கும். இது வாயுவைஉண்டாக்கும்.*

### நன்றாகச் சமைக்காதஅன்னம்

நன்றாச் சமையா நடுத்தண்டு லச்சோறு
தின்றால் மலசலமுஞ் சிக்குமென்ப - தொன்றோகேள்
மற்றையநா ளுஞ்செரிக்க மாட்டா ததுவுடலிற்
சற்றும்வியா பிக்காது சாற்று 1359

*சரியாக வேகாத சோற்றை உண்டால் மலச்சிக்கல் ஏற்படுவது தவிர மறுநாளும் சீரணமாகாது. அந்த அன்னம் உடலில் சாராது.*

### குழைந்தஅன்னம்

குழைந்தசோ றுண்ணிற் கொடுமேகம் காசம்
அழுந்துமந் தாக்கினியும் ஆரும் - விழுந்திடச்செய்
துற்பலமும் பீநசமுந் தோன்றும் அரிவையர்க்குட்
பொற்படரு மாதே புகல் 1360

*குழைந்த சோற்றை உண்டால் வாதப்பிரமேகம், இருமல், அக்கினிமாந்தம், துர்ப்பலம், பீநசம் இவையுண்டாகும்.*

### சுத்த அன்னம்

சுத்தஅன்னங் குற்றமிலைத் தோஷங் களையகற்றும்
முத்தரத்தே கிக்கும்அது முக்கியங்காண் - பத்தியத்திற்
காகும்அது முப்பிணிக்கும் ஆம்வியஞ்ச னங்கலந்துண்
எகும்உள்நோ யெல்லா மிரங்கி 1361

*சுத்தமான சோற்றை நல்ல கறிகளோடு உண்டால் முத்தோட நோய்கள் நீங்கும். பத்தியத்திற்காகும். குடல்நோய்கள் முழுமையும் விலகும். மூன்று வகைப்பட்ட உடலினருக்கும் இது நன்மையைப் பயக்கும்.*

### பொங்கலன்னம்

பொங்கலெலா மந்தம் பொருமல்எனு நோய்விளைக்கும்
அங்கமெலாம் வாதம்உண் டாக்குமன - லங்கெடுக்கும்
சம்பாநற் பச்சரிசித் தன்பொங்கல் தாதுவிர்த்தி
யென்பார் பெரியோர்க ளெண் 1362

*இச்சோறு மந்தம், பொருமல், வாதம், வெப்பம் இவற்றை உண்டாக்கும். நல்ல சம்பா அரிசியால் செய்யப்பட்ட பொங்கல் தாது விருத்திக்காகும்.*

### பாலும் - அன்னமும் - புசித்தல்

பாலும்அன்ன மும்புசிக்கிற் பன்னுபித்தந் தாகமறும்
மேலுமற்ப மந்தமென்பார் மேனியிடும் - ஞாலமதில்
அப்பொழுதே தாதுவிர்த்தி யாகுஞ் சிசுவாதி
யெப்பருவத் தர்க்குமா மெண் *1363*

*பால் சோறு பித்தம், வறட்சி இவற்றைப்போக்கி மந்தம், தேகபலம், வீரியவிருத்தி இவற்றை உண்டாக்கும். இது குழந்தை முதல் எப்பருவத் தினருக்கும் ஏற்ற உணவாகும்.*

### பசும்பாலின் பத்தியம்

*ஆறின் முதனடுவா காவாப்பாலை வளர்க்கு*
*பீறின்சுவை யிரண்டேற் றென்பர்கார்ப் - பூறினுறுங்*
*கண்டொக்கு முண்ணென் களையொழிபாத் தோடருந்தப்*
*பண்டொக்கு முண்ணி பகர்.*

*பசுவின் பாலை அருந்த புளிப்பு, கைப்பு சுவையுள்ள பொருட்கள் எதனையும் அனுபானமாகச் சேர்த்து உண்ணலாகாது. சுக்கிலத்தை விருத்தி செய்யும்படி கார்ப்பு, இனிப்பு சுவையுள்ள பொருட்களை அனுபானமாகச் சேர்த்து சிலர் உண்ணச் சொல்லுவர்.*

### பால் - அருந்தற்கு - நாழிகையளவைகூறல்

ஆப்பான் முகூர்த்தத்து ளைங்கடிகைக் குள்ளுணது
மீப்பான் மனுவர் விருந்தாகு - மூப்பாயி
னஞ்சத்தான் காண்டற் கரியா னகிலமுன
மஞ்சத்தா னுண்டவிருந் தாம் *1364*

*பசும்பால் கறந்த $3^{1}/_{2}$ நாழிகைக்குள் அல்லது 5 நாழிகைக்குள் உண்டால் அமிர்தம்போல் பலன் தரும். இக்காலம் கழித்துண்டால் விடத்திற்கு ஒப்பாகும்.*

### காலையில் - பச்சைப்பாலுண்ணல்

*கையெரிச்சல் கால்எரிச்சல் காமிலம்இ ரத்தபித்தம்*
*மெய்யெரிச்சல் பாண்டுநோய் விந்துநஷ்டம் - வெய்ய*
*இதயகபம் போம்புஷ்டி யெய்துஞ்சேய்க் கொவ்வும்*
*உதயமதில் பச்சைப்பால் உண்* *1365*

*உதயகாலத்தில் கறந்த, சூடாறுமுன் பருகும் பசும்பாலினால் கைகால் உடம்புகளில் எரிவு, காமாலை, இரத்தம், பித்தம், பாண்டு, மார்சளி இவை நீங்கும்.*

### நெய்-அன்னம்

*வெறுநெய்யுஞ் சோறும்உண்ணில் வீறுபல நண்ணுங்*
*கிறுகிறுத்த பித்தநோய் கிட்டா - தறிவிக்குங்*
*கண்ணுக்கு மாகுளிர்ச்சி காட்டுமிகச் சீரணமாம்*
*உண்ணற்குப் பத்தியமா முன்* *1366*

*நெய்யும் அன்னமும் கலந்துண்டால் பலம், கண்குளிர்வு, சீரணம் இவையுண்டாகும். பித்தம் நீங்கும். இது முதியோர்க்கே சிறந்ததாகும்.*

### எண்ணெய் அன்னம்

*எண்ணெய்யுஞ் சோறும்உண்ணில் என்றைக்கு மாபலமாம்*
*பெண்ணுக் கிளையாத பீடுமுறுஞ் - சண்ணுகின்ற*
*வாதகப மேகம்போ மாறாப் பசியெழும்பும்*
*பூதலத்து ணாளும் புகல்* *1367*

*அன்னத்தில் நல்லெண்ணெயைச் சேர்த்துண்டால் பலம், புணர்வில் திடம், நல்லபசி உண்டாகும். வாதப் பிரமேகம், கபம் நீங்கும்.*

### மாங்கிசங்கலந்து சமைத்த அன்னம்

*ஊனமைத்த அன்னம்உண்ணில் உண்டாம் அதிகபலம்*
*போனமே தோதாதும் பூணுங்காண் - ஆனால்*
*விரணநோய்க் காகா மிகுமந்த க்ஷீணந்*
*தருணகப பித்தசம னம்* *1368*

*இறைச்சி கலந்து செய்த உணவை உண்டால் பலம், அதிமந்தம் உண்டாகும். கபம், பித்தம் சமநிலையில் இருக்கும். இரணத்தோர்க்கு இது ஆகாது.*

## பதார்த்தகுணம்

### நன்றாகச்சமைத்த துவரம்பருப்பு

தண்ணக் குறிஞ்சித் தலத்தா டகிப்பிளப்பை
வண்ணச் சுடறறற்குள் வைத்தாக்கி - யுண்ணற்
கடிக்குப் பசுவினறு மாச்சியத்தோ டுண்ணிற்
பிடிக்குப் பிடிசதையாம் பேசு *1369*

*நீர்ப்பற்றுள்ள மலை நாட்டுத் துவரம்பருப்பைச் சமைத்து பசு நெய்யுடன் கலந்துண்டால் பிடி அன்னத்திற்குப் பிடி சதை வளரும் என்பர்.*

### போசனமுதலில் நெய் சேர்த்துண்பது

பருப்பிலெழு வெப்பும் பருங்குடன்மு றைப்புந்
திருப்புறா முன்மலத்தின் சிக்குந் - தரிப்புறா
மெய்க்குள்ள காந்தி விலகா தழகுறுநன்
னெய்க்குள்ள உண்மை நெறி *1370*

புத்திமிகுஞ் சிக்குவைநோய் போயொழியு நேத்திரத்தில்
மெத்த வொளியும் விளங்குங்காண் - பித்தமொடு
வாதகப மாறா வறட்சியெல் லாநீங்குங்
கோதினறு நெய்யைக் குடி *1371*

*உண்ணத் தொடங்கும்போது நெய் சேர்த்துண்பதால் துவரம் பருப்பின் சூடு, குடல் குத்தல், மலக்கட்டு, சிக்குவைநோய், பித்தம், வாதம், கபதோடம், சொறி இவை நீங்கும். நினைவாற்றல், அழகு, கண்ணுக்கொளி இவை உண்டாகும்.*

### பொரியலின் பேதம்

கார மிகுபொரியல் காய்ந் தனிற்கபத்தைச்
சேர வுறவாக்குந் திண்ணமே - சோரப்
புளியிட் டிடும்பொர்ரியல் போர்மந்தத் தோடு
வளியிட் டிடுமனத்துள் வை *1372*

*காரமதிகமுள்ள பொரியல் கபத்தைத் தரும். புளிப்பு மிகுந்த பொரியல் மந்தம், வாதம் இவற்றை விளைவிக்கும்.*

## வறுவலின் பேதம்

இளவறுப்பான் மந்த மெழும்புங் கருக
லுளவறுப்பான் முத்தோட மோங்கு - மளவறுத்த
மைய வறற்பிணிக்கும் வாதமடு மாயினஃ
தைய வறற்பிணிக்கு மாம் *1373*

*இதமாக வறுத்த வறுவல் மந்தத்தையும், கருகும்படி வறுத்தால் வாத, பித்த, கப தோடங்களையும் உண்டாக்கும். நடுவனாக வறுத்தால் தொந்த வாதம், கபம் இவற்றைப் போக்கும்.*

## பச்சடியின் பேதம்

புளிப்பான பச்சடியாற் போம்பித்தங் கார்த்தல்
வளைப்பான பச்சடிக்கை வாத - மிளைக்கு
மினித்தபச்ச டிக்கருசி யேகுந் துவராற்
சனித்தபச்ச டிக்குறும்வா தம் *1374*

*புளிப்பு சுவையுள்ள பச்சடியால் பித்தமும், உறைப்புப் பச்சடியால் சிலேட்டும வாதமும், இனிப்புப் பச்சடியால் அரோசகமும் நீங்கும். துவர்ப்புள்ள பச்சடியால் வாதம் உண்டாகும்.*

## துவையலின் பேதம்

புளிப்பா மிலைத்துவையல் போக்கும்பித் தத்தைப்
புளிப்பா லமைதுவையல் பொல்லா - புளிப்பில்
வெறுந்துவைய னன்றதற்கு மிக்கவுறைப் பிட்ட
நறுந்துவைய னன்றினு நன்று *1375*

*புளியாரை போன்ற புளிப்புள்ள இலைகளின் துவையல் பித்தம் போக்கும். புளித்துவையல் இரத்தத்தை முறிக்கும். எனவே புளிசேர்ப்பது நன்றன்று. அதிககாரம் சேர்த்த நல்ல துவையல் பசியை உண்டாக்கும்.*

## குழம்பின் பேதம்

சொல்லஉறைக் குங்குழம்பால் தோன்றா தனிலம்அஃ
தில்லையெனில் வாதம் இருக்குங்காண் - தொல்லுலகில்
நீர்த்தகா ரக்குழம்பால் நீடுமுத் தோஷமுன்பின்
பார்த்தோடு மென்றே பகர் *1376*

*உறைப்புள்ள குழம்பால் வாதம் ஏற்படாது. உறைப்பில்லா குழம்பால் வாதமேற்படும். காரத்தோடு நீர்க்க வைத்த குழம்பு முத்தோடங்களைப் போக்கும்.*

## துவரம்பருப்பின் ரசம்

நவரைவாழைக்கனி பலவின்கனி
நல்லமாங்கனி பாலொடுநெய்க்கறி
கவரில்அப்பொழுதே மந்தமாம்பரி
காரங்கேட்கும் பயித்தியக்காரரே

யெவருங்காண்கவறைகுதும் அன்னத்தில்
இட்டுணுங்கறி தன்னுடன்கூடவே
துவரைநீர்மிள குள்ளியிட்டுக்கொளீர்
துட்டவாதமுந் துஞ்சிடு முண்மையே *1377*

*வாழை, பலா, மா என்கிற முப்பழங்களையும் பால், நெய் கறிகளையும் மிதமின்றிப் புசித்தால் அக்கினி மாந்தம் உண்டாகும். அதைப்போக்க துவரம் பருப்பு கட்டிறுத்த நீரில் பூண்டு, மிளகு, கூட்டி வைத்த ரசத்தை, நெய்யோடு நற்காய்கள் சேர்த்த உணவோடு உண்டால் அக்கினி மந்தமும் வாத பிரமேகமும் நீங்கும்.*

## காடைச்சாறு

பொற்றொடி மாதேகண்ணின் புண்ணொடு பிணியெலாம்போம்
வற்றிய உடல்பருக்கும் வாதபித் தையும்ஏகுஞ்
சுற்றிய கிராணிகுன்மஞ் சுரம்பல சுவாசகாசம்
அற்றிடுங் காடை ச்சாற்றால் ஆவியும் வளருங்காணே *1378*

*காடைச்சாறு, கண்ணோய்கள், சன்னி நோய்கள், வாதபித்தம், கிரகணி, வயிற்றுநோய், சுரம், சுவாசம், காசம் இவற்றைப்போக்கும். இளைத்த உடம்பைப் பருக்கச் செய்து ஆயுளை வளர்க்கும்.*

## கொள்ளுச்சாறு

வற்றிய உடம்புதுரணாம் வாதமும் பித்துங்குக்கி
சுற்றிய கிராணிகுன்மஞ் சுரம்பல சுவாசகாசம்
உற்றடர் கண்ணின்புண்ணோ டுறுபிணி யொழியும்வெப்பைப்
பெற்றிடுகாணச் சாற்றாற்பெருஞ் சலதோஷம் போமே *1379*

*இதனால் இளைத்தவுடல் பருத்து உரம் பெறும். வாதம், பித்தம், கிரகணி, குன்மம், சுரம், காசம், விழிவிரணம், சலதோடம் ஆகிய நோய்களை நீக்கும்.*

## போசனமுடிவில் - தயிர் - உப்புசேருவது

மூத்ததயி ருப்புமுண முன்பிறங்கு வத்துகளிற்
கோத்ததிரி தோடங் குடிவிலகும் - பூர்த்தியா
யுண்டபிற்கு முற்குநடு வுற்றவையெ லாம்புழுக்கங்
கொண்டடரச் சீரணமா கும் *1380*

*உணவில் முடிவில் புளித்த தயிரும், உப்பும் கூட்டி உண்டால் தயிருக்கும் நெய்க்கும் நடுவாக தீனிப்பையில் இறங்கிய உணவில் உள்ள முத்தோடங்களை நீக்குவதோடு நல்ல சீரணத்தையும் உண்டாக்கும்.*

## மோரும் அன்னமும் புசிப்பது

மோருமன்ன மும்புசிக்கின் மூளும் பசிமேக
நீருங் குதாங்குரமு நீள்பாண்டும் - பேராத
தாகங் கிராணி சலம்ஏறு விக்கமும்போம்
ஆகவிர ணத்தில்விலக் காம் *1381*

*மோரும் சோறும் உண்டால் நல்ல பசி எடுக்கும். பித்த மேகமூத்திரம், முளைமூலம், பாண்டு, தாகம், கிரகணி, சிலேட்டும சோபை இவை விலகும். இரணமுள்ளோர்க்காகாது.*

## ஊறுகாய்

ஊறுகா யெல்லாம் உதராக் கினிவளர்க்கும்
வீறருசி யென்பதையும் வெல்லுங்காண் - கூறுகின்ற
ஐயமொடு பித்தம் அனிலத்தைீ யுந்தொலைக்குஞ்
செய்யவடி வேற்கண்ணாய் செப்பு *1382*

*உணவோடு கூட்டி உண்கின்ற நெல்லிக்காய் முதலிய பற்பல ஊறுகாய்களும் பசியைவளர்த்து உணவில் விருப்புண்டாக்கி, சிலேட்டுமம், பித்தம், வாதங்களை ஒழிக்கும்.*

## உண்டபின்பு வெந்நீரருந்தல்

உண்டபின்பு வெந்நீர் ஒருதரமாக் கொண்டக்கால்
மிண்டுசுரம் வாதம் விதாகமந்தம் - அண்டுதரத்
தார்ந்த பொருமலும்போம் ஆயுளுண்டா மாதர்தமைச்
சேர்ந்தணையத் தாதுவுமாந் தேர் *1383*

*சுரம், வாதம், தாகம், பொருமல் இவற்றை நீக்கி ஆயுளையும் சுக்கிலத்தையும் அதிகமாக்கும் பண்பை உண்டபின் வெந்நீர் அருந்தினால் பெறலாம்.*

## நீரருந்துங்கிரமம்

தண்ணீர்அண் ணாந்துண்டாற் சாருஞ் செவிமந்தங்
கண்ணக் குனிந்துண்டாற் காசம்உண்டாந் - தண்ணீர்
குடிக்கவென்றாற் பாத்திரத்தைக் கோதறவே வாயாற்
கடித்தருந்தத் துன்பம்இலைக் காண் *1384*

*நீரை அண்ணாந்துண்டால் பாதரிய வாதமும், குனிந்துண்டால் இருமலும் உண்டாகும். பாத்திரத்தை வாயிற் கடித்துண்ணில் ஒரு நோயுமில்லை.*

## கஞ்சி குணம்

### பால்கஞ்சி - பொரிசேர்ந்தகஞ்சி - சுடுகஞ்சி

சுரைதரு பாலில்வெந்த சோறு றுகஞ்சிகொள்ளில்
எரிதரு பித்தந்தாழும் எழுமதி விந்துவுந்தான்
பொரிதரு கஞ்சிபித்தம் போக்கிடுஞ் சுடுகஞ்சிக்குத்
தரிதரு மலமும்வாய்வுந் தாகமும் போகுங்காணே 1385

*பசும்பாலில் பச்சரிசி சேர்த்துக் காய்ச்சியக் கஞ்சி பித்த எரிவை நீக்கும். புத்தியும் சுக்கிலமும் விருத்தியாகும். நெற்பொரி கஞ்சி பித்தத்தைப் போக்கும். சாதத்தில் வடித்த சுடுகஞ்சிக்கு மலம், வாதநோய், தாகம் இவை விலகும்.*

### கொள்ளுக்கஞ்சி

கொள்ளுந்தண் டூலமுமாய்க் கூட்டியடுங் கஞ்சியது
கொள்ளுங்காற் றீபனத்தைக் கூறுவதோ - எள்ளை
நசிக்கிப் பிழிபலமு நல்விந் துவுமே
வசிக்குங் கிழவர்கட்கும் வை 1386

*கொள்ளும், அரிசியும் சேர்த்துக் காய்ச்சிய கஞ்சியைக் குடித்தால் அதிகபசி, நற்பலம், வீரியவிருத்தி இவை உண்டாகும்.*

### கோதுமைக்கஞ்சி

கோதுமைக் கஞ்சி கொடுஞ்சுரநீ ரேற்றமிவை
காதுமைக்குஞ் சந்நிக்குங் காதரமே - போத
வுடலுந் திடமா மொலிவண்டுங் கூற்றுங்
கடலும் பணிவிழியே காண் 1387

*வாதசுரம், நீரேற்றம், கபம், சன்னி இவற்றை விலக்கி உடற்கு வலிமை தரும் இயல்பு கோதுமைக் கஞ்சிக்குண்டு.*

### சிறுபயறு - உளுந்து - பச்சரிசி

சிறுபருப்புக் கஞ்சிபித்தந் தீர்க்கும் உளுந்தின்
உறுபருப்புக் கஞ்சிவளிக் கூக்கம் - நறியபசும்
பச்சரிசிக் கஞ்சி பவனகபத் தைப்போக்குங்
கச்சிருக்குங் கொங்கைமின்னே காண் *1388*

*சிறுபயறும் பச்சரிசியும் சேர்த்துக் காய்ச்சிய கஞ்சி பித்தம் நீக்கும். உளுந்து சேர்ந்த கஞ்சி வாதத்திற்கு நல்லது. பச்சரிசிக்கஞ்சி வாத சிலேட்டுமத்தைப் போக்கும்.*

### காய்ச்சுக் கஞ்சி

கஞ்சி யன்னத்திற் காயம் பருத்திடு
மஞ்சி வெப்ப மகலுஞ்சி லேஷ்மமோ
விஞ்சி யற்றிடு மேனி மினுத்திடும்
பஞ்சி போலப் பறந்திடும் பித்தமே *1389*

*வடித்த கஞ்சியும் சோறுமுண்டால் உடல் பருக்கும். ஒளி பெறும். கபம் உண்டாகும். வெப்பம், பித்தம் இவை நீங்கும்.*

### புனற்பாகம்

புனற்பாக முத்தோஷம் போக்கு மருந்தின்
அனற்பாகந் தன்னை யடக்குந் - தனிக்குணங்கள்
அம்மட்டோ வாய்க்கிதமா மாரோக்கி யங்கொடுக்குங்
கம்மிட்ட பூவனமே காண் *1390*

*வடித்த கஞ்சி நீரானது திரிதோடம், சரவெப்பம் இவற்றைப் போக்கும். குடிக்க இனிமையும், உடற்கு நலமும் உண்டாகும்.*

### பஞ்சமுட்டிக் கஞ்சி

பஞ்சமுட்டிக் கஞ்சிநெடும் பட்டினியிற் கொள்ளுங்கால்
விஞ்சனில பித்தகபம் வீறாவாம் - விஞ்சு
மிளைப்பகற்றுந் தாரகவி லங்கனத்திற் கேற்குந்
திளைப்பவெழும் பூண்முலையே செப்பு *1391*

*பஞ்சமுட்டிக் கஞ்சியைநன்கு பசித்தபின் புசித்தால் திரிதோடம் மிகாது. களைப்பு நீங்கும். (துவரை, உளுந்து, கடலை, சிறுபயறு, பச்சரிசி இதில் ஒவ்வொன்றிலும் ஒரு பிடியெடுத்து தனியே சீலையில் முடிந்து பாத்திரத்தில் நீரிட்டுக் காய்ச்சுவது பஞ்சமுட்டிக் கஞ்சி).*

### சுக்கு நீர்க் கஞ்சி

வாயுசுர நீர்இரத்த மாறும் பசியெழும்பும்
ஒயும் பலபிணிகள் உண்மையே - ஆயுங்கால்
உண்டி பருத்திடுமெய் யுள்நோய் ஏகும்முடிச்சுச்
சுண்டியினீர்க் கஞ்சியினாற் சொல் *1392*

*ஒன்றுக்கு எட்டுபங்குநீர் விட்டு சுக்கை நசுக்கி துணியில் முடிந்து அதில்போட்டு நான்கில் ஒன்றாகக் காய்ச்சிய கஞ்சி தெளிவு, வாதம், வெப்பம், சிவப்பாகப் போகும் மூத்திரம், பித்த நோய்கள், செரியாமை முதலியவற்றை நீக்கும். உணவு உண்ண விருப்பமாம்.*

### வடிகஞ்சி - உறைகஞ்சி - கொதி கஞ்சி

கஞ்சியெலா மந்தமவை கண்ணுக்குத் தான்குளிர்ச்சி
விஞ்சிவரும் பித்தம்அது விட்டகலும் - உஞ்சும்
அதிகஞ்சி வாயு அதிசீதஞ் சேர்க்குங்
கொதிகஞ்சி வெட்டையைப்போக் கும் *1393*

*சாதத்தினின்றும் வடிக்கப்பட்ட கஞ்சிகளெல்லாம் மந்தமானாலும் விழிக்குக் குளிர்ச்சியாகும். இதனால் பித்தம் நீங்கும். தயிர்போல் உறைந்த கஞ்சி வாதம், கபம் இவற்றை உண்டாக்கும். சாதம் வேகும்போது மீட்கின்ற கொதி நீர்ச்சுருக்கைப் போக்கும்.*

### பழஞ் சோறு

பழஞ்சோற்றை யந்தப் பழையநீரா காரக்
கொழுஞ்சேர்க்கை யோடுதயங் கொள்ளில் - எழுந்தாது
பித்தவா தம்போம் பெரும்பசியா மெய்யெங்கும்
மெத்தவொளி வுண்டாகு மே *1394*

*இரவில் நீர்ஊற்றிய கஞ்சியை நீராகாரத்துடன் அருந்தினால் சுக்கில விருத்தி, உதராக்கினி, உடலழகு, பித்தம், வாதம் இவற்றை நீக்கும். பசியை ஏற்படுத்தும்.*

## மோர்சேர்ந்தபழைய சோறு

*மோரும் பழையதுமாய் மோடெடுக்க உண்டார்க்குத்*
*தீரும் எரிச்சலெலாஞ் சேயிழையே - தீராத*
*பித்தப் பிணியும் பிரமைநோயும் பறக்கும்*
*உற்றகபந் தூக்கமிகு முன்* *1395*

*இதையுண்டால் உடல் எரிவு, பித்தம், பிரமை இவை நீங்கும். சிலேட்டுமமும் நித்திரையும் அதிகரிக்கும்.*

## புளித்த சோறு

*புளித்தபழங் காடியன்னம் பொங்கனலா நாளுந்*
*தளிர்த்தபித்த கோபத்தைச் சாடும் - வெளுத்தமல*
*மந்தத்தை நீறாக்கும் வாந்தி தனையொழிக்கும்*
*அந்த முறுமணங்கே யாய்* *1396*

*புளித்த பழஞ்சோறு உட்டிணமாம். பித்தத்தை நீக்கும். மலக்கட்டை, வாந்தியைப் போக்கும்.*

## ஊசிய சோறு

*ஊசலன்னம் உண்டால் உடனே வரும்உறக்கம்*
*மேசுவதேன் வாதம் பிரபலமாம் - ஆசித்துச்*
*சீதளமும் பித்தமும்வி சேடிக்கும் வள்ளையொத்த*
*காதளவு நீள்விழியாய் காண்* *1397*

*ஊசிய சோற்றை உண்டால் நித்திரை, வாதம், சீதம், பித்தம் இவை உண்டாகும்.*

## கேழ்வரகு - கூழ் - களி

*கேழ்வரகின் கூழாற் கிளர்வாத பித்தமொடு*
*வீழ்வயிறுஞ் சாந்தமென விள்ளுவர்காண் - காழாங்*
*களிக்குப் பலம்உண்டாங் காணில்அதி வாதந்*
*தளிர்க்கு முலகிலிதைச் சாற்று* *1398*

*கேழ்வரகுக் கூழ் வாதம், பித்தம், வயிற்றுநோய் இவற்றை நீக்கும். உடலில் பலத்தையுண்டாக்கி வாதத்தை போக்கும்.*

### கம்புச்சாதம்

கம்பினது சாதத்தாற் காசசுவா சஞ்சிரங்கும்
பம்பும் உடலமிகப் பாரிக்குஞ் - செம்பாலோ
வற்றுவது மன்றிநிற மாறுமென்பார் வாமமெலா
முற்றுமுலை மாதே மொழி *1399*

*கம்பஞ் சாதத்தால் இரத்தம் சுண்டுவது, இருமல், இரைப்பு, இரணம், உடல்பருத்தல், நிறமாற்றம் இவை உண்டாகும்.*

### தினைமா - சாதம் - கஞ்சி

தினைமா கபவாதந் தீர்க்கும்அதன் சாதம்
புனைபித்த மாயினுநற் போகந் - தனைக்கொடுத்து
வாதம்போக் குங்கஞ்சி மாசோபை தோஷமிதன்
பேதமெலாம் போக்குமெனப் பேசு *1400*

*தினைமா சிலேட்டும வாதத்தைப் போக்கும். பித்தமுடைய தானாலும் வீரிய விருத்தி செய்து வாத சோபத்தை நீக்கும்.*

### சாமைச்சாதம் - கஞ்சி

சாமைச்சோ றுண்டால் தனிவாதங் கோழைகபந்
தீமைக்கா தாரமாய்ச் சேர்சோபை - போமெத்தப்
பித்தமொடு தாதுவுமாம் பேசும்அதன் கஞ்சிக்கு
முத்தோஷம் போகு மொழி *1401*

*இது வாதம், சயம், சிலேட்டுமம், வீக்கம் இவற்றைப் போக்கும். அதன் கஞ்சி முத்தோடங்களைவிலக்கும். பித்தத்தையும் தாதுவையும் உண்டாக்கும்.*

### வரகுசாதம்

ஏறிகபத்தோ டேபலநோ யெய்தும் வறட்சி
சொறிசிரங்கு பித்தந் தொடரும் - நிறையுங்
கரகமெனப் பூரித்த கச்சுமுலை மாதே
வரகரிசிச் சோற்றால் வழுத்து *1402*

*மூச்செறியும் சுவாசம், புடை, தினவு, கிரந்தி, பித்தம் இவற்றை வரகுசாதம் உண்டாக்கும்.*

### சோளச்சாதங்கள்

சோளமெனப் பேர்படைத்த சோறுகளி னால்உடலில்
மீளச் சொறிசிரங்கு விர்த்தியதாம் - நாளுங்
கரப்பனும்உண் டாகுங் கனமருந்தும் பாழாம்
பரப்பனைய கண்மாதே பார் 1403

*கருப்பு, வெள்ளை, சிகப்பு சோளச் சாதம் தினவு, இரணம், கரப்பான் இவற்றை அதிகரித்து மருந்தின் தன்மையைக் கெடுக்கும்.*

### காடைக்கண்ணிச் சாதம்

எரிவோடு பித்தம் எழும்புமஐய வாதங்
கருகிமுறிந் தோடிக் கரக்கும் - அரியசந்த
வாடைப் பொடிமணக்கு மாமுலைமா தேயுலகிற்
காடைக்கண் ணிச்சோற்றைக் கண்டு 1404

*காடைக்கண்ணிச் சாதம் சரீர எரிச்சல், பித்தம், இவற்றை உண்டாக்கும். ஐயவாதம், கபம் இவற்றை நீக்கும்.*

## சித்திரான்ன குணம்

### பாற் பொங்கல்

ஒப்பிலாப் பாலில்வெந்த உயர்சுவை யன்னத்தாலே
வெப்பிலா வாதம்உண்டாம் வெவ்வழற் பித்தந்தாழுந்
தப்பிலா இதில்நெய்வெல்லஞ் சார்ந்திடுந் தன்மையாலே
செப்பிலாக் கபமேல்ஆடுஞ் செம்பித்த மொடுங்குங்காணே 1405

*உருசியுள்ள பால்பொங்கல் உண்பதால் தனிவாதமும், நெய், சர்க்கரை சேர்ப்பதால் சிலேட்டுமமும் உண்டாகும். பித்தம் நீங்கும்.*

## பருப்புப் பொங்கல்

போகமிக உண்டாகும் பொங்கியபித் தந்தணியுந்
தேகமதில் வாதமிகச் சேருங்காண் - வாகார்
பொருப்புப்போல் விம்முமுலைப் பூங்கொடியே பச்சைப்
பருப்புப்பொங் கற்சோற்றைப் பார் *1406*

*பச்சைப் பருப்புப் பொங்கல் சாதம் வீரியவிருத்தி, வாதப்பெருக்கம் இவற்றையுண்டாக்கும். பித்தத்தைத் தணிக்கும்.*

## சருக்கரைப் பொங்கல்

வாயின் அரோசகத்தை மாற்றிவம னம்போக்கும்
ஆயில்பித்த கோபத்தை யாற்றுங்காண் - நேயச்
செருக்கரைச்செந் தாளாற் றிருத்துமட மாதே
சருக்கரைப்பொங் கற்சாதந் தான் *1407*

*இது அருசி, வாந்தி, பித்தம் இவற்றை நீக்கும்.*

## மிளகோதனம்

மிளகோ தனம்அருந்த விம்முகின்ற வாதம்
இளகும் பசியும் எழும்புங் - களகளெனக்
கூவும் வயிற்றின் குடல் இரைச்ச லுங்கபமுந்
தாவுபித்த முந்தணியுஞ் சாற்று *1408*

*மிளகோதனம் உண்பதால் பொருமும் வாயு, குடலிரைச்சல், கபம், பித்தம் இவை விலகும். நல்ல பசியெடுக்கும்.*

## புளியோதனம்

வாந்தி யுரம்ஒழியும் வாய்நீர்ச் சுரப்பேகுஞ்
சாந்தியுறாப் பித்தமது சாந்தியாம் - வாய்ந்த
அளியோ வயிலோவென் றையுறச்செய் கண்ணாய்
புளியோ தனத்தாற் புகல் *1409*

*இதனால் வாந்தி, சுவையின்மை, பித்தம் இவை நீங்கும். உமிழ்நீர் சுரப்பு குறையும்.*

### கடுகோதனம்

*உரியகடு கும்புளியு மொவ்வக் கலந்தே*
*அரியமணத் தோடமைத்த அன்னம் - பருகினால்*
*வாதமொடு ஐயமும்பின் வாங்கி விழுந்தோடும்*
*சீத மலர்த்திருவே தேர்* *1410*

*கடுகும் புளியும் சேர்த்து சமைத்த சோற்றை உண்டால் வாத தோடம், சிலேட்டுமம் இவை நீங்கும்.*

### எள்ளோதனம்

*செப்பரிய வாதபித்தத் தீமையக லுங்கபம*
*துப்பி வளரும் உடலிறுகு - முப்பழத்தின்*
*கள்ளோதுஞ் செய்ய கனிமொழியே நீகேளாய்*
*எள்ளோ தனத்தினா லே* *1411*

*எள்சோறு உண்டால் வாத, பித்த நோய்கள் விலகும். சிலேட்டுமமும் ஒழியும். உடலின் வன்மை பெருகும்.*

### உளுந்தோதனம்

*எஞ்சுகப வாதமிக ஏறும்அதி மந்தம்உறும்*
*விஞ்சுபித் தந்தாழு மெய்யுரக்கும் - அஞ்சம்*
*எழுந்தோதம் புக்கு மினியநடை மாதே*
*உளுந்தோ தனத்திற் குரை* *1412*

*சிலேட்டும வாத நோய்கள், மந்தம், மெய்யுரம் இவை உண்டாகும். பித்தம் குறையும்.*

### ததியோதனம்

*ஆறா வழலகற்றும் ஆர்ந்தபித்த நோய்போக்குந்*
*தேறாத மெய்யைமிகத் தேற்றுங்காண் - மாறா*
*மதியோகை கொள்ளும் வதன மயிலே*
*ததியோ தனமேலாஞ் சாற்று* *1413*

*இது உட்சூடு, பித்தநோய் ஆகியவற்றை விலக்கி உடல் வன்மையைப் பெருக்கும்.*

### கட்டமுது

சூலைசுக்கி லாஸ்மரிசு வாசகா சங்கண்ட
மாலை முதலியநோய் வந்தணுகு - மாலுலகில்
துட்டம் இரத்தமொடு தொன்மேக மும்பறக்குங்
கட்டமுதை நீயுண்ணுங் கால் *1414*

*கட்டமுதைத் தினமும் உண்டால் தேகமுற்றிலுங்குத்தல், சுக்கிலாஸ்மரி, இரைப்பு, இருமல், கண்டமாலை முதலிய நோய்கள் உண்டாகும். இரத்தபிரமேகம், ஒழுக்கு பிரமேகம் இவை நீங்கும்.*

## பலகாரகுணம்

### உளுந்துவடை

வெறும்உளுந்திற் செய்வடைக்கு மேன்மேலும் வாதம்
உறும்பித்தஞ் சற்றே யொடுங்கும் - நறுந்தீ
பனம்போம் புசிப்பிற் பருகநன்றாம் வாவி
யனம்போ னடையா யறி *1415*

*சுத்த உளுந்தினால் செய்த வடைக்கு வாதம் அதிகரிக்கும். பித்தம், தீபனம் இவை ஒடுங்கும். உணவோடுண்டால் நலமாம்.*

### தயிருளுந்தின்வடை

உளுந்தின் பருப்பை யுயர்ததியூ றச்செய்
தழுந்தா தரைத்துவடை யாக்கிச் - செழுந்தேனிற்
கூட்டியுண ஐயபித்த கோபமறும் ஊதையிலை
தீட்டியவேற் கண்மாதே தேர் *1416*

*உளுந்தை புளித்த தயிரில் ஊறவைத்து நன்கு அரைத்துச் சுட்ட வடையைத் தேனில் தோய்த்துண்டால் சிலேட்டுமம், பித்த நோய்கள், வாததோடம் இவை நீங்கும்.*

### பேயன்வாழைக்கனிசேர்ந்தவடை

பேயன் கதலிபலம் பெய்தமா முத்தின்வடை
நேய முறஅமைத்து நித்தலுமே - நேயமுடன்
தானருந்தில் வாதபித்தந் தத்தநிலை கொண்டமருந்
தேனருந்தாத் தேனே தெளி 1417

*பேயன் வாழைக்கனி சேர்ந்த உளுந்து வடையை நெய்த்தொட்டு தினமும் உண்டால் திரிதோடங்கள் மாறுபடாது.*

### தோசை

மிகுத்தெழுந்த பித்தத்தை வீறா தடக்கும்
அகத்துள் அனிலகபம் ஆற்றுஞ் - சகத்திலுறு
தேசைப் பெறுமயிலே தேமொழியே மாழத்தின்
தோசைக் குணமிதெனச் சொல் 1418

*தோசை பித்தம், வாதம், சிலேட்டும நோய்களை நீக்கும்.*

### சம்பாரத்தோசை

காயமிள கிஞ்சி கருவேப் பிலைமுதலாந்
தூயபல காரம்இட்ட தோசைக்கு - வாயுவிலை
பித்தகப வேகப் பெருக்கொழியுந் தாதுவுமாஞ்
சுத்தவன சத்திருவே சொல் 1419

*பெருங்காயம், மிளகு, இஞ்சி, கருவேப்பிலை இவற்றைச் சேர்த்த தோசையால் வாததோடம், பித்தம், சிலேட்டுமம் நீங்கும்.*

### சுத்தஇட்லி - சம்பாரஇட்லி

வெறுமாவின் இட்டலிக்கு வேகம்அறுங் காரம்
பெறுமாவி னிட்டலியைப் பேசில் - அறும்அனிலம்
ஐயபித் தங்கள் அதிகரிக்கு மோமாரன்
நய்யவெய்யுங் கண்ணாய் நவில் 1420

*இட்லி பித்தம் நீக்கும். காரமும் வேறுபலவும் சேர்ந்த சம்பார இட்லி திரிதோடத்தைப் பெருக்கும்.*

## முறுக்கு

ஐயமொடு பித்தம் அதிகரிக்குந் தாழாத
செய்ய அனிலஞ் சிறிதடங்கும் - வையம்
நிறுக்குமிகு கற்பையுறு நேரிழையே நாளும்
முறுக்கின் குணமா மொழி *1421*

*இதனால் சிலேட்டுமமும் பித்தமும் பெருகும். வாதம் சற்றுத் தணியும்.*

## தேன்குழல்

ஒங்குங் கபவாதம் உட்டிணமு மீறிவரும்
வாங்குஞ் சலங்கொஞ்ச மந்தமுமாந் - தேங்குமிசை
ஆன்குழலு மியாழுமிக வஞ்சுமொழிக் கிஞ்சுகமே
தேன்குழலுக் காங்குணத்தைத் தேர் *1422*

*தேன்குழலால் சிலேட்டும வாத நோய்களும், வெப்பமும், தாகமும் உண்டாகும். பசி சற்று மந்தப்படும்.*

## அதிரசம்

ஐயமொடு பித்தம் அதிகரிக்கும் எக்காலுந்
துய்ய அனிலஞ் சுழிக்குங்காண் - சையத்
தெதிரசத்தை யூர்வோ னெனுங்கற்பு மாதே
அதிரசத்தை நன்றா யறி *1423*

*அதிரசம் கபத்தையும், பித்தத்தையும் அதிகப்படுத்தும். தாகத்தையும், வாதத்தையும் அடக்கும்.*

## பிட்டு

செம்புனலுங் கட்டுந் தெளியும் உரமாகும்
வெம்பனிலம் உட்புறத்தில் வீறுங்காண் - செம்பழத்தை
வட்டைப் பழிக்கும் வனமுலைமா தேயரிசிப்
பிட்டைப் புசிப்பார்க்குப் பேசு *1424*

*அரிசிமா பிட்டுக்கு வன்மை, உள்வாத வெப்பம் இவையுண்டாகும். மாதவிடாயின் போது ஏற்படும் உதிரப் பெருக்கும் கட்டுப்படும்.*

## மோதகம் (கொழுக்கட்டை)

வாதம்உறு மந்தமிகு மாறாத வெப்பமுமாஞ்
சீத கபவிருத்தி சேருங்காண் - தீதுறுகட்
போதகமுஞ் செப்பும் பொருப்பு நிகர்முலையாய்
மோதகமுண் பார்க்கு மொழி *1425*

*கொழுக்கட்டையால் வாதம் வளரும். மந்தம் மிகும். வெப்பம், சிலேட்டுமம் இவற்றை உண்டாக்கும்.*

## கோதுமைஅடை

தேகம் பலக்கும்அதி தீபனம்உண் டாகும்நிறை
மோகம் பெருகுமைய மூர்க்கமறுங் - கோகமிக
வோதி யடையு, முயர்கொங்கை மாதரசே
கோதி யடையைக் கொடு *1426*

*கோதுமை அடை உடல்பலம், அதிகபசி, சுக்கிலதாது இவற்றை உண்டாக்கும். சிலேட்டுமம் போக்கும்.*

## பொரியுருண்டை

சர்த்திபித்த வாதந் தணியும் வலுத்தெழுந்த
சுத்த கபவாதந் தொலையுங்காண் - மெத்த
வரியுண்ட வேல்விழியாய் வையகத்திற் சாலிப்
பொரியுண்டை நன்றாம் புசி *1427*

பாகில் சேர்த்துப்பிடித்த நெற்பொரி, வாந்தி, பித்தவாதம், கபவாதம், கபம் இவற்றை நீக்கும்.

## சேர்க்கைஅவல்

பானெய்சேர்த் துண்ணிற் பலமாந் ததிகண்மந்தந்
தானெய்து மோரயர்வு தாகமெரி - வேனிருக்கு
மப்புளியு மஞ்சுங்கா லாகுமிரை யொழியு
மெப்புளியும் பித்திலவ லில் *1428*

*அவலில் பாலும் நெய்யும் சேர்த்துண்டால் உடற்குப் பலமும், தயிரில் கலந்துண்டால் மந்தமும், மோரில் உண்டால் சோபையும், எரிவும் ஏற்படும். நீரில் ஊறவைத்துண்டால் வாயுவை உண்டாக்கும். சோற்றை ஏற்றுக்கொள்ளாது. புளிகளில் சேர்த்துண்டால் பித்தரோகம் நீங்கும்.*

## நெற்பொரி

நெற்பொரியைத் தின்றால் நெடுந்தாகம் வாந்திமந்தம்
மற்பித்த வாத மதமூர்ச்சை - பற்பலவாம்
பேதி யருசியிவை பேருலகை விட்டொழியுஞ்
சாதி மடமயிலே சாற்று 1429

இதையுண்டால் தாகம், வாந்தி, மந்தம், பித்தம், வாதம், மூர்ச்சை, பேதி, சுவையின்மை இவை நீங்கும்.

## அப்பளம் - சோற்றப்பளம்

வாதத்தை யுண்டாக்கு மாபலத்தை யுங்கொடுக்குஞ்
சீதத்தை மேவுகபந் தீர்க்குங்காண் - ஓதும்உளுந்
தப்பளஞ்சோற் றப்பளங்கா லாதிகள்விஞ் சாதுநிலை
யொப்பவளஞ் செய்யும் உரை 1430

உளுந்து அப்பளம், வாதப்பெருக்கை உண்டாக்கி உடல் பலத்தைத் தரும். ஆமத்தைப்பற்றிய கபத்தை நீக்கும். அரிசிமாவால் செய்த சோற்றப்பளம் திரிதோடங்களையும் நெறிப்படுத்தும்.

## பாயசம்

பாயாசங் கொண்டாற் பழையமலம் வாந்திபித்தம்
ஆயாசம் போங்கூறில் அற்பமந்தந் - தூயசர்
வேந்திரிய நன்மை யெழில்வலிம னத்தெளிவோ
டார்ந்தபசி மேதையுமுண் டாம் 1431

இதனால் மலக்கட்டு, வாந்தி, பித்தம், இளைப்பு இவை நீங்கும். அற்பமந்தம் பஞ்சேந்திரியங்கட்கு நலம், அழகு மனத்தெளிவு, தீபனம் இவை உண்டாகும்.

## பரமானம்

பரமானத் தாற்பயித்தி யந்தாக மும்போ
முரமான ரூட்சை யுரக்குந் - திரமான
வங்கம் பருக்கு மதிக பலமு முண்டாம்
பொங்கமுறு மாதே புகல்

இது பித்தம், தாகம் நீக்கி சுரம், உடற்பருமன், பலம் இவற்றை உண்டாக்கும்.

### அன்னபின்னம்

*சோறுக்கெண் கூறுக்கந் தூமா வவலிவைக்கெண்*
*கூறுக்க முப்பழம் பால் கொள்ளிவைக்கெண் - கூறுக்க*
*மூன்பலமி வைக்கெண்கூ றுக்கஞ் சுகாசுகத்துந்*
*தான்பலவ கைத்துப்புந் தான்* **1432**

*அறுசுவையோடு புசிக்கும் அன்னத்தைவிட 8 பங்கு பலம் மாவும் அவலு மாம். இவ்விரண்டைப்பார்க்கிலும் 8 பங்கு பலம் பாலும் பழமுமாம். இவற்றை விட 8 பங்குபலம் மாமிசமும் கிழங்குமாம். இவற்றிற்கு மேல் 8 பங்கு பலம் பற்பல நெய்களுமாம், இந்த நெய்கள் இவ்வாறே பலத்தை யும் மிதம் தப்பினால் தீமையையும் செய்யும்.*

### உண்பதற்கு - முன்பின்உண்ணுங்கனிகள்

*அருந்தற்கு முன்ப ருந்த லாமா மலக*
*மருந்தற்குப் பின்பிலந்தை யாகும் - பொருந்தியவெக்*
*காலுங் கபித்தக் கனியாகு மாகாவெக்*
*காலுங் கதலிக் கனி* **1433**

*புசிக்கும் முன் நெல்லிக்கனி, புசித்த பின் இலந்தைக்கனி இவ் விரண்டு காலங்களிலும் விளாங்கனியும் புசிக்கலாம். வாழைக்கனி எப்போதுங் கூடாது.*

### உண்டபின்பு குறுநடைகொள்ளுதல்

*உண்டபின்பு நூறடிவைத் தோங்காக் குறுநடையைக்*
*கொண்டவர்க்கு முன்புகுடன் கொண்டபருந் - திண்டியெலா*
*சேர்ந்தொன்றாய்ச் சீரணிக்குந் தியமுத்தோ டங்களதி*
*லார்ந்தொன்ற மாட்டா வறி* **1434**

*இரவு உணவு முடிந்த பின்னர் தனது காலால் சிறுநடையாக நூறு அடி உலவிய பின் நித்திரை கொண்டால் முன்பு உண்டஉணவு எளிதில் சீரணிக்கும். திரிதோடம் அதில் சாராது.*

## பரிமளப்பூச்சு

### மணக்குழம்புபூசுதல்

*பூசுமணத் தாலின்பம் பூணு மணுக்கிருமி*
*நாசமுறு முட்டீக்கு நல்வலியாந் - தேசமரு*
*நாதவிந்து வும்விரைத்தீ நண்ண மிகவிளையுஞ்*
*சீதவிந்து வின்குளிர்போந் தேர்* **1435**

*உண்டபின் பூசும் மணக்குழம்பால் மகிழ்வும், சோணித சுக்கில விளைவும் உண்டாகும். இரசதாதுவில் ஊறும் அணுக்கிருமிகளும் சந்திரகிரணத்தால் வரும் சீதளக்குளிரும் நீங்கும்.*

### கார்காலமணப்பூச்சு

கார்காலந்தனிற்பூசக்க ருப்பூரஞ்சந்தங்
கஸ்தூரியகிற்கூட்டு காந்தியும்உண்டென்பர்
சீர்மேவுசிறப்புண்டாஞ் சீர்த்தியும்வந்தெய்துந்
தேகத்தின் வியர்வகலும் இளைப்போடுட் சுரம்போங்
கூர்மேவுகாசம்இழுப் பிருமலிவைவிலகுங்
குட்சிவாய்வதுதொலையும் நேத்திரமுந்துலங்கும்
ஆர்வமிகுந்தாகம்அறும் வீரியமுநண்ணும்
அறிந்தென்றுநடந்திடுவர்க் கம்புவியின்மீதே **1436**

*மழைக்காலத்தில் பச்சைக் கற்பூரம், கத்தூரி, அகில் கூட்டு போன்றவற்றை முறைப்படி சேர்த்து அரைத்து பூசினால் அழகு, மேன்மை, கீர்த்தி, விழியில் ஒளி, இச்சை, சுக்கில விருத்தி ஆகியவை உண்டாகும். வியர்வை, அயர்வு, உட்சுரம், இருமல், சுவாச காசம், வயிற்றுவலி, வாய்வு, தாகம் இவை நீங்கும். இது வெப்பப் பொருள் என்பர்.*

### பனிக்காலமணப்பூச்சு

பனிக்காலந்தனைத்தேடிக் குங்குமங்கச் சோரம்
பகரும்அகில்கஸ்தூரி சாந்துசவ்வாதுடனே
பனிப்பகலச்சமன்செய்து பனிநீரிற்குழைத்துப்
பண்புபெறப்பூசியிடில் ஊக்கம்உடைமையதாஞ்
செனிப்பானதாகமொடு பித்தம் அறுங்கபம்போந்
தினவுகெடும்வீரியமாஞ் செயம்உயரும்அழகாந்
தனிப்பானசெய்யமலர்த் திருவுமருங்கணைவாள்
சவுரியமுஞ்சேருமுகச் சந்தோஷமுறுமே 1437

*பனிக்காலத்தில் கிச்சாக் கிழங்கு, அகில் சாந்து, கத்தூரி, சந்தனம், சவ்வாது இவற்றை முறைப்படி பன்னீர்விட்டுக் குழைத்துப் பூசினால், உடல்பலம், தாதுவிருத்தி, மாதர் நாட்டம், வனப்பு, வீரியம், களிப்பு இவை உண்டாகும். தாகம், பித்தம், சிலேட்டுமத் தோடம், நமைச்சல் இவை நீங்கும்.*

### சுகந்தமலர்மாலைகளணிதல்

முல்லைமுத னீடுமண மொய்த்தமலர்த் தொத்தணிவார்க்
கில்லையெனுந் தாதுநட்ட மில்லைமா - றொல்லைமனத்
துக்க மொழியுஞ் சுகமொழியும் பூரிப்பு
மிக்க மொழியவரு மேல் 1438

*மாலை அணிந்தால் சுக்கில தாதுவிருத்தி, மங்களவார்த்தை மகிழ்ச்சி, நிறைவு, பல புகழ்ச்சி இவை உண்டாகும். மனத்துயரம் போகும்.*

### பன்னீர்

பன்னீர் மிகக்குளிர்ச்சி பாராய் சுகசந்நிக்
கிந்நீர்உண் ஏகும் இளைப்புமறுஞ் - சந்நிகளும்
வாதபித்த ஐயமொடு மானே வியாகுலமும்
பூதலம்விட் டேகும் புகல் 1439

*பன்னீரை மருந்தின் அனுபானங்களோடு கூட்டி அருந்தினால் சன்னி, சன்னி பாதம் இவை விலகும். தனியேக் குடித்தால் களைப்பு, திரிதோடம், மனச் சங்கடமும் நீங்கும். பன்னீர்ப்பூ எல்லாக் காலங் களுக்கும் ஏற்றது.*

## தாம்பூலகுணம்

### தாம்பூலம்

தக்கோலந்துவருறைப்பு காரமாமச்
சாரங்கஷாயமதிற் சிலதோஷம்போம்
நிற்காதுகிருமியையந் தாகம்பன்னோய்
நிறைபசியாமாதர்குழா நெருங்குமேலும்
மிக்கானசுவையுதரஞ் சுத்தியாகும்
விடாய்நீங்கும்அறிவொளிருந் தாதும்உண்டாம்
எக்காலுந்தருமமெய்துங் களையுஞ்சேரும்
எக்கருமங்கட்குமிது ஏற்றதாமே *1440*

*தாம்பூல ரசத்தால் கிருமி, கபம், தாகம், பல்நோய் இவை நீங்கும். பசி, மலசுத்தி, பெண்களின் உறவு, நாவுரிசை, நுண்ணறிவு, சுக்கில விருத்தி, அழகு இவை உண்டாகும். மேலும் இது மங்கள காரியங்களுக்குதவும்.*

### கொட்டைப்பாக்கு

கொட்டைப்பாக் கென்றுரைக்கிற் கோழைமலம் போமூலத்
தட்டைப்பார்க் குங்கிருமி சாம்அந்தக் - கொட்டைப்பாக்
கொத்தசுரத் தோர்க்குமருந் துண்டவாய்க் கும்பொருந்து
மெத்தவுண்ணிற் சோபைவரும் விள் *1441*

*இதனால் கோழை, மலம், மலக்கிருமி இவை நீங்கும். சுரம் கண்டோர்க்கும், மருந்துண்டோர்க்கும் வாயில் போட்டுக் கொள்ள உதவும். அதிகமுண்டால் சோபை ஏற்படும்.*

### இளங்கொட்டைப்பாக்கு

வளங்கட் டிலங்கைநகர் வாசியென வந்த
விளங்கொட்டைப் பாக்குண்பார்க் கென்றுங் - களங்கட்டும்
வாயுவே காமறவன் வல்லருசி யேகுமகத்
தேயுவே காமறைவோ தேர் *1442*

*இளங்கொட்டைப் பாக்குண்டால் தொண்டைக்கோழை, வாதம், நீங்காக்கபம், வலி, அருசி இவற்றை நீக்கி பசியை உண்டாக்கும்.*

## இவ்விதப்பாக்குகளை நீக்கவேண்டுமெனல்

*அதிபிஞ் சதிமூப் பதிபுதுமை மேனி*
*யதியீரம் பூச்சிகள்உள் ளாடல் - அதிசொக்கல்*
*உள்ளவிதப் பாக்குகளில் ஒன்றேனு நேரில்அதைத்*
*தள்ளவிதி முக்காலுந் தள்* **1443**

*இளம்பிஞ்சு, அதிமுதிர்ச்சி, மிகப்புதியது, பச்சை, புழுவைத்தது ஆகிய பாக்குகளைத் தின்னாமல் ஒதுக்க வேண்டும்.*

## சொற்றைப்பாக்கு

*சொத்தைப் பிளவிடித்துத் தோயமதில் ஊறவிட்டுச்*
*சத்துவர நூறுவிசை தான்கழுவி - வைத்துலர்த்தி*
*வாசம்அமைத் துத்தின்ன மந்தமொடு தோஷம்அறுந்*
*தேசம் அழகுமுறுஞ் செப்பு* **1444**

*இவற்றை இடித்து நல்லநீரில் ஊறவைத்து நூறுதரம் கழுவி, உலர்த்தி அதில் வால்மிளகு முதலிய வாசனைப் பொருட்களைக் கலந்து தாம்பூலம் கொண்டால் அக்கினி மந்தம், திரிதோடகோபமும் விலகும். ஒளியும் அழகுமுண்டாகும்.*

## களிப்பாக்கு

*களிப்பாக்குத் தின்றக்காற் கண்டத்துட் கோழை*
*யொளிப்பாகக் கட்டுமிஃ துண்மை - தளிர்ப்பான*
*பித்த அரோசகம்போம் பேதிமிக உண்டாகுஞ்*
*சித்த மகிழ்ச்சியுறுஞ் செப்பு* **1445**

*இது நெஞ்சில் கோழை கட்டும். மனமகிழ்ச்சி உண்டாக்கும். பித்தத்தால் உண்டான சுவையின்மை நீங்கும்.*

## வெற்றிலை

*ஐயம் அறுங்காண் அதன்சாரங் கொண்டக்காற்*
*பையச் சயித்தியம்போம் பைந்தொடியே - மெய்யின்*
*கடியின் குணம்போகுங் காரவெற்றி லைக்குப்*
*படியுமுத் தோஷமிதைப் பார்* **1446**

*காரமுள்ள வெற்றிலைச் சாறு கபம், நீர்ப்பிடிப்பு, காணாக்கடி, துர்க்குணம், திரிதோடகோபம் இவற்றை ஒழிக்கும்.*

### கம்மாறு வெற்றிலை

ஏட்டிலொன் றிகிட்டினீ ரேற்றஞ் சிரோபார
மாட்டிவிடு சந்நி மாந்தமொடு - நாட்டிற்
பரியகுரற் கம்மல்வலி பண்டியுப் பிசம்போ
மரிய கம்மாறு வெற்றிலை

*இதனால் சலதோடம், தலைநோய், சன்னி, மந்தாக்கினி, குரற்-கம்மல், வயிற்றுவலி, உப்பிசம் இவை நீங்கும்.*

### கற்சுண்ணம்

உண்டவனஞ்சீரணமா நெய்ச்சிக்கேகு
　　மூறில்விந்துவிற் கூக்க முறுங்காண்வாயில்
விண்டவெயிறிறுகுமறற் பேதிவற்றும்
　　வேந்தளித்தநீர்ச்சுறுக்கும் விலகுமெய்யை
யண்டுபலவிடமொழியுங் கறையோநிற்கு
　　மழலுறுபுண்சிரங்குநமை யழுபுண்ணாறுங்
கண்டவுருவன்மீகஞ் சிரநோய்சந்நி
　　களுங்கரக்குங்கற்சுண்ணங் காணுங்காலே *1447*

*கற்சுண்ணத்தால் உண்டஉணவு சீரணிக்கும். குடலிற்பிடித்த நெய்ச்சிக்கு, பேதி, வாதகிரீச்சரம், பூரான்கடி முதலிய பலவிடம், இரத்தம், காயங்களினின்று வழியும் இரத்தம், நெருப்புச்சுட்ட புண், சிரங்கு, தினவு, அரிந்த விரணம், கபநோய், மண்டைப்புற்று, தலைநோய், சன்னி இவை நீங்கும். சுக்கிலத்திற்குப் பலமும், பற்களுக்கு உறுதியுமுண்டாகும்.*

### முத்துச்சுண்ணம்

முத்துச்சுண் ணத்தால் முதிர்ந்தஅதி சாரம்ஐயங்
குத்துக் கிருமியொடு குன்மநோய் - நத்தியதோர்
வாத அரோசகமு மாறி விடுமலர்ந்த
போதிலுறை மாதே புகல் *1448*

*கழிச்சல், கபம், குத்துகின்ற கிருமி, வயிற்றுவலி, வாதத்தால் ஏற்படும் உணவில் வெறுப்பு இவை நீங்கும்.*

## தாம்பூலத்தில் - காய்ச்சுக்கட்டி - சுக்குலவங்கம் இவைகள் சேருதல்

காய்ச்சுக்கட் டிக்கிறுகுங் கட்டவிழ்ந்த தந்தமங்கார்
பூச்சிக் குழாமிப் புனலிற்சா - மாச்சுக்
கிலவங்க மாதிகளா லின்புண்டா மின்னுஞ்
சொலவங்க நோயுமறுஞ் சொல் *1449*

*காய்ச்சுக்கட்டி சேர்த்த தாம்பூலத்தால் அசையும் பற்கள் இறுகும். அச்சாற்றினால் மலக்கிருமிகள் கெடும். சுக்கு இலவங்கம் சேர்ந்த தாம்பூலத்தால் மனக்களிப்பும் முகக்களிப்பும் உண்டாகும். இலவங்கம் சேர்த்தால் செரியாமை, தோல்நோய் நீங்கும்.*

## தாம்பூலந்தின்னுங்காலபேதம்

காலை பிளவதிகங் கட்டுச்சி நீரதிகம்
மாலை யிலையதிக மாயருந்தில் - வேல்விழியே
காலை மலங்கழியுங் கட்டுச்சி தீபனமாம்
மாலை மணங்குலவும் வாய் *1450*

*காலையில் பாக்கையும், நண்பகலில் சுண்ணாம்பையும், மாலையில் வெற்றிலையையும் அதிகமாக உண்டால் காலையில் மலம் நன்கு கழியும். நண்பகலில் பசியேற்படும். மாலையில் வாய் மணக்கும்.*

## இதிலின்னதை முதலிற்றின்னவேண்டுமெனல்

வெற்றிலைக்கு முன்னம் வெறும்பாக்கை வாயிலிட்டாற்
குற்றம் உறும்உறவோர் கூட்டம்போம் - வெற்றிலையை
முன்னிட்டுப் பாக்கருந்து மூதறிவோர் தம்மார்பின்
மன்னிட்டு வாழும்பூ மாது *1451*

வெற்றிலைக்கு முன் பாக்கைப்போட்டால் உறவினர் கூட்டம் போகும். வெற்றிலையை முன்போட்டு பாக்கைப் பிறகு போடுபவரிடம் திருமகள் வாசம் செய்வாள்.

## தாம்பூலத்தில் - இன்னவைவிலக்க வேண்டுமெனல்

நீற்றிலையும் மூக்கு நெடிய நரம்புடனே
தீற்றும் புறவுரியுந் தின்றக்கால் - மாற்றலரை
வெல்லப்போர் செய்யும் விறனெடுமா லாயிடினுஞ்
செல்லப்போய் நிற்குந் திரு *1452*

*வெற்றிலையின் நீண்ட நுனி, காம்பு, நீண்ட நரம்பு இவற்றை ஒழித்து தாம்பூலந்தரிக்க வேண்டும். அவ்வாறு செய்யாவிடில் போருக்குச் செல்லினும், திருமகள் அவனிடம் தங்கமாட்டாள்.*

## தாம்பூலரசம்

வாயுமந்தம் பீநசஞ்சு வாசகா சம்மருசி
யேயுதர தோஷ மிவைபோக்குந் - தூயுடற்குக்
காந்திதரும் புத்திக்குங் கட்குநலஞ் செய்யுமணஞ்
சார்ந்தநறுந் தம்பலர சம் *1453*

*இதனால், வாதம், மந்தம், பீநசம், சுவாசகாசம், சுவையின்மை, வயிற்றுதோடம் இவை நீங்கும், மணமிக்க தாம்பூலரசத்தால் உடலுக்கு நலத்தையும் கண்ணுக்கு ஒளியையும் புத்திக் கூர்மையையும் உண்டாக்கும்.*

## தாம்பூலரசம்விழுங்கும்வகை

அடைகாய்தின்பதில்ஊறு முதல்நீர்நஞ்சாம்
அதிபித்தம்இரண்டாவ தூறுநீரே
கடையமிர்தமூன்றாவ தூறுநீர்தான்
கனமதுரநான்காவ தூறுமந்நீர்
மடையெனவேஐந்தாறிற் சுரந்துள்ஊறி
வருநீர்களைச்சுகித்து மனங்கொண்டுண்டால்
தடையுறாப்பித்தமொடு மந்தநோயுந்
தளர்பாண்டுநோயும்உண்டாந் தரஞ்சொன்னோமே *1454*

*வெற்றிலை, பாக்கு இவற்றை மென்று தின்பதில் முதலில் ஊறிய நீர் நஞ்சு; இரண்டாவது ஊறிய நீர் மிகுந்த பித்தமுடையது; மூன்றாவது ஊறியநீர் அமிர்தம். நான்காவது ஊறியநீர் மிகுந்த இனிப்புடையது. ஐந்தாவது ஆறாவது ஊறிய நீரினை உண்டால் பித்தம், மந்தம், பாண்டு நோய்கள் உண்டாகும்.*

## வாகன குணம்

### யானையேற்றம்

தாதுவிர்த்தி யும்பசியுந் தாழாது நற்பலமுந்
தீதுபித்த மும்வளருந் திண்ணமே - வாதமையம்
ஏழு கடற்புவியுள் எங்கு நிலையாவாம்
வேழ நடத்துவர்க்கு மெய் *1455*

*யானையேறியோர்க்கு சுக்கிலம், பசி, பலம், பித்தம் இவை விருத்தியாகும். வாதம், கபம் எப்போதும் இவரிடம் சேராது.*

### குதிரையேற்றம்

உடல் இறுகுந் தீபனமும் உண்டாகு நாளுங்
குடலிறங்கும் வெப்பாங் குளிரோ - குடிபோம்
பொரியிருமல் போராடும் பூமாதுஞ் சார்வாள்
பரிநடத்து வார்தமக்குப் பார் *1456*

*இதனால் தேகமிறுகல், பசி, குடலண்டம், உட்டிணம், சிற்றிருமல் இவையுண்டாகும். குளிர் நீங்கும். திருமகள் இவரிடம் சேர்வாள்.*

### பல்லக்கேற்றம்

வாயுமிக உண்டாகு மாறாத பித்தமறும்
ஏய பசிகலங்கி யெய்துங்காண் - தீயமதன்
வெல்லற் கரியகலை விள்ளுஞ் சுகவணங்கே
பல்லக் கிவர்வையெனிற் பார் *1457*

*இதனால் வாதம், கலங்கிய பசி இவை யுண்டாகும். பித்தம் நீங்கும்.*

### தண்டிகையேற்றம்

கண்ணொளிவு தாதுபுஷ்டி காமம் எழிலுடனே
எண்ஒளிருங் காந்தி யிவையுண்டாம் - விண்ணுலகுள்
எண்டிசையு மெச்சு மிளமயிலே யெப்போதுந்
தண்டிகையை யூர்வார் தமக்கு *1458*

*கண்ணொளிவு, வீரியவிருத்தி, காமவிருப்பு, அழகு, ஒளிவு ஆகியவை உண்டாகும்.*

## ஒயில்வண்டியேற்றம்

சரீரமுறு நோய்போந் தனிவாத மேகுங்
கரீரமென வூறுபித்தங் காணா - தரிய
அயில்வண்டி னந்தானென் றண்டியஞ்சுங் கண்ணாய்
ஒயில்வண்டி யேறுவர்க்கென் றோது 1459

*இதனால் ஆவிருத வாதம், வாதம், அதிபித்தம், உடல் வலி இவை நீங்கும்.*

## பாதுகையிட்டநடை

பலமண்பே தத்தாற் படருகின்ற ரோக
குலமேகும் விந்துகெடுங் கூறில் - நிலவரமே
வாதபித்த ஐயம்அறு மாதரசே நாடோறும்
பாதுகையை நீயணிந்து பார் 1460

*மிதியடியுடன் நடப்போர்க்கு சேற்றுப்புண் முதலான நோய்களும், சுக்கில விருத்தி, திரிதோடம் இவை நீங்கும்.*

## கால்கவசமிட்டநடை

தரணிவெப்பந் தோயுந் தரையாலா நோயு
மரணிகன்முள் ளாலா மருப்புந் - தரணியடர்
தேட்புழுக்க ளாதிகளாற் சேரும் பருவரலுங்
காற்கவசத் தார்க்கில்லைக் காண் 1461

*கால் கவசமிட்டு நடப்போர்க்கு சூரியகிரணம் பட்ட பூமியில் வருநோயும், கட்டை, கல், முள் இவற்றால் உண்டாகும் இரணங்களும், தேள், கிருமி முதலியவற்றால் வரும் தொல்லைகள் நீங்கும்.*

## சதாபாதநடை

சதாமிகுந்த பாதநடை தன்னா லொளிவுஞ்
சுதாவங்க புஷ்டியொடு துப்பும் - நிதானமுறு
வீரிய வீர்த்தியும்போம் மேனிகிழ மேனியதாஞ்
சீரியநற் கொங்கைமின்னே செப்பு 1462

*அதிநடை நடப்பதால் ஒளிவு, தேகப் பெருக்கம், பலம், இவை மத்திமமாகும். சுக்கில நட்டம், வயதான தோற்றம் இவை உண்டாகும்.*

### அதிகவோட்டம் சதாஉட்கார்ந்திருக்குதல் - நொந்தசோறுண்ணல் - மிகுகாற்றுவிரும்புதல்

ஓட்ட மிகினும் உளுக்காந் திருந்திடினுஞ்
சூட்டாவி நொந்தபதந் துய்த்திடினுந் - தாட்டிகமாய்க்
காற்றுடலிற் பட்டிடினுங் காரிகையே நோயுடலாம்
சாற்றுகின்ற வாதமுறுந் தான் *1463*

*இரைக்கும்படி ஓடுதல், சதா உட்கார்ந்திருத்தல், சுடுபுகை படும்படி உலவுதல், நொந்த சோறுண்ணல், மிகுகாற்று விரும்பல் ஆகிய செயல்களினால் முறையே சயம், அதிபருமன், கண்ணோய், அக்கினி மந்தம், வாதநோய் முதலானவை உண்டாகும்.*

### ஊன்றுகோல்

*பலமிருகத் தாலாம் பயமனைத்து நீக்கும்
உலவுவிழி புத்தியிவைக் கொக்கும் - பலம்அருளும்
வீறு தயிரியமும் வீரியமும் உண்டாக்குங்
கூறிலயர் வோட்டுங்கைக் கோல்* *1464*

*கண்ணிற்கும், அறிவிற்கும் ஒத்ததான ஊன்றுகோல் பலமிகுந்த விலங்குகளாலுண்டான பயம் நீங்கும். பலமும் அருளும் வீரமும் உண்டாகும்.*

## சயனகுணம்

### புஷ்பஅணை

தீபாக் கினிதழையுந் தின்றமருந் தாலெழுந்த
தாபாக் கினியுந் தணியுங்காண் - யாபார
நட்புவரும் விந்தூறு நாளுமுட லஞ்செழிக்கும்
புட்பவணைக் கென்றே புகல் *1465*

முல்லை, மல்லிகை முதலிய மலர் படுக்கையில் துயில்வோர்க்குப் பசி, போகத்தில் விருப்பம், சுக்கில விருத்தி, உடல் செழிப்பு, சிறந்த நட்பு, இவற்றை உண்டாக்கி மருந்தினால் உண்டான வெப்பந்தவிர்க்கும்.

## இலவம்பஞ்சு - பருத்திப்பஞ்சு

*இலவின்பஞ் சுப்படுக்கைக் கேகும் அனலம்*
*அலர்பருத்திப் பஞ்சி னணையோ - உலவிரத்தம்*
*விந்துகளைப் பெருக்கு மேல்விரக முண்டாக்குங்*
*குந்துசு ரத்தையழைக் கும்* 1466

*இலவம்பஞ்சு மெத்தையில் படுத்தால் உட்சூடு நீங்கும். பருத்தி மெத்தை இரத்தம், விந்து, காமம், சுரம் இவற்றை விருத்தி செய்யும்.*

## இரத்தினக்கம்பளம்

*பஞ்சவன் னஞ்சேர்நற்கம் பளத்தறுஞ் சலவைதோஷம்*
*விஞ்சிடும் பித்தந்தாது விர்த்தியு முண்டாஞ்சீதம்*
*அஞ்சிடுங் கோபஜய மலைந்திடும் பாண்டுவோடு*
*நஞ்சுக ளெல்லாந்தீரு நலம்பெறு முஷ்ணமாமே* 1467

*ஐந்துவகை வண்ணஞ்சேர்ந்த இரத்தினக் கம்பளத்திற்கு நீர்ப்பிடிப்பு, தோடம், குளிர், கபம், பாண்டு, வீக்கம், பலவகை விடம் இவை நீங்கும். பித்தமும் சுக்கில தாதுவும் அதிகரிக்கும். இது வெப்பத்தை உண்டாக்கும்.*

## சகலாத்தி

*குளிர்சுரத்திற் கேற்குங் குளிர்பனியைப் போக்கும்*
*வளர்பெரும் பாடதனை மாற்றும் - அளிகள்*
*அகலாத் தெரிய லணியளக மின்னே*
*சகலாத் தெனவேநீ சாற்று* 1468

*இது நடுக்கற்சுரம், குளிர், பனி, பெரும்பாடு ஆகியவற்றைப் போக்கிவிடும்.*

## தாழம்பாய்

*தாழம்பாய் வாந்தி தலைச்சுழற்றல் பாண்டுபித்தம்*
*ஆழஞ்சேர் நீராமை யாம்பிணியும் - வீழுந்தண்*
*ணீரிழிவும் போக்குமிக நேசித்த வர்க்குலகிற்*
*காரிழியுங் கூந்தன்மின்னே காண்* 1469

*இது வாந்தி, தலைச்சுற்றல், பாண்டு, பித்ததோடம், நீராமைக்கட்டி, வெகுமூத்திரம் ஆகியவற்றைப் போக்கும்.*

### கோரைப்பாய்

கோரையின்பாய் நற்குணமாங் கூறரிய மந்தமறும்
கூரிய தேகங் குளிர்ச்சியுறும் - வாருலகில்
நன்னித் திரைகூடு நாடாது ரூட்சையிதை
யுன்னிப் புவியி லுரை *1470*

*இப்பாயில் படுத்தால் அக்கினி மந்தமும் சுரவேகமும் நீங்கும். தேகக் குளிர்ச்சியும், நல்ல நித்திரையும் உண்டாகும்.*

### சாதிப்பாய்

சாதிப்பாய் சீதளமாஞ் சாருமிக னால்மூலம்
பேதிக்குட் சீதம் பிசறுங்காண் - வாதிக்குஞ்
சீதசுரங் காணுஞ் சிரசு மிகக்கணக்கும்
ஏதமிகு நோயோர்க் கிசை *1471*

*சீதளகுணமுடைய பிரப்பம்பாய் மூலம், சீதமலப்பேதி, சீதசுரம், தலைபாரம் இவற்றை உண்டாக்கும்.*

### பேரீச்சோலைப்பாய்

பேரீச்சுப் பாயினிதம் பேரா துறங்குவர்க்குப்
பாரித்த குன்மம் பறக்குமென்பார் - பூரித்த
வீக்கம்அறுந் தீபனமா மெய்யைவெளுப் போடுஷ்ணம்
ஆக்கிவிடு மென்றே யறி *1472*

*இதில் தொடர்ந்து உறங்கினால் உட்டிணம், தேக உலர்ச்சி, பசி, பாண்டு இவை உண்டாகும். வயிற்றுவலி, சோபை நீங்கும்.*

### சிற்றீச்சோலைப்பாய்

சிற்றீச்சுப் பாயில் தினமும் படுப்பவருக்
குற்றிடுமே காந்தல் உடம்புலருஞ் - சுற்றியதோர்
வாயுவறும். பித்தம்அறு மற்றுங் கபந்தீருந்
தாயகமா மிக்குணத்தைச் சாற்று *1473*

*இதில் துகில்வோர்க்கு உட்டிணம், தேக உலர்ச்சி உண்டாகும். வாதம், பித்தம், கபம் இவை நீங்கும்.*

### மூங்கிற்பாய்

*நீர்க்கடுப்பு மெத்தவுறு நீடுபித்த மும்பெருகும்*
*ஆர்க்கும் அனலம் அதிகரிக்கும் - பார்க்குளுறை*
*கோங்கி னறியமுகைக் கொங்கை மலர்த்திருவே*
*மூங்கிலின் பாய்க்கு மொழி* *1474*

*இதில் துயில் கொண்டால் மூத்திரக்கிரீச்சரம், பித்த கோபம், வாதம், வெப்பம் இவை பெருகும்.*

### தலைக்கணை

*கழுத்திற்குந் தோளிற்குங் கண்ட வுயர்வாய்*
*வழுத்துநீ ளத்தில்வைத்த மட்டா - யிழைத்தநறும்*
*பஞ்சின் றலைக்கணைக்கெப் பானரம்பு நன்குறும்போந்*
*துஞ்சின் றலைக்குமுச்சிச் சூர்* *1475*

*கழுத்திற்கும் தோளிற்கும் மத்தியில் வைக்கும் அளவான உயரமுள்ள தலையணை பாதாதி கேசம் வரையுள்ள அனைத்து நரம்புகளைப் பிசகாமல் பார்த்துக் கொள்ளும். தலை நோய்களும் நீங்கும்.*

## விசிறி குணம்

### மயில்விசிறி

*சந்நிவிஷங் குன்மந் தலைச்சுழலல் பித்தம்விக்கல்*
*துன்னுசுவே தம்வாத தோஷமும்போம் - பன்னவதில்*
*உட்டிணமாம் புத்தி யொளிரும் பசுந்தோகை*
*யிட்ட மயில்விசிறிக் கே* *1476*

*மயிலிறகால் செய்த விசிறி விடம், சன்னி, வயிற்றுவலி, தலைச்சுழற்சி, பித்தம், விக்கல், வியர்வை, வாதம் இவற்றை நீக்கும். அறிவு விளங்கும். இது சூட்டை உண்டாக்கும்.*

## வெட்டிவேர்விசிறி

*வாசவெட்டி வேர்விசிறி வன்பித்த கோபமொடு*
*வீசும் எரிச்சலையும் வீழ்த்துங்காண் - பேசுங்கால்*
*தாக மகற்றுஞ் சகலம னோக்கியமாம்*
*மோகமருண் மாதே மொழி* **1477**

*மணமுள்ள வெட்டிவேர் விசிறி பித்தம், உடலெரிவு, அதிதாகம் இவற்றை நீக்கி மனபலம் உண்டாக்கும்.*

## பனையோலைவிசிறி

*பனைவிசிறி தன்னாற் பருத்ததொரு வாத*
*வினையுமைய நோயும் விலகுங் - கணைபித்த*
*நோயு மருசியென்ற நோயுங் குடியேகுந்*
*தேயுமிடை மாதே தெளி* **1478**

*பனைவோலை விசிறியினால் வாதம், பித்தம், கணை, சிலேட்டுமம், சுவையின்மை இவை நீங்கும்.*

## வெண்சாமரை

*வெண்சா மரத்தால் வியர்வைஆ யாசமொடு*
*திண்சோஷை மூர்ச்சைத் திருக்குமறுந் - தண்சாராத்*
*தாகமறும் வெப்பந் தணியுந் திருவமரும்*
*போகமுறு மாதே புகல்* **1479**

*வெண் சாமரையால் வியர்வை, களைப்பு, மயக்கம், மூர்ச்சை, ஞாபகமறதி, நாவறட்சி, உட்டிணம் இவை நீங்கும். செல்வமும் புணர்ச்சியில் விருப்பமும் உண்டாகும்.*

## புணர்ச்சி

### இவ்விதமாதர்போகம் - கூடாதெனல்

துக்கம்பய மங்ககேசந் திரிமலந் துஞ்சலல்லி
வெட்கம் பசிகருப் பந்தாகமூப்பு வெறுப்பசுபஞ் - சுட்க
மலட்சியங் கோபம ரூபமெய்த் துற்கந்தங் கோண்மிக்
அதிதூல முடைமாதர் போகம் வினைக்குவித்தே 1480

*துக்கம், பயம், உடல்முழுதும் மயிர், தூங்கிவிழித்தல், அலித் தன்மை, பசி, கருப்பம், நாணம், தாகம், தன்வயதுக்கு மேற்பட்ட வயது, புணர்ச்சியில் வெறுப்பு, சுவையின்மை, முகயோனி நோய், அலட்சியம், கோபம், அழகின்மை, கற்றாழைநாற்றம், கோள் சொல்லல், மிகப்பருத்த உடல் ஆகியவை உடைய மாதர் போகம் பலவித நோய்களை உண்டு பண்ணுமாம்.*

தேவ குருவரச தீனதா ரத்தையலர்
பாவல மங்கலமாம் பாவையர்பான் - மேவியின்பங்
கண்டாரைச் சாருமுறு கண்ணிடுக்க மின்றியே
விண்டாரைச் சாருமுன்னி விள் 1481

*தேவ மகளிர், குருபத்தினி, இராஜபத்தினி, ஏழைப்பெண், தாரமுடையபெண், பழிப்பெண், விதவை இவர்களைப் புணர்ந்தால் துன்பம், தரித்திரம் இவை இவர்களைத் தொடரும்.*

### புணர்ச்சிசெய்யும்விதி

அங்கமுற்றும் பாகியமா யார்வமொன்றா யன்பொன்றா
யங்கமுற்றும் போகமொன்றா யாருங்கா - லங்கத்
துறையுஞ் சகசவிக லுற்றகரு விங்க
னறையும் பருவத் தவர் 1482

*நல்ல பருவமுள்ள ஆணும், பெண்ணும் உடல் முழுதும் மறைப் பில்லாமல் ஆசையோடும், அன்போடும் போகம் கொள்ளும் போது உண்டாகும் கருவானது நல்லபலமுடையதாகவும் நல்லதாகவும் அமையும்.*

### அரோகசந்தானப்புணர்ச்சி

*பதினா றெனுமியாயுட் பாவையு நாலைந்தென்*
*றுதியாயுட் காளையுமெய் யொவ்வின் - மதியோர்*
*தரமிரவி லுண்டாந் தனுசர்க்குந் தேகந்*
*திரமிரவி மஞ்சுறுகண் டேர்* *1483*

*பதினாறு வயதுடைய பெண்ணும் இருபது வயதுடைய ஆணும் மாதமொரு நாள் இரவில் உடலுறவு கொண்டால் பிறக்கும் குழந்தைகள் நோயின்றி திடமானதாக இருக்கும்.*

### தினப்புணர்ச்சி

*அனந்தவித பந்தத்தோ டல்லும் பகலு*
*மனந்தலின்றிச் சேர்ந்தா ரகக்கண் - கனிந்தநோய்ச்*
*சங்கைக்கு மூப்புமிலைச் சார்ந்த மருத்துவர்க*
*டங்கைக்கு மூப்புமிலைத் தான்* *1484*

*பல்வகை லீலைகளுடன் இரவும் பகலும் தூக்கமின்றி போகத்தில் ஈடுபடுவோர்க்கு அதிக நோய்கள் உண்டாகி மருத்துவர்க்கு ஓயாத பணியதைத் தரும்.*

### சுக்கிலநிரோதனம்

*விந்துவைம றிக்குங்கால் வீக்கம் பிரமேக*
*முந்துவளி கல்லடைப்பு மூடுசுரஞ் - சந்துகைகா*
*லாசனநா பக்கமிடுப் பவ்வுழிநோய் மார்புவலி*
*வீசனனீர்க் கட்டிவையா மே* *1485*

*விருப்பம் இருந்தும் போகம் செய்யாமல் சுக்கில விரையம் செய்தால் சீழ்பிரமேகம், அண்டம், கல்லடைப்பு, காமசுரம், சந்து, கைகால், ஆசனம் போன்ற இடங்களில் ஏற்படும் நோய்கள் மார்புநோய், பித்த கீரீச்சரம் ஆகியவை உண்டாகும்.*

## நித்திரைசெய்வது

ஐந்திந் திரிய வசவுக் கியமகலு
நைந்தமனத் துச்சாக நண்ணுங்காண் - பைந்தொடியே
மேனீட்டு மாயுளுறு மெய்யி னயர்வொழியுங்
கானீட்டிப் பள்ளிகொள்ளுங் கால் *1486*

*இடது பக்கமாகப் படுத்து காலைநீட்டித் துயில் கொண்டால் பஞ்சேந்திரியங்களில் அயர்வும், உடல் வருத்தமும் நீங்கும். மனத்திற்கு உற்சாகமும், ஆயுள் விருத்தியும் உண்டாகும்.*

## முக்காடிட்டு நித்திரைசெய்வது

முக்காடிட் டங்கமுற்று மூடித் துயிலின்இரண்
டக்கிக்குந் தோட்கும் அதிபலமா - மிக்கான
சீதம்வெயில் தூசிபனி சீறிவரு காற்றிவையா
லோதவரு துன்புமிலை யுன் *1487*

*தலைமுதல் கால்வரை துணியில் மூடிக் கொண்டு நித்திரை செய்தால் இரண்டு கண்களுக்கும் புஜங்களுக்கும் வன்மையுண்டாகும். குளிர் வாடை, வெயில் வேகம், தூசி, பனி, காற்று இவற்றால் ஏற்படும் குற்றங் களும் நீங்கும்.*

## தொக்கணம்

தொக்கணத்தி னால்இரத்தந் தோல்ஊ னிவைகட்கு
மிக்கு சவுக்கியஞ்ச மீரனும்போ - மெய்க்கதிக
புட்டி யுறக்கம் புணர்ச்சி யிவைகதிக்கும்
பட்ட அலைச்சல்அறும் பார் *1488*

*தொக்கணத்தால் இரத்த, தோல் மாமிசத் தாதுக்களுக்கு ஊக்கந் தருவது தவிர உடல்பலம், நித்திரை, புணர்ச்சியில் இச்சையும் அதிகமாகும். வாதம், உழைப்பால் வந்த வருத்தம் இவை நீங்கும்.*

## இரவில் நித்திரைப்பங்கம்

*சித்த மயக்கஞ் செறியைம் புலத்தயக்க*
*மெய்த்த லுறக்கமந்த மென்பவைக - ணித்தமுற*
*வண்டுஞ் சிலரைநா யாய்ப்பன்னோய் கவ்வுமிராக்*
*கண்டுஞ் சிலரைநம்பிக் காண்* *1489*

*இரவில் நித்திரை செய்யாமலிருந்தால் புலன்களின் சோர்வு, கட்கம், பயம், அக்கினிமந்தம் முதலிய நோய்கள் உண்டாகும்.*

## பகல்நித்திரை

*தண்டமேட்டரக்ஷிய மூருத்தம்பஞ்*
*சருவாங்கமுக்கிராக் கிரகஞ்சுப்தி*
*துண்டமுறுவனுத்தம்பந் திருக்குத்தம்பஞ்*
*சோணிதமாட்டியம்புருவா டோபகந்தண்*
*அண்டுகிருத்திரசியூர்த் துவஞ்சம்பூக*
*மவபேதமவதந்திர மவதானந்தாள்*
*விண்டவிவுர் தாசியமிப் பதினெண்காற்கும்*
*வித்தாகும்பகலனந்தன் மேவின்மாதோ* *1490*

*பகல் நித்திரை கொண்டால் தண்டம், மேட்டாரசீயம், ஊதஸ் தம்பம், சருவாங்கம், உக்கிரகிரகம் முதலான பதினெட்டு வகை வாத நோய்களும் உருவாகும்.*

## பத்தியம்உண்டவர்கள்பகல் நித்தரைசெய்தல்

*அண்டவங்கி யுண்டவுறை யங்கியரும் பத்தியத்தா*
*லண்டவங்கி மூன்றோ டனந்தலது - கொண்டவங்கி*
*கூடுங்கா னேத்திரநோய் கூடுமி ரத்தபித்த*
*நீடுங்காண் விந்துவு நீராம்* *1491*

*பத்தியங் கொண்டோர்க்கு சூரிய வெப்பம், ஔடதவெப்பம், கடும்பத்திய வெப்பம் என்ற 3 வெப்பத்துடன் பகல் நித்திரை செய்வதால் பிரிக்கின்ற வெப்பமுங்கூடி விழி நோய் உண்டாகும்.*

## பதார்த்தசீரணகாலஅளவை

### ரசம்-கற்கம்-செயநீர்-குளிர்ந்தநீர்-வெந்நீர்

பாரினின் மாந்தருண்ணும் பற்பல பண்டமெல்லாஞ்
சீரண மாகுங்காலந் தெளியவே செப்பக்கேண்மோ
காரண ரசமோரேழு கடிகையாங் கற்கஞ்செய்நீர்
வீரணத் தண்ணீர்சாமம் வெந்நீரு மிரண்டேசாமம் *1492*

*ஏதேனும் ஒன்றைப் பிழிந்த சாறு ஏழு நாழிகையிலும், அரைத்த மருந்துகள், செய்நீர்கள், குளிர்ந்தநீர் இவை ஒரு சாமத்திலும் (மூன்று மணிநேரம்), வெந்நீர் இரண்டு சாமத்திலும் (ஆறு மணிநேரம்) சீரணமாகும்.*

### காய்ந்தாறியசலம் - கஷாயம் - பழச்சாறு - சோறு - பால் - தேன்

சாலவே காய்ச்சியாறுஞ் சலம்பத மூன்றேமுக்காற்
சீலமாங் கஷாயமூன்று சேர்பழச் சாறுமாறாந்
தாலமாஞ் சோறிரண்டு சாமமா மிருபதாகும்
பாலுதேன் பன்னிரண்டு நாழிகை பகருவாரே *1493*

*காய்ந்தாறிய நீர் மூன்றே முக்கால் நாழிகையிலும், கஷாயம் ஆறு நாழிகையிலும், கனி ரசங்கள் ஆறு நாழிகையிலும், சாதம் இரண்டு சாமத்திலும் (ஆறு மணி நேரம்), பால் 20 நாழிகையிலும் தேன் 12 நாழிகையிலும் சீரணமாகும்.*

### தயிர்ச்சோறு - மோர்ச்சோறு - நீர்ச்சோறு - வெண்ணெய் - சோறு - சாராயம்

வார்துவை தயிருஞ்சோறும் வகுத்திடிற் பதினொன்றாகும்
மோர்விடு பதம்பன்மூன்று மொழிபதம் பதினெட்டாகும்
ஆருவச்சோ றிரண்டு சாமமாமரிய வெண்ணெய்
சாருமா வன்னஞ்சாமஞ் சாராயங் கடிகையைந்தாம் *1494*

*தயிர் சாதம் 11 நாழிகையிலும், மோர் சாதம் 13 நாழிகையிலும், நீர் சாதம் 1S நாழிகையிலும், வெண்ணெய் சாதம் 2 சாமத்திலும், சாராயம் 1 சாமத்திலும் அல்லது 5 நாழிகையிலும் சீரணமாகும்.*

### சூரணம் - தைலம் - லேகியம் - கிருதம் - பஸ்பம் - கறிகள் - பழங்கள்

சூரணந் தைலமிலேகங் கிருதஞ்சொற் பனிரண்டென்னச்
சேருநா ழிகையாம்பஸ்பஞ் சீரணம் அரைச்சாமத்திற்
கூரிய கறிகளெல்லாங் கூறில்நா ழிகையேழாகுஞ்
சீரிய பழங்களெல்லாஞ் சீரணஞ் சாமந்தன்னில் **1495**

*சூரணம், தயிலம், இலேகியம், கிருதம் இவை 12 நாழிகையிலும், பற்பம் மூன்றே முக்கால் நாழிகையிலும் நல்ல காய்கறிகள் 7 நாழிகையிலும், உயர்ந்த பழங்கள் எல்லாம் $7^1/_2$ நாழிகையிலும் சீரணமாகும்.*

### கருணை முதலிய கிழங்குகள், வெந்துபாகமான விதைகள் பழச்சாறுகள் - பச்சையாய் - அல்லது வெந்ததாயுள்ள ஆறுவகைச்சுவை

உரைகரு ணைக்கிழங்கோ டுட்கிழங்கெல்லாஞ் சாமம்
விரைகளும் பழத்தின்சாறும் வெந்திடிற் சாமமேயாம்
பரிசுறுசுவைகள் பின்னும் பச்சையதாய்த் தின்றாலுங்
கரையவெந் ததைத்தின்றாலுங் கடிகையைந் ததன் மேலில்லை **1496**

*கருணை, காராக்கருணை, புளிக்கருணை, நீர்க்கருணை, சேனைக் கருணை முதலிய கிழங்குகள் ஏழரை நாழிகைகளிலும், வித்துக்கள், கனிரசங்கள் ஏழரை நாழிகை, அறுசுவை காய்களைப் பச்சையாக அல்லது சமைத்து உண்டால் 5 நாழிகையிலும் சீரணமாகும்.*

### கழுநீர் - இவைகளைக்குடித்தல் - மா உண்டைபொங்கல் - பசும்பால் - இந்நான்குங்கூட்டியுண்ணல்

காவிநேர் கண்ணாய்கேளாய் கழுநீர்கா டியும்ஐந்தாகும்
மாவுடன் உண்டைபொங்கல் வகைகளோ டாவினறப்பால்
மேவுமோர் தினத்திந்நான்கு விதமுஞ்சேர்த் தருந்தும்உண்டி
பூவினா லைந்துநாழி போயபின் சீரணிக்கும் **1497**

*கழுநீர் காடி 5 நாழிகையிலும், மா, பொரி உருண்டை, மிள கோதமை, பசும்பால் இவற்றைக் கலந்து ஓர் தினத்தில் அருந்தினால் 20 நாழிகையிலும் சீரணமாகும்.*

### கஞ்சிவகை - நல்லவெல்லம் - தேன் - காய்கள் - பச்சரிசி

வர்த்திக்கும் வடித்தகஞ்சி வகையேழிற் சீரணங்காண்
தித்திக்கு நல்லவெல்லந் தேனிரு பதுநாழிக்குள்
அற்றிடுங் காயினங்க ளற்றிடு மெண்பதத்துட்
கத்தும் பச்சரிசிநாலைங் கடிகையுட் சீரணிக்கும் *1498*

*வடிகஞ்சி முதலிய கஞ்சிகள் ஒன்பது நாழிகையிலும் நல்ல வெல்லம், தேன், பச்சரிசி இருபது நாழிகையிலும், கத்தரிக்காய் முதலான காய் வகைகள் எட்டு நாழிகையிலும் சீரணிக்கும்.*

### இளநீர் - சருக்கரை - பானக்கம் - இவையருந்தல் - தயிரின்மேல் - மோருஞ்சலமும்பருகுதல் - வறுத்தமாவைத் தண்ணீரில் கரைத்துக்குடித்தல்

இளநீர்சர்க் கரைபானக்க மெழுநாழி கையிற்செரிக்கும்
வளமுள தயிரின்மேலும் வார்த்துணு மோரின்மேலுந்
தெளிவுறு தண்ணீருண்ணச் செரித்திடுங் கடிகையைந்தில்
தெளியநல் வறுமாநீருஞ் செரித்திடுங் கடிகையேழில் *1499*

*இளநீர், சர்க்கரை, பானக்கம் ஏழு நாழிகையிலும் தயிர் அல்லது மோர் சாதம் உண்டு நீர் பருகினால் 5 கடிகையிலும் வறுத்த மாவைத் தண்ணீரில் கரைத்துக் குடித்தால் ஏழு நாழிகையிலும் சீரணமாகும்.*

### சுட்டநீர் - முக்காற்சுண்டிய நீர் - திட்டமாகஆறிய நீர்

சுட்டநீர் உண்ணுங்காலை சொல்லிய ஆறாமுக்கால்
மட்டிலே கொதித்தவெந்நீர் வகுக்கி லேழரையேயாகுந்
திட்டமாய்க் குளிர்ந்தநீர்தான் செரிக்கும் ஒன்பதின் மேலென்
வட்டமா முலையினாளே வழுத்துநா ழிகையைத்தானே *1500*

*காய்ந்தநீர் 6 நாழிகையிலும், முக்காற்கூறு சுண்டிய நீர் ஏழரை நாழிகையிலும், அருந்தும் பதமாயாற்றிய நீர் 9 நாழிகையிலும் சீரணமாகும்.*

### மரம் - செடி - இவைகளின் மகரந்தம் - பூகொழுந்து

தருசெடி களிலுண்டாங்கே சரங்கள்பூ கொழுந்தே யெல்லாம்
அரிவையே தின்றிடிற்சீ ரணஞ்சாமந் தனிலிவ்வாறே
திரவிய வினங்கட்கெல்லாஞ் செப்பிடும் வேதமென்றே
குருபர னடியைப்போற்றுங் குறுமுனி யுரைத்தவாறே 1501

மரம், பூ, தளிர் இவைகள் $7^1/_2$ நாழிகையில் சீரணமாகும். இவ்வாறே எல்லா பொருட்களுக்குமுள்ள சீரணகால அளவையை அகத்தியர் கூறியுள்ளார்.

### நோயணுகாவிதி

திண்ண மிரண்டுள்ளே சிக்க வடக்காமற்
பெண்ணின்பா லொன்றைப் பெருக்காம - லுண்ணுங்கா
னீர்கருக்கி மோர்பெருக்கி நெய்யுருக்கி யுண்பவர்தம்
பேருரைக்கிற் போமே பிணி 1502

*மலசலம் போக்கி, விந்துவை அதிகம் விடாமல் தேக்கி, நீரைக் காய்ச்சி, மோரைப் பெருக்கி, நெய்யை உரக்க உண்டால் அவர்களை நோயணுகாது.*

பாலுண்போமெண்ணெய்பெறின் வெந்நீரிற்குளிப்போம்
பகற்புணரோம்பகற்றுயிலோம் பயோதரமுமூத்த
வேலஞ்சேர்குழலியரோ டிளவெயிலும்விரும்போ
மிரண்டடக்கோமொன்றைவிடோ மிடதுகையிற்படுப்போ
மூலஞ்சேர்கறிநுகரோ மூத்ததயிருண்போ
முதனாளிற்சமைத்தகறி யமுதெனினுமருந்தோம்
ஞாலந்தான்வந்திடினும் பசித்தொழியவுண்ணோ
நமனார்க்கிங்கேதுகவை நாமிருக்குமிடத்தே 1503

உண்பதிருபொழுதொழிய மூன்றுபொழுதுண்ணோ
முறங்குவதிராவொழியப் பகலுறக்கஞ்செய்யோம்
பெண்கடமைத்திங்களுக்கோர் காலன்றிமருவோம்
பெருந்தாகமெடுத்திடினும் பெயர்த்துநீரருந்தோ
மண்பரவுகிழங்குகளிற் கருணையன்றிப்புசியோம்
வாழையிளம்பிஞ்சொழியக் கனியருந்தல்செய்யோ
நண்புபெறவுண்டபின்பு குறுநடையுங்கொள்வோ
நமனார்க்கிங்கேதுகவை நாமிருக்குமிடத்தே *1504*

ஆறுதிங்கட்கொருதடவை வமனமருந்தயில்வோ
மடர்நான்கு மதிக்கொருக்காற் பேதியுறைநுகர்வோந்
தேறுமதியொன்றரைக்கோர் தரநசியம்பெறுவோந்
திங்களரைக்கிரண்டுதரஞ் சவளவிருப்புறுவோம்
வீறுசதுர்நாட்கொருக்கா னெய்முழுக்கைத்தவிரோம்
விழிகளுக்கஞ்சனமூன்று நாட்கொருக்காலிடுவோ
நாறுகந்தம்புட்பமிவை நடுநிசியின் முகரோ
நமனார்க்கிங்கேதுகவை நாமிருக்குமிடத்தே *1505*

பகத்தொழுக்குமாத ரசங்கரந்துடைப்பமிவைத்தூட்
படநெருங்கோந் தீபமைந்தர் மரநிழலில்வசியோஞ்
சுகப்புணர்ச்சியசனபச னத்தருணஞ்செய்யோந்
துஞ்சலுணவிருமலஞ்சை யோகமமுக்காடை
வகுப்பெடுக்கிற்சிந்துகச மிவைமாலைவிடுப்போம்
வற்சலந்தெய்வம்பிதுர்சற் குருவைவிடமாட்டோ
நகச்சலமுமுளைச்சலமுந் தெறிக்குமிடமணுகோ
நமனார்க்கிங்கேதுகவை நாமிருக்குமிடத்தே *1506*

*பசும்பால் உண்போம்; தலைமுழுக்கெனில் வெந்நீரில் குளிப்போம். பகலில் புணர்ச்சியையும்; துயில்வதையும் தவிர்ப்போம். மூத்த மங்கையர், இளம் வெயில் இவற்றை விரும்போம். மலசலங்களைப் போக்குவோம். சுக்கிலத்தை அடுத்தடுத்து இழக்கோம். மூலம் உண்டாக்கும் காய் கறிகளைப் புசியோம். புளித்த தயிருண்போம் அமிழ்தமே ஆனாலும் முன் நாளில் சமைத்த கறி உண்ணோம். பசித்த பின்னன்றி புசியோம்.*

*தினம் இருதரம் அல்லாது மும்முறைஉண்ணோம். புசித்தபின் உறங்கோம். மாதரை மாதமொருமுறையே சேர்வோம். உணவின் முடிவில் மட்டுமே நீருண்போம். கருணையன்றி பிற கிழங்குகள் புசியோம். வாழைக்காயல்லாது பழமுண்ணோம். புசித்தபின் குறுநடை நடப்போம். ஆறுமாதமொருமுறை வாந்தி, நான்கு மாதமொரு முறை பேதிக்குண்போம். ஒன்றரை மாதத்திற் கொருமுறை நசியம் செய்து கொள்வோம். மாதம் நான்கு முறை முகம் மழிப்போம். நான்கு தினத்திற்கொரு முறை தலைமுழுக்குக் கொள்வோம். மூன்று நாட்களுக்கொருமுறை கண்களுக்கு மையிடுவோம். கத்தூரி முதலான வாசனைப் பொருட்களையும் மலர்களையும் நடு இரவில் நுகரோம்.*

*விலக்கான பெண் நடக்கும்போது பறக்குந் தூசியும் மேல்படும்படி நெருங்கமாட்டோம். இரவில் விளக்கு, மனிதன், மரம் இவற்றின் நிழல்களில் தங்கோம். உணவு சீரணிக்கும் காலத்தில் புணர்ச்சி செய்யோம்.*

*தூக்கம், உணவு, மலசலம், புணர்ச்சி, அழுக்குத் துணி, சீவும் போது உதிரும் முடி இவற்றை மாலையிலேயே விடுப்போம், பசு, தெய்வம், பிதுர், ஆசிரியர் ஆகியோரை மாலைக்காலத்தில் பூசிப்போம். நகச்சலம் சிகைச்சலம் தெரிக்கின்ற இடத்தை நெருங்கோம். இவற்றை எல்லாம் கடை பிடித்தால் நோய் நம்மை அணுகாது என்பதாம்.*

### தீநெறியிழிவுகூறல்

சொல்லாருந் தேயபேதங்களினூ ணிற்கவிங்ஙன்
றுகளுரைத்தற்
கில்லாதுமுள்ளதுமா கியபதார்த்தங்களுமற்
றியலுஞ் சொன்னோம்
நல்லாரிந்நெறிநடப்பர் சிலர்பிறழ்ந்துநடப்பரெனி
னாமென்செய்கேம்
பொல்லாவல்லரவுடனே பழகுவர்தம்பயனடைவர்
புகனுங்காலே *1507*

*இந்நாட்டிலுள்ளோர் உண்ணத்தக்க குற்றமில்லாத, காய்கறிகள், குற்றமுள்ள காய்கறிகள் - அவற்றைச் சமைத்து உண்ணும் முறை ஆகிய வற்றைச் சொன்னோம். விவேகிகள் இம்முறை வழுவாது நடப்பார்கள். இவற்றினின்றும் மாறி நடந்தால் விடமுள்ள பாம்போடு தினம் பழகுவோர் பெறும் பயனைப் பெறுவர்.*

## நன்னெறிப்பெருமைகூறல்

திரவியவூழ் தில்லுணர்ந்தே தின்றனுப விப்பார்
பரவியநோய் காணாராய்ப் பால - ரிரவியைநேர்
மெய்யங் களித்திடுகோன் மிக்காயுள் பெற்றீரேழ்
வையங் களித்திடவாழ் வார் *1508*

*பண்டங்களின் குணங்கள் அவற்றை உண்ணும் முறைகள் இவற்றை உணர்ந்துண்டால் பிணி நீங்கி நல்ல புத்திரர்களைப் பெற்று உறுதியான உடலுடன் நீண்ட ஆயுள் பெற்று சிறக்க வாழ்வர்*

## திருக்குறள்

*அற்றதறிந்து கடைப்பிடத்து மாறல்ல*
துய்க்கதுவரப்பசித்து

— முற்றும் —

